மனவாசகங்கடந்தார் அருளிய

# உண்மை விளக்கம்

## பொருளுரையும் விரிவுரையும்





கழகப் புலவர்

## ஆ. பொன்னையா

கழக வெளியீடு



சிவமயம்

திருவதிகை மனவாசகங்கடந்தார் அருளிய

# உண்மை விளக்கம்

## பொருளுரையும் விரிவுரையும்



அன்பளிப்பு:
தூத்சாஜூர்
டாக்டர் ராஜபிள்ளை உலகநாதன் M.A.B.T

த.ரா. உலகநாதன்.

உரை ஆக்கம்

பண்டிதர் புலவர் கவிஞர் சித்தாந்த இரத்தினம்

கழகப் புலவர்

**மேலல்வையூர் ஆ. பொன்னையா**

*Diploma in Saiva Siddhanta (Annamalai University)*

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிட்.,
522, டி.டி.கே. சாலை, ஆள்வார்பேட்டை, சென்னை—18.

www.tamilputhagam.com
e-mail:tamilkazhagam@hotmail.com

# நூல் விவரக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | உண்மை விளக்கம் பொருளுரையும் விரிவுரையும் |
| உரையாசிரியர் | : | கழகப் புலவர் சித்தாந்த இரத்தினம் ஆ. பொன்னையா |
| பொருள் | : | சித்தாந்த சாத்திரம் |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| வெளியீடு | : | திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் |
| வெளியீட்டு எண் | : | 2133 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதற்பதிப்பு - 2005 |
| நூலகக் குறியீட்டு எண் | : | R 673 X8 PO5 |
| தாள் அளவு | : | 70 ஜி.எஸ்.எம். |
| நூலின் அளவு | : | டெம்மி |
| பக்கங்கள் | : | xxii + 263 |
| விலை | : | ரூ. 100/- |
| வடிவமைப்பு | : | வினாயகம் தம்பிராஜ், பாண்டிச்சேரி |
| அச்சிட்டோர் | : | அப்பர் அச்சகம், சென்னை - 108 |
| நூல் கிடைக்கும் இடம் | : | கழக விற்பனை நிலையங்கள் |

இந்திய தத்துவ ஞானங்களுள் சைவ சித்தாந்தம் என்பது தனிச்சிறப்புடையதாகும். தமிழ் நாட்டில் மட்டுமே இத்தத்துவம் பரவியுள்ளது. சமய நோக்கில் சைவம் பல்வேறு வகைகளில் காசுமீர் முதல் கன்னியாகுமாரி வரை பரவியுள்ளது. காசுமீரசைவம், கன்னட நாட்டில் உள்ள வீரசைவம், இது தவிர வட இந்தியாவிலுள்ள வைதிகசைவம், தமிழ்நாட்டிலுள்ள ஆகமசைவம் எனப் பல சமயங்கள் இருப்பினும் தமிழ்நாட்டில் மட்டுமே சித்தாந்த சைவமும் சித்தாந்த ஞானமும் உள்ளன.

சைவத்திற்கு அடிப்படை பன்னிரு திருமுறைகள். சித்தாந்ததிற்கு அடிப்படை பதினான்கு சாத்திர நூல்கள். திருவுந்தியார் திருக்களிற்றுப்படியார் எனப் பதினான்கு சாத்திர நூல்களைச் சைவ சித்தாந்தத்தைப் பயில விரும்புவோர் தவறாது படிக்க வேண்டும். இவற்றுள் சிவ ஞான போதமும், சிவ ஞான சித்தியாரும் யாவரும் அறிந்தவையாகும்.

சாத்திர நூல்களைப் பயில விரும்புவோர் முதலில் பயில வேண்டிய நூல் மனவாசகங் கடந்தார் அருளிய உண்மை விளக்கம் ஆகும். இந்நூலின் சிறப்பு யாதெனில் சாத்திர நூல்கள் அனைத்தும் அடிப்படையென பதி, பசு, பாசம் என்றே முறைப்படுத்திக் கூறும் நிலையில் இந்நூல் மட்டுமே தலை, உயிர், இறை என பாசம், பசு, பதி என உள முறைப்படி உரைக்கும். இதற்கு அடிப்படை இதுவே ஆகமங்கள் கூறும் முறையென்று கூறப்படுகிறது.

54 வெண்பாக்களாலான இந்நூல் பத்துப் பகுதிகளைக் கொண்டுள்ளது. தத்துவங்கள் மூன்று, மலங்கள் இரண்டு காட்சி இரண்டு ஐந்தெழுத்து உண்மை, அத்துவிதமுத்தி குருலிங்க சங்கம வழிபாடு எனப்பத்துப் பகுதிகளாகும்.

[illegible]

ஆன்மா [illegible] முப்பத்தாறு தத்துவங்களையும் ஒவ்வொன்றாக ஆராய்ந்து அவற்றின் தன்மை இதுதான் என உள் அறிவால் உணரவேண்டும். தத்துவங்கள் ஆன்மா அல்ல அவை தம்மையும் தான் சார்ந்திருக்கும் பொருளையும் அறியவல்லன அல்ல. மேலும் தத்துவங்களே ஆன்மா எனக்கூறும் தத்துவவாதிகளின் பரபக்கச் சிந்தனையை மறுத்து சைவ சித்தாந்த உண்மையை உணர்வதற்கும் எற்றமுறையில் நூல் உள்ளது. சைவ சித்தாந்த சாத்திரங்களைப் பயில விரும்புவோர் முதலில் இந்நூலைப் படித்தல் வேண்டும்.

இந்நூலுக்குப் பண்டிதர், புலவர், கவிஞர், சித்தாந்த இரத்தினம், கழகப் புலவர் மேலல்வையூர் ஆ.பொன்னையா அவர்கள் ஈழத்திலிருந்து இந்தியா வந்த நிலையில் தமிழையும் சைவ சித்தாந்தத்தையும் முறையாகப் பயின்றார். சாத்திர நூல்களுக்கு உரை எழுத முற்பட்டு முதலில் இருபா இருபஃது நூலுக்கு உரை எழுதினார். இதனைச் சைவ சித்தாந்தம் பயில்வோர் அனைவரும் விரும்பி வரவேற்றனர். எனவே அதற்கடுத்து உண்மை விளக்கம் என்னும் இந்நூலுக்கு உரை எழுதியுள்ளார்கள்.

சைவ அன்பர்கள் இதனைப் படித்துப் பயன்பெறுவார்களாக

- சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

உ
சிவ சிவ

கயிலை மாமுனிவர்
திருவளர்திரு காசிவாசி முத்துக்குமாரசுவாமித்
தம்பிரான் சுவாமிகள் அவர்கள்
அதிபர், காசித்திருமடம்.



Ph: 56655
திருப்பனந்தாள் - 612 504
(தஞ்சை மாவட்டம்)
தேதி 13.4.05

# *வாழ்த்துரை*

சைவத்தின்மேல் சமயம் வேறில்லை. அதில் சார்சிவமாம் தெய்வத்தின் மேல் தெய்வம் இல்லை என அறுதியிட்டுக்கூறும் தோத்திர நூல்களும், சாத்திர நூல்களும் சைவ சமயத்தின் இரு கண்களாகும். இலக்கியமாக விளங்கும் தோத்திர நூல்களையும், இலக்கணமாக விளங்கும் சாத்திர நூல்களையும் கசடறக் கற்று அவற்றிற்குத்தக நிற்பவர் சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம் பெற்றுச் சீருடன் வாழ்பவராவர். "தோத்திரமும், சாத்திரமும் ஆனார் தாமே", என்னும் அப்பர் தம் அருள் வாக்கு இவற்றின் பெருமையை உணர்த்தும்.

சாத்திர நூல்கள் பதினான்கு என முன்னோர் வகுத்துள்ளனர். அவற்றுள் மனவாசகங் கடந்தார் அருளிய உண்மை விளக்கமும் ஒன்றாகும். இவ்வாசிரியர் சிவஞானபோதம் அருளிய ஞான தபோதனர் மெய்கண்டாரின் மாணவருள் ஒருவர் ஆவர். இவர் சந்தான குரவர் வரிசையில் ஒருவராக இல்லாதிருந்தும், சித்தாந்த சாத்திரங்களில் ஒன்றாக இவரது உண்மை விளக்கம் வைத்து எண்ணப்படுவது இவரது பெருமையைப் புலப்படுத்துவதாகும்.

54 வெண்பாக்களாக அமைந்துள்ள இந்நூல் சைவ சமய சாத்திர உண்மைகளை எளிதாக உணர்ந்து கொள்ளத்தக்க வகையில் அமைந்துள்ளது. மாணவர் வினாக்கட்கு குருமூர்த்தி விடை கூறி விளக்கம் அளிக்கும் முறையில் இந்நூல் அமைந்திருப்பதால் படிப்போர்க்குக் குருவிடம் பாடம் கேட்பது போன்ற உணர்வு ஏற்படும்.

இந்நூலுக்குப் பலர் உரை ஏழுதியுள்ளனர். ஆயினும் அவ்வுரை களைத் தக்கார் ஒருவர் மூலம் பாடம் கேட்டாலே நன்கு விளங்கிக்

கொள்ள முடியும். அவ்வாறு பாடம் கேட்க வாய்ப்பில்லாதோருக்கு இவ்வுரையாசிரியர் எழுதிய உரை பெரிதும் பயன்பட்டு நூற்கருத்தை விளக்கமாக அறிந்து கொள்ளத் துணை செய்யும்.

பதவுரை, கருத்துரை, விரிவான விளக்கவுரை இந்நூலின் சிறப்புக்களாகும். விளக்கங்கள் விரிவாகவும், எளிமையாகவும் அமைந்துள்ளன.

பூதங்களுக்குக் கூறும் அடையாளங்களுக்கு இவ்வாசிரியர் காரணம் கூறி விளக்கியிருக்கிறார். ஐவகைத் தொழில்கள் எளிமையாக நன்கு விளக்கப்பட்டுள்ளன. அந்தக் கரணங்கள், வித்தியா தத்துவம் ஆகியவைகட்கு ஆசிரியர் தரும் விளக்கம் சிறப்பு.

வேறாய், உடனாய், ஒன்றாய் இறைவன் விளங்குவதைச் சிறப்பாகக் காட்டுகளுடன் விளக்கியுள்ளார். பஞ்சாட்சர விளக்கம், திருவாசி விளக்கம், இறைவனின் திருக்கூத்து விளக்கம், ஆகியவை எளிமை யாகவும், விளக்கமாகவும் அமைந்துள்ளமை இந்நூலின் சிறப்பு.

இவை போன்று பல்வகைச் சிறப்புக்களுடன் இவ்வுரை நூல் அமைந்திருக்கிறது. உரையாசிரியர் ஆ. பொன்னையா பாராட்டுக்குரியவர். இவர் இதுபோலப் பல்வேறு நூல்களையும் ஆக்கிச் சைவத்திற்கும், தமிழுக்கும் தொண்டாற்றத் திருவருள் துணை நிற்பதாக.

ஆசிரியர் சிவஞானமும், தீர்க்காயுளும் மேன்மேலும் பெற்று வளமுடன் வாழ அருளுமாறு செந்திலாண்டவனைச் சிந்தித்து வாழ்த்துகிறோம்.

சுபம்

அன்படன்
சிவசிவ

உ

சிவமயம்

சித்தாந்த ரத்தினம்
சைவ சித்தாந்த நிறுவனர் தலைவர்
திரு. மு. செல்வநாதன், M.A., M. Phil, M.Ed.,
3, அண்ணா நகர், சோளிங்கர்
அவர்கள் உவந்தளித்த

# சிறப்புரை

இன்றைய உலகில் மனித வாழ்க்கை மிகு சிக்கலாகிவிட்டது. எல்லாம் வல்ல இறைவன் இரங்கி அளித்துள்ள உடலும் உலகமும் நமக்கு இணக்கமாய் இருக்கும்படி நம்மால் செய்து கொள்ள முடியவில்லை. உலகெங்கும் பெருகி வரும் மருத்துவ மனைகளும், சுற்றுபுற சூழல் கேடுகளும் சான்றுகளாம். ஆதலின் தத்துவ உண்மைகளை அறிந்து கொள்ளும் நாட்டம் பரவலாகப் பெருகி வருகிறது. அதன் காரணமாகவே சைவ சித்தாந்த நூல் படிப்பும், வெளியீடும் மிகுகின்றன.

அன்பர் ஆ. பொன்னையா அவர்கள் சித்தாந்தம் பயின்றவர். சைவ சமய மிகு புகழ் திகழ்கின்ற யாழ்ப்பாணத்தைச் சொந்த ஊராக உடையவர். திருமுருகன் பேருருவக் காட்சி, இருபா இருபஃது விரிவுரை, சிவபுராணம் விரிவுரை ஆகிய நூல்களை எழுதியவர். இப்போது உண்மை விளக்கம் நூலுக்கு விரிவுரை எழுதியுள்ளமை பாராட்டுக்குரியது.

அருட்டிரு மெய்கண்டநாதரிடம் அருட்டிரு அருணந்தி சிவாச்சாரி யாருடன் பயின்றவர் திருவதிகை மனவாசகங்கடந்தார். இவர் இயற்றி யருளிய உண்மை விளக்கம் நூல், சைவ சித்தாந்தம் பயிலுகின்றவர்கள் பயில வேண்டிய முதல் நூல் ஆகும். இந்த நூல் நம் உடலின் உள்ளும். புறமுமாக இருக்கின்ற முப்பத்தாறு தத்துவங்களையும் ஐம்பொருள் களையும் அருமையாக விளக்குகிறது.

அன்பர் பொன்னையா அவர்கள் இந்த நூல் கருத்துகளை நன்கு உள்வாங்கிக்கொண்டு, அழகும் பொருத்தமும் மிளிர நன்கு விரிவுரை

எழுதியுள்ளார். மனித உடலில் அகப்புறக்கருவிகளாக அமைந்துள்ள தத்துவங்களையும், திருவைந்தெழுத்தையும், ஊன ஞான ஆனந்த நடனங்களையும் விளக்கியிருக்கும் பாங்கு அருமை அருமை !

நூலின் பெயர்ப் பொருத்தத்தை விரிவுரையில் ஆங்காங்கே மூன்று வகையில் விளக்கியுள்ளார். 1. தத்துவங்கள் உள்பொருள்களாம். அவற்றை விளக்குவதால் உண்மை விளக்கம் ஆயிற்று. 2. ஆன்ம விளக்கம், தம்மைத் தாம் அறியாத் தத்துவங்கள், ஒன்றி நின்று வழிபட மாயையோடு வல்வினை போகும், ஊன நடனத்தால் உயிர் சிறிதளவே அறியும் போன்ற உண்மைக் கருத்துக்களைச் சொல்வதால் உண்மை விளக்கம் ஆயிற்று. 3. நிறை நிலையான அழியா உண்மைத் தன்மையான திருவடிப்பேற்றுக்கு வழி சொல்வதால் உண்மை விளக்கம் ஆயிற்று.

சிவஞான சித்தியார், இருபா இருபஃது முதலிய சாத்திர நூல்களையும், திருவாசகம் திருமந்திரம் முதலிய தோத்திர நூல்களையும் பொருந்திய இடங்களில் மேற்கோள் காட்டி விளக்கிச் செல்வது, ஆர்வத்துடன் படிக்கும் அன்பர்களுக்கு மகிழ்வு தரும். மேலும், வெண்பா நாற்பத்து நான்கின் விளக்கத்தில் தம் வித்யா குருவாகிய திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீன சைவ சித்தாந்த நேர் முகப் பயிற்சி மைய இயக்குநர் உயர்திரு கு. வைத்தியநாத ஈசான தேசிகர் ஐயா அவர்களின் திருக்குறளில் திருவைந்தெழுத்துக் கருத்தினைப் பொன்னே போல் போற்றி இருப்பது நூலாசிரியரின் குரு நன்றியைப் பறைசாற்றுகின்றது.

அன்பர் பொன்னையா அவர்களின் சைவத் தொண்டு சிறந்திடுக!

ஆடல் வல்லான் அருள் பொழிந்திடுக!

அன்பன்
மு. செல்வநாதன்

சோளிங்கர்,
7.05.2005.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

சித்தாந்த சேவா ரத்தினம் திரு **மு. அழகர்சாமி,**
முந்நாள் மாவட்ட வருவாய் அதிகாரி,
இந்நாள் செயலாளர், சைவ சித்தாந்த புனிதர் பேரவை,
முதன்மை நிருவாக அலுவலர், இந்தியன் செஞ்சிலுவைச் சங்கம்
(தமிழ்நாடு பிரிவு)

**அவர்கள் உவந்தளித்த**

## *மகிழ்ச்சியுரை*

திருவதிகை மனவாசகங்கடந்தார் அருளிய உண்மை விளக்கம் நூலுக்கு உரையாசிரியர் என் நண்பர் புலவர் கவிஞர் பண்டிதர் சித்தாந்த இரத்தினம் கழகப் புலவர் திருமிகு. **ஆ. பொன்னையா** அவர்கள் எழுதியுள்ள பொருளுரையும் விரிவுரையும் என்னும் நூலைப் படித்தேன் என்பதைவிட மகிழ்ச்சி வெள்ளத்தில் ஊறித் திளைத்தேன் என்பதே சாலப் பொருத்தமாகும். அத்தகைய நல்லதோர் அரியதோர் படைப்பை நமக்கெல்லாம் அளித்து இன்புறச் செய்த இவர் யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர் அடிச்சுவடுதான் என்பதை நினைத்து பூரிப்படைகின்றேன். அவர்களது நல்குடிப் பிறப்பு இளமை முதல் தமிழ்ப் பண்பாட்டு நூல்களில் தெளிவு, நல்ல புலமை இந்நூல் இயற்றக் காரணமாய் இருக்கிறதென்பது தெளிவாகிறது.

தொன்மையான சைவ சித்தாந்தம் கற்பது அவ்வளவு இலகுவான தல்ல. அதில் பல முடிச்சுகள் உண்டு. ஐயங்கள் உண்டு. சிக்கல்கள் உண்டு. பல பகுதிகள் சாமானியர்களுக்கு விளங்கா. அவ்வாறான சித்தாந்தத்தை உரை ஆசிரியர் சித்தாந்தப் புலவர், மேற்கண்ட ஐயங்களை மிகவும் சிறப்பாக தெளிவாக தமது எளிய செந்தமிழால் ஆக்கிய உரை நூலில் நீக்கியுள்ளார். இந்த நூல் மட்டுமல்ல. இவரால் இயற்றபட்ட மற்றும் நூல்களைப் படித்துப் பார்க்கும்போது சைவ சித்தாந்தத்தை விளக்குவது அன்னாருக்கு கைவந்த கலையாகத் திகழ்கிறது என்பது உள்ளங்கை நெல்லிக்கனி.

அவன் அருளாலே அவன்தாள் வணங்கி என்கின்ற அருள்வாக்கின் அடிப்படையில் இறைவன் அருள் அவரிடம் பதிந்திருக்கும் காரணத்தினால் இத்தகைய நந்நூல்கள் சைவ உலகத்தில் நடமாடும் தெய்வமாக உலா வருகின்றன.

இதன் பயனைப் பற்றவேண்டிய திருவடியைப் பற்றி அதுவே இன்ப நிழல் அங்கேயே இருக்க வேண்டும் என்ற உண்மையைப் பறை சாற்றுவதன் மூலம் சிவனைச் சிக்கெனப் பிடித்துக் கொண்டார்.

இறைப்பற்று, தான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்ற பெருந்தன்மை அவருக்குள்ள குலச்சிறப்பு, அவர்கள் அருளிச் செய்த இத்தகைய நூல்கள் வாயிலாகத் தெளிவாய் நின்று மிளிர்கின்றன.

சைவ சித்தாந்தம் என்பது தோத்திரம் சாத்திரம் என்று இரு பெரும் பகுதிகளைக் கொண்டது. தோத்திர நூல்களில் உள்ள சித்தாந்த கருத்துப் பிழிவு சாத்திர நூல்கள் 14 என வரையறுத்துள்ளனர் ஆன்றோர். முதன் முதல் சாத்திர நூல்களைப் படிக்கத் தொடங்குவோர், உண்மை விளக்கம் நூலைக் கற்கத் தொடங்குவது வழக்கம் மட்டுமல்ல அவசியமுமாகும். மற்றைய நூல்களைப் படிக்கத் தூண்டுகோலாக அமைகிறது என்று அறுதி இட்டுச் சொல்லலாம். ஏனெனில் இந்நூலை ஆக்கிய பெருமகனார் சிவஞானபோதம் அருளிய சந்தான குரவர் மெய்கண்டாரின் மாணாக்கரில் ஒருவர் மட்டுமல்ல, அருணந்தி சிவாச்சாரியாரின் ஒரு சாலை மாணவர் அத்தோடு அவருடன் ஒரே காலத்தில் முத்திப் பேற்றைப் பெற்றவர். இந்நூலை மாணவர்கள் மனதில் பதியும்படி எளிய நடையில் தடை விடைகளாக அருளியுள்ளார். இந்நூல் பத்துப் பகுதிகளைத் தன்னுள் அடக்கிப் பத்தரை மாற்றுத் தங்கமாக சைவ சமய உலகத்திற்குப் பெரும் போக்கிஷமாகவும் சிறந்த வழிகாட்டியாகவும் உள்ளது என்று வரலாற்றுச் சான்றுகள் பகர்கின்றன. நம் உரையாசிரியர் இந்நூலுக்கு விளக்கமாகவே பதவுரை கருத்துரை விரிவுரை என உரைகள் வரைந்துள்ளார். விரிவுரையில் பொதுவாக மாணவர்களுக்கு எழும் ஐயங்களை எழுப்பி அவற்றிற்குத் தீர்வைக் கூறியுள்ளார். இதில் அருணந்தி சிவாச்சாரியார் அருளிய உண்மை நெறி விளக்கம் நூலினும் உண்மை விளக்கம் வேறுபட்டது என்பதை எடுத்தோதியுள்ளார். சைவ சித்தாந்த சாத்திரம் முப்பொருள்களான (பதி

பசு பாசம்) இறை உயிர் தளை என்ற முறையில் பொருள்களைக் கூறிச் செல்லும். ஆனால் இந்நூலில் பாசம் உயிர் இறை என வரிசைப் படுத்தப் பட்டுள்ளது. இதனை உரையாசிரியர் பொன்னையா அவர்கள் ஆகம நூலில் வைத்த பொருள் முறைதான் என நம் சந்தேகத்தைப் போக்கியுள்ளார். திருவெண்ணெய் நல்லூரில் எழுந்தருளியுள்ள சிவபெருமானே மானிட உரு தாங்கிக் குருவாக வந்து உபதேசித்தார் என்றுரைப்பதன் மூலம் குருவே சிவம் சிவமே குரு என்ற நம் உரையாசிரியரது விளக்கம் ஊன்றி உணரத் தக்கது.

உண்மை விளக்கத்தைப் பத்துப் பகுதிகளாகப் பிரித்துக் கேள்வி பதில் முறையில் சிறிதும் மாற்றமின்றி உணர ஆசிரியர் விரிவுரை தந்துள்ளார். 36 தத்துவங்களையும் மாணவர் உள்ளத்தில் பதியும் வண்ணம் விரித்து எழுதியுள்ளார்.

நம் உரையாசிரியர் விரிவுரையில் தாம் எடுத்துக்கொண்ட பகுதிக்கு மேற்கோள்களாக மெய்கண்டார் அருளிய சிவஞானபோதம் அருணந்தி சிவாச்சாரியார் அருளிய சிவஞானசித்தியார் இருபா இருபஃது மாணிக்கவாசகர் சுவாமிகள் அருளிய திருவாசகம் மற்றும் திருவருட் பயன் திருமந்திரம் பொதுமறையாகிய திருக்குறள் ஆகியவற்றில் சில பகுதிகளை எடுத்தாண்டுள்ளார். இதனால் சைவ சித்தாந்த சாத்திரங் களில் நம் உரையாசிரியருக்குள்ள ஆழ்ந்த புலமை வெளிப்படுகிறது. உரையாசிரியர் ஆணவ மலத்தின் தன்மைகளையும் இயல்புகளையும் குணங்களையும் தொழிற்பாடுகளையும் உயிர் அதனைப் பற்றியுள்ள போது உள்ள நிலைகளையும் சிவனைச் சிக்கெனப் பற்றியுள்ள நிலையில் உள்ள தன்மைகளையும் விளக்கியுள்ளமை ஊன்றி நோக்கத் தக்கன.

உயிரின் பண்பு, அது சார்ந்ததன் தன்மையாகத் திகழ்வதும் சத்தைச் சார்ந்தபொழுது சத்தாயும், அசத்தைச் சார்ந்தபொழுது அசத்தாயும், சதசத்து என்ற பெயருடன் விளங்கும் என்பதை நன்றாக சித்தரித் துள்ளார் என்பதனை நீங்களே படித்துத் தெரிந்து கொள்ளுங்கள். மேலும் இறைவன் உயிருடன் ஒன்றாய் வேறாய் உடனாய் நின்று உதவும் கருணைத் திறனை விளக்கியிருப்பது படித்து இன்புறத் தக்கது. இவ்விடத்தில் ஆசிரியர் சிவஞானபோத ஆசிரியர் கூறியருளிய அவையே

தானேயாய் என்ற சூத்திரத்தை இணைத்து விரித்துள்ளார். இறைவன் உயிர்களின் கேவல சகல நிலைகளில் வேறாய் ஒன்றாய் உடனாய் உதவுதலையும், சுத்த நிலையில் அத்துவிதமாக உதவுகின்றான் என்பதையும் ஆழ்ந்து படித்து இன்புறத் தக்கன. ஆடல் வல்லான் திருச்சிற்றம்பலத்தில் ஆடும் ஊன நடனம் ஞான நடனம் ஆனந்த நடனம் ஆகிய இவற்றின் இயல்பையும், நோக்கையும், திருவைந்தெழுத்தையே திருமேனியாகக் கொண்டொழுகும் நிலையினையும் நன்கு விளக்கி யுள்ளமை மனவாகங்கடந்தாரின் எண்ணக் கருத்துக்களை ஆசிரியர் உரை அப்படியே வெளிப்படுத்தி இருப்பதாகக் கருதலாம்.

சைவ சித்தாந்தத்தின் உயிர் நிலையாகக் கருதப்படும் திருவைந் தெழுத்து தூல சூக்கும அதிசூக்கும காரண, அதிகாரணமாகத் திகழ் வதையும் அதன் அழியாத தன்மையையும் அதனை ஓதும் முறைகளும், அதனால் அடையும் பயனும் கூறியுள்ளது. கற்போருக்கு நல்ல பயனுள்ள விரிவுரையாக இருக்கும் என்பதில் சந்தேகமே இல்லை.

சகல நிலையிலிருந்து சுத்த நிலை அடைந்து முத்தியில் உயிர்களுக்கு இறைவன் இன்பத்தை நல்க அதனை அது துய்க்கும் என்றும் அதனை விளைவித்தல் மலம் என்றும் வெண்பா 50-ல் ஆசிரியர் குறிப்பிட் டுள்ளார். இக்கருத்து சைவ சித்தாந்தம் நன்கு கற்ற சான்றோர்களுக்கும் விளங்காப் புதிராய் உள்ளதை, மனதில் பதியும்படி விரிவுரை செய்து விளக்கி உரையாசிரியர் நீக்கியுள்ளதை பாராட்டுவதோடு கற்றோர் உள்ளம் அவருக்கு நன்றி கூறக் கடப்பாடுடையது.

உரையாசிரியர் தனது தமிழ் ஆசிரியர் பண்டிதர் வீரகத்தி அவர் களையும் தனது சித்தாந்த ஆசிரியர் சித்தாந்த சரபம் திரு.கு.வைத்திய நாதன் அவர்களையும் இந்த நூலிலே குறிப்பிட்டுள்ளது உரையாசிரி யரின் செய்ந்நன்றி அறிதற்கு எடுத்துக் காட்டாக உள்ளன. நான் உரையாசிரியரின் சிறப்புக்களையும் நற்பண்புகளையும் நன்கு அறிந்தவன். அதனை இங்கு கூற நிறைய இருக்கின்றன. அவற்றைக் காலமும் இடமும் கருதி இத்துடன் நிறுத்திக்கொள்கிறேன். இந்நூல் சித்தாந்த சான்றோர்க்கும் கற்கப் புகுவோர்க்கும், அவர் சந்ததியின ருக்கும் கற்க ஒவ்வோர் இல்லத்திலும் இருப்பது அவசியம்.

தமிழ் கூறும் நல்லுலகம் பாரெங்கும் மகிழ்ச்சி வெள்ளத்தில் திளைக்கின்றது. தொன்மை மொழியாக திக்கெட்டும் பரந்து சிறந்த செம்மொழியாக பட்டொளி வீசிப் பறப்பது பாரீர். சைவ சித்தாந்த உண்மைகள் மிக்கு ஒளி வீசித் தமிழுக்குப் பெருமை சேர்க்கின்றன. அங்கு திரு. பொன்னையா அவர்களின் பங்கும் பொன்னொளியுடன் சுடர் விடுகின்றது. அவர்களின் பணிகள் இன்னும் தொடர என் வாழ்த்துக்கள்.

வளர்க சைவ சித்தாந்தம் !
வாழ்க ஆசிரியர் புகழ் !!
வளர்க சைவநெறி.

மயிலாப்பூர்
4-06-2005

அன்பே சிவம், இவண்,
**மு. அழகர்சாமி**

உ

சிவமயம்

# என் கடன் சிவப்பணி செய்து கிடப்பதே...

சைவ சமயம் வேதங்களை ஏற்றுக்கொள்வதோடு, அதனை விரித்துரைக்கும் ஆகமங்களையும் ஏற்றுக் கொள்ளுகின்றது. எனவே வேதம் + ஆகமம் = வேதாகமம் என வரும். இந்த வேத ஆகமங்களில் பல கருத்துக்கள் கூறப்பட்டிருப்பினும் அதில் சிறப்பாகக் கூறப்படுவது ஞானபாதம் பற்றியே ஆகும். சரியை கிரியை யோகம் ஞானம் என்பது நான்கு படிகள். இவற்றில் முதல் மூன்று படிகளில் நின்று ஒழுக்கமாக அதனைக் கடைப்பிடித்து வரினும் இவை பரமுத்தியாகிய இறை இன்பத்தைத் தரவல்லன அல்ல. அவை பதமுத்தியையே அளிக்கும். இவை மூன்றின் வழி நின்று இவற்றில் கூறப்படும் நான்காவது ஞான நெறி நின்று ஒழுகிவரினே பரமுத்தி கிட்டுகின்றது.

உயிர்கள் சரியை கிரியை யோகம் ஆகிய நெறிகளில், படிகளில் நின்று ஒழுகி யோக நிலை எய்திய பின்னரே ஞான நெறி வருதல் கூடும். இந்த நூலிலே "யோகம் நிகழ் புதல்வா" எனக் கூறி அதற்கு அடுத்து வரும் ஞான நெறியை விரும்பி நிற்கும் பரமுத்தியை விரும்பி நிற்கும் மாணாக்கனுக்கு ஒரு குரு ஞானத்தைப் போதித்துத் தெளிய வைத்து அதன்வழி நின்று ஒழுகிப் பரமுத்தியை அடையும் வழியைக் காட்டி நடத்துவதே இங்கு உண்மை விளக்கம் எனப்படுகின்றது. இங்கு ஆசிரியர்-ஞான ஆசிரியர்-பொய்காட்டி, பொய் அகற்றி மெய்காட்டும் வழியையே எடுத்துரைக்கின்றார். இந்த இயல்புகளை இலக்கணங்களை அறிந்து கொள்வதற்கு உதவுவது சித்தாந்த சாத்திரங்கள். சைவ சமயத்தின் அருமை பெருமை சீர்மைகளைத் தெளிய வைப்பதே சைவ சித்தாந்தம். இது அறிவியல் முறையிலே, சற்காரியவாத முறையிலே விடயங்களைக் காட்டி உண்மை முடிவினை எடுத்துரைக்கின்றது. இந்த முடிவே, முடிந்த முடிவே சைவ சித்தாந்தத்தின் முடிநிலையாகும். இதற்குமேல் எதுவும் இல்லை என்னும் எல்லையை வரையறை செய்து நிற்பதே சைவ சித்தாந்தம். இதுவே தெளிந்த முடிவாகும். இதனை எடுத்துரைக்கும் நூல்கக்ள் சைவசித்தாந்த சாத்திரங்கள் எனப்படுகின்றன.

திருமுறைகளும் புராணங்களும் இச்சித்தாந்தசாத்திரங்களின் விரிந்த பகுதிகளே, இந்த இலக்கணங்களுக்கான இலக்கியமாக

விளங்குவனவே திருமுறைகள் புராணங்கள் ஆகியன. இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்பலின் எனத் தொல்காப்பியம்- நன்னூல் முதலிய தமிழ் இலக்கண நூல்கள் எடுத்துரைக்கின்றன. எனவே தான் சைவ சித்தாந்த சாத்திர நூல்கள் இலக்கணமாக அமைகின்றன. இலக்கணம் எவ்வாறு மொழியை வளப்படுத்த உதவுமோ அவ்வாறே சைவசித்தாந்த சாத்திரங்கள் சைவ சமயத்தை வளப்படுத்தி, வழிப்படுத்த, நெறிப் படுத்தத் தோன்றியன எனக் கொள்ளுதல் சாலும்.

திருமுறைகளையும் புராணங்களையும் ஓதியும் படித்தும் வரும் சைவ சமயத்தவர்கள இவற்றை அடுத்து சித்தாந்த சாத்திரங்களைப் படிப்பின் அதனில் தெளிவு பெறுவது சைவ சமய நெறிகளில் ஏற்றவாறு தம்மை வழி நடத்திச் செல்ல வல்லவர் ஆவர்.

இந்த வழியினை அறிந்து தெளிந்து உணர்ந்து கொள்வதால் எமது வாழ்க்கை எந்தெந்த வகையில் இறைபணிக்கு எம்மை நாம் தயார்படுத்துவதோடு அதில் எம்மையும் ஈடுபடுத்திக் கொள்ளலாம் என்பது தெளிவாகும். இதனால் ஆன்மிக வழியில் எமது ஒழுகலாற்றினை திருத்தி தெளிவாக வாழலாம். இது மட்டுமல்லாமல் திருமுறைகளையும் அவற்றை எமக்குத் தந்தளித்த சைவ நாயன்மார்கள் அனுபவத்தால் கூறிய சித்தாந்தச் செய்திகளையும், உண்மை நெறிகளையும் நாம் கேட்டுச் சிந்தித்து உணர்ந்து கொள்ளவும் வாய்ப்பாகின்றது.

**சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்**
**செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவனடிக்கீழ்ப்**
**பல்லோரும் ஏத்தப் பணிந்து**

என மாணிக்கவாசக சுவாமிகள் திருவாசகத்தில் கூறிய வழி நாமும் தெளிந்து சிவசிந்தனையோடு வாழ வழி வகுக்கும்.

சித்தாந்த சாத்திரங்களைக் கற்பதால் இறைவனைப் பற்றியும், பொருள்களைப் பற்றியும் தன்னைப் பற்றியும் ஒருவர் முழுமையாக அறிய முடிகின்றது. தெளிய முடிகின்றது. இந்த அறிவு ஞான அறிவு, அவரை நற்கதிக்கு இட்டுச் செல்ல வழி அமைக்கும். தோத்திரங்களும் சாத்திரங்களும் எமது இரு கண்கள். சிவத்தலங்களில் சமய குரவர்களோடு சந்தான குரவர்களின் படிமங்களையும் நிறுவி வழிபாடும் பூசனையும் இயற்றி வருகின்றோம். அவர்கள் வாழ்ந்த இடம் சென்ற இடமெல்லாம் சிறப்புச் செய்தவர்கள். அந்த இடங்களை யெல்லாம் நாம் சென்று தரிசிக்க முடியவில்லை. ஆயினும் அவர்கள் தந்த, விட்டுச் சென்ற வைப்பு நிதிகளைத் தெரிந்து தெளிந்து நமக்கு நாமே நன்மைகளை தேடிக் கொள்ளலாம்.

இதனாலேதான் சைவ சித்தாந்த சாத்திர நூல்களை மக்கள் படித்து வளர வேண்டும். அதன் பயன்பாட்டினை எல்லையை நாம் அறுதியிட்டுச் சொல்லமுடியாது. கற்றுணர்ந்தவர்களே அதனை நன்கு அறிவர்.

சித்தாந்த சாத்திரங்கள் 14, இவற்றுள் சந்தான குரவர்களால் எழுதப் பெற்றவை 11. மற்றைய மூன்றும் சிவநெறி நின்ற சிவஞானிகளால் உணர்ந்து அனுபவித்து எழுதப் பெற்றவையாகும். சந்தான குரவர்கள் அல்லாத ஒருவரால் ஆக்கப் பெற்ற சித்தாந்த சாத்திரங்களில் ஒன்று உண்மை விளக்கம் என்பது. சாத்திரங்களைப் படிக்க விரும்புவோர் முதலில் உண்மை விளக்கத்தைப் படித்து அறிவதால் மற்றைய சாத்திர நூல்களைப் படிக்க விரும்பம் ஏற்படும். மேலும் அந்த நூல்களைப் படித்துத் தெளிய இந்நூல் ஒரு நூன்முகமாக அமைந்திருப்பதை அறியலாம். இவ்வாறு உண்மை விளக்கத்தைப் பற்றிக் கற்றறிந்த புலவர்களும் ஞானிகளும் ஏனையோர்களும் கூறுவர்.

அடியேன் யான் கற்றறிந்த மெய்கண்ட சாத்திரங்களில் சித்தாந்தம் கற்க விழைவோரும் கற்போரும் புலமை பெற வேண்டும் என்பதாலும் அவற்றைக் கற்கும் போது எழும் இடர்ப்பாடுகளை ஐயங்களைத் திரிபுகளை நீக்கி உண்மைப் பொருளை அறிவதோடு தெளிவும் பெற வேண்டும் என்பதாலும் இக்கருத்துப் பற்றியே இந்த நூலை ஆக்கியுள்ளேன்.

இந்நூலுக்கு பலர் உரை எழுதியுள்ளார்கள். பல இன்று கிடைப் பதரிதாகியுள்ளது. இவற்றையும் மனதில் கொண்டு இந்த நூலை உண்மை விளக்கத்தை ஆக்க எண்ணங் கொண்டுள்ளேன். இதனை உண்மை விளக்கம் பொருளுரையும் விரிவுரையும் எனப் பெயர் கொண்டு வெளியிட விருப்பு உண்டாயிற்று. இங்குள்ள செய்யுளின் வரிகளுக்குத் தெளிவான பொருளையும் கருத்துரையையும் அதனைத் தொடர்ந்து விரிவுரையும் என மூன்று நிலைகளில் எழுதியுள்ளேன். இந்த நூல் கற்பதற்கு சித்தாந்தம் கற்பதற்கு உறுதுணையாக வழித்துணை நூலாக அமையும் என எண்ணுகின்றேன். இது என் துணிவு.

எனது ஆக்கங்களை சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர் வெளியீடு செய்து வருகின்றார்கள். இது எனது நான்காவது வெளியீடு. என் ஆக்கங்களுக்கு உரிய மதிப்பளித்து வரும் கழக இயக்குனர் திரு. R. **முத்துக்குமாரசுவாமி** ஐயா அவர்களுக்கும் கழக மேலாளர் திரு. **குமார சுப்பையா** அவர்களுக்கும் எனது வணக்கமும் நன்றியும் என்றும் உண்டு. அவரை மறவேன்.

இந்த நூலுக்கு வாழ்த்துரையை வழங்கியவர் கயிலைமாமுனிவர் திருவளர் திரு காசி வாசி **முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்.** அதிபர் காசித் திருமடம் திருப்பனந்தாள் அவர்கள். இவ்வாதீன முதல்வர் சைவத்திற்குச் செய்யும் தொண்டுகள் அளப்பரியன. சென்ற ஆண்டு, திருச்செந்தூரில் நடைபெற்ற கந்த சஷ்டியின்போது அவரை அங்கு கண்டு வணங்கி வாழ்த்தும் பெற்றேன். இன்று இந்நூலுக்கு அவர் தந்த வாழ்த்துரை என்னையும் எந்நூலையும் வாழவைக்கும். அவர் திருவடிகளுக்கு என் அன்பு வணக்கங்கள்.

இந்த நூலுக்குச் சிறப்புரை வழங்கியவர் என் அன்பிற்குரிய நண்பரும் சோளிங்கர் சைவ சித்தாந்தப் பேரவை நிறுவுநர் தலைவர் சித்தாந்த ரத்தினம் திரு **மு. செல்வநாதன்,** M.A.,M.Phil., M.Ed., அவர்கள். அன்னாருக்கு எனது அன்பு வணக்கமும் நன்றியும் என்றும் உண்டு.

இந்த நூலுக்கு ஒரு மகிழ்ச்சியுரையை வழங்கியவர் சித்தாந்த சேவா ரத்தினமும் சித்தாந்த அறிஞரும், சென்னையில் உள்ள திருவாடுதுறை ஆதீனத்தாரால் நடத்தப்பட்டுவரும் சைவ சித்தாந்த பயிற்சி மையத்தின் அமைப்பாளராகக் கடந்த பத்து ஆண்டுகளுக்கு மேலாக பணிபுரிந்து வருபவரும் முன்னாள் மாவட்ட வருவாய்த்துறை அதிகாரியும் இந்நாள் சைவ சித்தாந்தப் புனிதர் பேரவைச் செயலாளரும், இந்தியன் செஞ்சிலுவைச் சங்க நிருவாக அலுவலரும் (தமிழ்நாடு) என்னுடன் சித்தாந்தம் பயின்றவரும் எனது நண்பரும் ஒரு சாலை மாணவருமாகிய திரு. **மு. அழகர்சாமி**, அவர்களுக்கு என் அன்பு வணக்கங்களும் நன்றியும் உரியது.

இதனைக் கணினியில் சிறந்த முறையில் பதிப்பித்துத் தந்த திரு. த.வினாயகம் அவர்களுக்கும் என் நன்றி.

இந்நூலை எனது அன்பிற்கும் மதிப்பிற்கும் உரிய மாமா சீனியர் கந்தவனத்திற்கும் மாமி திருமதி க. அன்னமுத்து அவர்களுக்கும் காணிக்கையாகவும் அணிகலனாகவும் படைக்கின்றேன்.

யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்
மனவாசகங் கடந்த மாமுனிவர் திருவடி வாழ்க.
பொலிகை முருகன் திருவருள் எங்கும் பொலிக

இவண்,

திக்கம்
25-2-2005

கழகப்புலவர் **ஆ. பொன்னையா,** D.S.S.

# உண்மை விளக்கம்

*நூலாசிரியர் பற்றி........*

உண்மை விளக்கம் என்பது உண்மைப் பொருளை மெய்ப் பொருளை - விளக்குவது எனப் பொருள்படும். இந்தச் சித்தாந்த சாத்திர நூலை இயற்றியவர் அருட்திரு. மனவாசகங் கடந்தார் என்னும் மெய்ஞ்ஞானியாவார்.

இவருடைய இயற்பெயர் பிள்ளைத் திருநாமம் என்னவென்பது தெளிவாகத் தெரியவில்லை. இறைவனின் திருப்பெயரையே தனது புனைப் பெயராக கொண்டு விளங்குகின்றார்.

இறைவனைத் திருவாசகம் அருளிய மாணிக்கவாசக சுவாமிகள் வாக்கு மனம் இறந்த வான் கருணையாளன் என அழைப்பார். இவ்வாறே வாக்கு மானாதீதன் வாக்கிறந்தோன் எனப் பிறரும் பெயர் கொண்டு அழைப்பர்.

மாற்றம் மனம் கழிய நின்ற மறையோனாகிய இறைவனின் திருநாமத்தைத் தனது பெயராகக் கொண்டு இவர் விளங்குகின்றார் என்பது நன்கு விளங்குகின்றது.

ஆசிரியர் மனவாசகங் கடந்தார் வாழ்ந்த காலம் 13-ம் நூற்றாண்டு எனக் கொள்ளலாம். இவர் சைவ சித்தாந்தப் பெருநூலாகிய சிவஞான போதத்தை அருளிய மெய்கண்ட தேவ நாயனாரின் மாணாக்கர்களில் ஒருவர். மெய்கண்டாரின் மாணாக்கர் நாற்பத்தொன்பதின்மர். இவர்களில் முதல்மாணாக்கராக வைத்தெண்ணப்படுபவர் அருணந்தி சிவாச்சாரி யாரே. இவர் காலத்தில் இவரோடும் ஒரு சாலை மாணாக்கர் பலரோடும் சித்தாந்தம் பயின்ற மாணாக்கர் பலரோடும் பயின்ற இவரும் ஒருவர்.

இதனை இவருடைய பாடல்களிலிருந்து அறியக் கூடியதாக இருக்கிறது. "மெய்காட்டும் மெய்கண்டாய்" எனவும் மெய்யா திருவெண்ணெய் வித்தகா எனவும் இந்நூலின் முதற்செய்யுளில் கூறியிருப்பது காணக்கிடக்கின்றது. இதனால் இவருடைய ஆசிரியர்

மெய்கண்டார் என்பதும் அருணந்தி சிவாச்சாரியாருடன் ஒரே காலத்தில் ஞானம் பெற்றவர் என்பதும் வெளிப்படை.

இவர் பிறந்த ஊர் திருவதிகை என்னும் ஊராகும். இவ்வூரில் இவர் பெயரால் ஒரு திருமடம் இன்றும் உள்ளது. திருவதிகையே இவருடைய சொந்த ஊர் எனக் கொள்வர் கால ஆய்வாளர்கள். இதனால் இவரின் ஊர்ப் பெயருடன் இணைந்து இவரைத் திருவதிகை மனவாசகம் கடந்தார் என வழங்குவர்.

இவர் தமிழ் இலக்கணம், இலக்கியம், அளவைநூல், சித்தாந்தம், செய்யுள் இலக்கணம், வடமொழி ஆகியவற்றை நன்கு கற்றறிந்த புலமையாளர். அவருடைய இப்புலமைகளை நூல் கற்போர், அவர் சொல்லப்புகும் செய்திகளைச் சொல்லும் முறையிலே, பாங்கிலே கண்டு அறிவர்.

இவர் இந்நூலைத் தவிர வேறு சித்தாந்த சாத்திர நூல்களைச் செய்திருப்பார் எனக் கருத இடமுண்டு. ஆயினும் உண்மை விளக்கம் என்னும் இந்நூலே எமக்கு இன்று கிடைக்கப் பெற்றுள்ளது. இந்த உண்மை விளக்கம் பதினான்கு எண்ணிக்கை கொண்ட சைவ சித்தாந்த சாத்திரங்களில் ஒன்றாக வைத்தெண்ணப்படுவது இதன் பெருமையை விளக்குவதாகும். சந்தான குரவர் வரிசையில் இல்லாத இவரின் இவ்வரிய நூல் சைவசித்தாந்த நூல்களில் சேர்க்கப்பட்டுள்ளமை இவருக்குப் பெருமை சேர்ப்பதாகவும் உள்ளது. பின்வரும் செய்யுள் உண்மை விளக்கம் பற்றிக் கூறுகின்றது.

உந்தி களிறே, உயர் போதம் சித்தியார்
பிந்திருபா **உண்மை** பிரகாசம் - வந்த அருட்
பண்பு வினா போற்றி கொடி பாசமிலா நெஞ்சு விடு
உண்மைநெறி சங்கற்பமுற்று.

எனத் தருகின்றது.

திருவுந்தியார் திருக்களிற்றுப்படியார் சிவஞான போதம், சிவஞான சித்தியார் இருபா இருப∴து **உண்மை விளக்கம்** சிவப்பிரகாசம், வினாவெண்பா, போற்றிப்ப∴றொடை கொடிக்கவி நெஞ்சுவிடுதூது உண்மை நெறி விளக்கம் சங்கற்ப நிராகரணம் என்பனவே சைவ சித்தாந்த நூல்கள் பதினான்கும் என மேற்போந்த வெண்பாவால் அறியலாம். இதனுள் உண்மை விளக்கமும் ஒன்றென்பது தெளிவு.

இவ்வரிய நூல் வெண்பா யாப்பினாலே பாடப்பட்டது. கடவுள் வாழ்த்து ஒன்றும் நூன்முகச் செய்யுள் மூன்றும் உள்ளாக ஐம்பத்திநான்கு

(54) வெண்பாக்கள் இதில் அமைந்துள்ளன. 50 செய்யுள்கள் நூலிலே கூறப்படுகின்ற விடையங்களாக பொருளாக உள்ளன.

இந்நூல் பத்துப் பகுதிகளைக் கொண்டது. அவை :

| | |
|---|---|
| 1. ஆன்ம தத்துவம்<br>2. வித்தியா தத்துவம்<br>3. சுத்த தத்துவம் | இவை தத்துவங்கள் |
| 4. ஆணவம்<br>5. கன்மம் | இவை மலங்கள் |
| 6. ஆன்ம ரூபம் | உயிர்க்காட்சி |
| 7. சிவரூபம் | சிவக்காட்சி |
| 8. திருவைந்தெழத்து | நடனம் |
| 9. அத்துவித முத்தி | |
| 10. குருலிங்க சங்கம வழிபாடு | |

என்பன.

சைவ சித்தாந்த சாத்திரங்களைக் கற்க விரும்பும் மாணவர்கள் முதலில் இந்நூலைக் கற்றுத் தெளிந்திருப்பராயின் தாம் கற்க விரும்பும் கற்கப் புகும் சித்தாந்தக் கருத்துக்களை உண்மைகளை எதுவித இடர்ப்பாடுகளும் இல்லாமல் கற்பதற்கு (உறுதுணையாக) ஏற்ற துணையாக சாதனமாக இது இருக்கும் என்பதைப் பல கற்றறிந்த அறிவியல் பேராசிரியர்கள் கூறுவர். இன்னும் சொல்லப்போனால் சைவ சித்தாந்தத்திற்கு இது ஒரு நூல்முகம் என்று கூடச் சொல்லலாம். இத்தகைய சிறப்பான நூல் சித்தாந்த நூலாகக் கிடைக்கப் பெற்றது சைவ சமய உலகத்திற்கு ஒரு பெரும் செல்வமேயாகும்.

இவர் தந்த உண்மை விளக்கம் என்னும் நூல் உமாபதி சிவாச்சாரியார் இயற்றிய உண்மை நெறி விளக்கம் என்னும் நூலுக்கு வேறாக உள்ளது. இவ்விரு நூல்களையும் ஒன்றாகக் கருதாமல் இவை இரண்டும் வேறு வேறு நூல்கள் என்பதனை உணர்த்துவதாக இந்நூல் உண்மை விளக்கம் என்னும் பெயர் உடையதாய் இருக்கின்றது. இவரின்

செய்யுள்கள் யாவும் சுருக்கமாகவும் ஆழ்ந்த கருத்துக்களையும் கொண்டுள்ளன.

இவருடைய இந்நூலுக்கு பல சித்தாந்த அறிஞர்கள் சிற்றுரைகளும் பேருரைகளும் கண்டுள்ளனர் அவற்றில் சில இன்று நம்மிடையே கிடைக்கப் பெறவில்லை. இவர் இந்நூலை, ஒரு ஆசிரியரும் ஒரு மாணவரும் தம்முள் கொண்டுள்ள அன்பினால் அளவளாவுதல் போன்ற நடையிலே ஆக்கி இருப்பது இவரின் தமிழ்ப் புலமையை வெளிப்படுத்துவதோடு, அவரின் சித்தாந்த உண்மை ஆய்வு, தெளிவு என்பனவற்றையும் புலப்படுத்துகின்றது. அவரின் பெரும்புகழ் வாழ்க.

திக்கம்
30-12-2004

இவண்
மேலல்வையூர். **ஆ. பொன்னையா**

# மனவாசகங்கடந்தார் வாழ்த்து

மனவாச கங்கடந்த வான்கருணைப் பெயரோன்
மழுமான் சுமந்தபெரு மானின் அருளால்
கனமான வைகள் எனக்கூறும் இந்த
சித்தாந்தப் பேருணர்வா முண்மை விளக்கை
மனமாசு அகற்றுநெறி யார்தலை விளங்கி
மனங் கொண்டேகற்றுத் தெளிந்து தேரின்
தனமாகச் சிவஞானம் பெற்றே உய்வர்
சிவப்பேறும் வெல்வர் சீரும் அஃதே

கவிதை ஆக்கம்: உரையாசிரியர்



தி.ந. உலகநாதன்

உ

ஓம் சிவாய நம

திருவதிகை மனவாசகங் கடந்தார் அருளிய

# உண்மை விளக்கம்

## பொருளுரையும் விரிவுரையும்

**கடவுள் வாழ்த்து**

**வண்மைதரும் ஆகமநூல் வைத்த பொருள் வழுவா**
**உண்மை விளக்கம் உரை செய்யத் - திண்மதம்சேர்**
**அந்திநிறத் தந்திமுகத் தொந்திவயிற்று ஐங்கரனைப்**
**பந்தமறப் புந்தியுள் வைப்பாம்**

**இதன் பொருள் :**

**வண்மை தரும்** - ஆன்மவளம் தரும் சரியை கிரியை யோகம் ஞானம் என்பனவற்றை விளக்கிக் கூறுகின்ற, **ஆகமநூல் வைத்த பொருள்** - சிவாகமங்களில் முன்னிலையாக வைத்தோதப்படுகின்ற தளை உயிர் இறை என்பனவற்றை, **வழுவா** - அதன் உண்மைத் தன்மையில் சிறிதும் குற்றம் ஏற்படாத முறையில், **உண்மை விளக்கம்** - உண்மை விளக்கம் எனப் பெயரிட்டு அழைக்கப் பெறும் இந்நூலை, **உரை செய்யத்** - இயற்றவும் இந்நூல் இடையூறு இன்றி இனிது நிறைவுறவும் (முடிக்க) **திண் மதம் சேர்** - மனவலிமையைத் தத்தளிக்க வல்ல மூன்று வகை மதநீர்களை உடையவரும், **அந்திநிறத்** - சாயங்காலத்திலே வானிடத்தே பரந்து தோன்றி விளங்குகின்ற சிவந்த நிறத்தைப் போலும் செம்மேனி படைத்தவரும், **தந்தி முகத்து** - யானை முகத்தையும் இரு தந்தங்களையும் கொண்ட திருமுகத்தை உடையவரும், **தொந்திவயிற்று** - முன்பருத்து விளங்கா நிற்கும் திருவயிற்றினையும், **ஐங்கரனை** - ஐந்து திருக்கைகளையும் உடைய மூத்த பிள்ளையாரை, **பந்தம் அற** - மலமாயை அறியாமை என்பன கெட்டொழியும்படி, **புந்தியுள்** - எமது மனத்துள், **வைப்பாம்** - வைத்து வணங்கி வழிபாடு செய்வோமாக.

**கருத்துரை**

ஆன்ம வளம் தரும் சரியை கிரியை யோகம் ஞானம் ஆகிய நான்கு பாதப் பொருள்களை விளக்கிக் கூறுகின்ற சிவாகமங்களில் முன்னிலையாக வைத்தோதப்படுகின்ற தளை உயிர் இறை என்பன வற்றை, அதன் உண்மைத் தன்மையில் சிறிதும் குற்றம் ஏற்படாத வகையில் உண்மை விளக்கம் எனப் பெயரிட்டு அழைக்கப்பெறும் இந்நூலை இயற்றவும் இடையூறு இன்றி இனிது நிறைவுறவும் (முடிக்க) மன வலிமையைத் தந்தளிக்க வல்ல மூன்று வகை மதநீர்களை உடையவரும், சாயங்காலத்தில் வானிடத்தே தோன்றி விளங்குகின்ற சிவந்த நிறத்தைப் போலும் செம்மேனி படைத்தவரும், யானை முகத்தையும் இரு தந்தங்களையும் கொண்ட திருமுகத்தை உடையவரும், முன்பருத்தும் பரந்து விளங்கா நிற்கும் திருவயிற்றினையும் ஐந்து திருக்கைகளையும் உடையவரும் ஆகிய மூத்த பிள்ளையாரை மலமாயை அறியாமை என்பன கெட்டொழியும்படி எமது மனத்துள் வைத்து வணங்கி வழிபாடு செய்வோமாக.

**விரிவுரை**

ஒரு நூலை எழுதுவதற்கு முன்பாகக் காப்புச் செய்யுள் செய்து கொள்ளுதல் மரபு. அஃது அகத்தும் புறத்தும் வழிபடு தெய்வத்தை வணங்குவதாகும். இறைவனைச் சிந்தை செய்து வணங்கி செய்யப் போகின்ற நூல் இடையூறு இன்றி இனிது நிறைவுற வேண்டுமெனப் பாடலால் வழிபடுதலே காப்பு ஆகும்.

இவ்வாறு செய்தல் தமிழ் சைவ மரபினைக் காத்தலும் ஆகும். மெய்ஞ்ஞானிகள் தாங்கள் சொல்ல எண்ணியிருக்கும் நூல்கள் மெய்ஞ்ஞானப் பொருள் பற்றிய காரணத்தால் இறைவன் வணக்கத்தை, வேண்டுதலைச் செய்யாமலே அவை நிறைவேறிவிடுகின்றன. ஏனெனில் அந்நூல்கள் இறைவனைப் பற்றிய செய்திகளைச் சொல்வதினாலே யாகும். அவ்விறைவனைப் பற்றிச் சொல்லுதலே வழிபாட்டுக்கு உட்படும். ஆதலால் வழிபாடு செய்யாமலே நூல்கள் இனிது நிறைவேறுகின்றன.

ஆயினும் மரபு காத்தலே முக்கியமானது. பண்பாடானது, எனக் கருதுகின்ற இவர்கள் தமது குல தெய்வத்தை வேண்டுதல் செய்து

கொள்வார்கள். அவ்வாறு கடவுள் வணக்கம், காப்பு பாடித் தொடங்கப் பெற்ற நூல்கள் முட்டின்றி முடிந்தன. தொல்காப்பியம் அவ்வாறு காப்புச் செய்யுள் இல்லாத நூலே. அதனாலே கடவுள் வாழ்த்து வேண்டப்படுவது என்ன காரணம் பற்றி எனின் தொல்காப்பியத்தை எழுதப் புகுந்த தொல்காப்பியர் இறைவனை அகத்தே வேண்டியே நூலைப் பாடினார் என்பது நூலின் கண்வரும் செய்திகள் எமக்கு உணர்த்துகின்றன. எனவே சில நூல்களுக்கு கடவுள் வணக்கம் காப்பு புறத்தே கூறப்படவில்லை என்றாலும் இனிது முடிந்தன, முடியும் எனக் கொண்டு அவ்வாறு செய்யாது விடுத்தனர்.

உண்மை விளக்கம் என்னும் இந்நூலின் ஆசிரியர் திருவதிகை மனவாசகங் கடந்தார். இவரின் குருவான மெய்கண்ட நாயனார் சிவநெறி பற்றிய சிறப்பு நூலைச் செய்தவர். அவர் இடையூறு நீக்குவற்குரிய கடவுள் வாழ்த்தினை, காப்புச் செய்யுளை நூலின் தொடக்கத்திலே கூறினார். "கல்லால் நிழல்" எனத் தொடக்கத்தை உடைய செய்யுளைப் பாடினார். அதன் மரபுவழி அடியொற்றி மனவாசகங்கடந்தாரும் உண்மை விளக்கத்தைப் பாடுவதற்கு முன்பாக விநாயகக் கடவுளை வாழ்த்தினார். வேண்டினார். தனது செய்யுளிலே விநாயகக் கடவுளின் தோற்றத்தைப் பார்த்து அவர் வடிவத்தைக் காட்டி அடையாளம் செய்கின்றார். அவர் விநாயகப் பெருமானை,

1. **திண்மதம் சேர்**
2. **அந்தி நிறத்து**
3. **தந்தி முகம்**
4. **தொந்தி வயிறு**
5. **ஐந்து கரம்**

எனக் காட்டி அவ்விநாயகக் கடவுள் செய்யும் கருணைத் திறத்தை வியக்கின்றனர். அதனால் பந்தம் அற எனக் கூறியிருத்தல் காணலாம். இதனால் கடவுள் வணக்கமும், அவ்வணக்கத்தால் வரும் பயனையும் கூறினார் எனலாம்.

நூலுக்கு சிறப்புப் பாயிரம் என ஒன்று பாடப்படவில்லை. இங்கு கூறப் பெற்ற கடவுள் வாழ்த்துப் பாடலே சிறப்புப் பாயிரமாக நிற்றல் காணலாம்.

சிறப்புப் பாயிரத்தில்

| | |
|---|---|
| 1.. பயன் | 5. நூற் பெயர் |
| 2. கேட்போர் | 6. எல்லை |
| 3. நுதலிய பொருள் | 7. வழி |
| 4. யாப்பு | 8. ஆக்கியோன் பெயர் |

ஆகிய இவை எட்டும் கூறப்படவேண்டிய செய்திகள். ஆயினும் இக்காப்புச் செய்யுளில்

பயன்
கேட்போர்
நுதலிய பொருள்
யாப்பு
நூற் பெயர்,
வழி

என்பனவற்றைக் காணக்கூடியதாக உள்ளது. மற்றும் எல்லை ஆக்கியோன் பெயர் இங்கு காட்டப்படவில்லை.

| | |
|---|---|
| பயன் | : பந்தம் அற, |
| கேட்போர் | : வண்மை தரும் ஆகம நூல் கற்போர் |
| நுதலிய பொருள் | : ஆகம நூல் வைத்த பொருள் (கூறும்) முப்பொருள் |
| யாப்பு | : தெளிவு - வெண்பா |
| நூற்பெயர் | : உண்மை விளக்கம் |
| வழி | : ஆகமநூல்வழி |

என்பன காணக்கிடக்கின்றது. வண்மை — திருவடிப்பேறு ஆகமநூல் வழிபாட்டு நூல். இனி எல்லை யென்பது இந்நூல் தமிழில் செய்யப்பட்ட நூலாகையால் தமிழ் நிலம் எனவும், ஆக்கியோன் மனவாசகங் கடந்தார். என்பனவற்றையும் வருவித்துக் காண்க. எனவே கடவுள் வாழ்த்தோடு தற்சிறப்புப் பாயிரமும் அடங்கி இருக்கும் வண்ணம் செய்யுளைப் பாடியிருத்தல் அறியக் கூடியதாக இருக்கின்றது.

இங்கு பாடலிலே விநாயகக் கடவுளை திண்மதம் சேர் என முதலில் அடையாளம் காட்டுகின்றார். இவ்வாறு கூறினமையால் இப்பெருமான்

அருள் மழையாம் பேரின்ப மழையை வழங்குவர் கொண்டிருப்பவர் எனவும் அதனை எமக்கு அளிப்பவர் எனவும் காட்டினார். மதங்கள் என்பன இங்கு கன்னமதம், கபாலமதம், பீஜமதம் எனவரும் தானங்களில் இருந்து பரந்து பெருகும் தேனிப்பை உணர்த்திற்று. அடுத்து அந்தி நிறத்து என்னும் பதத்தைக் கூறுகின்றார். இறைப் பொருளைச் செம்பொருள் என்பர். இங்கு செம்பொருளைத் தரவில்ல பெருமான் சிவந்த திருமேனியுடன் கூடியவர் எனக் கூறி நிற்கின்றார். கபில நிறம் கொண்டது காட்டு யானை ஆனால் இந்த யானைமுகக்கடவுள் மாலை நேரத்தில் காணப்படும் செவ்வண்ணம் போல விளங்குபவர் என்பதைக் காட்டினார். அந்தி வண்ணத்து ஒளியை, செம்மை ஒளியை, ஞான ஒளியை எமக்குத் தந்தளிப்பர் எனவும் காட்டியவாறு காணலாம். அடுத்து தந்தி முகத்தைக் காட்டுகின்றார். தந்திமுகம் பிரணவத்தின் வடிவம். அத்தகு வடிவத்தை உடையவர் ஆகையால் அப்பிரணவ விளக்கமும், அதனை விளங்கும் அறிவையும் எமக்கு அளிப்பர் என்பதாம்.

தொந்தி வயிறு என்பதால் தன்னை வணங்கி, வேண்டி நிற்கும் அடியார்களின் பாவங்களை அகற்றித் தம் திருவயிற்றினுள் அடக்கி இருப்பவராகையால், எமது வினையாகிய பாவங்களையும் நீக்கி அருளுவார் எனவும் பொருள் விளங்குதல் காணலாம். ஐங்கரன் என்பதால் அருள்வழித் திருங்கரங்கள் ஐந்து உளவாகையால் எம்மையும் காத்தளிப்பார் எனவும், மற்றத் தெய்வங்களையும் விநாயகரையும் வேறு படுத்திக் காட்டுதற்கும் இவ்வாறு கூறினார். மற்றைய தெய்வங்களுக்கில்லாத ஐந்து கரம் விநாயகர் ஒருவருக்கே உண்டு. அதன் மிகு சிறப்பைக் காட்டவும் ஐந்து கரத்தை உடையவன் ஐங்கரன் எனவும் கூறினார். அத்தகுதிகளையுடைய ஐங்கரனை வாழ்த்தி வணங்குவோம். அதனால் அவர் வண்மை தருவார் என முடிக்கின்றார். ஐங்கரம் ஐந்து இறை தொழில்களையும் உணர்த்தின.

இங்கு ஆகம நூல் ஒரு மனிதனுக்கு தெய்வ வளத்தினைத் தரும். சிவநெறிக்கு உயிரை இட்டுச் செல்லும் என்பதனை எடுத்துக்காட்ட வண்மை தரும் ஆகம நூல் என்றார்.

சிவபெருமான் அருளியது வேதாகமங்கள். வேதம் பொது ஆகமம் சிறப்பு நூல் எனக்கொண்டு இத்தகு சிறப்பு நூலைக் கூறப் புகுந்தேன் எனக் காண்பிப்பதும் சைவ சித்தாந்த சாத்திரங்கள் கூறும் முப்பொருள்கள் ஆகம முறைப்படி கூறியமை பாசம் உயிர் இறை என்னும் வரிசையேயாகும். மற்றைய ஆசிரியர்கள் பலர் பதி பசு பாசம் என்னும் முறைமையிலே சொல்லி இருக்க மனவாசகங்கடந்தார் முறை பிறழ வைத்து ஓதுகின்றாரே என ஐயம் எழும். ஆகையால் அவ்வையத்தை நீக்குவதற்காகவே ஆகம நூல் வைத்த பொருள் எனக் கூறுகின்றார். இந்நூல் உண்மை விளக்கம் எனப் பெயர் பெறுவதால் உள்ளதை உள்ளவாறே கூறுவதற்குரியது என்பதனைத் தெளிவுபடுத்தவே ஆகமநூல் வைத்த பொருள் என்றார். அஃதாவது ஆகம நூலில் கூறி அமைக்கப் பெற்ற உண்மை முறைப்படியே உள்ள முறைப்படியே இதனை கூறுகின்றேன் எனக் காட்டி எழும் ஐயத்தை போக்கி விடுகின்றார். எனவே ஆசிரியர் பாசம் உயிர் இறை என்ற முறைமை யிலேயே இதனைக் கூறவுள்ளார் என்பதனைக் காட்டியிருப்பதும் இதுவே ஆகமத்தில் காட்டிய வைப்பு முறை என்பதனையும் நினைவுபடுத்து கின்றார். இனி இந்த சிவாகமப் பொருள் மெய்ஞ்ஞானிகள் எமக்குச் சேர்த்து வைத்துச் சென்ற செல்வம்.

இது உலகியலில் சேர்த்து வைத்த "வைத்த நிதி" அன்று ஆன்றோர் நிறைத்த பொருள் அழியாப் பொருள் என்பதனால் எடுப்பினும் குறையாத வைத்த பொருள் என்றார். இதனை திருநாவுக்கரசர் பெருமான் தனது திருமுறைச் செய்தியில் 'வைத்த பொருள் நமக்கு என்று மனத்து அடைத்து சித்தம் ஒருக்கி சிவாயநம என்று இருக்கின் அல்லால்' என்னும் தொடரால் வைத்த நிதி எது என்பதை உணரவைத்தார் அன்றோ. ஆணவம் கன்மம் மாயை என்பன பாசப் பொருள்கள். உயிர் பாசத்தை அனுபவிக்கும் பொருள். இந்த உயிர் பாசத்தினால் அறியாமைப்பட்டு துன்பம் அடைகின்றது. அந்தப் பாசத்தை உயிர் தவிர்த்து விட்டு நீக்கி இறைவனைத் தலைப்பட்டாலே இன்பத்தைக் காணலாம். செயற்கை இயல்பு ஆகிய ஆணவத்தை நீக்க இயற்கை இயல்பை உயிர் அடைகின்றது. இதனை அறிந்த இறைவன் உயிர்க்குத் தன்னிலைமையைத் தந்தளிக்கின்றான். எனவே தான் ஆகம வைப்பு

முறை பாசம் உயிர் இறை என்பதைக் காட்டுவதோடு தானும் அந்த உண்மை வழியிலேயே அம்முப்பொருளையும் கூறவுள்ளார் என்பதனையும் உய்த்து உணரவைத்தார். இச்செய்யுளில் வழுவா உரைசெய்ய என வரும் சொற்றொடர் காணப்படுகின்றது. இவ்வாறு கூறுவதினால் சித்தாந்த சாத்திரங்களைக் கற்கப் புகும் மாணவர்களுக்கு முப்பொருளை விளங்கும் பொருட்டு உரைத்தற்கான முறையிலே இப்பாடல்கள் அமைக்கப்பெற்றன. இதனை நூலில் உள்ளே நுழைந்து படிக்கும்போது தெளிவு ஏற்படுகின்றது. அவர் கூறுகின்ற பாங்கு ஆசிரிய மாணவ நிலையில் உரைக்கப் படுவதை நூலினுள்ளே காண்போம்.இதனால் கடவுள் வணக்கமும் இதன் பயனும் (காட்டினார்) கூறினார்.

இனி நூலில் வைப்பு முறை தளை உயிர் இறை என வைக்கப் பட்டுள்ளது. அறிவற்ற பொருள் அது தானாக இயங்குவதில்லை. இந்தத் தளையாகிய ஆணவம் கன்மம் மாயை என்னும் மலங்களைச் சார்ந்து உலக அறிவைப் பெறுவது உயிர். மேலும் தளைகளால் வரும் இன்பம் சிற்றின்பம் அழியுந் தன்மையுடையது. அதனாலே அறிவற்ற இப்பொருளை முன்வைத்து இதனைச் சார்ந்து உலக அறிவைப் பெறுவது உயிர் என்பதனை உணர்த்தினார். மேலும் இந்த உயிர் எதனையும் சார்ந்தே இருப்பதனால் அதனை நடுவில் வைத்து தளைகளை முன்னும் இறைவனைப் பின்னும் வைத்தார்.

முதலில் உயிர் இந்த பாசப் பொருட்களைப் பற்றி நிற்பதால் அதனை முன்னே வைத்துக் கொள்வதினால் அதன் அறிவு பாசத்தைப் பற்றியனவேயாக இருக்கும். அதனால் தான் உயிர் முதலில் பாசத்தைப் பற்றுகின்றது. அப்பாசம் உயிருக்கு வேண்டிய அறிவையும் இறை பற்றிய உணர்வையும் மறைத்து முன்னே நிற்கின்றது. மேலும் உயிர் முதலில் பற்றி இருப்பது பாசப் பொருள்களையே. அது பாசத்தை அறிந்து அதனால் தனக்கு ஏற்படும் நன்மை எதுவுமில்லை என்பதனை உணரும். இவ்வாறு உணர்ந்த போது பின்னே நிற்கும் இறைவன் அதற்கு பாசத்தைப் பற்றிய அறிவையும் உயிரை பற்றிய அறிவையும் தன்னைப் பற்றிய அறிவையும் ஊட்டுவான். உயிர் பாசத்தினால் வரும்

துன்பங்களை உணர்ந்து இறுதியில் இறைவனைச் சிக்கென பிடிக்கின்றது. இறை அருளாலும் தவத்தாலும் இறைவனை அறிந்து அவனையே பற்றுக் கோடாகக் கொள்ளுகின்றது. எனவே உயிர் முன்னே அறிவது பாசத்தை எனவும், பின்னர் அறிவது இறைவனை எனவும் கொள்ளும் காரணத்தாலும் சிவாகாமங்கள் கூறும் முறைமை அதுவே ஆகலானும் ஆசிரியர் பாசம் பசு இறை என்னும் வைப்பு முறையில் நூலை ஆக்கிச் செல்கின்றார். இதுவே பந்தமற வண்மை தரும் என்றார்.

**வெண்பா - 1**

**தனது குருநாதரிடம் வேண்டுதல் :**

**பொய்காட்டிப் பொய்யகற்றிப் போதானந்தப் பொருளாம்**
**மெய்காட்டும் மெய்கண்டாய் விண்ணப்பம் - பொய்காட்டா**
**மெய்யா ! திருவெண்ணெய் வித்தகா ! சுத்தவினா**
**ஐயா நீ ! தான்கேட்டு அருள்.**

**இதன்பொருள்**

**பொய்காட்டிப்** - காணும் உலகப் பொருள்கள் யாவும் நிலையான பொருள்களென இருந்த அடியேனுக்கு அவையாவும் நிலையில்லாத பொய்ப் பொருள்கள் என அறிவுறுத்தினாய். **பொய் அகற்றிப்**-அப் பொய்ப்பொருள்களின் வழியிலே என் அறியாமையால் யான் சென்ற போது அவற்றினை உடனிருந்து என்னை விட்டு அகலும்படி செய் தாய், **போதானந்தப் பொருளாம்** - மெய் அறிவும் பேரானந்தமும் தரவல்ல சிவபரம் பொருளே நிலையான பொருள் என **மெய்காட்டும்** - மெய்ப்பொருளைக் காட்ட வல்லராகி, **மெய்கண்டாய்**-எனக்கு ஞான குருவாக வந்தாய். அத்துவித உண்மைத் தன்மையை எனக்கும் உலகிற்கும் உணர்த்தி அருளிய மெய்கண்ட தேவரே, **பொய்காட்டா மெய்யா** - நினது தூய்மையினால் நிலையற்ற பொருள்களை எல்லாம் போயகலச் செய்தவரே! அன்புடன் கூடிய அருள்வடிவாக (நிற்பவரே) உள்ளவரே! **திருவெண்ணெய் வித்தகா** - திருவெண்ணெய் நல்லூர் திருக்கோயிலில் எழுந்தருளி இருக்கும் ஞான பண்டிதரே, **சுத்த வினா! ஐயா விண்ணப்பம்** - அடியேனின் குருவாக விளங்கும் தலைவரே! எனது மனமானது தூய்மைப் படும்படியாக வேண்டிச் சில வினாக்களைக்

கேட்கவுள்ளேன். அடியேனின் விண்ணப்பம் இது என. **நீதான் கேட்டு அருள்** - இவ்வினாக்களை உனது திருச்செவி ஏற்று அதற்குரிய மாறுகோளில்லாத விடைகளைத் தந்து அருள வேண்டுகின்றேன்.

### கருத்துரை

காணும் உலகப் பொருள்களை நிலையான பொருள்களென விருந்த அடியேனுக்கு அவை யாவும் நிலையில்லாத பொய்ப்பொருள்கள் என அறிவுறுத்தினாய். அப்பொருள்களின் வழியிலே என் அறியாமையால் யான் சென்ற போது அவற்றினை உடனின்று என்னை விட்டு அகலும்படி செய்தாய். மெய் அறிவும் பேரானந்தமும் தரவல்ல சிவபரம் பொருளே! நிலையான பொருள் என மெய்ப்பொருளைக் காட்ட வல்லராகி என் ஞான குருவாகி வந்தாய். அத்துவித உண்மைத் தன்மையை எனக்கும் உலகுக்கும் உணர்த்தி அருளிய மெய்கண்ட தேவரே! நினது தூய்மையினால் நிலையற்ற பொருள்கள் எல்லாவற்றையும் அகலும்படி செய்தவரே! அன்புடன் கூடிய அருள் வடிவாக உள்ளவரே! உண்மைப் பொருளாக நிற்பவரே! திருவெண்ணெய் நல்லூர்த் திருக்கோயிலில் எழுந்தருளி அங்கு குடி இருக்கும் ஞான பண்டிதரே! அடியேனின் மனம் தூய்மை பெறும்படி சில வினாக்ளைக் கேட்கவுள்ளேன். அடியேனின் விண்ணப்பம் இது. ஐயனே! இவ்வினாக்களை உனது திருச்செவியில் ஏற்றும் அதற்குரிய மாறு கோளில்லாத விடைகளைத் தந்தும் அருள வேண்டுகின்றேன்.

### விரிவுரை

இவ்வுலகில் காணப்படுகின்ற பொருள்கள் அனைத்தும் நிலையில்லாப் பொருள்கள். கணத்தில் அழியும் பொருட்கள். இவை சுட்டியறியப்படும் பொருட்கள். இவ்வாறு கண்டு சுட்டி அறியப்படும் பொருட்கள் சடப்பொருட்கள் எனப்படுகின்றன. இப்பொருட்கள் யாவும் நிலையில்லாத சுட்டி அறியப்படுவதாகிய சடப்பொருட்கள். ஆகையால் அவை தோன்றி அழிகின்றன. இவை அழியும் தன்மையனவாகையால் அவை நிற்பனவும் அல்ல. நிலைப்பனவும் அல்ல. இவை பொய்ப்பொருட்கள் என்றும் நிலையில்லாதன. உயிர்கள் தமது அறியாமை காரணமாக இவற்றை நிலையென எண்ணுகின்றன. உண்மைப் பொருள் என மயக்கமுற்று

எண்ணுகின்றன. இதற்குக் காரணம் அஞ்ஞானத்தை உண்டுபண்ணும் ஆணவம் என்னும் மூலமலமே. அது உயிர்களின் அறிவை மயக்கி வைத்திருக்கின்றது. இவ்வாணவம் உயிரோடு நின்று வினைகளைப் புரிய வைக்கின்றன. அவ்வினைகளுக்கு ஈடாக இறைவன் அவ்வுயிர் களுக்கு அவ்வினைகளின் விளைவை, பயனை அனுபவிக்கச் செய் கின்றான். அவன் உடல் கருவி உலகம் நுகர்வு (தனுகரண புவன போகம்) ஆகிய இவற்றை மாயையைக்கொண்டு மாயாமலம் கொண்டு தோற்றுவித்து அருளுகின்றான். இதன் காரணம் உயிர்கள் நல்லறிவு பெற்று தமது இயல்பு எதுவென அறிந்து நல்வழிப்பட்டு நிற்பதற்கே எனலாம். எனவே இவற்றை உயிர்கள் அனுபவிக்கின்றன. இவ்வனு பவிப்பால் விருப்பு வெறுப்புக் காரணங்களால் மேலும் வினைகள் உயிரை வந்தடைகின்றன. இவ்வினைகளை அனுபவிக்க வேண்டியது உயிரேயாகையால் அது பற்பல பிறவிகளை எடுத்து உழலுகின்றது. இதனால் உயிர் இளைப்படைகின்றது. இந்தப் பிறவிக்கு முடிவே இல்லையா எனச் சிந்திக்கின்றது. அச்சிந்தையினையில் தெளிவைப் படிப்படியாக அடைகின்றது. இதற்குக் காரணம் தளை-பாசம்- எனவும் காணுகின்றது. எனவே பாச அறிவில் இருந்து உயிர் சிந்தித்துத் தன் உண்மைத் தன்மை எதுவென எண்ணுகின்றது. அது காரணமாக பசு ஞானம் (உயிர் அறிவு) பெறுகின்றது. அதன் சிந்தனை மேலும் விரிவடைகின்றது. தன் நிலைமையை உணர்ந்த உயிர், தனது உண்மைத் தன்மையையும் தனக்கு மேலான ஒருவன் உளன் என்பதனையும் அந்த ஒருவனுடன் கலந்து இருத்தலே தனது உண்மை நிலை யென்பதையும் உணர்ந்து கொள்ளுகின்றது.

உயிர்களுடன் எக்காலத்தும் அவையே தானேயாய் நிற்கும் இறைவன் அவற்றிற்கு தன்னிலைமையைத் தந்து அளிக்க முற்படு கின்றான். இதுவரை மாயை, உயிரை அஞ்ஞானத்தில் வைத்திருந்த நிலையில் இருந்து விலகிக் கொள்ளுகின்றது. இந்த ஆற்றலாகிய மாயை பாச ஞானத்தில் நின்ற உயிர் இறைவனின் சக்தியான மாயையின் மறைப்பாற்றலில் இருந்து விலகிக் கொள்கின்றது. இந்த ஆற்றலாகிய அவ்வுயிர்களின் அறிவு விரிவடைய ஒளிப்பொருளாக நின்று உதவுகின்றது. இறை உணர்வை உயிர் பெறுகின்றது.

அவ்வுணர்வினால் நிலையென எண்ணி இருந்த பொருள்கள் யாவும் சுட்டியறியப்படுவன யாவும் நிலையில்லாதன என விளக்கம் பெறுகின்றது. அதனை விலக்க முற்படுகின்றது. வினைகள் புரிவதை விடுகின்றது. வினைகள் இல்லாத காரணத்தால் நல்வினை தீவினை என்பனவற்றில் ஒப்புக் காணுகின்றது. எல்லாச் செயலும் இறை செயலென எண்ணியதால் இருவினை ஒப்பும், அதனை தொடர்ந்து மலபரிபாகமும் நிகழுகின்றது. அருள்பதிவு வந்து (சத்திநிபாதம்) அடைகின்றது. இந்த நிலையில் மாயை இறைவனுக்கு உயிரின் நிலையை உணர்த்த இறைவன் குருவடிவாக வருகின்றான். அந்தக் குருவே இங்கு காட்டப்பெறுகின்ற ஞான குருவென்பதை நூலாசிரியர் காட்டுகின்றார். அந்தக் குருவே இவ்வுலகின் உண்மை இன்மைத் தன்மைகளை உணர்த்தி உயிருக்கு அறிவு வரச் செய்கின்றார். இங்கும் தனது குருவான மெய்கண்டநாயனார் பொய்யினை அகற்றி நிற்கின்றார் நின்றார் எனக் காட்டுகின்றார். அதனையே செய்யுளில் பொய்காட்டிப் பொய் அகற்றி எனக் கூறினார்.

மேலும் பொய் அகற்றி என்பதினால் மெய்காட்டி எனவும் பொருள் காண வேண்டும். அதாவது பொய்யைக் காட்டும் போது மெய்யெது வென காட்டவேண்டிய கட்டாயம் எழுகின்றதல்லவா? எனவே ஞான குருவானவர் பொய்ம்மையைக் காட்டி அதனை உணர்வித்து அவ்வுணர் வினால் மேலும் பொய் என ஒன்றிருப்பின் மெய் யென்பது ஒன்றும் உண்டல்லவா என்பதை உணர்த்த நூலாசிரியர் பொய் அகற்றி மெய்காட்டும் நிலையெனக் கொள்ளுதல் வேண்டும். எனவே தான் மெய்கண்ட தேவரை விளிக்கும் போது பொய் காட்டி பொய் அகற்றும் என்றார். மெய்காட்டினார் என்பதைக் காட்டிய போது அந்த மெய் என்பது என்ன என்ற கேள்வி எழுவது இயல்பே. அதனால் அதனை அனுபவ (ரீதியாக) வாயிலாக அனுபவித்தலே உண்மை விளக்கம். ஆகையால் அதனை அனுபவித்த ஆசிரியர் மனவாசகங்கடந்தார் அதனைப் பின்வருமாறு கூறுகின்றார். போது ஆனந்தப் பொருளாம் மெய் என்ற தொடரை கவிதையில் பூட்டி விடுகின்றார். அஃதாவது அம்மெய்ப்பொருளின் பேரறிவும் பேரானந்தமும் தரும் மெய்ப் பொருள். அதுவே சத்து + சித்து + ஆனந்தம் என்பது. எனவே சச்சிதானந்தம் என்னும் மெய்ப்பொருளை மெய்யாகக் காட்டியவர் என்பதனையே மேற்போந்த சொற்றொடரால் கூறினார்.

இனி காட்டும் மெய்கண்டாய் என்றார். நான் கடவுளைக் கண்டேன். கனவில் தோன்றினான். நனவில் வந்தான் அவன் எனக்கு அருளினான். எனத் தம் அனுபவத்தையே பலர் கூறியிருப்பர். ஆயினும் இங்கே மெய்கண்டார் கடவுளைக் காட்டுவேன் என மாணாக்கரை வலிந்து இழுத்து அவருக்கு அந்தச் சச்சிதானந்தப் பொருளைக் காட்டினார், என்பதைக் கூறவே இத் தொடரைக் கூறினார் எனலாம். இனித் தனது குருவை மெய்கண்டார் எனவும் காட்டுகின்றார். மெய்கண்டார் தனது நூலான சிவஞான போதத்தில் அவையே தானேயாய் என்னும் சொல்லுக்கு உண்மைப் பொருளைக் காட்டியவர். இந்தச் சொற்றொடரைக் கூறியே அத்துவிதம் என்னும் ஒன்றாந் தன்மையைக் கலப்பைக் காட்டியவர். அரக்கொடு சேர்த்திய அக்கற்பொடி போல் என உவமை காட்டி அத்துவித உண்மை காட்டியவர். நிறுவியவர்.

பல குருவானவர்கள் பலவிதமான கருத்துக்களை அத்துவிதம் என்ற சொல்லுக்கு கூறியிருப்பவும் உலகத்தோரால் அறிஞர்களால் மெய்ஞ் ஞானிகளால் விதந்தோதப்பட்டு அவ்வழி தோய்ந்திருப்பவர் பலர். அதனால் அதுவே மெய்ப் பொருள் கண்டார் என்றார். அதனால் தன்குருவை மெய்கண்டாய் என்றார். மெய்யைக் கண்டவர் மெய்கண்டார் தானே அதனால் மெய்கண்டாய் எனக் கூறி தனது குருநாதர் யார் எனவும் கொள்ள வைத்தார். மெய்கண்டவரே மெய்யைக் காட்டவல்லவரே என் குருவும் அத்தகையவரே என்பதை உணர வைத்தார். அடுத்து ஆசிரியர் தன் குருநாதரை பொய்காட்டா மெய்யா என்றார். முதலடியிலே பொய்காட்டி எனக் கூறிய ஆசிரியர் வெண்பாவின் தனிச் சொல்லாக பொய்காட்டா என்றார். இதனால் இக்கருத்து மாறுரை எனக் கொள்ள லாமா என ஐயுறுவர் பலர். அது அச் சொல்லுக்குப் பொருளன்று. அதனை விரித்துரைப்பின் சுத்த பரிசுத்த தூய ஞான உடல் திருமேனி கொண்டு நிற்பவர் எனவும் அத்தூய தன்மை அவருடைய தூய மெய்ஞ்ஞானத்தால் மெய்யறிவால் பெறப்பட்டது என்பது ஆகையாலும் தூய்மையை இங்கு மெய் என்னும் உடலாக உடையது எனவும் காட்டுகின்றார். பொய் காட்டா மெய் என்பது சீவன் முத்தர்களை குறிப்பாக விளக்குகின்றது. இதனை உணர்த்தவே பொய்காட்டா மெய்யா என்றார்.

மேலும் தனது குரு எழுந்தருளி இருக்கும் ஊர் திருவெண்ணெய் நல்லூர் எனக் காட்டி அங்குப் பல மெய்ஞ்ஞானிகள் தோன்றியும் வந்தும் இருந்தும் போந்தும் உடையவரெனினும் அம்மெய்கண்டாருடைய மெய்ப்பொருள் அறிவுக்கு ஈடாகார் எனக் கருதி வித்தகா என்றார். இதனைத் திருவெண்ணெய் வித்தகா என்றார். வித்தகம் என்பது அறிவில் சிறந்தோரைக் குறிப்பது. மெய்த்துறவு பூண்டு நின்ற பேரறிவுடைய விபுலானந்த அடிகளாரை வித்தகர் விபுலானந்தர் என அழைப்பர். மனவாசகங் கடந்தாரைப் போல அவரோடு ஒரு சாலை மாணவராக விளங்கிய அருணந்தி சிவாச்சாரியார் தம் குருவே திருவெண்ணெய் நல்லூர்த் திருத்தலத்தில் வந்திருக்கும் வாழ்ந்திருக்கும் சிவபரம் பொருளாக விளங்குகின்றார் எனக் காட்டுகின்றார். இதனை அருணந்தி சிவாச்சாரியார்

**கண்ணுதலும் கண்டக் கறையும் கரந்தருளி**
**மண்ணிடையில் மாக்கள் மலமகற்றும் - வெண்ணெய்நல்லூர்**
**மெய்கண்டான் என்றொருகால் மேவுவரால் வேறின்மை**
**கை கண்டார் உள்ளத்துக் கண்**

எனத் தனது இருபா இருஃபது என்னும் நூலில் காட்டியுள்ளார். இவ்விரு செய்யுளையும் ஒப்பு நோக்கிச் சிறப்புகள் காண்க. எனவேதான் மெய்கண்டப் பெருமானே வித்தகர் ஆகையால் அப்பெருமானே தனது குருவும் எனவும் உணர்த்தினார். குருவணக்கம் கூறியவாறும் காண்க.

இனி வித்தகம் உடைய ஒருவரே கேட்க விருக்கும் கேள்விகளுக் கெல்லாம் மாறுபாடில்லாத, மீண்டும் கேள்வி எழாத கேட்காத வண்ணம் பதில் சொல்வர். இதனை வள்ளுவர்

**சொல்லுக சொல்லைப் பிறிதோர் சொல் அச்சொல்லை**
**வெல்லும் சொல் இன்மை அறிந்து** என்பர்.

எனவேதான் தான் கேட்க விருக்கும் கேள்விகளுக்குச் சரியான விடையைத் தரவேண்டும். அக்கேள்விகளுக்கு முதன்மை தரவேண்டும் எனக் காட்டி நீதான் கேட்டு அருள் என்றார். வித்தகா ஐயா நீதான் கேட்டு அருள் எனக் காட்டினார்.

மேலும் ஆசிரியர் தான் கேட்கின்ற கேள்விகள் சுத்தம் பற்றியதே என்பதையும் கூறிவிடுகின்றார். சுத்தவினா என்றார். இங்கு 'சுத்தவினா எனக் கூறப்படுவதால் அசுத்த வினாக்களும் உளவாகையால் அதனை விடுக்கின்றேன் எனக் காட்டியவாறு உணரலாம். சுத்தம் என்பது முத்தி நிலை. எனவே இங்கு கேட்கவிருக்கும் கேள்விகள் ஒரு சித்தாந்த மாணவனுக்கு சுத்தமும் காட்டி அசுத்தத்தையும் காட்டும் எனவும் கண்டு உயிர் அசுத்த நிலையில் இருந்து சுத்த நிலைக்கு செல்லும் வழியையும் அதை அடையத் தகுந்த படிகளைச் சொல்ல வேண்டும் எனவும் காணலாம்.

மனவாசகங்கடந்தார் இதனைத் தொடர்ந்து வரும் பாடல்களில் ஆறாறு தத்துவம் என்பதையும் ஒரு வினாவாகக் கொண்டு கேட்பதால் அவற்றில் அசுத்த மாயா தத்துவங்களும் வித்தியா தத்துவங்களும் சுத்த மாய தத்துவங்களும் அதற்கான விளக்கமும் கேட்டு நிற்றலைக் காண்கின்றோம். இந்நூல் சகலநிலையில் உள்ள உயிர்களுக்கே கூறப்படுவதால் சகல நிலையில் இருக்கும் உயிர் எந்த எந்தத் தத்துவங்களைப் பொருத்த வேண்டும் என்பதையும் இச்சகல நிலை மாறி முத்திநிலையை அடையும் போது எந்தத் தத்துவங்களுடன் தொழிற்படுகின்றது என்பதனையும் காட்டும்படி வேண்டுகின்றார். உயிர் பதிஞானம் பெற்று இறைவனின் அருட்பேறு பெற்றபோது இக்கருவிகளும் கரணங்களும் தேவையில்லை என்பது உண்மையே. இதனால் இச்செய்யுளிலே தான் கேட்க விருக்கும் வினாக்களை உய்த்துணரவும் விடுக்கின்றார். முதலில் பொய்காட்டி என்பதினால் தத்துவங்களையும் அதன் தன்மைகளையும் காட்டும்படி வேண்டுகின்றார். பொய் அகற்றி என்னும் சொற்றொடரால் இந்தத் தத்துவங்கள் அகலுவதற்கான வழியைக் காட்ட வேண்டும் என்பதினால் ஆணவம் கன்மம் மாயை முதலிய மலங்களில் குணத்தையும் அவற்றை வெல்லும் தகுதியையும் காட்டு எனக் கூறியவாறும் காணலாம். இனி போதானந்தப் பொருளாம் எனக் கூறுவதினால் இறை இயல்பும் கேட்டவாறும் அத்தோடு உயிர் அத்துவித நிலை எய்தி நிற்பதற்குள்ள அறிவையும் தர வேண்டும், என விண்ணப்பிப்பதும் காண்க. அத்தோடு போதானந்தப் பொருள் என்பது உண்மைப் பொருளே. அப்பொருளே மெய்காட்டும் ஆகையால்

மெய்வழிக்கு இட்டுச் செல்லும் வழியையும் சாதனைகளையும் கூறும்படியும் காட்டினார். போதானந்தப் பொருள் எனக் காட்டுவதால் உயிர் தேனிப்புக் கண்டு அதிலே ஊறி நிற்றலையும் அத்துவித உண்மையையும் காட்டி விளக்கும்படியும் காட்டினார் எனலாம்.

ஆனந்தம் தருபவன் இறைவன். அவன் ஆனந்தத்தை தருவதும் தனது தொழிலாகக் கொண்டுள்ளான். அந்த ஆனந்தத்தை அவன் தனது ஆனந்த நடனத்தை பயின்று அருளுகின்றான். இந்த ஆனந்தத்தை அடைவதாயின் இந்த ஆனந்தத்திற்கு இட்டுச் செல்வன யாவை? அதுதான் சிவபரம் பொருள் காட்டும் நடனச் சிறப்பு. இந்த சிறப்புகளையும் கூறி அருள வேண்டும் என்பதையே போதனந்தப் பொருளாம் மெய் என்றார். எனவே சுத்தவினா என்னும் சொல்லும் அவையாவன என்பதைச் செய்யுளிலே உய்த்து உணரும்படியாக காட்டி நிற்றலும் சிறப்பாகவுள்ளது. சிந்தித்துக் காண நிற்கின்றதும் எனலாம். உயிர் கேவல நிலையில் இருந்து சுத்த நிலைக்குச் சென்றடைய வேண்டும் என்பதால் அவற்றை யெல்லாம் அறிவது சுத்த வினாவால் என்பதையும் உணர்க. இந்த உயிர் ஒரு உண்மையிலே இருந்து தான் இன்னொரு உண்மைக்குச் செல்லுகின்றது. அதாவது ஒரு அறிவிலே இருந்து கொண்டு அதனால் வரும் பயனை அறிகின்றது. அதன் பின்னர் அந்த அறிவு பொய்யான அறிவு என்பதையும் உணருகின்றது. அந்த அறிவை விட்டுப் படிமுறையில் அடுத்த உண்மை எதுவாக இருக்கும் எனத் தாவுகின்றது. இவ்வாறாக சகலத்தில் மெய் மெய் எனக் கண்டவற்றை யெல்லாம் பொய் பொய் எனக் கண்டு இறுதியில் உண்மைப் பொருளைக் காணுகின்றது. இதனையே வள்ளுவப் பெருந்தகையும்

**எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்பது அறிவு** எனவும்

**எப்பொருள் யார்யார்வாய் கேட்பினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்பது அறிவு** எனவும்

கூறுகின்றார். இதனால் வருகின்ற பொய்ப்பொருள் மெய்ப்பொருள் ஆகிய இரண்டினையும் ஆராய்ந்து அவற்றில் மெய்ப்பொருளை உண்மைப் பொருளைக் காணவேண்டும். அது அனுபவத்தாலும் இறை அருளாலும் வந்து சேரும். அந்த இறை அருள் என்பதையே ஆசிரியர்

சுத்தவினா ஐயா கேட்டு அருள் நீதான் என உறைப்பாகக் கூறுவதால் முற்செய்யுளில் கூறிய வண்மைதரும் ஆகமநூல் வைத்த பொருள் வழுவா உண்மை விளக்கம் என்பதையும் அதையே தான் சுத்த வினா எனவும் காட்டியவாறு காண்க.

## வெண்பா-2

**குருவிடம் சுத்தவினாக்களைக் கேட்டு அதற்குள்ள உண்மை விடைகளைத் தரும்படி வேண்டுதல்**

**ஆறாறு தத்துவம் ஏது ஆணவம் ஏது அன்றே தான்**
**மாறா வினை ஏது மற்றிவற்றின் - வேறாக**
**நான் ஏது நீ ஏது நாதன் நடம் அஞ்செழுத்துத்**
**தான் ஏது தேசிகனே சாற்று.**

## இதன் பொருள்

ஆறாறு தத்துவம் ஏது-ஆறுடன் ஆறு எண்ணைப் பெருக்க வரும் முப்பத்தாறு எண்ணிக்கை கொண்ட தத்துவங்கள் என்பன யாவை? அவற்றின் இயல்பு என்ன? (தத்துவங்கள் என்பதால் அதனை வருவிக்கும் மாயை என்பது என்ன என்பதுமாம்), **ஆணவம் ஏது** - அநாதியே (உயிரோடு) ஒன்றித்து நிற்கும் உயிர்க் குற்றமாகிய ஆணவ மலம் என்பது என்ன? அதன் இயல்பு என்ன? **அன்றே தான் மாறா வினை ஏது** - அநாதியே தோன்றிய காலம் முதலாக மாறாது நிற்கின்ற வினை என்பது என்ன? அதன் இயல்பு என்ன? **மற்று இவற்றின் வேறாகா நான் ஏது** - இத்தத்துவங்களுடன் ஆணவம் கன்மம் மாயை என்பனவற்றுடன் வேறாகாத வண்ணம் கேவல சகல நிலையில் நிற்கும் உயிர் (நான்) என்பது என்ன அதன் இயல்பு என்ன? **நீ ஏது** - இவற்றோடு என்னைச் சேர்த்தும் அவற்றினின்றும் விலகச் செய்தும் வைக்கின்ற நீர் இறைவன் குரு என்பது என்ன? உன் இயல்பு என்ன? **நாதன் நடம் ஏது** - தலைவராகிய சிவபெருமானின் திருநடனம் என்பது என்ன? அதன் இயல்பு என்ன? **அஞ்செழுத்து ஏது** - திருவைந்தெழுத்து (பஞ்சாக்கரம்) என்பது என்ன? அதன் இயல்பு என்ன? **தான் ஏது** - அத்துவிதமாய் நிற்கும் முத்திநிலை என்பது என்ன?

அவ்வேளை இருவரின் இயல்பு தான் என்ன? தேசிகனே சாற்று - ஞான குருவாக விளங்கும் பெருமானே இவற்றிற்கான விடைகளைச் சொல்லி அருள வேண்டும்.

**கருத்துரை**

ஆறுடன் ஆறு எண்ணைப் பெருக்க வரும் முப்பத்தாறு எண்ணிக்கை கொண்ட தத்துவங்கள் என்பன யாவை. இவற்றின் இயல்பு என்ன. தத்துவங்கள் என்பதால் அதனை வருவிக்கும் மாயை என்பது என்ன என்பதாம். அநாதியே உயிரோடு ஒன்றித்து நிற்கும் உயிர்க் குற்றமாகிய ஆணவ மலம் என்பது என்ன. அதன் இயல்பு என்ன. அநாதியே தோன்றிய காலம் முதலாக மாறாது நிற்கின்ற வினை என்பது என்ன. அதன் இயல்பு என்ன. இத்தத்துவங்களுடனும் ஆணவம் கன்மம் மாயை என்பனவற்றுடனும் வேறாகாத வண்ணம் சகல நிலையில் நிற்கும் உயிர் என்பது என்ன? அதன் இயல்பு என்ன? இவற்றோடு என்னைச் சேர்த்தும் அவற்றினின்றும் விலகச் செய்தும் வைக்கின்ற நீர் (இறைவன் குரு) என்பது என்ன. உன் இயல்பு என்ன. தலைவராகிய சிவபெருமானின் திருநடனம் என்பது என்ன. அதன் இயல்பு என்ன. திருவைந்தெழுத்து - பஞ்சாக்கரம்-என்பது என்ன. அதன் இயல்பு என்ன. அத்துவிதமாய் நிற்கும் முத்தி நிலை என்பது என்ன. அவ் வேளை இருவரின் இயல்பு தான் என்ன. ஞான குருவாக விளங்கும் பெருமானே இவற்றிற்கான விடைகளைச் சொல்லி அருள வேண்டும்.

**விரிவுரை**

நூலாசிரியர் தனது முதற் செய்யுளில் தான் கேட்கப்போகும் வினாக்களுக்கு ஏற்ற விடைகளைத் தருக என வேண்டினார். இவ்வெண்பா மூலமாக கேட்கும் கேள்விகளை இவை தாம் என ஒன்றன் பின் ஒன்றாக வைப்பு முறைபோல் எடுத்துச் சொல்லி தேசிகனே (சாற்று) விடை கூறுக எனச் செய்யுளை முடிக்கின்றார்.

வினாக்கள் பின்வருமாறு :

1. முப்பத்தாறு தத்துவங்களின் இயல்பு இலக்கணம் யாது? அவையாவை எனக் கேட்கின்றார். தத்துவங்களை மூன்று ஆகக் பிரித்துக்

கூறலாம். அவை ஆன்ம தத்துவம் 24, வித்தியா தத்துவம் 7, சிவ தத்துவம் 5, மொத்தம் 36. இத்தத்துவங்கள் மாயையால் வருவன. ஆகையால் இவற்றை மாயா தத்துவங்கள் எனவும் கூறலாம்.

மாயை இரு வகை. அசுத்த மாயை எனவும், சுத்த மாயை எனவும் கொள்ளப்படும். முதல் 31 தத்துவங்கள் அசுத்த தத்துவங்கள் எனவும் மற்றைய 5-ம் சிவதத்துவங்கள், சுத்த மாயா தத்துவங்கள் எனவும் உரைக்கப்படும். ஆசிரியர் இத்தத்துவங்கள் மாயையில் இருந்து தோன்றுவதால் ஆசிரியர் தத்துவங்களை முன்னிறுத்தி இம்மாயையின் (களின்) இயல்பு கேட்டார் எனக் கொள்ளலாம். ஆகமங்கள் கூறும் முறைமை பற்றியே முதலில் மாயையைப் பற்றிய வினாக்களைக் கேட்டார்.

2. ஆணவத்தின் இயல்பு யாது? ஆணவம் மும்மலங்களில் ஒன்று. அது மற்றைய இரு மலங்களும் தோன்றுவதற்குக் காரணமாக இருப்பதால் அது மூலமலம் எனப்படும். இம்மலம் மாயைக்கும் கன்மத்துக்கும் காரணமாக அமைவதாலும் மாயைக்குப் பின்னும் கன்மத்து முன்னும் வைத்தோதி அதன் இயல்பு கேட்டார்.

3. கன்மத்தின் இயல்பு யாது என்பது அடுத்த வினா. ஆணவத்தால் ஏற்படும் முனைப்பே மாயைக்கு காரணம் என்பதாலும், அதன் பின்னரே வினைகள் தொடர்ந்து ஏற்படும் என்பதாலும் வினையை இவை இரண்டிற்கும் பின் வைத்தார். ஆணவத்தின் பின் வைத்தார்.

4. உயிர் சகல நிலையில் இம்மலங்களின் வழி நின்றுதான் அவற்றின் வேறல்ல என்னும்படியாக சார்ந்ததன் வண்ணமாக அவற்றுடன் கூடித் தொழில் புரிந்து அறிவைப் பெறுகின்றது. அவ்வாறாக அவற்றுடன் வேறு வைத்து எண்ணப் படாத நிலையில் அவற்றுடனாக நிற்கும் எனது உயிரின் இயல்பு தான் யாது என்பது மற்ற வினா. இங்கு அன்றே தான் மாறா என்பதனை அநாதியாகவே மாறுபாடு இன்றி நிற்கும் எனக் காட்டினார். அன்றே என்னும் சொல்லை மாயைக்கும் ஆணவத்துக்கும் கன்மத்துக்கும் இயைத்துப் பொருள் காண்க. இவை மூன்றும் அநாதிப் பொருள்கள். இங்கு தான் அசையென கொள்ளலாம். அன்று தொட்டு எனவும் காண்க.

5. அடுத்து வரும் வினா நீ ஏது என்பது ஆசிரியர் தனது குருவாகிய மெய்கண்டாரைப் பார்த்து ஐயனே நீ என்பது என்ன. இறை என்பது என்ன, அதன் இயல்பு யாது எனக் கேட்கின்றார். அருணந்தி சிவாச் சாரியார் தனது நூலாகிய இருபா இருப..தில் இறைவனே மெய்கண்டார் மெய்கண்டாரே இறைவன் எனப் பல இடத்தும் காட்டுதல் காணலாம். அது போலவே இந்நூலாசிரியரும் இறைவனும் மெய்கண்டாரும் வேறின்மை காணாத பெருநினைவு கொண்டவர். ஆதலால் தனது குருவை நீ ஏது எனக் கேட்பதால் இறை இலக்கணம் கேட்டவாறு அறியலாம். மேலும் சித்தாந்த சாத்திரத்தில் சிவஞான போதத்தில் தம் முதல் குருவுமாய் தவத்தினில் உணர்த்த என்னும் சொற்றொடர் 8-ம் சூத்திரத்தில் காணப்படுகின்றது. அங்கே இறைவனே ஞான குருவாக எழுந்தருளி உபதேசம் செய்தார். செய்வர் எனக் காட்டப்படுகின்றது. எனவேதான் நீ ஏது என்பது இறை இலக்கணம் கேட்டவாறு கொள்ள வேண்டும்.

மேலும் முதலாம் செய்யளில் திருவெண்ணெய் வித்தகா எனக் காட்டிய போது தனது ஞானாசிரியரே வெண்ணையம் பதி வாழ் வித்தகப் பெருமான் சிவனே எனக் காண்கின்றார் இங்கும் அவ்வாறே காணும் நோக்கு உடையராய் நீ என்று இறை என்று காட்டி உன் இயல்பு என்ன எனக் கேட்கின்றார். குருவின் இயல்பு என்பதுவே அது.

6.அடுத்த வினாவாக ஆசிரியர் இறைவன் இயற்றும் ஐந்தொழில் உண்மையையும் அவற்றை இயற்ற அவர் செய்யும் திருநடனத்தின் இயல்பினையும் கேட்கின்றார். இறைவன் உயிர்களை இடமாகக் கொண்டு செய்கின்ற ஊன நடனத்தையும் ஞான நடனத்தையும் அம்மையை இடமாக கொண்டு செய்கின்ற ஆனந்த நடனத்தையும் விளக்குதல் காணலாம். இதனுள் காணும் திருநடனச் சிறப்பையும் அதன் பொருண்மையையும் வேறு சித்தாந்த நூல்களில் சிறப்பாக யாரும் கூறவில்லை என்பர் கற்றறிந்தோர். எனவே சிவனை மாணவர்களுக்கும் மட்டுமல்ல சிவனை வணங்கும் யாவருக்கும் சிவனைத் தெரிய தெளிய வேண்டிய ஒன்றாகும்.

7. நடனத்தின் இயல்பு கூற வேண்டிக் கொண்ட நூலாசிரியர் சைவ சித்தாந்தத்தின் உயிர் நாடியாகிய விளங்கும் ஐந்தெழுத்தின் இயல்புகள் யாவை அவற்றின் தொழிற்பாடுகள் யாவை என்பதனையும் வினவு கின்றார். சிவஞான போதத்தில் மெய்கண்டநாயனார் தண்ணிழலாம்பதி விதிஎன்னும் அஞ்செழுத்தே என 9 நூற்பாவில் கூறியிருத்தல் காணலாம். அதன் அடியொற்றி அவற்றிற்கான விளக்கமாக அப் பஞ்சாக்கரத்தின் இயல்பு எது என்ன என்பதைக் கேட்டுள்ளார். இங்கே நாதன் நடம் ஐந்தெழுத்துத் தான் ஏது எனக் கூறுவதை பின்வருமாறு பிரித்தும் பொருள் காண வேண்டும். நாதன் நடம் ஏது. நாதன் ஐந்தெழுத்து ஏது. நாதன் தான் ஏது எனப்பிரித்து அவற்றை 6-ம் கேள்வியாக நாதன் ஐந்தெழுத்து ஏது எனவும் 7-ம் கேள்வியாக நாதன் நடம் ஏது எனவும் 8-ம் கேள்வியாக நாதன் தான் ஏது எனவும் கொள்க.

8. நாதன் தான் ஏது

இங்கே முன்னர் நீயேது எனக் கேட்ட கேள்வியால் இறைவனின் இலக்கணம் என்ன என வினவினார். இங்கேயும் நாதன் தான் ஏது என்பதை இறையிலக்கணம் ஏது என மீண்டும் கேட்டல் கூறியது கூறல் என்னும் வழுவாக. அளவைக் குற்றமாக அமையும். ஆகையால் இங்கு தான் என்பது இறைவனைக் குறிக்கும் ஆயினும் 3-ம் கேள்வியிலும் தான் என வருதல் காண்க. நீ தான் ஏது என்பது அது. அங்கு மாயையைக் குறிக்கும். இங்கு தானாதல் என்னும் அத்துவிதக் கலப்பு முறையைக் காட்டுவதாய் அமைகின்றது. அவையே தானேயாய் என்பதில் வரும் தானே - தான் எனக்கொள்க.

எனவே முன்பு சகல நிலையில் நிற்கும் போது இறைவன் இயல்பு கேட்டவாறும் இங்கு அத்துவிதம் பற்றியும் தானேயாதல் முத்தி நிலை பற்றியும் வினவிய வினாவாகக் கொள்ளுதல் வேண்டும். இதனால் தொடுக்கப்பட்ட வினா அத்துவிதம் எனப்படும், முத்திநிலை என்பது என்ன, அதன் இயல்பு தான் என்ன, என வினாவாக அமைத்தல் வேண்டும். மேற்போந்த 8 எண்ணிக்கை கொண்ட வினாக்களையே ஆசிரியர் தமது வினாக்களாகக் கொண்டார் எனக் கொள்க. முதல் மூன்று வினாக்களும் ஆணவம் கன்மம் மாயை என்னும் பாச இயல்பும்,

நான்காவது வினா உயிர் இயல்பும், ஐந்தாவது வினா இறை இயல்பும் ஆகும். இதற்கு அடுத்ததாக அமையும் 6-வது வினா பதியைப் பற்றிய வினாவாக அமைந்திருக்கின்றது. அது இறைவனின் திருநடனம் பற்றி வருதல் காணலாம். இதன் பின்னராக ஐந்தெழுத்தின் இயல்பு கூறும்படி கேட்டார். இது சாதனை பற்றியது என்பதும் இதனை அடுத்து 8-ம் கேள்வி தான் ஏது எனக் காட்டி அத்துவித் உண்மையும் அதன் பயனும் முத்தியும் வினாவாக காட்டினார் எனலாம்.

ஆசிரியரின் குருநாதர் தனது நூலில் இறை உயிர் தளை எனக் காட்டி நிற்க, இவர் அந்த வைப்பு முறையை மாற்றி தளை உயிர் இறை எனக் காட்டி நிற்பதால் விதிமுறை பிறழ வைத்தார் எனக் கூறலாமே என வினவுவார்க்கு அவ்வாறு அது மாறுபடவில்லை எனக் கூறி இவ்வாசிரியர் தன்து கடவுள் வாழ்த்துப் பாடலிலேயே அதற்கான விடையைக் கூறியுள்ளார். வண்மை தரும் ஆகம நூல் வழுவா உண்மை விளக்கம் உரை செய்ய எனக் கூறியிருத்தலால் அது பிழைபடவில்லை என்பது இனிதே விளங்கும். பின்னாலே வரும் செய்யுள்களிலும் இதற்கான விளக்கத்தையும் காட்டியுள்ளமை பின்னர் காணலாம்.

இனி ஆசிரியர் மனவாசங்கடந்தார் தனது நூல் வைப்பு முறை யினையும் இங்கு கூறிய வெண்பா மூலம் தோற்று வாயினையும் தந்துள்ளார். முதலாவதாக தத்துவங்கள் எவை என்பது. தத்துவங்கள் மாயையில் இருந்து தோன்றுவன வாகையால் முதலாவது கூறப்போகும் செய்தி முப்பொருள்களில் ஒன்றான மாயை மலம் பற்றியதே யாகும். எனவே ஆசிரியர் அடுத்து ஆணவமலம் பற்றியும் வினைமலம் பற்றியும் கூறினார். எனவே இவை மூன்றும் மலங்கள் ஆயினமையால் அவற்றை முன் கூறினார். இந்த மூன்று பாசப் பொருள்களோடும் இயைந்து அனுபவிப்பது உயிர் ஆகையால் இப்பாசத்தின் பின் உயிர் பற்றி வைத்தார். இனி உயிரையும் பாசத்தையும் இயக்குபவனவாய் இருக்கும் பதி பற்றியது. எனவே இங்கு பாசம் உயிர் இறை என முறைபட வைத்தார் என்க.

இங்கு இறைவன் பற்றிக் கூறிய ஆசிரியர் இறைவனின் திருநடனத்தையும் ஒரு வினாவாக்கி அதனை அடுத்து வைத்தார்.

அதனைத் தொடர்ந்து திருவைந்தெழுத்தே இறைவனை அடையும் வழி என்பதைக் காட்ட அஞ்செழுத்து இயல்பு கூறினார். இதன்பின்னாக அஞ்செழுத்தால் ஆகும் பயன் பற்றியும் சீவன் முத்தர் நிலையையும் அவர்கள் இறைவனுடன் கலந்து அடையும் பேரின்ப நிலையாகிய அத்துவிதத்தின் உண்மைத் தன்மையையும் முத்திநிலை பற்றியும் கூறினார். இவ்வாறாக நூல்வைப்பு முறைமையும் கூறப்பட்டது. இதன் வைப்புமுறை இலக்கணவியல் சாதனவியல் பயனியல் என்பனவற்றை ஒன்றன்பின் ஒன்றாகக் கூறியமை காணலாம். இங்கு தான் என்னும் சொல் தானாதல் என்னும் பொருளைத் தரும். மெய்கண்ட நாயனார் அவையே தானேயாகிய அந்நெறி ஏகன் ஆகி எனத் தான் என்பதன் பொருளை உணர்த்துகின்றார். அவ்வாறே மனவாசகங் கடந்தாரும் தான் என்பதனைத் தானாதல் எனப் பொருள் கொள்ள வைத்தார். இதனை இறைவனும் உயிரும் இரண்டறக் கலத்தல் என்னும் நிலை அடைந்து பிரிப்பின்றி நிற்கும் என்பதைக் காட்டுகின்றார். பிரிப்பின்றி நிற்றல் என்பது பொருள் தன்மையால் இரண்டாயும் கலப்புத் தன்மையால் ஒன்றாயும் நிற்றல். ஆன்மா இறைவன் திருவடியை பரமுத்தியை அடைந்து அங்கே பேரின்ப பெருவாழ்வு பெற்று இன்புற்று இருக்கும் என்பதே. இந்நிலையில் இருந்து உயிர் மீண்டும் பிறப்பதில்லை. இதனை நிற்பெற்றவர்க்கு உற்பவம் உண்டெனும் உண்மை இல்லை எனக் காட்டுகின்றது இருபா இருபது. இச்செய்யுளில் ஏது என்னும் சொல் மீண்டும் வருவதோடு அப்பொருளையே எல்லாவிடத்தும் தந்து நிற்பதால் அது சொற் பொருட் பின் வருநிலை அணி யாயிற்று.

இறுதியில் தேசிகனே சாற்று என்னும் சொற்றொடரை வைக்கின்றார். தேசிகன் என்பது ஞான குருவைக் குறிக்கும். ஆயினும் இது திருவெண்ணெய் நல்லூர்த் தேசிகனாக விளங்கும் இறைவனையும் குறித்து நின்றது. இறைவனும் மெய்கண்டாரும் வேற்றுமை இன்றி அத்துவிதத் தன்மையால் கலந்து நிற்கின்றனர் எனக் காண்பவர் ஆகையால் அவ்வாறு கூறினார்.

ஆறாறு 36 என்பது 6 X 6 = 36
அன்று - தோற்றமில் காலம் - அநாதி
நான் - (உயிர்) என்னுடைய உண்மை

நீ - சிவபெருமானின் உண்மை
அஞ்செழுத்து - பஞ்சாக்கரம் சிவாய நம
திருநடம் - ஐந்தொழிலின் திருவருட் கூத்து ஊன நடனம் ஞான நடனம் ஆனந்த நடனம் என்பன.
சாற்று - கூறியருள்

தான் - தானாதல் - அத்துவித உண்மை

சார்ந்ததன் வண்ணமான உயிர் இறைவனைச் சார்ந்தபோது அவன் வண்ணம் ஆதல். அதுபோல ஆணவத்தைச் சார்ந்த போது அதன் வண்ணம் ஆதல். அது அதுவாக நிற்றல். தான் ஆக நிற்றல். என்பதும் அதுவே பளிங்கு கண் போன்ற இவை எடுத்துக்காட்டுகள். பேய் ஒன்றும் நிலை என்பதுவும் இதுவே
சிவமே ஆதல் - தான் ஆதல் ஆகும்.

## வெண்பா-3

**ஆசிரியர் மறுமொழி கூறுவதற்கு விருப்பம் கூறல்**

**உள்ளபடி இத்தை உரைக்கக்கேள் உன்தனக்கு**
**வள்ளல் அருளால் அன்று வாய்மலர்ந்த - தெள்ளியசீர்**
**ஆகமங்கள் சொன்ன அடைவிலே ஆனந்த**
**யோகம் நிகழ் புதல்வா உற்று**

## இதன்பொருள்

ஆனந்த யோகம் நிகழ் புதல்வா- நான்கு பாதங்களில் யோகநிலையிலே (நிற்கும் மகனே) நின்று சித்தாந்த உண்மையை அறிய விரும்பி நிற்கும் மகனே! மாணவா, வள்ளல் அருளால் அன்று வாய்மலர்ந்த - அருள் வள்ளலாகிய சிவபரம்பொருள் உயிர்களின் உய்திக்காகக் கொண்ட பேரிரக்கம் காரணமாக வேதங்களைத் தோற்றமில் காலத்தே திருவாய் மலர்ந்தருளியவற்றை - தெள்ளியசீர் ஆகமங்கள் சொன்ன அடைவிலே - சிறப்புமிக்க சிவாகமங்ள் யாவும் விரித்துச் சொன்ன வேதப்பொருளை அப்பெருமானுடைய நல்லருள் துணைக்கொண்டு உன்தனக்கு - நீ கேட்டுக்

கொண்ட காரணத்தால் நீ அறிந்து தெளியும் வண்ணம் நினக்கு (உனக்கு) உள்ளபடி இத்தை உரைக்க - அவ்விறைவன் கூறிய வகையில் முறையில் மாறுபாடு இல்லாது உள்ளதை உள்ளவாறே இதனைக் கூறுவோம் உற்றுக்கேள் - அவற்றை மிக்க புலனடக் கத்தோடு ஒன்றித்துக் கேட்பாயாக.

### கருத்துரை

நான்கு பாதங்களில் யோக நிலையில் நின்று கொண்டு சித்தாந்த உண்மையை அறிய நிற்கும் மகனே மாணவா! அருள் வள்ளல் ஆகிய சிவபரம்பொருள் உயிர்களின் உய்திக்காக கொண்ட பேரிரக்கம் காரணமாக வேதங்களைத் தோற்றமில் காலத்தே வாய் திறந்து கூறினார். சிறப்பு மிக்க சிவாகமங்கள் யாவும் விரித்துச் சொன்ன அவ்வேதப் பொருளை அப்பெருமானுடைய நல்லருள் துணைகொண்டு நீ அவற்றை அறிந்து தெளிய வேண்டும் எனக் கேட்டுக் கொண்டாய் அதனால் நீ தெரிந்து தெளியும் வண்ணம் உனக்கு இறைவன் கூறிய வகையில் முறையில் மாறுபாடு இல்லாது உள்ளதை உள்ளவாறே இதனைக் கூறுவோம்: அவற்றை மிக்க புலனடக்கத்தோடு ஒன்றித்துக் கேட்பாயாக.

### விரிவுரை

மாணவனின் உள்ளத்திலே தோன்றிய வினாக்களுக்குரிய விடைகளை கூறுவதற்கு விருப்பம் கொண்ட ஞானாசிரியர் தனது மாணவனை நோக்குகின்றார். தன்னிடம் நூலைக் கற்கவிரும்பும் மாணவனின் தகுதியைக் கண்டே அந்நூலை அம்மாணாக்கனுக்கு கற்பித்தல் வேண்டும். எனவே தனது பார்வை மூலமே எடைபோடும் வலிமை கொண்ட ஞானாசிரியர் வந்திருக்கும் மாணவனின் தகுதி தவம் நற்குடி என்பனவற்றை உணர்ந்து கொள்கின்றார். அம்மாணவன் அப்போது நிற்கும் சிவநெறி படிமுறை அவருக்குப் புலப்படுகின்றது. அதனைக் கண்ட காரணத்தால் அம் மாணவனிடத்தே அன்பு பிறக்கின்றது. அதனால் அவனிடத்தே தன் அன்பினையும் காட்ட வேண்டும் எனக் கருதி அம்மாணவனை அழைக்கும் பாங்காக யோகம் நிகழ் புதல்வா என அழைக்கின்றார்.

இங்குள்ள மாணவர்கள் சிவாகாமங்களைக் கற்க வேண்டும் என்னும் பெருவேட்கை உடையவர். அவ்விருப்பு அவர்களுக்கு எப்படி வந்தது. சிந்தித்துப் பார்க்கும் போது அவர்கள் சிவநெறியிலே நின்று அதனிடத்தே தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டவர்கள் அதனால் சிவானுபூதி பெறுபவர்களாய் இருந்தார்கள். சிவசமயத்தில் நான்கு பாதங்கள் உள. அவை சரியை கிரியை யோகம் ஞானம் என்பன. இம்மாணவர்கள் சரியைத் தொண்டு செய்து மிக்குயர்ந்து கிரியை நெறியையும் கடைப்பிடித்து வாழ்ந்தவர்கள். அவ்வாறு புறவழிபாட்டிலே நின்றொழுகிய வர்கள். தற்போது அகவழிபாட்டிலே ஒழுக வல்லவர்களாய் யோக நிலையில் அப்படிமுறையில் வாழ்பவர்கள். அடுத்துவரும் ஞான நெறியில் தலைப்பட்டு வாழக் கருதும் மாண்புடையவர். எனவே தான் ஞானாசிரியர் அம்மாணவர்களின் தகுதி கண்டு அவர்கள் ஞான பாதத்தைத் பெறுவதற்கான தகுதி பக்குவம் உடையவர் என்பதை உணர்ந்து அவரை அத்தகு சிறப்பில் நிற்பவரே என விளிக்கின்றார். ஆனந்த யோகம் நிகழ்புதல்வா என்றார். அதாவது பேரானந்த நிலையை அடைவதற்கு ஏற்ற யோகநெறி எல்லையில் நிற்கும் மகனே என்பது கருத்தாகும். புதல்வா என்பது தனது மகனைக் குறிப்பதாயினும் அருளாளர்கள் யாவரையும் தமது மகன்களாகக் கருதும் மனநிலை-இயல்பு உடையவர்கள். ஆகையால் புதல்வா என்றார். அவ்வாசிரியர் அம்மாணவர் மீது கொண்ட அன்பின் வெளிப்பாடு இது என்பது தெரிகின்றது.

வினாக்களுக்கான விடைகளைக் கூற விருப்புக் கொண்ட ஆசிரியர் அவ்விடைகளுக்கான மூலங்கள் யாவை என்பதை முதலில் மாணவர் களுக்குத் தெளிய வைக்கும் பொருட்டு தெள்ளிய சீர் ஆகமங்கள் சொன்ன அடைவிலே எனக் கூறினார். ஆகமங்கள் தெளிவும் சீரும் சிறப்பும் உடையன. அவற்றுள் இருக்கும் கருத்துக்கள் யாவும் வேதங்களிலே சொல்லப்பட்டவை. இவ் வேதங்கள் இறைவனால் கூறப்பட்டவை. எனவே வேதங்கள் இறைவனால் சொல்லி அருளப்பெற்றவை என்பது விளங்க ஆகமங்களின் சிறப்பைக் கூறினார். இனி இந்த ஆகமங்கள் அடைவுகள் (அடைவு-வேதம்) எவ்வாறு எமக்கு வந்தன எனக்கேள்வி எழும் என்பதை உணர்ந்து அதற்கான விடையையும் தானே தருகின்றார். அதனைச் செய்யுளில் வள்ளல்

அருளால் அன்று வாய்மலர்ந்த எனக் கூறினார். வேண்டுவார் வேண்டியவற்றை எல்லாம் கொடுத்து அருளுகின்ற இறைவன் ஆனமையால் அவர் வள்ளல் எனப்பட்டார். அதவும் அருள் வள்ளல் என்பதைக் காட்டுவதற்கு அவ்வாறு கூறுவார். அருள் வழங்கும் இறைவன் உயிர்களின் உய்திக்காக வழங்கியவை, வேதங்களும் ஆகமங்களும் ஆகும். அதனால் அதனை அருளிய இறைவன் என்றார். இறைவன் தனக்காக இவை வேண்டும் என்பதற்காக உரைக்கவில்லை. இதனை யான் அறிவேன் என்பதற்காகக் கூறியதும் அல்ல. இறைவன் பேரறிவு மிக்கவர். இயல்பாகவே எதையும் அறிய வல்லவர். எனவே இஃது அவருக்கு வேண்டியதில்லை. அவர் இதனைக் கூறினார் என்றால் அதனைப் படித்துப் பயன்பெற வேண்டுமே? அவ்வாறாயின் பயன் பெறுவோர் யார்? இந்த உலகிலே வாழும் ஆன்மாக்கள் அவற்றின் பொருளைத் தெரிந்தும், தெளிந்தும் அவ்வழி நடந்தும் ஒழுகியும் நற்பேற்றினை இலகுவாக அடைய வேண்டும் என்னும் பேரிரக்கமும் பெருங்கருனையும் எனக் காட்ட வள்ளல் அருளால் அன்று வாய்மலர்ந்த என்றார். அன்று என்பது தோற்றமில் காலம் ஆதி என்பதனை புலப்படுத்தக் கூறிய சொல்லாகும்.

மேலும் வாய்மலர்ந்த என்னும் சொற்றொடரைக் கூறுவதன் காரணம் அது எங்கும் எழுதிவைக்கப்படவில்லை. அதனை அறிய வேண்டின் நல்லாசிரியரின் வாய் வழியாகக் கேட்க வேண்டும் என்பதனையும் விளக்கவே வாய்மலர்ந்த என்றார். வேதங்களை மறை எனக் கூறுவர். அது மறைத்துக் கூறப்படுவதால் அது மறை எனப்படுவது தகுதியில்லாதவர்க்கு இது கூறப்படுவதன்று. மேலும் அவ்வாறு கூறுவதால் பயன் இல்லை என்பதும் பெறுகின்றோம். அவ்வாறு கூறுதல் குரங்கின் கைப் பூமாலை போன்றது. மேலும் இவற்றை எழுதா மறை என்பர். எழுதா மறை என்பதால் அன்று முதல் அவ்வேதம் எழுதப் படாமலே வாய் வழியாக வழி வழியாக கூறப்பட்டு வர வேண்டியது எனவும் பொருள் காண்க. மேலும் அப்பொருள்கள் அனைத்தையும் என்னால் எடுத்துச் சொல்லக் கூடிய ஒன்றல்ல. ஆயினும் அப்பெருமான் திருவருள் துணைக்கொண்டு இதனைச் சொல்வேன் எனப் பொருள் தர வள்ளல் அருளால் என்னும் சொற்றொடரைக் காட்டினார். வள்ளல் அருளால் என்னும் தொடருக்குப் பொருள் காணும்போது வள்ளல்

அருளால் அன்று வாய்மலர்ந்த எனவும் வள்ளல் அருளால் உள்ளபடி இத்தை உரைக்கக் கேள் எனவும் வள்ளல் அருளால் உற்றுக் கேள் எனவும் கொண்டு வள்ளல் அருளால் என்னும் சொற்றொடரை மூவிடத்தும் கூட்டிப் பொருள் காண்க. அவன் அருளே அதனை உலகுக்குக் கூற வைத்தது. அவன் அருள்கொண்டே இதனை உள்ளபடி உரைக்க வல்லேன். அவன் அருளே கண்ணாகக் காணில் அல்லால் இது தெளியும் தரமன்று எனவும் பொருள் காணலாம்.

இதனையே சிவபுராணம் கூறப் புகுந்த மாணிக்க வாசக சுவாமிகளும் அவன் அருளாலே அவன் தாள் வணங்கி சிந்தை மகிழச் சிவபுராணம் தன்னை முந்தை வினை முழுதும் ஓய உரைப்பன் யான் என்பதனால் மேற்கூறிய வள்ளல் அருளால் என்னும் தொடர் தெற்றென விளங்கு கின்றது. எனவே அவன் அருளின்றி எதுவுமில்லை என்பதும் பெறப்பட்டது. ஆசிரியர் இது எனக்குத் தெரியும் அதனால் இதனைச் சொல்லுவேன் எனக்கூறாமல் அவன் அருளாலே இத்தை உரைக்கக்கேள். அவன் அருளாலே உற்றுக் கேள் என்றார். ஆணவ முனைப்பு நீங்கிய அருளாளர்கள் செய்யும் பணிகள் யாவும் இறை பணியெனக் கொள்ப வர்கள் அதனாலே தான் ஞானாசிரியர் வள்ளல் அருளால் எனக் கூறினார் என்பது தெளிவு.

இதனை நான் கூறுவேன் நீ கேட்பாய் ஆகையால் உனது ஐயம் திரிபுகள் நீங்கக் கூறுவேன் என்பதனை உன்தனக்கு என்றார். பாசஞானம் நீங்கப்பெற்று பசுஞானம் கடந்து பதிஞானம் கைவரப் பெறும் சகலநிலை ஆன்மாக்களுக்கே இவை கூறப்பட்டன. அம் மாணவனும் அந்த நிலைக்குத் தலைப்பட்டு நிற்பவனாகையால் உன் தனக்கு என அன்போடும் மரியாதையோடும் கூறியவாறு காணலாம். இனி அவன் அருளால் வழங்கிய வேதப்பொருளை விரிவாக விளக்கும் ஆகமப் பிரமாணம் கொண்டு சொல்லப் புகுவதால் அதிலே மாறுகோள் உரை இருக்கக் காரணமில்லை. எனவே உள்ளதை உள்ளபடி உரைப்பேன் என்றார். சிவசமயமாம் சைவ சமய சித்தாந்தங்கள் யாவும் சீரிய அறிவியல் முறையிலே அடையப் பெற்றவை. சற்காரிய வாத அடிப்படையில் கூறப்பட்டு நிறுவப்பட்டதை உள்ளதே சிறக்கும் ஆகை யால் உள்ளபடி உரைக்கக் கேள் எனவும் கருதி ஆய்வு காண்க.

ஒரு பொருளை கற்கும்போது அதனை உற்றுக் கேட்டு அறிதல் வேண்டும். மனதை அலையவிடாமல் ஒருமுகப்பட்டு உண்மைப் பொருளைக் கேட்கவேண்டும். அவ்வாறு கேட்பதால் தான் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டை கூடல் என்பன நிகழ வழிபிறக்கும். இதனையே தட்சணாமூர்த்தி வடிவம் எமக்கு அறிவுறுத்துகின்றது. சனகர் சனாதனர் முதலிய முனிவர்கள் அந்நிலையில் இருந்தே சிவ பரம்பொருளை கேட்டு தெளிந்து உணர்ந்தனர். எனவேதான் ஒன்றித்துக் கேட்டல் என்பதனை புலனை அலைய விடாது உற்றுக்கேள் என்றார் ஆசிரியர். எனவே ஞானாசிரியன் கூறும் வார்த்தைகள் புலனடக்கத்துடன் உற்றுக் கேட்பதற்குரியன என்பதை யோகம் நிகழ்புதல்வா உற்றுக் கேள் என்றார்.

இதனை உமாபதி சிவாச்சாரியர் திருவருட்பயனில் பரப்பமைந்து கேண்மின் என்றார். அவர் தொடர்ந்து கூறுகையில் பாற்கடல்மேல் பூனை கருப்பருந்த நாடும் கடன் என்றார். பூனை பாலைவிட்டு கருப்பான் பூச்சியில் ஆசைப் பட்டு இரண்டையும் இழந்தவாறு போல என உவமை காட்டினார். எனவே தான் ஆசிரியர் மனவாசகங்கடந்தார் உள்ளபடி இத்தை உரைக்கக் கேள் உற்று என்றார்.

இத்தை என்பது அக்கால வழக்குச் சொல். இதனை எனப் பொருள் தரும். எனவே இந்த வேதாகமப் பொருள் கூறியவற்றை எனப் பொருள் தருதல் காண்க. அடைவு என்பதனை உரை ஆசிரியர்கள் முறையிலே என்னும் கருத்துத் தரும்படியாகப் பொருள் உரை வகுப்பர். அடைவு என்பது முறைமை. அது வேதம் என்னும் பொருளையும் தரும். திருப்புகழ் பாடிய அருணகிரிநாதர் முத்தமிழ் அடைவினை முற்படு கிரிதனில் எழுதியவர் பிள்ளையார் பற்றிக் கூறுகின்றார். இங்கு வேதத்தின் உண்மைப் பொருளை எழுதியவர் எனக் காண்க. முறைமை என்பதும் இங்கு வேண்டும் பொருள் ஆகையால் அதனை வருவித்தும் பொருள் காணவேண்டும். உரையாசிரியர்கள் அச்சொல்லை வருவித்தே பொருள் கொண்டனர் எனலாம்.

**வெண்பா-4**

**மாபெரும் பூதங்களும் அதன் வடிவங்களும்**

**நாற் கோணம் பூமி புனல் நண்ணும் மதியின் பாதி**
**ஏற்கும் அனல் முக்கோணம் எப்போதும் - ஆர்க்கும்**
**அறுகோணம் கால்வட்டம் ஆகாயம் ஆன்மா**
**உறுகாயம் ஆம் இவற்றால் உற்று**

**இதன்பொருள்**

**நாற்கோணம் பூமி** - ஐம்பெரும் பூதங்களில் ஒன்றான பூமி நான்கு கோணங்களைக் கொண்ட சதுரவடிவமாக விளங்கும். **புனல் நண்ணுமதியின் பாதி** - நீர் ஆகிய பூதம் விரும்பத்தக்க சந்திரனின் பாதி (அர்த்த சந்திரன்) வடிவமாக விளங்கும். **ஏற்கும் அனல் முக்கோணம்** - எதனையும் தன்னகத்தே ஏற்க வல்லதாகிய தீயானது முக்கோண வடிவாக விளங்கும். **எப்போதும் ஆர்க்கும் அறுகோணம் கால்** - எந்த வேளையிலும் காற்று ஆறுகோண வடிவமாக விளங்கும். **வட்டம் ஆகாயம் வெளி** - ஆகாயம்-விண் வட்ட வடிவமாக விளங்கும் **ஆன்மா உறு காயம்** - மேலும் இந்த எயிர் தங்குவதற்கு இடமான உடலை **ஆங்கிவற்றால் உற்று** - ஆராய்ந்து பார்க்கும் போது பஞ்சபூதங்களின் சேர்க்கையால் தூல உடம்பாக வந்து அமையும்.

**கருத்துரை**

ஐம்பெரும் பூதங்களில் ஒன்றான பூமி நான்கு கோணங்களைக் கொண்ட (மூலை) சதுரவடிவமாக விளங்கும். நீர் ஆகிய பூதம் விரும்பத்தக்க சந்திரனின் பாதி (அர்த்த சந்திரன்) வடிவமான அரைவட்ட வடிவமாக விளங்கும். எதனையும் தன்னகத்தே ஏற்க வல்லதாகிய தீயானது முக்கோண வடிவமாக விளங்கும். எந்த வேளையிலும் காற்று ஆறு கோணவடிவமாக விளங்கும். வெளி (ஆகாயம் வான்) வட்ட வடிவமாக விளங்கும். மேலும் இந்த உயிர் தங்குவதற்கு இடமான உடலை ஆராய்ந்து பார்க்கும்போது பஞ்சபூதங்களின் சேர்க்கையால் தூல உடம்பாக வந்து அமையும்.

**விரிவுரை**

இங்கு விடைகளைக் கூற வந்த ஆசிரியர் முதலாவதாக கூறுவது கண்களால் காணப்படும் உடலைப் பற்றிய செய்தியாகும். உடல் என்பது மாயையின் காரியம். எனவே இம்மாயை ஆன்மாவிற்கு நுகர்ச்சிப் பொருளாக அமைந்துள்ளது. இம்மாயை அந்த நிலையில் தனு, கரண புவன போகங்களை அளிக்கின்றது. இவ்வாறு அளிக்கப்படுகின்ற நான்கும் பஞ்ச பூதங்களாலும் அவற்றின் சேர்க்கையாலும் விளைவன ஆகும். அதனையே ஆசிரியர் ஆன்மா உறுகாயம் ஆம் இவற்றால் உற்று எனத் தருகின்றார். உற்று என்பது ஆனது எனவும் ஆராய்ந்து பார்க்குமிடத்து எனவும் பொருள் கண்டு கொள்க.

இந்த உடம்பு ஐந்து பூதங்களின் சேர்க்கையே. இது உணர்வு பூர்வமாக அறியக்கிடக்கின்றது. இதுவே இங்கு காட்டப்பட்ட உண்மை விளக்கம் என்க.

இந்த உடல் மண்ணினாலும் நீரினாலும் ஆனது. உயிர் மூச்சு பிராணவாயுவாக உள்ளது. உடலினுள் இடும் உணவுகளைச் செரிக்க வைக்க அவ்வுடலில் உள்ள தீயால் அது ஏற்படுகின்றது. இனி வெளியென்பது உடலில் இல்லையானால் இவை இயங்க வழியில்லை. எனவே வெளியும் உளது என்பது பெறப்படும்.

இன்னும் விளக்கமாக கூறின் மண்ணின் குணத்தால் எலும்பு தசை தோல் மயிர் என்பன தோன்றுகின்றன. நீரின் சேர்க்கையால் சிறுநீர் வியர்வை உமிழ் நீர் குருதி விந்து என்பன தோன்றுகின்றன. தீயின் சேர்க்கையினால் உறக்கம், பசி, நீர், வேட்கை, சோம்பல் செமிபாடு ஒன்றோடு ஒன்று சேர்தல் என்பன தோன்றுகின்றன. காற்றின் சேர்க்கை யால் ஓடுதல், நடத்தல், அமர்தல், தாண்டல் என்பன தோன்றுகின்றன. வெளியால் மயக்கம் ஆசை வெறுப்பு அச்சம் நாணம் என்பன தோன்றுகின்றன.

ஆசிரியர் ஐம்பெரும் பூதங்களின் சேர்க்கை என்பது காரியப் பொருளாகக் கொள்ளுதல் ஆகாது. உடல் முதலியன காரியப்

பொருட்கள். இவற்றிற்குக் காரணமாக விளங்கும் தத்துவங்களுக்கே காரணப் பொருள்களுக்கே வடிவம் முதலியன எடுத்துரைக்கப்படுகின்றன. இத்தத்துவங்கள் ஆன்ம தத்துவங்கள் ஆகும். அவை இருபத்து நான்கு எண்ணிக்கை கொண்டன. இங்கு கூறப்பெற்ற தத்துவங்கள் மாபூதங் களான மண், நீர், தீ, காற்று ஆகாயம் என்பன. ஆன்மா தங்குதற்குரிய உடம்பு இந்த ஐம்பூதங்களாகையால் இங்கு கூறப்பட்ட அத்தத்து வங்களே எனக் காண வேண்டும். இதையே உறுகாயம் ஆம் இவற்றால் உற்று என்றார். மேலும் இங்கு மண் என்பது பூமியிலுள்ள நிலப்பரப்பைக் கொள்வதன்று இவை ஆன்ம தத்துவங்களைக் குறிக்கும்.

அவற்றின் வடிவங்கள் என்பன அவை நிலை கொண்டிருக்கும் வடிவ அமைப்பாகும். இவ்வடிவங்களை அவற்றின் குறுக்கு முக வெட்டால் உணர்தல் வேண்டும். இவ்வடிவங்களைச் சீர்காழிச் சிற்றம்பல நாடிகள் அருளிய துகளறு போதம் என்னும் நூலிலே **வட்டம் அறுகோணம் மாயாத முக்கோணம் இட்ட பிறை சதுரமே வடிவம்** எனக்கூறியவாறு காண்க. இங்கு கூறப்பட்ட ஐந்து மாபூதங்களும் சடப்பொருள்கள் அசித்துப்பொருள்கள். எனவே உண்மை விளக்கம் பெற வேண்டுமாயின் மாயையின் காரியமாகிய இவற்றை துறத்தல் வேண்டும் என்பதே உண்மை விளக்கம் என உய்த்து உணர்க.

### வெண்பா-5

**பூதங்களின் வண்ணமும் அவற்றின் எழுத்தும்**

**பொன்பார் புனல் வெண்மை பொங்கும் அனல் சிவப்பு**
**வன்கால் கருமை வளர் வானம் தூமம் - என்பார்**
**எழுத்து ல வ ர ய அபாராதிக்கு என்றும்**
**அழுத்தம தாய்நிற்கும் அது.**

### இதன் பொருள்

பொன் பார் - மண் பொன் நிறம் உடையது, புனல் வெண்மை -நீரின் நிறம் வெண்மையாகும்,பொங்கும் அனல் சிவப்பு - ஓங்கி வளரும் நெருப்பின் நிறம் சிவப்பு ஆகும், வன்கால் கருமை -

வலிமை பொருந்திய காற்று கருமை நிறமுடையது, **வளர்வானம் தூமம்** - பரந்து விளங்குகின்ற வானம் (வெளி) புகை நிறமானது, **என்பார்** - என இத்தன்மைகளை உணர்ந்த மெய்ஞ்ஞானிகள் கூறுவர், **எழுத்து** -இவ்வைந்து பூதங்களின் விதை (மூலம்) எழுத்துகள் ல வ ர ய அ - முறையே ல வ ர ய அ என்பன, **பார் ஆதிக்கென்றும் அழுத்தம் அதாய் நிற்கும்** - பூமி முதலிய ஐந்து பூதங்களுக்கும் அவ்வெழுத்துக்கள் எக்காலத்தும் உடன் நின்று அவற்றைச் செலுத்தி நிற்கும் மந்திர எழுத்துக்கள் ஆகும்.

### கருத்துரை

மண் பொன் நிறம் உடையது. நீரின் நிறம் வெண்மையாகும். ஓங்கி வளரும் நெருப்பின் நிறம் சிவப்பு. வலிமை பொருந்திய காற்று கருமை நிறம் உடையது. பரந்து விளங்குகின்ற வெளி (விண்) புகை நிறமானது என இத்தன்மைகளை உணர்ந்த மெய்ஞ்ஞானிகள் கூறுவர். இவ்வைந்து பூதங்களின் விதை (பீஜம்) எழுத்துக்கள் முறையே ல வ ர ய அ என்பன. பூமி முதலிய ஐந்து மாபூதங்களுக்கும் இவ்வெழுத்துக்கள் எக்காலத்தும் உடன் நின்று அவற்றைச் செலுத்தி நிற்கும் மந்திர எழுத்துக்கள் என்பதனை தெளிந்து கொள்ளவேண்டும்.

### விரிவுரை

எழுத்துக்களுக்கு மந்திர ஆற்றல் உண்டு. அத்துவாக்கள் என்பனவற்றில் வன்னம் என்பது ஒன்று. அது எழுத்துக்களைக் குறிப்பன. அது குறில் நெடில் என இரண்டு. இவ்வெழுத்துக்களை அதன் ஓசைக்கேற்ப ஒலிப்பதால் அவை ஆற்றல் பெறுகின்றன. அதனால் அவை அசைவுகள் அடைகின்றன. இங்குள்ள பஞ்ச பூதங்களுக்கும் அசைவு தருகின்ற எழுத்துக்கள் உள்ளன. இந்த ஐந்து பூதங்களும் இயங்குதற் பொருட்கள் அசைவுகள் உடையன. சிலவற்றின் அசைவுகள் கண்ணுக்குப் புலனாகின்றன. சிலவற்றின் அசைவுகள் புலனாவதில்லை. இவ்வசைவுகளை நிகழ்த்தி நிற்பன இவற்றின் விதை எழுத்துக்கள். விதை எழுத்துக்களை வட மொழியில் பீஜ எழுத்துக்கள் என அழைப்பர். இவை லகரம் வகரம் ரகரம் யகரம் அகரம் என்பன.

பூமிக்கு லகரமும் நீருக்கு வகரமும் தீயினுக்கு ரகரமும் காற்றுக்கு யகரமும் வானுக்கு அகரமும் (ஐ) என்னும் எழுத்துக்களும் ஆகும். இங்கு ஹ என்னும் எழுத்தே தமிழில் அ என்னும் எழுத்தாக காட்டப்பட்டது. இப்பீஜ எழுத்துக்கள் அவற்றின் அசைவு தொழிற்படும் போது ஒலிகள் பிறக்கின்றன. அம்மூல ஒலிகள் விதை எனப்படுகின்றன. விதை என்பது வீச்சு என்பதைக் குறிக்கும். வீச்சு என்பது பரந்து செல்வது. சிதறிச் செல்வது எனவும் பொருள்படும். எனவே இங்கு கூறிய எழுத்துக்கள் இப்பூதங்களை இயக்கும் எழுத்துக்கள் என முன்பு கண்டோம். இவ்வொலிகள் சுத்த மாயையில் இருந்து தோன்றுவன. திருவருளுக்கு அடையாளமாக உள்ள இவ்வெழுத்துக்கள். திருவருள் அவற்றை இடமாகக் கொண்டு பதிந்து அவற்றின் வழியாக ஐம்பூதங் களையும் செலுத்தும். இங்கு கூறப்பட்ட செய்திகளை சிவஞான சித்தியார் பின்வருமாறு கூறுகின்றது.

**மண்புனல் அனல்கால் வான்பால் வடிவு நாற்கோணம் ஆகும்**
**தண்பிறை மூன்று கோணம் தரும் அறுகோணம் வட்டம்**
**வண்பொன்மை வெண்மை செம்மை கறுப்போடு தூம வண்ணம்**
**எண்தரு எழுத்து தானும் ல வ ர ய அவ்வும் ஆமே.**

இங்கு இந்நூலாசிரியர் கருத்தும் சித்தியார் கருத்தும் ஒருமித்து ஒக்க நிற்பது காணலாம். மேலும் பஞ்ச பூதங்களில் ஒன்றான நீருக்கு இங்கு வெள்ளை நிறம் கொடுக்கப்பட்டுள்ளது. இன்று விஞ்ஞான முடையோர் நீருக்கு நிறம் இல்லை என்பர். வெறும் பார்வையில் அவ்வாறே காண்கின்றோம். எனவே இங்கு கூறிய வெள்ளை, சரியாகுமா என எண்ணத் தோன்றுகின்றது. அதன் உண்மையை உணர்ந்து அறிந்த மெய்ஞ்ஞானிகள் உணர்ந்து கூறியவை என்பதாலும் சிவாகமத்தில் எடுத்துக் கூறப்பட்டவை என்பதாலும் வரும் ஆப்த வாக்கியம் என்பதாலும் அவ்வாறே நாம் கொள்ள வேண்டியுள்ளது. மேலும் நீரின் நுரை வெண்மையாகக் காணப்படுகின்றது. கடற்கரையிலே காணப்படும் நுரைகளும் ஆற்றங்கரை குளக்கரை ஆகிய இடங்களில் காற்றினால் தள்ளப்பட்டுக் காணப்படும் நுரைகள் வெண்மையாக இருத்தல் காண்கின்றோம். நன்னீர் நிலைகளிலும் உவர் நீர் நிலைகளான கடலிலும் இருந்து வரும் இந்நுரைகள் வெண்மையாக உள்ளதைக்

கண்கூடாகக் காண்கின்றோம். எனவே அவற்றை எமது சிந்தாந்த உண்மைக் கருத்துக்கு வெண்மை என்றே கொள்வோம். மேலும் முக்குணங்களான சத்துவம் இராசதம் தாமசம் என்னும் குணங்களைக் கொண்டே இப்பூதங்களின் வண்ணங்கள் அமைக்கப்பட்டுள்ளன. மஞ்சள், வெள்ளை நிறங்கள் சத்துவ குணம் உடையன. செம்மை (சிவப்பு) இராசத குணத்தைக் குறிக்கும். கருப்பும் புகையும் தாமச குணம் எனவும் காணலாம். எனவே இப்பாடலில் பஞ்சபூதங்களின் வண்ணமும் அதற்காக பீஜ எழுத்துக்களும் காட்டப்பட்டன.

| பூதங்கள் | வடிவம் | நிறம் | வித்தெழுத்து |
|---|---|---|---|
| பூமி | நாற்கோணம் | பொன்மை | லகரம் |
| நீர் | அரைச்சந்திரன் | வெண்மை | வகரம் |
| தீ | முக்கோணம் | செம்மை | ரகரம் |
| காற்று | அறுகோணம் | கருமை | யகரம் |
| ஆகாயம் | வட்டம் | புகைமை | அகரம் |

இங்கு ஆசிரியர் பொங்கும் அனல், வன்கால், வளர்வானம் என்னும் சொற்றொடர்களை செய்யுளில் காட்டியுள்ளார். இவை பற்றிய அடைமொழிகள் ஆழ்ந்து சிந்திக்க வைக்கின்றன. அவற்றைக் கற்போருக்கே விட்டுவிடுகின்றேன். சிந்தித்து தெளிக.

## வெண்பா 6

### ஐம்பூதங்களுக்குரிய அடையாளங்கள்

**குறிகுலிசம் கோகனதம் கொள்சுவத்தி குன்றா**
**அறுபுள்ளி ஆர்அமுத விந்து - பிறிவு இன்றி**
**மண்புனல் தீக்கால் வானம் மன்னும் அடைவே என்று**
**ஒண்புதல்வா ஆகமம் ஓதும்.**

**இதன்பொருள் :**

ஒண்புதல்வா - அறிவொளியைக் காண நிற்கும் மகனே! நன் மாணாக்கனே, குறி - முன்பு சொல்லப்பட்ட ஐம்பூதங்களுக்கும் அடையாளம் எனக் கூறப்படுவனவும் உள. அவை யாவன, குலிசம்

- வச்சிராயுதத்தையும், **கோகனதம்** - தாமரைப்பூவையும், **கொள்சுவத்தி** யாவற்றையும்அடக்கவல்ல சுவத்திகத்தையும், **குன்றாஅறுபுள்ளி** - குறைவில்ாத ஆறு புள்ளிகளையும், **ஆரமுதவிந்து** - இன்பம் தரும் நிறைந்த அமுதத்துளிகளையும், **பிறிவின்றி** - தம்மை விட்டு நீங்காதவாறு, **மண் புனல் தீக்கால் வானம் மன்னும் அடைவே என்று ஆகமம் ஓதும்** - முறையே பூமி நீர் நெருப்பு காற்று வான் ஆகியவை தத்தமக்குரிய அடையாளங்கள் எனச் சிவாகமம் எடுத்துக் கூறும்.

## கருத்துரை

அறிவொளியைக் காண நிற்கும் மகனே ! மாணாக்கனே ! முன்பு சொல்லப்பட்ட ஐம்பூதங்களுக்கும் அடையாளம் எனக் கூறப்படுவனவும் உள. அவையாவன, வச்சிராயுதத்தையும் தாமரைப் பூவையும் யாவற்றையும் அடக்க வல்ல சுவத்திகத்தையும் குறைவில்லாத ஆறுபுள்ளிகளையும், இன்பம் தரும் நிறைந்த அமுதத்துளிகளையும், தம்மைவிட்டு நீங்காதவாறு முறையே பூமி நீர் நெருப்பு காற்று வான் ஆகியவை தத்தமக்குரிய அடையாளங்கள் எனச் சிவாகமம் எடுத்துக் கூறும்.

## விரிவுரை

முந்திய செய்யுளில் ஐம்பூதங்களின் நிறங்களும் அவற்றிற்கான விதை (பீஜ) எழுத்துக்களையும் கூறினார். இங்கு ஆசிரியர் அவ்வைந்து பூதங்களுக்கும் அடையாளமாக உள்ள பொருட்களைக் கூறினார். இக்காலத்தில் சில பொருட்களுக்கு அவற்றிற்கென ஒரு அடையா ளத்தை, குறியை வகுத்து அதனை இலகுவில் அறிந்து கொள்ளும் வகையில் அடையாளம் கொடுத்துள்ளார்கள். ஆயினும் சிவாகமத்தில் ஐம்பெரும் பூதங்களுக்கும் இலகுவில் புரிந்து கொள்ளக்கூடிய அளவில் அடையாளங்கள் தந்தார்கள் எனக் கொள்வதோடு அப்பூதங்களின் தன்மை குணம் தொழில் ஆகியனவற்றை பகுத்து உணர்ந்து அவற்றிற் கான நேரிடையான அடையாளங்கள் தரப்பட்டுள்ளன. உதாரணமாக மண் என்னும் பூதம் திண்மையான பொருள். எதனையும் தாங்கும் வல்லமை உடையது. அதனால் வன்மை வலிமை மிக்க வச்சிராயுதத்தை

அதன் அடையாளமாக காட்டப்பட்டது. இவ்வாறே நீர் நெகிழ்ச்சி மென்மைத் தன்மை அசைவு முதலியன உடையதால் நீரில் முளைத்துப் பூத்து நிற்கும் தாமரைப்பூ அடையாளப் பூவாக உள்ளது. நெருப்பு எத்திசையும் பரவுவதோடு வேகமும் கூடியது என்பதால் சுவத்திகத்தை அடையாளம் காட்டப்பட்டது. அடுத்து அமுதவிந்துவை ஆகாயத்திற்கு அடையாளம் வைத்தார். இதன் வியாபகத்தன்மையை நோக்கி அவ்வடையாளம் தரப்பட்டது. இவ்வாறாக குறிகளால் பூதங்களின் தன்மைகள் காட்டப்பட்டன என்பது தெளிவு. அடைவே என்பது முறையே அடையாளம் என பொருள் காண்க.

மாணவனை முன்பும் புதல்வா என அழைத்தது போன்றே இங்கும் அன்பின் வெளிப்பாட்டைக் காட்ட புதல்வா என்றார். முன்பு யோகம் நிகழ் புதல்வா என அழைத்தவர், இங்கு ஒண்புதல்வா என ஞானத்திற்கு முதன்மை கொடுத்து கூறியவாறும் காண்க. ஒளியைக்காண விரும்பும் மாணவனே என்பதனையே ஒண்புதல்வா எனக் குறித்தார்.

முந்திய செய்யுள் போலவே கொள்சுவத்தி குன்றா அறுபுள்ளி ஆரமுதவிந்து என அடைகொடுத்துக் கூறியவாறும் காண்க.

சிவஞான சித்தியாரில் வரும் குறிகள் வச்சிரத்தினோடு என்னும் செய்யுளும் இத்துடன் ஒப்புக் காணலாம். செய்யுள்

**குறிகள் வச்சிரத்தி னோடு கோகனதம் சுவத்தி**
**அறுபுள்ளி அமுத விந்து மதி தெய்வம் அயன்மால் ஆதி**
**செறிபுகழ் ஈச னோடு சதாசிவம் பூத தெய்வம்**
**நெறிதரு காலை ஐந்திற்கும் நிகழ்த்துவர் இந்த நீர்மை**

இதில் கூறியுள்ள அடையாளங்களும் உண்மை விளக்கத்தில் கூறப்பட்ட அடையாளங்களும் அதிதெய்வங்களும் ஒத்திருப்பதும் இச் செய்தி மெய்கண்டாரின் மாணவர் இருவரினதும் சிறப்பையும் அறிவையும் புலப்படுத்துகின்றன.

**வெண்பா - 7**

**பூதங்களுக்குரிய அதிதேவர்களும், அத்தேவர்களின் தொழில்களும்**

**பாராதி ஐந்துக்கும் பன்னும்அதி தெய்வங்கள்**
**ஆரார் அயனாதி ஐவராம் - ஓரோர்**
**தொழிலவர்க்குச் சொல்லுங்கால் தோற்றமுதல் ஐந்தும்**
**பழுதறவே பண்ணுவார்கள் பார்.**

## இதன் பொருள்

**பாராதி ஐந்துக்கும்** - நிலம் நீர் தீ காற்று வான் ஆகிய ஐந்து தத்துவங்களுக்கும், **பன்னும் அதிதெய்வங்கள் ஆர்ஆர்** - அதிதேவர் களாக வைக்கப்பட்டவர்கள் யாவர் என ஆராயும்போது, **அயனாதி ஐவராம்** - பிரமதேவனை முதலாக உடைய திருமால் உருத்திரன் ஈசுவரன் சதாசிவன் என்னும் ஐந்து பேர் ஆவர்,**ஓரோர் தொழிலவர் க்குச் சொல்லுங்கால்** - அவர்கள் புரிகின்ற ஒவ்வொன்றாகவுள்ள தொழில்களை எடுத்துச் சொல்வதாயின், **தோற்றம் முதல் ஐந்தும்** - முறையே படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என இவைகளாகும், **பழுதறவே பண்ணுவார்கள் பார்** - இத்தொழில்களை அவ்வதி தெய்வங்கள் குற்றம் நீங்கிய வழியில் புரிவார்கள். இதனை நீ நன்கு தெளிந்து ஆராய்ந்து பார்ப்பாயாக.

## கருத்துரை

நிலம், நீர், தீ, காற்று, வான் ஆகிய ஐந்து தத்துவங்களுக்கும் அதிதேவர்களாக வைக்கப்பட்டவர்கள் யாவர் என ஆராயும்போது, பிரமதேவனை முதலாகவுடைய திருமால் உருத்திரன் ஈசுவரன் சதாசிவன் என்னும் ஐந்து பேர்களும் ஆவர். அவர்கள் புரிகின்ற ஒவ்வொன்றாக வுள்ள தொழில்களை எடுத்துச் சொல்வதாயின் முறையே படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் எனத் தனித்தனியாக இவைகளாகும். இத்தொழில்களை அவ்வதி தெய்வங்கள் குற்றம் நீங்கிய வழியில் புரிவார்கள். இதனை நீ நன்கு தெரிந்து தெளிந்து ஆராய்ந்து பார்ப்பாயாக.

**விரிவுரை**

ஐந்து மாபெரும் பூதங்களுக்கும் அவற்றை வழி நடத்தி இயக்கும் சக்திகள் உள. அவற்றை அதிதெய்வங்கள் எனச் சித்தாந்தம் அழைக்கும். அவை பிரமதேவர் முதலாகவுள்ள சுத்த மாயா தத்துவங்களில் இருக்கும் அதிதெய்வங்களே. அவ்வதிதெய்வங்கள் என்பது என்ன என்னும் கேள்வி, சித்தாந்தம் கற்போருக்கு எழுவது உண்மையே. எனவே அதற்கு விடை அவசியமாகின்றது.

இறைவன் தானே ஐந்து தொழில்களையும் புரியும் ஆற்றல் உடையவன். அது அவன் தொழிற்பாடு என ஆகமங்கள் கூறி இருப்பவும், அதிதெய்வங்கள் என அழைக்கப்படும் அவர்கள் இத்தொழில்களைச் செய்வதற்கான காரணம் என்ன. ஏன் இறைவனே இவர்களெல்லாரையும் புறத்தே விடுத்துத் தானே அதனை செய்யலாமே என இங்கே ஒரு கேள்வி கேட்கப்படுகின்றது. சிவபெருமான் முற்றுணர்வினன். பேராற்றல் உடையவன். அவரே இதனைச் செய்யலாமே எனக் கேட்போருக்கு விடை இதுதான். எம்பெருமான் தான் அச்செயல்களுக்கு நிமித்த காரணன். அவர் அத்தொழில்களை தனக்குச் கீழேயுள்ள அதிதெய்வங்களைக் கொண்டே செய்விக்கின்றார். இவர்கள் அதிகார மூர்த்திகள் எனப்படுகின்றனர்.

உலகியலில் ஒரு நாட்டுத் தலைவன் மன்னன் தனது எண்ணங்களை ஆணையைத் தனக்குக் கீழேயுள்ள மந்திரி; தளபதி, சேவகன் தண்டலாளர் ஆகியோரைக் கொண்டு நிறைவேற்றுகின்றான். இது யாவரும் அறிந்ததே. அதிகாரங்கள் முழுவதும் அரசனிடத்தே தான் இருக்கும். அதுபோல இறைவன் ஆன்மாவில் அதிபுண்ணியங்கள் செய்து உயர் நிலையில் இருக்கும் இவர்க்குத் தனது ஆணையை நிறைவேற்றும்படி செய்விப்பான். இவர்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு தொழிலையே கொடுத்து அதனைச் செய்யும்படி பணிப்பான். படைத்தலைச் செய்கின்றவர் பிரமதேவர் ஆவர். அது தவிர்ந்த காத்தலையோ அன்றி அழித்தலையோ செய்யும் அதிகாரம் அற்றவர். திருமாலும் காத்தல் தொழிலைச் செய்வாரே அன்றிப் படைத்தலையோ அழித்த லையோ செய்ய முடியாது. இவ்வாறே தான் மற்றைய அதிதெய்வங்

களின் நிலையும். சிவபெருமானே இவர்களாக நின்று நடிப்பன் எனச் சிவஞான சித்தியார் காட்டுகின்றது.

இந்த அதிதெய்வங்கள் எக்காலத்தும் அழியாது ஒரே பெற்றித்தாய் இருக்கும் இறைவன் ஆகார். இவர் பிரமம் ஆகார். இவர்கள் அதி உன்னத நிலையடைந்த ஆன்மாக்கள். இவைகளால் இவைர்கள் வணக்கத்துக்குரியவர்களே. இவர்கள் தமக்கென உள்ள அதிகாரத்தின் கீழேயே பயன் அளிக்க வல்லவர்கள். மேலும் சர்வ சங்கார காலத்தே நடைபெறும் ஒடுக்கத்தில் இவ்வதிதெய்வங்கள் சிவனிடத்தே ஒடுக்கம் பெறுபவர்கள். மீண்டும் புனர் உற்பவம் நடக்கும் போது இவர்களும் பிறப்பார்கள்.

எனவே இத்தெய்வங்கள் பிறப்பு இறப்புக்கு உட்பட்டவரே இதனையே ஆசிரியர் ஓரோர் தொழில் எனவும் தோற்ற முதல் ஐந்தும் எனவும் கூறியமை காணலாம். இவர்களை வழிபடு தெய்வமாக, பிரமமாக எண்ணுபவர்களை, சிவஞான சித்தியார் பரபக்கத்தில் காட்டி மறுத்தவாறு காணலாம். சிவஞான சித்தியார் சுபக்கத்தில்

**விரைக்கமல த்தோன் மாலும்**
**ஏவலான் மேவினார்கள்**
**புரைத்த அதிகார சத்தி**
**புண்ணியம் நண்ண லாலே**

எனவும்

**அறுதியில் அரனே எல்லாம்**
**அழித்தலால் அவனால் இன்னும்**
**பெறுதும் நாம் ஆக்கம் தேக்கம்**
**பேர் அதி கரணத் தாலே**

எனவும்

**யாதொரு தெய்வம் கொண்டீர் அத்தெய்வம் ஆகி ஆங்கே**
**மாதொரு பாகனார் தாம் வருவர் மற்றத் தெய்வங்கள்**
**வேதனைப் படும் இறக்கும் பிறக்கும் மேல் வினையும் செய்யும்**
**ஆதலால் இவை இலாதான் அறிந்து அருள் செய்வன் அன்றே**

எனவும்

இவ்வதிதெய்வங்கள் பற்றிக் கூறியவாறு காண்க.
இதனைத் துகளறுபோதம்

........எட்டரிய

**வேதன் மால் மிக்க விடையோன் மகேசனுடன்**
**ஆதி அதிதெய்வம் ஆம்.**

எனவும் எடுத்துக் கூறுகின்றது. எனவே சைவ சித்தாந்த உண்மை விளக்கம் பெறும் பொருட்டு இவ்வதி தெய்வங்கள் யாவர் என்பதும் அவர்களின் இயல்பு கடமை நிலை அதிகாரம் என்ன என்பனவும் கண்டோம். இதனைத் தெரிந்திருத்தல் மாணவருக்கு மிகவும் வேண்டியதே. இவற்றைத் தெரிந்து கொள்வதால் அடையும் பயன் யாதோ எனின் தேகமே ஆன்மா என எண்ணாமல் உயிர் என்பது வேறு உடல் என்பது வேறு எனக் காட்டுதற்குமாம். உண்மை விளக்கம் பெறுதலே.

இனிச் செய்யுளில் பழுதறவே பண்ணுவார்கள் பார் என இறுதி அடி வருகின்றது. இவ்வதி தெய்வங்கள் தமது வரம்பு மீறிய தொழில்களைச் செய்வார்களேயானால் இறைவனுடைய அதிகாரம் பிழைபடும். அதனால் பெரும் பாதக விளைவே ஏற்படும். இத்தெய்வங்கள் செய்யும் தொழில் குற்றம் அற்றவையாக இருத்தல் வேண்டும் என்பதையும் தெளிவுபடுத்த அவ்வாறு கூறினார். அரசனின் ஏவலாளர்கள் தத்தமக்கு இயைந்தவாறு கடமைகளைச் செய்வர் ஆயின் அது அரசன் ஆணையை மீறிய செயலாகவும் தர்மத்திற்குப் பங்கமாகவும் அமையும். அவர்கள் கடமையை அரசன் வழி நின்றே செய்வார்கள். அதிகாரம் முழுவதும் அரசனிடமே இருக்கும்.

ஆயத்தைக் கூட்டினாலும் அதர்மம் அரசர்க் கேயாம் என்னும் வரிகளும் இதன் உண்மையைப் புலப்படுத்தும். எனவே தான் பழுதறவே என்பது ஓங்கி ஒலிக்கின்றது. இங்கு மாணவனைப் பார்த்து பார் என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளளார். இது தெளிவுகொள்ளும் பொருட்டுச் சொல்லப்பட்டதோடு சிந்தித்து அறிந்து கொள் எனக் காட்டியவாறும் உணர்க.

பன்னும் கூறப்படும், அதிதெய்வம் - செலுத்தும் கடவுள் - இயக்கும் கடவுள் தூண்டித் தொழிற்படுத்தும் துணைத் தெய்வம் எனவும் கருத்து வரைவர் ஆசிரியர்கள்.

தோற்றமுதலைந்து-வெளிப்டை
இதனை இருபா இருப..தில் வரும்

**இயமன் செய்தி இதற்கெனின் அமையும்**
**பின்னை யின்றாகும் அன்னது மிங்குச்**
**செய்திக் குள்ள செயலவை அருத்தின்**
**மையல்தீர் இயமற்கு வழக்கில்லை மன்ன**
**ஒருவரே அமையும் ஒருவர் ஒருவர்க்கு**
**இருவரும் வேண்டா இறைவனும் நின்றனை**
**நின்னது கருணை சொல் அளவின்றே**

என்னும் வரிகள் அதிதெய்வத்தின் நிலை என்ன என்பதும் அப்போது இறைவன் நிலை எவ்வாறு இருக்கும் என்பதற்குரிய விளக்கமுமாகும். இதன் விரிவை இருபா இருப..து பொருரையும் விரிவுரையும் என்னும் எனது நூலில் காண்க.

### வெண்பா-8

**ஐவகைத் தொழிற்கும் உரியரை விரித்துக் கூறுதல்**

**படைப்பன் அயன் அளிப்பன் பங்கயக்கண் மாயன்**
**துடைப்பன் உருத்திரனும் சொல்லின் - திடப்பெறவே**
**என்றும் திரோவிப்பர் ஈசர் சதாசிவரும்**
**அன்றே அநுக்கிரகர் ஆம்.**

**இதன் பொருள் :**

படைப்பன் அயன் - பிரமதேவன் படைக்கின்ற தொழிலைச் செய்வன், அளிப்பன் பங்கயக்கண் மாயன் - தாமரைபோலும் சிவந்த கண்களையுடைய திருமால் காத்தல் தொழிலைச் செய்வன், துடைப்பன் உருத்திரனும் சொல்லின் - உருத்திரனுடைய தொழிலைச்

சொல்வதாயின் அழித்தலை அவன் செய்வன். இதுவே சொல்லப் பட்டவாறு, திடப்பெறவே என்றும் திரோவிப்பர் ஈசர் - உயிர்கள் பதிஞானம் பெறுதற்கான உறுதியை உண்டு பண்ணுதற்கு மறைப்புத் தொழிலை புரிபவர் மகேசுவரர் ஆகும், சதாசிவரும் அன்றே அனுக்கிரகர் ஆம் - பக்குவம் தலைப்பட்ட அன்றே அருளுதல் என்னும் தொழிலைப் புரிந்து உயிர்க்கு முத்தியாகிய உறுதியை அளிப்பவர் சதாசிவர் ஆகும்.

### கருத்துரை

பிரமதேவன் படைக்கின்ற தொழிலைச் செய்வான். தாமரைபோலும் சிவந்த கண்களையுடைய திருமால் காத்தல் தொழிலைச் செய்வான். உருத்திரனுடைய தொழிலைச் சொல்லுவதாயின் அழித்தலை அவன் செய்வான். இதுவே சொல்லப்பட்டவாறு. உயிர்கள் பதிஞானம் பெறுவதற்கான உறுதியை உண்டு பண்ணுவதற்கு மறைப்புத் தொழிலைப் புரிபவர் மகேசுவரர் ஆகும். பக்குவம் தலைப்பட்ட அன்றே அருளுதல் என்னும் தொழிலைப் புரிந்து உயிர்களுக்கு முத்தியாகிய வீடு பேற்றினை அளிப்பவர் சதாசிவர் ஆகும்.

### விரிவுரை

முந்திய செய்யுளில் இறைவனுக்குரிய ஐந்து தொழில்களையும் அவர் ஆணைப்படி அவற்றை இயற்றும் அதிதெய்வங்கள் ஐந்தினையும் வேதாகமங்கள் வழி நின்று எடுத்துரைக்கப்பட்டது. இங்கு அச்செய்யுளின் தொடர்ச்சியாக அத்தெய்வங்களின் தொழில்களை விரித்துரைத்தார். அவற்றின் தொடர்ச்சியாக மாபூதங்களுக்குரிய அத்தத்துவங்களும் அவற்றைச் செலுத்தி நிற்கும் அதி தெய்வங்கள் புரியும் தொழில் பற்றிய விளக்கங்களும் காட்டப்பட்டன.

பிரமதேவன் படைத்தலையும், திருமால் காத்தலையும், உருத்திரர் அழித்தலையும், மகேசுவரர் மறைத்தலையும் சதாசிவர் அருளலையும் செயற்படுத்துவர். இவை ஆன்மாக்களின் மீது செலுத்த படுவன. ஆன்மாக்களுக்கான தேவைகளுக்கேற்பவும், அவை நிற்கும் பக்குவ அபக்குவ நிலைகளுக்கேற்பவும் இயற்றப்படுகின்ற தொழில்கள் இவை.

படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் இவற்றைத் தூய தமிழ்ச்சொற்கள் கொண்டு சொல்லிய ஆசிரியர் திரோவிப்பர், அநுகிரகர் எனவும் சொல்லிய காரணம் யாதாக இருக்கும் எனச் சிந்திக்கத் தூண்டுகின்றது. மெய்ஞ்ஞானிகள் மறைத்தலைக் காத்தலிலும் அருளலை அழித்தலிலும் அடக்கி முத்தொழில் எனக் கூறுவர். எனவே தான் தமிழ் மொழியையும் வடமொழியையும் அவற்றின் தேவை கருதித் தமிழில் சொன்னார் போலும்.

மேலும் இத்தெய்வங்கள் யாவும் சுத்தத் தத்துவங்களில் நின்று தொழிற்படும் தெய்வங்கள். இவர்கள் சுத்தமாயா தத்துவங்களில் இருந்து கொண்டு அசுத்தமாயா தத்துவங்களை இயக்குவர் என்பது காணக் கிடக்கின்றது. முந்திய செய்யுளில் ஐந்து பூதங்களும் இவை எனக் கூறிய ஆசிரியர் அவற்றைச் செலுத்தி நிற்பவர் இவர்கள் எனவும் காட்டிய காரணத்தால் இத்தெய்வங்கள் தாம் அத்தத்துவங்களில் இருக்கும் அதிதெய்வங்கள் என்பது போதரும். இங்கு இத்தத்துவங்கள் யாவை என்பன பற்றியும் இத்தெய்வங்கள் பற்றிய அறிவும் வேண்டப் படுவன. ஆகையால் அது பற்றிச் சிறிது விளக்குவோம்.

சுத்த தத்துவம் பற்றி இவ்வாசிரியர் கூற இருப்பதால் அது பற்றி அங்கு கூறுவோம். எனவே இங்கு இத்தொழில்கள் பற்றிய விளக்கத்தைச் சிறிது ஆராய்வோம். ஐந்து தொழில்களையும் சிவபெருமானே இயற்ற வல்லான் என்பதால் அவ்வைந் தொழில்களையும் இயற்றுவதற்கான காரணம் யாதாகும் எனத் தெளிதல் வேண்டும். எனவே இவ்வைந்து தொழில்கள் பற்றிச் சிறிது ஆராய்வோம்.

முதலில் படைத்தல் என்பதைப் பார்க்கும்போது சிவஞான போதம் தோற்றிய திதியே ஒடுங்கி மலத்துளதாம் எனக் கூறுகின்றது. இதனால் சிவபெருமானே படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் முத்தொழிகளைத் தான் ஒருவனே செய்வான். அதிதெய்வங்கள் அவன் ஆணை கொண்டே அவற்றைப்புரிவர் என்பதனை ஆணையின் எனவும் சிவஞான போதம் காட்டும்.

தோற்றம் என்பது படைத்தல். இறை உயிர் தளை ஆகிய மூன்றும் உள் பொருள்கள். இவை தம்முள் ஒன்று அல்ல வென்பதும் வெவ்வேறு பொருள்கள் என்பதும் தெளிவு. இங்கே இறைவன் ஒருவன். அவனை ஆக்கம் அளவு இறுதி இல்லாய் அனைத்துலகும் ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள் தருவாய் போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின் தொழும்பின் என மாணிக்கவாசக சுவாமிகள் தனது சிவபுராணத்தில் பாடியுள்ளார். எனவே தோற்றமும் இறுதியும் சடப்பொருள்களுக்கே வேண்டப்படுகின்றது. இறைவன் உயிர்கள் மேல் கொண்ட பேரிரக்கம் காரணமாகவும் அவை உய்தி பெற்று நிலையெய்தி இருக்கவும் வேண்டும் என்னும் கருத்தால் அஞ்ஞான இருளில் கிடந்த ஆன்மாவுக்கு அறிவு விளக்கம் உண்மை விளக்கம் வர வேண்டும் என்பதற்காக அவற்றிற்கு அறிவு இச்சை செயல்களைக் கொடுக்கின்றான். இவற்றால் ஆன்மா வினைகளைப் புரிகின்றது. அவ்வினைகளை அனுபவித்தற்கும் அறிவு விளக்கம் பெறுவதற்கும் அவ்வுயிர்களுக்கு இறைவன் தனு கரண புவன போகங்களை அளிக்கின்றான். இந்நுகர்வுகளைக் கண்ட உயிர் அதனை அனுபவித்து வருகின்றது.

இவ்வாறு அனுபவிக்கும் காலத்தே அவை அதனால் இளைப்படைகின்றன. அவ்வாறு இளைப்பு அடைந்த நிலையில் எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன் என நிற்கும். அவ்வேளையில் இறைவன் அவற்றிற்கு ஒடுக்கத்தைக் கொடுக்கின்றான். ஒடுக்கம் என்பது சங்கரித்தல் என்பது அதாவது அழித்தல் என்பது. இறைவனுக்கு சங்கரன் என ஒரு பெயர் உண்டு. சுகத்தைத் தருபவன் என்பது. அழித்தல் என்பது உலகப் பொருள்களையே எனலாம்.

இறைவன் உயிர்கள் தம் இளைப்பு நீங்குதற் பொருட்டுச் செய்யும் பெருங்கருணையே ஒடுக்கம். எனவே இவ்வாறு ஒடுக்க நிலையில் இருக்கும் உயிர்கள் மீண்டும் பிறந்து வந்து தாம் செய்த வினைகளை அனுபவிக்க வேண்டும். ஆகையால் அவன் தோற்றத்தைச் செய்கின்றான். உயிர் உள் பொருள். மாயை நிலையான பொருள். காரணப் பொருள். இக்காரணப் பொருள்களைக் கொண்டு இறைவன் தனு கரண புவன போகங்களைப் படைக்கின்றான் தோற்றுவிக்கின்றான். இவற்றை

உயிர்கள் அனுபவித்து ஆக்கம் பெறுகின்றன. அறிவு பெறுகின்றன. எனவே தான் பிரமதேவன் இப்படைப்புக்களைப் படைக்கின்றான் எனக் காண்க. இனி இப்படைப்புக்களுக் கெல்லாம் காத்தல் தேவைப்படு கின்றது. உயிர்கள் பிறப்புக்கு வருவதும் எதுவரை காலம் இவ்வுலகில் நிற்க வேண்டும். எந்த இடத்தில் அது தாம் பெற்றுக் கொண்ட உடல் வாழ வேண்டும் என்பதையும் காட்டுபவனாய் அவற்றை காவல் படுத்தி வைத்தல் வேண்டும். இதனை நிலை நிறுத்தல் என்போம். எனவே இவ்வாறு காலம் இடம் போக்கு வரவு என்பனவற்றை குறித்த காலம் வரை காத்து நிற்றலே நிலைபெறச் செய்தலே காத்தல் எனப்படும். மேலே கூறிய விளக்கங்களால் படைத்தல் காத்தல் அழித்தல் என்பன பற்றித் தெளிந்தோம். ஒடுக்கத்தில் இருந்துதான் தோற்றம் வரும். இங்கு அழித்தல் என்பது சங்கரித்தல், துடைத்தல், என்பதால் உயிர் தான் செய்து கொண்ட வினைக் கேற்ற உடம்பை எடுத்து அனுபவிக்கும் காலத்து, அதனை நிலை பெறச் செய்வதே காத்தல் எனலாம். இதனை இருபா இருப..து காலமும் தேசமும் மாலற **வகுத்து நடுவு நின்று அருந்தலின் நடுவன் ஆகுதியே** எனக் காட்டுகின்றது.

இனி மறைத்தல் என்பது பற்றிச் சிந்திப்போம். உயிர் பிறவிக்கு வந்து பல வினைகளை ஈட்டும் எனக் கண்டோம். இதனை இதம் அகிதம் எனவும் நல்வினை தீவினை எனவும் கூறுவர். இவ்வாறு நல்வினையைப் புரிந்தாலும் தீவினையைப் புரிந்தாலும் அதனை அனுபவிப்பது உயிரே. இவ்வுயிர் தான் செய்து கொண்ட வினை இதுவென்றோ பிறர் செய்த வினை இதுவென்றோ அறியாத சிற்றறிவு உடையது. ஆணவமலப் பிணிப்பில் உயிர்கள் நிற்கின்றன. இறைவனே வினைகளை ஊட்டுவிப்பவன். ஆகையாலும் அஞ்ஞான வழிப்பட்டு ஆன்மா நிற்பதினாலும் பாவ புண்ணிய நுகர்வுகளை எதிர்பட்டு அறியாத நிலையில் இருக்கின்றது. இத்தகு நிலையை உண்டு பண்ணுவது மறைப்பு ஆற்றல் எனப்படும். இதனையே செய்யுளில் ஈசர் திரோவிப்பர் எனக் காட்டப்படுகின்றது.

ஈசுவரர் தனது சக்தியாகிய திரோதான சக்தி கொண்டு இதனைச் செய்விப்பர். உயிர் பாசஞானம் பசுஞானம் என்பனவற்றில் நிலை

கொண்டு நிற்கும் வேளையில் இத்திரோதான சத்தி மறைப்பாற்றலாய் நின்று நின்று உயிரை அவற்றின் வினைகள் அறிவுக்கு வரவொட்டாமல் மறைத்து நிற்கும். இதுவே மறைத்தல் என்பதாகும். எனவேதான் திரோவிப்பர் ஈசர் என்றார்.

இவ்வாறாக திரோதானகரியாக நின்ற வேளை மாயை உயிருக்கு தனு கரண புவன போகங்களைக் கொண்டு அறிந்த உண்மை விளக்கத்தையும் ஊட்டுகின்றது. அதனால் அம்மாயை ஒளிப்பொருளாய் நின்று உயிருக்கு இருவினை ஒப்பு மலபரிபாகம், சத்திநிபாதம் என்பனவற்றை வரச் செய்து பக்குவ நிலைக்கு இட்டுச் செல்லுகின்றது. இவ்வாறு பக்குவ நிலைக்குச் செல்லும் உயிரை இறைவன் அன்றே அநுக்கிரகிப்பர். அதாவது முத்தி நிலைக்குச் செல்லும் ஆற்றினைத் தந்து முத்தியை அருளுவர். இங்கு அருளுதல் என்பது ஆன்மாவை முத்தி பெறச் செய்தல் என்பதே இதனை மாணிக்கவாசகர்

**அன்றே என் தன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமும்**
**குன்றே அனையாய் என்னை ஆட்கொண்டபோதே கொண்டிலையோ...**

எனப் பாடுகின்றார். இங்கே அன்றே என்பது சத்திநிபாதம் வரப்பெற்று பக்குவம் அடைந்த நிலை யென்பதைத் திருவாதவூரடிகள் புராணம் காட்டும். மேற்போந்த செய்திகளால் ஒடுக்கம், தோற்றம், நிலைநிறுத்தம், அழித்தல் மறைத்தல் அருளல் என்பன பற்றி தெளிந்து கொண்டோம்.

எனவே இத்தகு ஆற்றலை அவன் ஆணை வழி நின்று உயிர்களுக்கு அசுத்தமாயை வரை படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் ஆகிய தொழில்களை அத்தத்துவங்களோடு பொருந்தி இயக்குபவர் இவ்வதி தெய்வங்களே என்பது பெற்றாம். மேலும் முத்திக்கு இட்டுச் செல்லும் அருளல் என்பதைச் சிவன் ஒருவனே செய்து நிற்பர். ஏனெனில் அதனை இத்தகு அதிதெய்வங்களுக்கு வழங்குவதால் வரும் குற்றத்தினை நீக்கவும், தன் ஆணையை நிலை நிறுத்துவதற்கும் என அருளலை இறைவனே ஏற்றுக் கொண்டார் எனலாம். இதனைச் செய்பவரை இங்குச் செய்யுளில் சதாசிவன் எனக் காட்டப்படுகின்றது. எனவே இவை சுத்த மாயா தத்துவங்களைக் காட்டுவதோடு அவற்றை இயக்கும் தெய்வங்கள் யாவை என்பதனையும் தெளிந்தோம்.

சொல்லில் என்னும் சொல்லை இங்கு விரித்துக் கூறுவோமாயின் எனவும் பொருள் காண்க. இதுவே சொல்லப்பட்டவாறு எனவும் கொள்க. ஆராயுமிடத்து எனவும் பொருள் தரும்.

இனிச் செய்யுளில் திடப் பெறவே என்னும் சொல் தனிச் சொல்லாக வெண்பாவில் காட்டப்படுகின்றது. திடம் பெறவே என்பது திடப் பெறவே என எதுகை நோக்கி எடுத்தாளப்பட்டது. ஆசிரியர் படைப்பன் அளிப்பன் துடைப்பன் என வாளா கூறியவர் மறைத்தலைச் சொல்லும் போது திடப் பெறவே என்றும் திரோபவிப்பர் ஈசர் என்றார். இவ்வைந்து தொழிலும் ஆன்மாவுக்குத் திடம் பெறவே ஆக்குதற்கே செய்யப்படுவது. இது பொது வகையால் சொன்னதாக கொள்ள எல்லாவற்றோடும் இணைத்துப் பொருள் கொள்க.

ஆயினும் மறைத்தலுக்குச் சிறப்பாக அடைகொடுத்து திடப்பெறவே என்னும் சொல்லினைக் கூறியுள்ளார். இது சிந்திக்கப்பாலது. திடம் என்பது திட்பம் - உறுதி என்னும் கருத்தை இங்கு தருகின்றது. (திடமாக நம்பு) ஆன்மா பாச ஞானம் பெற்று பசுஞானம் பெறுகின்றது. இத்துணையும் ஆன்மாவைத் திரோதான சத்தியே விட்டுப் பிரியாது தன் மறைப்பாற்றலால் மறைத்து நின்றது. பின்னர் ஆன்மா இறைவனைப் பற்றிய பதி அறிவுக்கு வருகின்றது. இங்கு அந்த அறிவு வரவேண்டிய காரணம் உயிர் உறுதி பெறுவதற்கே யாகும். உறுதி என்பது முத்தி. எனவே முத்தி நிலை அடைவதற்கான உறுதி நிலைக்கு இட்டுச் செல்வது இறை சத்தியே ஆகையால் அது இட்டுச் செல்வது திடம் பெறவே திட்பம் பெறவே யாகும். அதனாலே ஆசிரியர் திடம் பெறவே என்றார். ஏகாரம் பிரிநிலை.

## வெண்பா-9

### பஞ்ச பூதங்களின் குணமும் செயலும்

**மண்கடினமாய்த் தரிக்கும் வாரிகுளிர்ந்தே பதமாம்**
**ஒண்கனல்சுட்டு ஒன்றுவிக்கும் ஓவாமல் - வண்கால்**
**பரந்துசலித்து திரட்டும் பார்க்கில் ஆகாயம்**
**நிரந்தரமாய் நிற்கும் நிறைந்து**

**இதன்பொருள்**

**மண்கடினமாய்** - மண்ணின் குணம் திண்மை, **மண்தரிக்கும்**- அதன் செயல் தாங்குதல், **வாரி குளிர்ந்தே** - நீரின் குணம் குளிர்ச்சி, **வாரி பதமாம்** - நீரின் செயல் பதப்படுத்தல் (மென்மை செய்தல் நனைத்தலையும் செய்யும்) **ஒண்கனல் சுட்டுவிக்கும்** - ஒளி விளக்கம் தரும் தீ வெம்மைக் குணமுடையது, **ஒண்கனல் ஒன்றுவிக்கும்** - தீ ஒன்றுபடுத்தும் தொழிலைச் செய்யும், **ஓவாமல் வண்கால் பரந்து** - வலிமை மிகு காற்று இடையீடு இன்றி பரவும் குணமுடையது, **வண்கால் சலித்துத் திரட்டும்** - வலி தான காற்றுபொருள்களை ஒருங்கு திரட்டும், **பார்க்கில்** - ஆராய்ந்து பார்க்குமிடத்து, **ஆகாயம் நிரந்தரமாய்** - ஆகாயம் வெளியாதல் குணமுடையது, **ஆகாயம் நிற்கும் நிறைந்து** - ஆகாயம் எப்பொருளுக்கும் இடம் கொடுத்து நிறைவாக நிற்கும்.

**கருத்துரை**

மண்ணின் குணம் திண்மை. அதன் செயல் தாங்குதல். நீரின் குணம் குளிர்ச்சி. அதன் செயல் பதப்படுத்தல். ஒளி விளக்கம் தரும் தீ வெம்மைக் குணம் உடையது. அது ஒன்று படுத்தும் தொழிலைச் செய்யும். வலிமை மிகு காற்று இடையீடு இன்றிப் பரவும் குணம் உடையது. வலிதான காற்றுப் பொருள்களை ஒருங்கு திரட்டும். ஆராய்ந்து பார்க்குமிடத்து ஆகாயம் வெளியாதல் குணமுடையது. அது எப்பொருளுக்கும் இடம் கொடுத்து நிறைவாக நிற்கும்.

**விரிவுரை**

ஐம்பெரும் பூதங்களின் குணமும் அவற்றின் தொழிற்பாட்டையும் இச்செய்யுள் மூலம் விளக்குகின்றார். இதனை நிரல் நிறை அணியெனக் கொள்வர். இங்கு மண்ணின் குணத்தைக் கூற வந்த ஆசிரியர் அதன் தொழிலையும் உடன் கூறினார். இவ்வாறே மற்றைய நீர், தீ, காற்று ஆகாயம் ஆகியவற்றின் குணம் தொழில் இரண்டையும் கூறினார். இங்கு இதன்பொருளை விளக்கும் போது மண், நீர், தீ, கால், வான் ஆகியவற்றினைக் குணமிடத்தும் தொழிலிடத்தும் அவற்றை முன் கூறிப்

பொருள் கொண்டுள்ளேன். அவ்வாறு கொண்டு கூட்டிப் பொருள் கொள்வதால் அவ்வவற்றின் குணமும் தொழிலும் இடர்ப்பாடின்றிப் பொருள் காண முடியும் என்பதோடு கற்போர் உள்ளத்தே ஆழமாகப் பதிந்து விடும் அன்றோ.

மேலும் பூதங்களின் குண இயல்பு இவை என்றும், அவை பிறபொருளோடு கூடித் தொழிற்படும் போது அவற்றின் செயல் இவை என்றும் காட்டப்பட்டது. குணம் தனித்தன்மை. தொழில் பிறவற்றோடு கூடி இயற்றப்படும் விளைவு செயல்.

மண்ணின் குணம் திண்மை-கடினம் என்றும் காட்டப்பட்டது. அதன் தொழிற்பாடு பிறபொருளுடன் நிகழும்போது தாங்குதல் என்பதாம். இதனை வள்ளுவப் பெருந்தகையும் **அகழ்வாரைத் தாங்கும் நிலம் போல** எனக் கூறியிருத்தல் காண்க. நீரின் செயலையும் அதன் இயல்பையும் நாம் அனுபவ ரீதியாகவே காண்கின்றோம். மற்றும் காற்றின் குணத்தையும் தொழிலையும் புறக்கண்ணால் பார்த்தல் இயலாது. ஆயினும் அவையே தொழில் என்பதை ஞானிகளின் சொற்களால் நாம் தெளிகின்றோம். சூரபன்மன் என்னும் அசுரர் தலைவன், இப்பஞ்ச பூதங்களையும் கட்டி ஆண்டான் என்பதையும் அவை செய்த தொழில் களையும் கச்சியப்ப சிவாச்சாரியார் அரசியற்றல் என்னும் படலத்தில் காட்டி நிற்பதைக் காணலாம். இதனை சிவஞான சித்தியார் :

**இரந்திரம் ஆகி வான்தான் இடம் கொடுத்திடும், சலிக்கும்**
**பரந்தவை திரட்டும் கால்தீச் சுட்டுஒன்று வித்தல் பண்ணும்**
**நிரந்தரம் குளிர்ந்து நின்று பதம் செய்யும் நீர், மண்தானும்**
**உரம் தரும் கடினம் ஆகித் தரித்திடும் உணர்ந்து கொள்ளே**

என் ஐம்பூதங்களின் பண்பைக் கூறியவாறு காணலாம். ஆகாயம் இடம் கொடுக்கும் என்பதினால் மேலே காட்டப்பட்ட பூதங்களின் சேர்க்கைக்கும் பரிணாமத்துக்கும் கலத்தலுக்கும் இடம் கொடுத்து அவை தோன்றக் காரணமாயும் நிற்கும். இனி ஆன்மா நடத்தல் இருத்தல் முதலிய தொழிற்பாடுகளைச் செய்யவும் ஆகாயம் இடமளிக்கின்றது. ஒண்கனல் சுட்டு ஒன்றுவிக்கும் என்னும் தொடருக்கு பேரொடுக்க காலத்திலே

இறைவன் தீ வடிவினனாகவும் அத்தன்மைத்தாகவும் விளங்கி சடப் பொருள்களாகிய மாயா காரியப் பொருள்கள் யாவற்றையும் சுட்டெரித்து சாம்பராக்கி முதற்காரணத்தின் கண்ணே ஒடுக்கி அருள்வன். இதனால் சங்காரகாரணன் முதல்வன் என்பதும் பெறப்பட்டது. வண்கால் என்பதால் அதன் இன்றியமையாமையும் காட்டப்பட்டது. உயிர்களின் நிலைப் பாட்டுக்கு இயக்கத்துக்கு இன்றியமையாத பொருள் பிராணவாயு. இக்காற்றின் கொடுப்பனவு வரவு இல்லையெனில் உயிர்கள் வாழ முடியாது. எல்லா உயிர்க்கும் இக்காற்று வேண்டியதே. அதனால்தான் வண்கால் என்றார் என்க. வண்-வள்ளல் தன்மை.

**வெண்பா-10**

**ஐப்புலன்கள் பற்றிய அறிவு கூறியது - தன்மாத்திரைகள்**

**உள்ளபடி மாபூதம் ஓதினோம் உன்தனக்குக்**
**கள்ளமிகும் ஐம்புலனும் கட்டுரைக்கில் - மெள்ளவே**
**ஓசை பரிசம் உருவம் சுவை நாற்றம்**
**ஆசை தரும் ஐம்புலனே ஆம்**

**இதன்பொருள்**

**உள்ளபடி மாபூதம் ஓதினோம்** - இதற்கு முன்பாக ஐம்பெரும் பூதங்களின் வரலாற்றினைச் சிவாகமங்களில் கூறியவாறு உள்ளபடி உள்ளவாறு எடுத்துரைத்தோம், **உன்தனக்கு** - இனிமேல் உன்றனுக்கு, **கள்ளமிகும் ஐம்புலனும்** - வஞ்சனை மிக்கு இருக்கின்ற ஐந்து புலன்களையும் (கள்ள மிகுதியால் கரவுடைத்தாகிய ஐந்து புலன்களினது இயல்பை) **கட்டுரைக்கில்** - சுட்டி எடுத்துரைப்பதாயின், **மெள்ளவே**- மெள்ள நிதானமாகச் சொல்லுமிடத்து அவை, **ஓசை**-சத்தம் (ஒலி), **பரிசம்** - ஊறு, **உருவம்** - உரு ஒளி, **சுவை** - ரசம், **நாற்றம்** - மணம்-கந்தம் என்பனவாகும், **ஆசைதரும் ஐம்புலனே ஆம்** - இவை ஆன்மாவின் ஆசையை மிகுவிப்பன.

**கருத்துரை**

இதற்கு முன்பாக ஐம்பெரும் பூதங்களின் வரலாற்றினை சிவாக மங்களில் கூறியவாறு உள்ளபடி உள்ளவாறு எடுத்துரைத்தோம்.

இனிமேல் உன்றனுக்கு கள்ளமிகுதியால் கரவுடைத்தாகிய ஐந்து புலன்களினது இயல்பைச் சுட்டி உரைப்ப தாயின் மெள்ள நிதானமாகச் சொல்லுமிடத்து அவை ஐந்தும் சப்தம் பரிசம் உருவம் ரசம், மணம் என்பனவாகும். இவை ஐந்தும் ஆன்மாவின் ஆசையை மிகுவிப்பன.

**விரிவுரை**

இதுவரையும் 36 தத்துவங்களில் கீழ்நிலைக்கண் உள்ள முதல் ஐந்து தத்துவங்களான மண் புனல் கனல் கால் விண் ஆகியவற்றின் இயல்புகளையும் குணங்களையும், தொழில்களையும் அவற்றின் செய்திகளை எல்லாம் எடுத்துரைத்தார். இப்பூதங்களுக்கும் உயிர் களுக்கும் உள்ள தொடர்பினையும் எடுத்துக் காட்டினார். எனவே இப்பூதங்களை நாம் உணர்வு பூர்வமாகவோ காட்சிபூர்வமாகவோ அறிகின்றோம். இம்மாபூதங்களுக்கு அடுத்தபடியாக வருவன தன் மாத்திரைகள். இவை பற்றிய செய்தியைக் கூறத் தொடங்கும் ஆசிரியர் செய்யுளில் உள்ளபடி மாபூதம் ஓதினோம் எனக் கூறி இனிமேல் இவற்றிற்கு அடுத்த நிலையில் இருக்கும் ஐந்து தன்மாத்திரைகள் பற்றிய செய்தியையே குறிப்பிட்டுச் சொல்லுகின்றார்.

இவை தமிழில் சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் எனவும் வடமொழியில் சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் எனவும் அழைக்கப் பெறுகின்றன. இவை மாபூதம் தோன்றுவதற்கான சூக்கும பூதங்கள், தத்துவங்கள் எனலாம். மண் முதலான ஐந்து மாபூதங்களும், தூலபூதங்கள் என வழங்கப்பெறும். இங்கு ஆசிரியர் கீழ் நிலையில் இருந்து செல்வதால் 6,7,8,9,10 தத்துவங்கள் தான் தன்மாத்திரைகள் எனப்படும். இவை அடியில் இருந்துதான் ஒடுக்க முறைமையில் இங்கு ஆசிரியரால் தரப்படுகின்றன. எனவே, அந்த நடைமுறை கொண்டு அவ்வாறு கூறினேன். இத்தன்மாத்திரைகளில் இருந்தே ஐம்பெரும் பூதங்களும் தோன்றுவன ஆகையால் அப்பெயரால் அழைக்கப்பெற்றன.

இத்தன்மாத்திரைகள் நுட்பப் பொருட்கள். பூதங்கள் பருமையானவை இதனால் பூதங்களைத் தூலபூதங்கள் என அழைப்பர். தூலம்-வடிவம் என்பதால் அவ்வாறு கொள்ளப்பட்டன. ஆசிரியர் இந்த ஐம்புலன்களைக்

கூறுகின்ற போது கள்ளமிகும் ஐம்புலனும் எனவும் ஆசை தரும் ஐம்புலனே எனவும் கூறியுள்ளமை காண்க. இங்கு செய்யுளில் ஆசிரியரால் எடுத்துக் காட்டப்பட்ட புலன்கள் ஓசை பரிசம் உருவம் சுவை கந்தம் என்பன.

ஆயினும் இவை ஐந்தும் மெய், வாய், கண், மூக்குச் செவி எனும் உறுப்புகளில் நுட்பமாய் விளங்கும். இவைகள் ஐந்து பொறிகள் (ஐம்பொறி) எனப்படுபவை. எனவே தன் மாத்திரைகளைப் பற்றிக் கூறப் புகுந்த ஆசிரியர் வாளா பொறிகளைக் கூறாது அவற்றின் தொழிற்பாடுகளான புலனில் வைத்தார். மாத்திரை எனக் கூற வேண்டியதன் அவசியம் என்ன? இவ்வாசிரியர் விளக்கத்திற்கு ஏற்றவாறு பொருளை முதல் கூறி அவற்றின் பின்னராக அது பற்றிய செய்தியைச் சொல்லிச் சொல்லும் முறைமை கொண்டு நூலை யாத்தமை தெரிகின்றது. நமக்கு நன்கு தெரிந்தவை ஐந்து புலன்களாகிய தாத்துவிகங்கள்.

ஆசிரியர் சிறப்பு நிலையில் விளங்கி நிற்கும் குணங்களாகிய அப்புலன்களை எடுத்துக(கூறி) காட்டி அவற்றிற்கு மூலமாய் பொதுமை யில் விளங்குவது நுட்பப் பொருளாய் நிற்கும் நிலைகள் உள எனவும் அவையே தன் மாத்திரை எனவும் குறிப்பாய் உணர்த்தினார். அதாவது தாத்துவிகங்கள் அழிவன என்பதும், தத்துவங்கள் ஆகிய காரண நிலையில் தன்மாத்திரை சூக்கும நிலையில் இருந்து அறிவைத் தருவன ஆகையால் தன் மாத்திரைகள் புலனறிவுகள் அல்ல என்பதும் தூலமாய்ப் புலப்படுவன வல்ல வென்பதும் சூக்கும நிலையில் இருந்து உயிரின் அனுபவத்திற்கு உதவி நிற்கும் கருவிகள் என்பதும் அவையே தத்துவங்கள் எனவும் காணவேண்டும்.

மேலும் இப்புலன்கள் அப்பொருளில் இருந்து நுட்பமாய் வெளி வருதலால் அப்புலன்கள் வரும் பொறிகளை இது ஆகுபெயரால் உணர்த்திற்று எனவும் கொள்ள இடம் உண்டு. எவ்வாறாயினும் இங்கு ஆசிரியர் கூற எடுத்துக் கொண்ட பொருள் தன் மாத்திரையே அன்றி அவற்றால் வரும் தாத்துவிகங்களை அல்ல என்பது தெளிவு.

மேலும் மணிவாசகர் மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய எனவும் கூறினார். இனி ஆசிரியர் கள்ளப்புலன் எனக் கூறி அது ஆன்மாவின் அறிவை மயக்கி நின்று அறிவை மறைப்பன வாகையால் கள்ளப்புலன் என்றார். இதனையே திருவாசகத்தில் மாணிக்கவாசக சுவாமிகள் கள்ளப்புலக் குரம்பைக் கட்டழிக்க வல்லானே எனக் கூறினார். இப்புலன்கள் மனதுக்கு இசைவாகக் தொழிற்படுவதால் அவை உலக இன்பம் நாடிச் செல்லுகின்றன. அதனை அடைவதற்கான தொழிற்பாட்டில் பாவங்களைப் புரிய வைக்கின்றன.

இப்பாவங்கள் துன்பத்திற்குள் தள்ளி விடுகின்றன. பிறப்புகள் தொடருகின்றன. எனவே தான் இப்புலன்களை அடக்கி ஆள வேண்டும் என்பர். சுவை ஒளி உளறு ஓசை நாற்றம் என்ற ஐந்தின் வகை தெரிவான் கட்டே உலகு என்பர் வள்ளுவப் பெருந்தகை.

இந்தப் புலன்களே மனதிற்கு ஆசைகளைத் தூண்டி விளைவித்துத் துன்பத்திற்குக் காரணமாக நிற்பதால் ஆசை தரும் ஐம்புலன் என்றார். இதனையே ஆசை அறுமின் எனப் பெரியோர் கூறுவர். இங்கும் இத்தன்மாத்திரைகளையும் அதன் காரியமான புலன்களையும் விட்டுவிடுதலே உயிரின் உய்திக்கு வரும் உண்மை விளக்கம் என்பதனையும் ஆசிரியர் உய்த்தணர வைத்தார் எனலாம்.

இனி ஆசிரியர் கட்டுரைக்கில் என்னும் தொடரைக் கூறியுள்ளார். வாளா உரைக்கில் எனக் கூறாது கட்டு உரைக்கில் எனக் கூறியமையால் இப்பொறிகள் புலன்களுடனான உயிரின் தொடர்பையும் அக்கட்டு பாச மெனப் படுதலாலும், பாசம் மாயையின் தொழிற்பாடு ஆகையாலும் இங்கும் மும்மலங்களில் ஒன்றான மாயை பற்றியதே என்பதையும் உணர வைத்தார். ஆம் எனக் கூறியதனால் புலன்களே பொறிகளுக்கு ஆன தாத்துவிகங்கள் ஆகையாலும் தத்துவத்தில் இருந்தே தாத்துவிகங்கள் காரியமாக வருவதாலும் காரியப் பொருளுக்குக் காரணமான தத்துவங்களே இங்கு கூறப் பெறுவது எனக் கொள்ளுதல் சாலப்பொருந்தும். ஐம்பூதங்களையும் கூறிய ஆசிரியர் அதன் தோற்றத்திற்கு காரியத்திற்குக் காரணமான தன் மாத்திரைகள் ஆகிய

மெய் வாய் கண் மூக்கு செவி என்பனவற்றையே இங்கு கூற விழைந்தார் என்பது வெளிப்படை.

மேலும் ஐந்து பூதங்கள் பற்றிச் சொல்லிய போது ஆன்மா உறுகாயம் ஆம் எனக் கூறிய ஆசிரியர் இத்தன்மாத்திரைகள் பற்றிச் சொல்லும்போது ஆசைதரும் ஐம்புலனே ஆம் எனக்கூறியிருத்தல் சிந்திக்கற்பாலது. இதனால் இத்தத்துவங்களுக்கும் உயிர்க்கும் உள்ள தொடர்புகளையும் காட்டியிருத்தல் காணலாம்.

இத்தன்மாத்திரைகள் ஒவ்வொன்றும் தத்தம் அளவில் நின்று அவற்றின் தன்மையைப் புலப்படுத்தி நிற்கும். இவற்றுள் சத்தம் தன்னளவிலே நிற்பது. சத்தத்தை தன் அளவில் கொண்டு பரிச அளவில் நிற்பது பரிசம். சத்தத்தையும் பரிசத்தையும் தனது குண அளவாகக் கொண்டு நிற்பது உருவம். சத்தத்தையும் பரிசத்தையும் உருவத்தையும் தன் குண அளவாகக் கொண்டு நிற்பது இரசம். சத்தத்தையும் பரிசத்தையும் உருவத்தையும் இரசத்தையும் தன் குண அளவாகக் கொண்டு நிற்பது கந்தம் எனப்படும்.

இவ்வைந்து பூதங்களுக்கும் ஐந்து தன்மாத்திரைகளுக்கும் இடையே உள்ள சம்பந்தம் தொடர்புகள் யாதேன யாம் சிந்திப்போமேயானால், சத்தத்தின் விளைவு இடம் - காரியம் ஆகிய ஆகாயத்தில் இருப்பது சத்தம் என்னும் குணம். பரிசத்தின் விளைவு இடம், காரியம் ஆகிய வாயுவில் இருப்பது, சத்தம் பரிசம் என்னும் இரு குணங்கள். உருவத்தின் விளைவு இடம், காரியம் ஆகிய தீயில் இருப்பது, சத்தம் பரிசம் உருவம் ஆகிய மூன்று குணங்கள். இரசத்தின் விளைவு இடம் காரியம் ஆகிய நீரில் இருப்பது சத்தம் பரிசம் உருவம் இரசம் ஆகிய நான்கு குணங்கள். கந்தத்தின் விளைவு இடம் காரியம் ஆகிய நிலத்தில் இருப்பது, சத்தமும், பரிசமும், உருவமும் இரசமும் கந்தமும் ஆகிய ஐந்து குணங்கள். இங்கே தன்மாத்திரைகளின் குணிகளும், குணங்களும் எடுத்துக் காட்டப்பட்டன. சைவ ஆகமங்களிலே ஒரு பொருளே குணம் என்றும் குணி என்றும் இருநிலைகளை விளக்கும். குணங்களின் செறிவே குணி எனப்படும். மாத்திரை என்பது அளவு.

எனவே தன்மாத்திரை என்பது தன் அளவில் உள்ள குணி எனப் பொருள் படும். அவற்றின் காரியப் பொருளே குணம் எனப்படும்.

எனவே பொறிகளாகிய குணிகளின் காரணப் பொருளில் தோன்றியதே புலன்களாகிய குணங்கள் என்பது பெறப்பட்டன. அப்பொறிகளே தன்மாத்திரைகள் என்பது பெறப்பட்டன. (ஒரு பொருளே குணம் எனவும் குணி எனவும் ஆகிய இருநிலைகள் என்பதைக் குறிக்கும். குணங்களின் செறிவே குணி என்பதால் இது நிறுவப்பட்டது.

மேலும் புலன்களுக்கும் பொறிகளுக்கும் இடையே சிறிது வேற்றுமைகள் உள. ஐம்பொறிகளுக்கும் குணமாக இருப்பது ஐம்புலன்கள். ஐம்பொறிகளுக்கும் உரிய குணங்களை விடய தன்மாத்திரையெனவும் கூறுவர். பூததன்மாத்திரை பொருள் விடய தன்மாத்திரை. பொருள் விடய தன் மாத்திரை பொறி பொருள்கள் மாத்திரை. இவை வேறுபாடு

**ஓசை நற்பரிச ரூபம் இரத கந்தங்கள் என்று**
**பேசுமாத்திரைகள் ஐந்தும் பிறக்கும் பூதாதிகத்தின்**
**நேச இந்திரியங்கட்கு நிகழ் அறிவு இதனாற் காண்டும்**
**ஆசை சேர் மனாதி தன்மாத்திரை புரியட்டகம் தான்**

**சாற்றிய பஞ்ச தன்மாத்திரைகளின் சத்தம் முன்னாற்**
**தோற்றும் வான், வளி, தீ, நீர், மண் தொடக்கியே ஒன்று அங்கு.**
**ஏற்றமாம் ஓசை ஆதி இருங்குணம் இசைந்து நிற்கும்**
**ஆற்றவே விடயம் பூதம் அங்க அங்கி பாவத்து ஆமே.**

எனவரும் சிவஞான சித்தியாரில் வருவனவும் ஒப்புக் காண்க. இதனை திருமுறையில் மாணிக்கவாசகப் பெருமான்

**பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி**
**நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி**
**தீயிடை மூன்றாய் திகழ்ந்தாய் போற்றி**
**வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி**
**வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி**

எனவும் தன்மாத்திரைகள் பற்றியும் அவற்றின் உதயத்தின் தன்மையும் காட்டியவாறு காண்க.

## வெண்பா 11

### அறிவுப் பொறிகள் – அறிகருவிகள் – 5 (ஞானேந்திரியம்)

**ஞானேந் திரியங்கள் நன்றா உரைக்கக் கேள்**
**ஊனம் மிகு பூதம் உற்று இடமா - ஈனம் ஆம்**
**சத்த ஆதியை அறியும் தானம் செவி தோல் கண்**
**அத்தாலு மூக்கு என்று அறி**

## இதன் பொருள்.

**ஞானேந்திரியங்கள் நன்றா உரைக்கக் கேள்** - அறிவுப் பொறி (அறிகருவிகள்) களின் தன்மைகளை (இயல்பு) நல்லவாறாக கூறுவேன் கேட்பாயாக, **ஊனமிகு பூதம் உற்று இடமாய்** - அவை தாமச குணம் மிக்க தன்மாத்திரைகளை இடமாகக் கொண்டு, **ஈனமாம் சத்தாதியை அறியும்** - நீழ்மை மிக்க சத்தம் முதலிய புலன்களை அறியும் (இழிமை), **தானம் செவி தோல் கண் அத்தாலு மூக்கு என்று அறி** - அவை தொழிற்படும் இடங்கள் காது தோல் கண் நாக்கு மூக்கு என்பன. இதனை நீ நன்றாக அறிந்துகொள்.

## கருத்துரை

அறிவுப் பொறிகளின் தன்மைகளை (இயல்பு) நன்றாக நல்லவாறாகக் கூறுவேன் கேட்பாயாக. அவை, தாமச குணம் மிக்க தன்மாத்திரைகளை இடமாகக் கொண்டு இழிதகைமை உடைய சத்தம் முதலிய புலன்களை அறியும். அவை தொழிற்படும் இடங்கள் காது தோல் கண் நாக்கு மூக்கு என்பன. இதனை நீ நன்கு அறிவாயாக. (அத்தாலு - அத் + தாலு. அத்து சாரியை தாலு - நாக்கு (துதித்திடல் வேண்டும் தாலு - கந்தபுராணம்)

## விரிவுரை

இங்கு ஆசிரியர் ஞனேந்திரியங்கள் என்னும் 11 - 15 வது தத்துவங்கள் (கீழிருந்து) கூறவந்தார். இவை மெய் வாய் கண் மூக்கு செவி என்பன. மெய் என்பது சுரோத்திரம் உறுவதாகிய தோலினைக் குறிக்கும். வாய் என்பது சுவைத்து அறிவதாகிய சிங்நுவையைக் குறிக்கும். கண் என்பது

பார்த்து அறிவதாகிய சட்சுவை குறிக்கும். செவி என்பது கேட்டு அறிவதாகிய செவிப்பறையைக் குறிக்கும். மூக்கு என்பது மணந்து றிவதாகிய கிராணத்தைக் குறிக்கும்.

இந்த ஞானேந்திரியங்கள் சூக்கும பூதங்கள் எனப்படும் தன்மாத்திரைகளைக் கொண்டு அறிவன. இந்த ஐந்து உறுப்புகளுக்கும் உள்ளே இருந்து அறிகின்ற ஆற்றல்களே, இந்திரியங்களுக்கு இடமான உறுப்புகள் ஆகும். இதனை தருக்க சங்கிரகம் என்னும் நூலிலே விரிவாகக் காணலாம். ஒவ்வொரு புற உறுப்புகளுக்கும் உள்ளே ஒவ்வொரு சூக்கும உறுப்பு உளது. அதுவே புலன்களைக் கூறும். கண்ணிலே இருப்பது சட்சு என்றும் மூக்கிலே இருப்பது கிராணம் என்றும் வாயில் இருப்பது சிங்குவை என்றும் தோலில் இருப்பது சுரோத்திரம் என்றும், காதிலே இருப்பது துவக்கு என்றும் கூறுவர். நாக்கிலே இருக்கும் சுவை அறிகருவியாகிய சிங்குவை நாக்கின் நுனியிலே இருப்பது என்றும், ஒளி அறிகருவியாகிய சட்சு கண்ணின் மணியில் இருப்ப தாகவும், செவியிலே இருக்கும் அறிகருவியாகிய துவக்கு, செவியில் உள்பறை என்றும் நாற்றத்தின் அறிகருவியாகிய கிராணம் மூக்கின் நுனியில் இருப்பது எனவும், ஊறு என்னும் அறிகருவியாகிய துவக்கு தோலின் அடியில் இருப்பது எனவும். அறிஞர் கூறுவர். இவ்வாறு இருக்கும் இந்திரியம் தன்மாத்திரை உறுப்பு என்ற இம்மூன்றையும் இணைத்து அடுத்து வரும் செய்யுள்களில் காண்போம். இங்கு ஊனம் மிகு பூதம் என்றார். அதன் இழிவுத்தன்மையை நோக்கியே. மேலும் ஈனம் மிகு தோல் என்பது. இழிவான சத்தம் முதலியன என்றார். இங்கே இன்னும் கூறுவதாயின் அறிவில் இரண்டும் வகையுண்டு. அவை பொது, சிறப்பு என்பன. மெய்வாய் கண் மூக்கு செவி என்பன பொதுவகையால் அறியும் அறிவு. அவை சிறப்பாக நுண்ணிதாக எதையும் அறியும். இவை இவ்வைந்திந்திரிய சுவை ஒளி ஊறு. ஓசை நாற்றம் என்பனவற்றைத் தனித்தனியே அறியும். இதுவே ஞானேந்திரியங்களால், புலன்களைப் பொதுவகையால் உணரும் என்றும் சொல்லலாம். பொதுவகையால் உணர்வது நிருவிகற்பம். வேறுபாடு இன்மை. அதாவது குணம் தொழில் பெயர் என்பன முதலிய வேறுபாடுகள் தெரியாமல் இஃது ஒன்று என்ற அளவில் மட்டும் அறிவதால் அதனை நிருவிகற்பம் என்பர். இனி ஒரு பொருளின் வேறுபாடுகள் தெரிந்து இஃது இன்ன பொருள் எனச்

சிறப்பாக அறிதல். இதனைச் சவிகற்பம் என்பர். மெய் வாய் கண் மூக்கு செவி என்பனவற்றால் பொதுத்தன்மையை அறிவது பொதுவகையால் அறிதல். சுரோத்திரம், துவக்கு, சட்சு, சிங்குவை, கிராணம் என்பன வற்றால் பொறிகளின் பெயர் குணம் தொழில் என்பனவற்றைச் சிறப்பாக அறிதல். சிறப்பு வகை. நாக்கு நுனியில் இருக்கும் சிங்குவை, புளிப்பு, இனிப்பு, துவர்ப்பு, கசப்பு போன்ற சுவைகளை வேறுபடுத்தி அறிவது சிறப்பு வகை எனலாம். எனவே பொறிவழியாகிய அதன் உள்ளே பொருளைச் சிறப்பு வகையால் இனம் கண்டு பெயர் தொழில் குணம் முதலியனவற்றை அறிவதே ஞானேந்திரியம் எனக் கொள்ளுதல் வேண்டும். ஆயினும், ஞானேந்திரியங்கள் ஐந்து எனக் காட்டப்படுவ தலால் பொது வகையாலும், சிறப்பு வகையாலும் சுட்டியுரைக்கப்படும். இவை ஐந்தின் தொழிற்பாடுகளைக் கொண்டதே ஞானேந்திரியம் எனக் கொள்க.

## வெண்பா 12

### செவி தோல் கண் அறியும் விதம்

**வான் இடமாய் நின்று செவி மன்னும் ஒலியதனை**
**ஈனம் மிகும் தோல் கால் இடமாக - ஊனப்**
**பரிசந்தனை அறியும் பார்வையில் கண் அங்கி**
**விரவி உருவம் காணுமே.**

## இதன் பொருள்

வான் இடமாய் நின்று செவி மன்னும் ஒலியதனை - செவியென்னும் அறிகருவி ஆகாயத்தை இடமாகக் கொண்டு ஒலியென்னும் புலனை அறிந்து வரும், ஈனம் மிகும் தோல் கால் இடமாக ஊனப் பரிசம் தனை அறியும் - இழிவு மிக்க தோல் என்னும் அறிகருவி காற்றினை இடமாகக் கொண்டு குறைந்த ஊறு என்னும் புலனை அறியும், பார்வையில் கண் அங்கி விரவி உருவம் காணுமே - கண் என்னும் அறிகருவி தீயினை இடமாகக் கொண்டு ஒளி (உருவம்) என்னும் புலனை அறிந்து வரும்.

## வெண்பா 13

### நாக்கு மூக்கு அறியும் விதம்

**நன்றாக நீர் இடமா நா இரதம் தான் அறியும்**
**பொன்றா மணம் மூக்குப் பூ இடமா - நின்று அறியும்**
**என்று ஓதும் அன்றே இறை ஆகமம் இதனை**
**வென்றார் சென்றார் இன்ப வீடு**

## இதன் பொருள்

**நன்றாக நீர் இடமா நா இரதம் தான் அறியும்** - நாக்கு என்னும் அறிகருவி நீரினை இடமாகக் கொண்டு சுவை என்னும் புலனை அறியும், **பொன்றா மணம் மூக்குப் பூ இடமா நின்று அறியும்** - மூக்கு என்னும் அறிகருவி நிலத்தை இடமாகக் கொண்டு மணம் என்னும் புலனை அறியும், **என்று ஓதும் அன்றே இறை ஆகமம்** - இவ்வாறு உள்ளன ஞானேந்திரியங்கள் எனச் சிவாகமங்கள் அநாதியிலே கூறியிருக்கின்றன, **இதனை வென்றார்** - இந்த ஆசை தரு ஐம்புலன்களையும் தமது மன அடகத்தால் தடுத்து வென்றவர்கள், **சென்றார் இன்ப வீடு** - பேரின்ப வீடாகிய முத்தியின்பத்தை அடைவர். அடைந்தவர் ஆவர்.

## கருத்துரை

செவியென்னும் அறிகருவி ஆகாயத்தை இடமாகக் கொண்டு ஒலி என்னும் புலனை அறிந்து வரும். இழிவு மிக்க தோல் என்னும் அறிகருவி காற்றினை இடமாகக் கொண்டு குறைவான ஊறு என்னும் புலனை அறிந்து வரும். கண் என்னும் அறிகருவி தீயினை இடமாகக் கொண்டு ஒளி என்னும் புலனை அறிந்து வரும். நாக்கு என்னும் அறிகருவி நீரினை இடமாகக் கொண்டு சுவை என்னும் புல்னை அறியும். மூக்கு என்னும் அறிகருவி நிலத்தை இடமாகக் கொண்டு மணம் என்னும் புலனை அறியும். இவ்வாறு உள்ள ஞானேந்திரியங்கள் உள்ளன என அநாதியிலே சிவாகமங்கள் கூறியிருக்கின்றன. இந்த ஐம்புலன்களையும் தமது மன அடக்கத்தால் தடுத்து வென்றவர்கள் பேரின்ப வீடாகிய முத்தியின்பத்தை அடைவர். உண்மையே.

**விரிவுரை**

இங்கு 12ம் செய்யுள் தொடர்ச்சியாக ஐம்புலன்களையும், அவற்றை இடமாகக் கொண்டிருக்கும் பூதங்களையும் அவை அறிகின்ற அறிவுப் பொருள்களையும் ஒருங்கே கூறி நிற்றலால் அவை இரண்டையும் இணைத்துப் பொருள் தந்துளேன். இவற்றில் 11-ம் செய்யுளும் ஞானேந்திரிங்களைப் பற்றிக் கூறியிருப்பினும், அவை அவற்றின் இயல்பினையும் அவற்றின் தானங்களையும் கூறின. அவற்றைக் கருத்துரையில் கூறியிருப்பதால் மீட்டும் விளக்கவேண்டிதில்லை. பொருள்கள் வெளிப்படையாக விளங்குகின்றன.

எனினும் ஒன்றை மட்டும் சொல்ல வேண்டி உளது. இந்த ஞானேந்திரியங்களின் உண்மைக் குணத்தையும் தொழிலையும், பெயரினையும் கொண்டு புலனை அறிவன நுட்பமான உள் இந்திரியங்களே. அவை சுரோத்திரம் துவக்கு சட்சு சிங்நுவை கிராணம் என வடமொழி கூறும் ஆசிரியர் அவற்றையே ஞானேந்திரியங்களாகக் கொண்டாரெனினும் விளங்குதற்கு அருமை நோக்கி புறக்கருவிகளையே அகக்கருவிகளாகவும் கொண்டு ஞானேந்திரியம் என்றார். ஒவ்வொரு புற இந்திரியங்களுக்கும் அதிநுட்ப அறிகருவிகளாக நுண்கருவிகள், அவ்வுறுப்புகளின் உள்ளே உள. அவையே உண்மையில் இப்புலன்களை அறிகின்றன எனலாம். காது கேட்கவில்லை எனக் கூறுவோனுக்கு வெளிப்புறக் கருவியாகிய காதில் ஊனம் தெரிவதில்லை. அவ்வாறே கண்ணுமாகும். எனவே புலன் அறிவைப் பெறுவது அதன் அதன் உள்ளே இருக்கும் கண்ணுக்குப் புலனாகாத அகக்கருவிகளே ஆகும். அவற்றையே யாம் ஞானேந்திரியங்கள் எனக் கொள்ளல் வேண்டும். இனி மனம் என்னும் கருவியே இந்த ஞானேந்திரியங்களை ஏவித் தொழிற்படுத்துகின்றது. இதனை ஆசை தரும் ஐம்புலனேயாம் எனவும் கள்ளமிகு ஐம்புலனும் ஆம் என முன்பும் கூறினார். இங்கே இதனை வென்றார் சென்றார் இன்ப வீடு எனக் கூறினார். எனவே புலனடக்கம் செய்தவர்கள் உடையவர்கள் வீடு பெறுவர் என்பதாம், புலன்களை வென்றுவிட்டால் இன்ப துன்பம் ஏற்படாது. இதனால், உயிர் வெறுப்பு விருப்பு அற்ற தன்மை அடைகின்றது. விருப்பு வெறுப்பு அற்ற தன்மையே இறைவன் திருவடியைக் காணும் நெறிக்கு எம்மை இட்டுச் செல்கின்றது. அதன் பயன் இன்ப வீடு - முத்தி இன்பம் தானே.

புலனடக்கம் என்பது ஆசையை அடக்குதலும், அவ்வாசைக்குக் காரணமான மனதைப் புலன்வழிச் செல்லவிடாது தடுத்தலும், அதனை அடக்கி வெல்லுதலுமாம். இதனை வள்ளுவர் **பொறிவாயில் ஐந்தவித்தான்** எனவும்.

**சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்றைந்தின்**
**வகை தெரிவான் கட்டே உலகு**

எனவும் காட்டி ஐம்புலன் அடக்கம் எத்துணை வேண்டுவது என்பதைக் காட்டியுள்ளார். அப்புலன்களை வென்றார், சிவபுரத்தை வென்றவர் ஆவர். இதனையே வென்றார், சென்றார், இன்ப வீடு எனக் கூறியிருத்தல் காணலாம். இனி அறியும் என்றும் ஓதும் அன்றே இறை ஆகமம் என்பதினால், சிவாகமங்கள் சொல்லிய உண்மை இது என்பதையும் இதுவே உண்மை விளக்கம் என்பதையும் காட்டியவாறு காண்க.

மேலும் ஈனம் மிகும் தோல் எனவும் ஊனப் பரிசம் தனை அறியும் எனத் தோலுக்கு அடைகொடுத்துக் கூறியதனால் தோலின் இழிவும், அதனால் வரும் ஊறுவின் குறைபாடும் கூறினார்.

செய்யுளில் வான் என்றும் கால் என்றும் அங்கி என்றும் இங்கே இடமாக விரவி என்னும் சொற்கள் கொண்டு அவை தன்மாத்திரைகள் என்பதனைத் தெளிய வைத்தவாறும் அறியலாம். இந்தப் பொறி களையும் அதனால் வரும் புலனறிவுகளையும் நீக்குதலே உண்மை விளக்கம். இதனைத் துகளறு போதம்.

**பூதம் இடமாய் பொருந்தும் புலன்கள்**
**நாதன் அருளாலே நாடி அவை - ஏதம் என**
**தத்தம் உருஉணர தான் அகலும் அப்போதே**
**சத்த முதல் ஆதிவிடுந் தான்** எனத் தருகின்றது.

இதனால் இவற்றைத் தவறான - குற்றம் என உணர்ந்து தலைப் படும்போது இறை அருளும் தலைப்படும். அதனால் இவற்றை விட்டு நீங்கிய பயன் அடையலாம். நாதன் அருளாலே என்பதினால் இறைவன் குருவாக வந்து அருளுவான் என்பது பெறப்பட்டது. இதனையே உண்மை விளக்கத்தில் நூலாசிரியர் வென்றார் சென்றார் இன்ப வீடு எனச் சுருங்கச் சொல்லிச் சாதனையையும் பயனையும் கூறியவாறு உணரலாம் அன்றோ.

இனி, ஞானம் என்பது அறிவு, அது அனுபவித்து அறிய வேண்டிய ஒன்று. கண், காது, மூக்கு, வாய், மெய், என்பன எந்த ஒரு பொருளையும் கண்டு கேட்டு உற்று ஆகிய இவைகளை அழுந்தி அறிவதில்லை. ஆயினும் அந்த அறிவைப் பெறுதற்குத் துணை செய்கின்றது எனலாம். காற்றிலே மிதந்து வரும் ஒலியை இப்புறக் காதுகள் வாங்குகின்றன. இவை தமது உணர்வுகளை, காதின் உள்ளே இருக்கும் செவிப்பறை என்னும் உட்கருவிக்குச் செலுத்துகின்றது. இந்த செவிப்பறையே மனதிற்கு சத்த உணர்வைக் கொண்டு செலுத்துகின்றது. எனவே அந்த செவிப்பறை என்னும் அதிநுண்கருவி அறிவைப் பெறுகின்றது. பெறவைக்கின்றது. இவ்வாறே கண்ணிலுள்ள சட்சு என்பதும், மூக்கிலுள்ள கிராணம் என்பதும் நாக்கிலுள்ள சிங்நுவை என்பதும், உடலில் தோல் அடியுள் உள்ள சுரோத்திரம் என்பதும் தெளிவாகின்றது. இவையே, அதிசூக்கும தேகம் ஆகிய இவ்வுட்கருவிகளே உண்மையில் ஞானேந்திரியம் எனலாம். ஆசிரியர் அத்தாலு எனக் கூறியதால் மற்றைய உறுப்புகளும் அதன் உள்ளுறுப்புகள் என்பதும் அதனுள் உள்ள சிங்நுவை முதலிய அக இந்திரியங்களே அறிவினைப் பெறுவதற்குக் காரணமாவதால் அவையே ஞானேந்திரியங்கள் எனக் கொள்ளலாம். இவை மிக நுண்ணிய சூக்கும நிலையில் உடலினுள் இருந்தே அறிவதால் உயிர் அழுந்தி அறியும் அறிவு இதுவே எனக் கொள்க. இது ஆராய்ச்சிக் குரியது என்பதால் இதனை இத்துடன் நிறுத்தி தத்துவ ஆய்வாளர்களுக்கு அவர் ஆய்வுக்கும் சிந்தனைக்கும் விட்டு விடுகின்றேன்.

## வெண்பா 14

### தொழிற்பொறிகள் – கன்மேந்திரியங்கள்

**கண்ணுதல் நூல் ஓதியிடும் கன்மேந் திரியங்கள்**
**எண்ணும் வசனாதிக்கு இடமாக - நண்ணியிடும்**
**வாக்கு பாதம் பாணி மன்னு குதம் உபத்தம்**
**ஆக் கருதும் நாளும் அது**

### இதன் பொருள்

**கண்ணுதல் நூல் ஓதியிடும் கன்மேந்திரியங்கள்** - நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளிய வேதங்கள்

கூறும் கன்மேந்திரியங்கள் என்பன, **எண்ணும் வசனாதிக்கு இடமாக** - எண்ணத்தக்கதான பேசுதல் முதலான ஐந்து தொழில்கள் நடைபெறுதற்கு இடமாக உடலில் அமைந்து, **நண்ணியிடும்** - பொருந்தும், **வாக்கு பாதம் பாணி மன்னும் குதம் உபத்தம் ஆக்கருதும்** - அவ்விடங்கள் (வாக்கு) வாய் (பாதம்) கால், (பாணி) கை (குதம்) எருவாய் (உபத்தம்) கருவாய் என்பனவாகும், **நாளும் அது** - அதன் தன்மையை என்றும் தெரிந்து தெளிவாயாக.

## வெண்பா 15

### தொழிற்பொறிகள் தொழிற்படும் முறைமை

**வாக்கு ஆகாயம் இடமாவந்து வசனிக்கும் கால்**
**போக்காரும் காற்றிடமாய் புல்கி அனல் - ஏற்கும்**
**இடும் கை குதம் நீர் இடமா மலாதி**
**விடும் பார் இடம் உபத்தம் விந்து.**

### இதன் பொருள்

**வாக்கு ஆகாயம் இடமா வந்து வசனிக்கும்** - வாக்கு வாய் என்னும் கன்மேந்திரியம் ஆகாயத்தை இடமாகக் கொண்டு பேசுதல் என்னும் தொழிற்பாட்டைச் செய்யும், **கால் போக்காரும் காற்றிடமாய்** - பாதம் காற்றை இடமாகக் கொண்டு போதல் வருதல் என்னும் தொழிற்பாட்டைச் செய்யும், **புல்கி அனல் ஏற்கும் இடுங்கை** - கை நெருப்பினை இடமாகக் கொண்டு இடுதலையும் ஏற்றலையும் செய்யும், **குதம் நீர் இடமா மலாதி விடும்** - எருவாய், நீரினை இடமாகக் கொண்டு சிறுநீர் மலம் ஆகிய கழிவுப் பொருள்களை நீக்கும், **பார் இடம் உபத்தம் விந்து** - கருவாய் பூமியை இடமாகக் கொண்டு சிற்றின்பப் போக்கான விந்துவை வெளிவிடும்.

### கருத்துரை

நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளிய வேதங்கள் கூறும் கன்மேந்திரியங்கள் என்பன எண்ணத்தக்க பேசுதல் முதலான ஐந்து (மொழி) தொழில்கள் நடை பெறுவதற்கு இடமாக

உடலில் அமைந்து பொருந்தும் அவ்விடங்கள் (வாக்கு) வாய் (பாதம்) கால் (பாணி) கை (குதம்) எருவாய் (உபத்தம்) கருவாய் என்பனவாகும். அதன் தன்மையை என்றும் தெரிந்து தெளிவாயாக. வாக்கு என்னும் கன்மேந்திரியம் ஆகாயத்தை இடமாகக் கொண்டு பேசுதல் என்னும் தொழிற்பாட்டைச் செய்யும். பாதம் காற்றை இடமாகக் கொண்டு போதல் வருதல் என்னும் தொழிற்பாட்டைச் செய்யும். கை நெருப்பினை இடமாகக் கொண்டு இடுதலையும் ஏற்றலையும் செய்யும். எருவாய் நீரினை இடமாகக் கொண்டு சிறுநீர் மலம் ஆகிய கழிவுப் பொருள்களை நீக்கும். கருவாய் பூமியை இடமாகக் கொண்டு சிற்றின்பப் போக்கான விந்துவை வெளிவிடும்.

## விரிவுரை

ஞானேந்திரியங்கள் தோன்றிய பின்னர் கன்மேந்திரியங்கள் தோன்றும். இவை ஐந்து. அவையாவன வாய், கால், கை, கருவாய், எருவாய் என்பன. இதனை வடமொழியில் வாக்கு பாதம் பாணி குதம் உபத்தம் எனக் கூறுவர். இவை செயற்கருவிகள். இது உயிரின் கிரியா சத்தி மாத்திரையை வெளிப்படுத்துவன. ஞானேந்திரியங்கள் உயிரின் ஞானசத்தி மாத்திரையை விளக்கி நிற்பன. இதனாலே இக் கன்மேந்தியங்கள் உயிருக்கு வேண்டப்படுவன. மேலும் இக்கிரியா சக்தி உயிருக்கு ஒன்றாயிருக்க எவ்வாறு ஐந்து எனக் கொள்ளப்படும் என வினவும்போது அச்சத்தி செய்யும் செயல்களாகிய பேசுதல், போதல், கொடுத்தல் வெளிப்படுத்தல், சிற்றின்ப வெளிப்பாடு என்பதால் அவை ஐந்தாகக் கொள்ளப்பட்டன.

இவை தோற்றும் போது வாயின் பின்னதாக காலும் அதன்பின்னர் கையும் இவ்வாறாக மற்றைய (கருவி) கன்மேந்திரியங்கள் ஒன்றன்பின் ஒன்றாகத் தோன்றும்.

இவை உடலில் உள்ள செயற்குதவும் கருவிகளாகையால் இவற்றைத் தொழிற்கருவிகள் எனவும் செயற்கருவிகள் எனவும் அழைப்பர்.

இக்கருவிகள் தொழில்களைச் செய்வதென்பது உடம்பிலுள்ள உறுப்பின் செயல் அனைத்தையும் தன்னகத்தே கொண்டு செயற்படுகின்ற

கருவிகள் இயங்குகின்ற கருவிகள் எனக் கொள்ளப்படும். கையென்னும் கருவி ஏற்றலும் இடுதலும் ஆகியவற்றைச் செய்யும். அவ்வாறு இல்லாமல் காலை நீட்டுதல் மடக்குதல் தலையை அசைத்தல் கண்வெட்டுதல் புருவம் நெரித்தல் வளைதல் வாயை அசைத்தல் மெல்லுதல் ஆகிய இவற்றையும் அக்கையின் செயற்பாடுகள் என்பர். அவ்வாறு கொள்ளுதற்குக் குரிய காரணத்ததை சிவஞானமுனிவர் தனது பாடியத்தில் பின்வருமாறு கூறுவர்,

புருவ நெரித்தன் முதலியன பாணியின் தொழிலாகிய இடுத லேற்றிலின் வகையாயடங்குதலின், இந்திரியங்கள் உடலெங்கும் வியாபகமெனக் கோடலின் பாணி இந்திரியம் புருவ நெரித்தல் முதலிய தொழில்களைச் செய்யும். கால் அவ்வுறுப்புக்களை அதிட்டி நின்று செய்யுமெனக் கொள்க. பாணி முதலிய இந்திரியங்கள் ஏனை யுறுப்புக்களையும் அதிட்டிக்குமாயினும் பாணி முதலியவற்றிற்கு விஷேட வதிட்டானமாதல் பற்றி பாணி முதலிய பெயர் பெற்றனவெனக் கொள்க எனக் கூறுவர்.

எருவாய் என மலக்கழிவு வாசலைக் கூறினாலும், அது இந்த உடம்பினில் உள்ள பிற வெளிவிடும் இடங்களான யாவற்றையும் குறித்து நிற்றல் காணலாம். அவையாவன மலசலம் கழித்தல், எச்சில் துப்புதல், மூக்குச் சிந்துதல், வியர்வை வெளியேற்றுதல் முதலியன எல்லாம் எருவாய்த் தானத்தின் செயற்பாடுகள் எனக் கொள்ளலாம். கருவாய் என்னும் உறுப்பும், கழித்தலைத் தானே செய்கின்றது. எனவே, அதனை வேறுபடுத்திக் கூற வேண்டுவதேன் என வினவின் அவை இரண்டின் தொழிற்பாடுகளில் வேறுபாடுகள் காணப்படும் ஆகலான். எருவாயின் தொழிற்பாட்டை நாம் கட்டுப்படுத்த நினைக்கின்றோம் எனக் கொள்ளுமிடத்து அதனால் உடலுக்குத் துன்பமும் நோயும் நேருவதை நாம் காணலாம். சில வேளைகளில் அதனால் மரணம் சம்பவித்தலும் உண்டு. எனவே அதனை அடக்குதல் என்பது அதன் செயல்பாட்டைச் செயற்கை வழிக் கட்டுப்படுத்தலே என்பது. அதன் உண்மைத் தொழிற்பாடு எதுவென உணரலாம். அதுபோல கருவாய் என்னும் கருவியின் தொழிற்பாடு விந்து விடுதல். அது சிற்றின்ப வழியைக்

காட்டுதல் எனலாம். இத்தகைய சுக்கிலத்தை அடக்கி விந்துவை அடக்கிய வழி உடலுக்கு நன்மையும், உய்திக்கு வழியும் பிறக்கின்றது. இதனால், வெளியேற்றுதல் என்பதினால் வரும் நன்மையும் உளவே என்பதானால் கருவாய் விந்துவை வெளியேற்றும் என்பதும் அது இனப் பெருக்கத்திற்கான தொழிலைப் புரிகின்றது என்பதும் சிறப்பெனக் கொள்ளலாம். இதுவே இக்கன்மேந்திரியங்களின் தொழிற்பாடுகள் ஒன்று உண்டு எனக் கொள்வதிலும் அவை செய்யும் சிறப்புத் தொழில்களே, அவற்றிற்குரிய வேறுபாடுகள் எனத் தெளியலாம். எனவே கன்மேந்திரியங்கள் ஐந்தும் மனம் வழியால் செலுத்தப்பட்டு உடலின் செயல்களைச் செய்வதோடு உயிருக்கு உணர்வினையும் அறிவினையும் கொடுக்க உதவுகின்றது.

கன்மேந்திரியங்கள் தன்மாத்திரைகளை இடமாகக் கொண்டு தொழில் புரிவன. இதனையே செய்யுளில் இடமா எனவும் இடம் என்னும் சொற்களைக் காட்டித் தன்மாத்திரைகளை அங்கு கூறியிருத்தல் காணலாம். இங்கு ஆகாயம், காற்று, அனல், நீர், பார் எனக் காட்டப்பட்டன. இவை நுண்பூதங்களைக் குறித்து நிற்பனவாகக் கொண்டு அவற்றை சத்தம் பரிசம், முதலிய ஐந்துமே எனக் கண்டு கொள்க. அவற்றையே ஆசிரியர் செய்யுளில் காட்டியுள்ளார் என்பதனைக் கருத்துரையுள் காட்டியுள்ளேன். ஆசிரியர் கருத்தும் சிறப்பு இந்திரியங்களையே இடமாகக் கொண்டும் வாய் முதலிய புறவுறுப்பால் அகச் செயல்களை புரிவது தான் கன்மேந்தியங்கள் எனக் கொண்டு பொருள் காணவேண்டும். இக்கருத்தே ஏனைய சித்தாந்த ஆசிரியர்களும் ஏற்று நிற்கும் கருத்தாகும்.

இனி அனல் புல்கி எனச் செய்யுளில் காட்டப்பட்டுள்ளது. புல்லப் படுவதற்கு உதவும் கருவி. எனவே கையினைப் புல்கி எனச் செய்யுளில் குறிப்பிட்டார். புல்கி அனல் ஏற்கும். இடும் கை எனக் காணலாம். தன் மாத்திரைகளை இடமாகக் கொண்டே கன்மேந்திரியங்கள் தொழிற்படும் என்பது இங்கு தெளிவாக இருத்தலும் காணலாம். கண்ணுதல் நூல் எனக் கூறியது சிவாகமங்களைக் குறிப்பிடுகின்றன. எனவே இவை யாவும் சிவாகமவழி வரும் செய்திகளே என வலியுறுத்தியவாறும் காண்க.

ஆசிரியர் மிகச் சொற் சுருக்கமாய் பெரும் விடயத்தைக் கூறியிருப்பது சிந்தித்து தெளிவு காண வைக்கின்றது. ஆராய வைக்கின்றது. இதனால் உண்மை விளக்கம் தெளிவு காணப்படுகின்றது.

இக்கருவிகளாகிய ஐந்தினையும் உயிர் தன் வழிச் செல்ல விடுவதினால் அவற்றால் விளைவது பிறவித் தொடர் என்பது. இவற்றை கட்டுப்பாட்டில் வைத்து ஆன்ம அறிவைப் பெறுவதும், அவ்வனுபவமே ஆன்மாவுக்கு பொய்யையும் மெய்யையும் உணர்த்துவதாகவும், இறைவனை உணர்ந்த வழி இக்கன்மேந்திரியங்களின் தொழிற்பாடு, சிவகரணங்களாக நின்று வணங்குதல், வாழ்த்துதல், வலம்வருதல் முதலிய சிவத்தொண்டுகள் செய்ய நிற்கும். முத்தியில் இவை வேண்டப்படுவதன்று.

## வெண்பா 16

### அந்தக் கரணங்கள்

**அந்தக் கரணம் அடைவே உரைக்கக் கேள்**
**அந்தமனம் புத்தியுடன் ஆங்காரம் - சிந்தையிவை**
**பற்றியது நிச்சயித்து பல்கால் எழுந்திருந்து அங்கு**
**உற்றது சிந்திக்கும் உணர்**

## இதன் பொருள்

**அந்தக் கரணம் அடைவே உரைக்கக் கேள்** - அகக் கருவிகள் எனப்படும் அந்தக் கரணங்கள் பற்றிய இயல்புகளை முறையாக இனிமேல் சொல்லுவேன் கேட்பாயாக, **அந்த மனம் புத்தியுடன் ஆங்காரம் சிந்தை** - அவையாவன மனம் புத்தி, அகங்காரம் சித்தம் என நான்குமாம், **இவை பற்றியது** - இதனைப் புறத்தே விளங்கும் ஒரு புலனை அதற்குரிய பொறியானது செலுத்தி நிற்க மனம் அதனைப் பற்றும் (பொருளை), **நிச்சயித்து** - புத்தி என்னும் அகக்கருவி மனம் பற்றிய பொருளை இது இந்தப்பொருள் என நிச்சயித்து நிற்கும், **பல்கால் எழுந்திருந்து** - அகங்காரம் என்னும் அகக்கருவி புத்தி நிச்சயித்த பொருளை, தான் அடிநிலையாக நின்று முன்பும், பின்பும்

**பல்கால்** - பலமுறை யான் செய்வேன். என்னும் முனைப்புக் கொண்டு எழும், **அங்கு உற்றது சிந்திக்கும் உணர்** - சித்தம் இவ்வாறு முனைப்புக் கொண்ட பொருளைப் பற்றி மீளச் சிந்திக்கும் நினைவில் கொள்ளும்.

## கருத்துரை

அகக்கருவிகள் எனப்படும் அந்தக் கரணங்கள் பற்றிய இயல்புகளை முறையாக இனிமேல் கூறுவேன். கேட்பாயாக, அவையாவன மனம் புத்தி அகங்காரம் சித்தம் என நான்குமாம். இதனைப் புறத்தே விளங்கும் ஒரு புலனை அதற்குரிய பொறியானது செலுத்தி நிற்க மனம் அதனைப் பற்றும். (பொருளை) புத்தி என்னும் அகக்கருவி மனம் பற்றிய பொருளை இது இந்தப் பொருள் என நிச்சயித்து நிற்கும். அகங்காரம் என்னும் அகக்கருவி புத்தி நிச்சயித்த பொருளை தான் அடிநிலையாக நின்று முன்பும் பின்பும் - பல்கால் பலமுறை யான் செய்வேன் என்னும் முனைப்புக்கொண்டு எழும். சித்தம் இவ்வாறு முனைப்புக் கொண்ட பொருளைப் பற்றி மீளச் சிந்திக்கும் நினைவில் கொள்ளும்.

## விரிவுரை

நூலாசிரியர் இத்துணையும் புறப் புறக்கருவிகள், புறக்கருவிகள், அகப்புறக்கருவிகள், அகக்கருவிகள் எனக் கொள்ளப்பட்ட ஐம்பூதங்கள் தன்மாத்திரைகள் ஞானேந்திரியங்கள் கன்மேந்திரியங்கள் என்பனவற்றை எடுத்துரைத்தார். இச்செய்யுள் மூலம் அகக்கருவிகள் என அறியப்படும் மனம் புத்தி அகங்காரம் சித்தம் என்னும் நான்கினையும் அவற்றின் இயல்பினையும் (தொழில்) கூறத் தொடங்குகிறார். அதனைச் செய்யுளிலே, அந்தக் கரணம் அடைவே உரைக்கக் கேள் என முன்காட்டிப் பின் தொடர்கின்றார். அடைவு என்பது முறையாக எனப் பொருள் தரும். மேலும் சிவாகமத்தில் சொல்லிய முறையில் சொல்லுவேன் எனவும் பொருள் காணலாம் அடைவு வேதம் முறைமை.

ஞானேந்திரியங்கள் முதலில் பொருளை அறியும்போது நிருவிகற்பக் காட்சியே உண்டாகும். இது பொதுவாக அறிவது. அதன் பின்னர் சிறப்பாக அறிவது பற்றியும் கூறியிருந்தேன். இச்சிறப்பாக அறியும்

விகற்பக் காட்சிகள் மனம் முதலிய அந்தக் கரணங்களினது தொழிற்பாட்டால் உண்டாவதாகும். இங்கு அந்தக் கரணங்கள் யாவை எனவும் அவற்றின் செயற் பாடுகள் யாவை எனவும் ஆசிரியர் எடுத்துக் கூறுகின்றார்.

ஆன்மா இந்நான்கு அகக்கருவிகளையும் பற்றி நின்று இவ்வுலகப் பொருள்களைச் சிறப்பாக உணர்ந்து அவற்றில் அழுந்தி நிற்கின்றது. நிருவிகற்பக் காட்சியின் பின்னர் ஆன்மா அந்தக் கரணம் என்னும் அகக் கருவிகளுடன் கூடித் தொழிற்படத் தொடங்குகின்றது. அவ்வாறு தொழிற்பட ஆரம்பிக்கும்போது முதலில் மனம் என்னும் கருவியை சந்திக்கின்றது. முற்கூறிய புலன்கள் மனதிற்கு இசைவாகத் தொழிற்பட்டு இன்பத்தை நாடிச் செல்கின்றன. அவ்வாறு இன்பத்தை நாடிச் செல்ல உதவும் மனம் முதலில் ஓர் உலகப் பொருளைக் காணுகின்றது. அவ்வாறு கண்ட பொருள் என்னவாக இருக்கும் என ஐயம் கொள்ளுகின்றது. இதுவோ அல்லது அதுவோ எனப் பல வகையால் ஐயுறும். எனவே மனதின் இயல்பு பொருளைக் காண்டலும். அதனை எண்ணி ஐயுறுதலுமாகும். இவ்வாறு மனம் ஐயமுற்று நிற்கும் வேளையில் ஆன்மா அதற்கு அடுத்த நிலையாகிய புத்தியிடம் செல்லுகின்றது. அந்தப் புத்தியை ஆதாரமாகக் கொண்டு அப்பொருளின் குணம் இனம் தொழில் முதலியனவற்றை உணருகின்றது. காணுகின்ற பொருள் முன்பு கண்ட பொருளோ என எண்ணி இப்பொருள், இதுதான் என நிச்சயம் பண்ணுகின்றது. இந்தத் துணிவுக்குக் கருவியாக நிற்பது புத்தியாகும்.

இனி இவ்வாறு இதுதான் என துணிவு கண்ட பின்னர் இதனை நான் பெற வேண்டும். அடையவேண்டும். அனுபவிக்க வேண்டும். எனதாக்க வேண்டும் என முனைப்புக் கொண்டு நிற்கின்றது. இவ்வாறு முனைப்புக் கொள்ள வைக்கும் கருவி புத்திக்கு அடுத்து வைக்கப் பெற்ற கருவி அகங்காரம் ஆகும். எனவே மனம் புத்தி இரண்டினது செயல் பாட்டிற்குப் பின்னதாக வருவது இவ்வகங்காரம். இது பலவகையாலும் முனைப்புக் கொண்டு அகங்கரித்து எழுவதினால் இதனை ஆசிரியர் செய்யுளில் பல்கால் எழுந்திருந்து என்றார். இவ்வகங்காரம் சில வேளைகளில் புத்தியோடு கூடியும் முன்னும் பின்னுமாக அகங்கரித்து எழும். எனவே தான் பல்கால் எனக் கூறினார் என்பது தெரிகின்றது.

எழுந்து இருத்தல் என்பது அகங்கரித்து எழுதல். முனைப்புக் கொள்ளுதல் ஆகும். எனவே அகங்கரித்தல் என்பது செயற்பாட்டுக்கு முன்னும் செயற்பாட்டுக்குப் பின்னும் எழுவதாகி, செயல் முடியும்வரை அதில் அழுந்தி நிற்கும் எனவும் கொள்ளலாம். சில ஆசிரியர்கள் அகங்காரம் புத்தியின் முன்னர் இருப்பதென்றும். பின்னர் எழுவதென்றும் பலவகையான காரணம் காட்டுவார். எவ்வாறாயினும் அகங்காரம் இல்லாதபோது ஆன்மா எப்பொருளிலும் அவா கொண்டு இதனை அடைய வேண்டும், நான் இதைச் செய்வேன். என்னும் முனைப்பு வேட்கை இல்லாது ஒழியும். எனவே நுகர்வு என்னும் அனுபவிப்பு இல்லாது போகும். அகங்காரம் என்னும் தத்துவ அகக்கருவி இல்லையேல் ஆன்மா இவ்வுலக இன்பத்தை நுகரத் தலைப்படாது என்பதை யாம் புரிந்து கொள்ள வேண்டும். இங்கு நாம் ஆசிரியரின் கொள்கைப்படியே கொள்வோம். சொல்வோம்.

இனி ஆங்கரித்து நின்று எழுந்து ஆன்மா ஒரு பொருளை அழுந்தி அறிதலே அனுபவித்தல் எனப்படும். இதனை நுகர்ச்சி என்பர். ஆன்மா தான் நிச்சயித்தபொருளின் தன்மையை மீண்டும் மீண்டும் சித்திக்கும் போதே அப்பொருளில் அழுந்தி நிற்க வேண்டிய நிலை ஏற்படுகின்றது. அவ்வாறு மீண்டும் மீண்டும் உற்று உற்றுச் சிந்திப்பதற்கு அகக் கருவியாய் விளங்குவது சித்தம் என்னும் தத்துவக் கருவியாகும்.

இதனையே ஆசிரியர் செய்யுளில் உற்று அது சிந்திக்கும் சித்தம் என்னும் கருவி என்பதனை உணர்ந்து கொள் எனக் காட்டுக்கின்றார். இவ்வாறு சித்தத்தை அந்தக் கரணங்களின் இறுதியாக வைத்தார். ஏனெனில் பொருளில் அனுபவம் காண்பதும், பயன் பெறுவதும் ஆகிய செயலை முடிவாகிய நிலைக்குக் கொண்டு செல்ல உதவியாய் இருப்பதும் சித்தத்தின் செயலாகும். அதனால் சித்தத்தை நான்காவதாக வைத்தார்.

என் தமிழ் ஆசிரியார் பண்டிதர் வீரகத்தி சிந்தனை இன்றேல் சிறவாது வாழ்க்கை என்பர். புத்திமானாக இருந்தாலும். சிந்தனை கொண்டு ஆராய்ந்து செயற்பட்டாலே அச்செயலால் வெற்றி காணலாம். எண்ணித் துணிக கருமம் என்றார் வள்ளுவர். எனவே சிந்தனையும் புத்தியும் மனிதனுக்கு வேண்டுவதே. அதனால், பகுத்தறியும் நிலையும் உண்மை

இன்மைத் தன்மைகளை ஆராய்ந்து தெளியவும் இந்த அந்தக்கரணங்கள் ஆன்மாவிற்கு மிகவும் தேவைப்படுகின்றது. வாழ்வின் அனுபவிப்பை அறிவை நுகர்வைத் தந்து ஆன்மாவை அதில் அழுந்த வைத்திருப்பது சித்தம் ஆகும். செய்யுளில் சித்தத்தை சிந்தை எனவும் உற்றது சிந்திக்கும் உணர் எனவும் கூறியமை காண்க. இச்சித்தம் முன்பு தான் அறிந்து உணர்ந்த ஒரு பொருளை மனம் புத்தி என்பன இன்றி தனித்த தொழிற் பாட்டினைச் செய்கின்றது. அது மீளச் சிந்தித்தல் எனலாம். அதனையே உற்றது சிந்திக்கும் உணர் என்றார்.

இனி இக்கருவிகளை உள்ளுறுப்புகள் எனவும் உட்கருவிகள் எனவும் கூறுவர். அந்தக் கரணங்கள் என்பன ஒரு பொருளை உணர்த்தும் கருவிகள். சித்தம் என்பது அகக் கருவிகளுள் ஒன்று. இது மனம் புத்தி அகங்காரம் எனும் மூன்றாலும் வரும் பயனைக் கவர்ந்து நினைவு வடிவில் வைத்து நிற்கும் என முனைவர் கு.சுந்தரமூர்த்தி செந்தமிழ்க் கல்லூரி திருப்பனந்தாள் அவர்கள் கூறுவர் கருத்துரையில் நினைவில் கொள்ளும் எனப் பொருள் தந்தமை நோக்குக. இதனால் சித்தம் அனுபவ வாயிலாக அழுந்தும்போது எதனையும் நினைவிலே வைத்திருக்கும். ஆசிரியர் முன்பு வென்றார் சென்றார் இன்ப வீடு எனக் கூறியமை நினைவிருக்கும். இச்சொற்றொடரை நாம் இங்கு கொண்டு வந்து இயைந்துப் போருள் காணவேண்டும். வெறுமனே அந்தக் கரணங்களை அறிந்து கொண்டால் மட்டும் போதாது. இவ்வுலக இன்பத்தில் அழுந்தி நிற்கும் நிலைமாறி முத்திநிலைக்கு உயிர்களை இட்டுச் செல்வதே குறிக்கோள். ஆகை யாலும், அதுவே உண்மை விளக்கம் ஆகையாலும், இக்கரணங்களை சுத்தி செய்ய வேண்டும்.

இதனை துகளாறுபோதம்.

மன்னும் மகரம் மனம் செலுத்தும் புத்தியினை
உன்னும் உகாரம் உபகரிக்கும் - முன்னாகும்
ஆங்காரம் தன்னை அகாரம் செலுத்தியிடும்
நீங்காத சித்தம் விந்து நேர். எனவும்.

அந்தக் கரணம் அகல அதிற்கூடும்
தொந்தக் கலாதி துரிசு அறுமே - பந்திக்குஞ்
சித்த மலம் அறுத்துத் தீர உனக்கேற ஒத்தபடியே உணர்.

எனக் காட்டி உண்மை விளக்கத்தைத் தெளிவு படுத்தினமையை அறியலாம்.

இதற்கு உரைவகுத்த யாழ்ப்பாணம் திக்கம் செல்லையா பிள்ளை அவர்கள். "நீ நன்நெறிக்கண் சேறற்கு அமைந்தபடி அந்தக் கரணங் களையும் சடம் எனக் கண்டு துறக்குதி" என்றார்.

## வெண்பா 17

**ஆசிரியர் கூற்று**

**ஓதியிடும் நாலாறும் உற்றான்ம தத்துவம் என்று**
**ஆதிஅருள் நூல் அறையுங்காண் - தீதறவே**
**வித்தியா தத்துவங்கள் தம்மை விளம்பக்கேள்**
**உத்தமனே நன்றா உனக்கு**

## இதன் பொருள்

**ஓதியிடும் நாலாறும் உற்றான்ம தத்துவம் என்று** - இதுவரை கூறப்பட்ட 24 தத்துவங்களையும் அவற்றின் தொழிற்பாடுகளையும் அறிந்தோம். அவை யாவும் ஆன்ம தத்துவங்கள் என்று, **ஆதி அருள் நூல் அறையும் காண்** - அநாதியாக உள்ள இறைவன் அருளிச் செய்த சிவாகமங்கள் கூறி நிற்கின்றன. இதனை அறிவாயாக, **தீதறவே** - இனி குற்றமாகிய அஞ்ஞானம் நீங்குதற்கான வழிதிறக்க வைக்கும், **வித்தியா தத்துவங்கள் தம்மை விளம்பக் கேள்** - வித்தியா தத்துவங்கள் யாவை என்பதனையும் அவற்றின் தொழிற்பாடுகள் எத்தன்மைத்தெனவும் எடுத்துக் கூறுவேன். அவற்றை உன் மயக்கம் தீர விளக்கம் உறும்படி சொல்வேன். கேட்பாயாக, **உத்தமனே நன்றா உனக்கு** - உத்தம குணத்தின் தலை நின்று பாடம் கேட்கும் மாணவனே ! அவ்வித்தியா தத்துவங்கள் (உமக்கு) உன்னை ஞான நிலைக்கு இட்டுச் செல்லும் முறைமையினை விளக்குவோம். நன்றாக கேட்டு தெளிந்து உணர்வாயாக.

## கருத்துரை

இதுவரை கூறப்பட்ட 24 தத்துவங்களையும் அவற்றின் தொழிற்பாடுகளையும் அறிந்தோம். அவை யாவும் ஆன்ம தத்துவங்கள்

என்று அநாதியாகவுள்ள இறைவன் அருளிச் செய்த சிவாகமங்கள் கூறி நிற்கின்றன. இனி குற்றமாகிய அஞ்ஞானம் நீங்குதற்கான வழி திறக்க வைக்கும், வித்தியா தத்துவங்கள் யாவை என்பதனையும் அவற்றின் தொழிற்பாடுகள் எத்தன்மைத் தெனவும் எடுத்துக் கூறுவேன். அவற்றை உன் மயக்கம் தீர உண்மை விளக்கம் உறும்படி சொல்வேன் கேட்பாயாக. உத்தம குணத்தின் தலை நின்று பாடம் கேட்கும் மாணவனே அவ்வித்தியா தத்துவங்கள் (உமக்கு) உன்னை ஞான நிலைக்கு இட்டுச் செல்லும் முறைமையினை விளக்குவோம் நன்றாகக் கேட்டு தெளிந்து உணர்வாயாக.

## விரிவுரை

நூலாசிரியர் இதுவரையும் ஆன்ம தத்துவங்கள் என அழைக்கப்படும் 24 தத்துவங்கள் பற்றி எடுத்துரைத்தார். இதனைப் பிரகிருதி தத்துவங்கள் எனவும் ஆன்ம தத்துவங்கள் எனவும் அழைப்பர். இத்தத்துவங்கள் யாவும் ஆன்மாவுக்கு அதன் கருவிகளோடு சம்பந்தப்பட்டதாய் அதன் நுகர்வுக்கு ஏற்றவாறு உயிர் அவற்றினைச் சார்ந்து உலக அனுபவத்தை அனுபவிப்பை அடைகின்றது.

| | | |
|---|---|---|
| பூத தத்துவங்கள் | - 5 | பஞ்ச பூதம் |
| பொறிகள் | - 5 | தன்மாத்திரைகள் |
| ஞானேந்திரியம் | - 5 | அறிவுக் (புலன்) கருவிகள் |
| கன்மேந்திரியம் | - 5 | தொழிற் (புலன்) கருவிகள் |
| அந்தக் கரணம் | - 4 | அகக்கருவிகள் |
| | 24 | |

உயிரின் அறிவு இச்சை செயல் பற்றிய செய்திகளைக் கூறி அவை எவ்வாறு முன்னே கூறப்பட்ட அகக்கருவிகள் புறக்கருவிகளைக் கொண்டு உலகப் பொருள்களை அறிந்து அனுபவிக்க முடியும். இவ்வாறு அனுபவித்துக் கொண்டேபோனால், அதற்கென ஒரு எல்லை இல்லாவிடில் ஆன்மா பிறப்பு இறப்புகளில் இருந்து மீள முடியாது. எனவே அவற்றை அனுபவித்தற்கான காலம் நியதி கலை வித்தை அராகம் என்னும் தத்துவங்கள் தேவைப்படுகின்றன. இத்தத்துவங்கள் மாயை

எனப்படும் தத்துவத்தினின்றும் வளர்ச்சி அடைகின்றது. இம்மாயையும், மேற்கூறிய தத்துவங்களும் புருடன் என்னும் தத்துவமும் கூடிய வித்தியா தத்துவங்களுடன் ஆன்மா கூடித் தொழிற்பட்டு அத்தொடர் பிறவியை அறுத்தற்கு ஏதுவாகிய அனுபவத்தைப் பெறுகின்றது. எனவே இவ்வறிவினை ஆன்மாவுக்குத் தந்து நிற்பதே வித்தியா தத்துவங்கள் என்பது பெறப்படும். இவை பின்னாலே கூறப்படவிருக்கும் சுத்த தத்துவங்களான சிவத்தத்துவங்களினின்றும் வேறானவை. இவற்றை அசுத்த மாயா தத்துவங்கள் எனவும் அழைப்பர். இவற்றைப் பற்றிய மேலும் பல செய்திகளை ஆசிரியர் அடுத்து வரும் செய்யுளில் கூறவிருப்பதால் இவற்றிற்கான விளக்கங்களை அங்குக் கூறுவேன்.

மேலும் ஆசிரியர் ஆன்மத் தத்துவங்களை உற்றான்ம தத்துவங்கள் எனவும் கூறினார். இதனால் இத்தத்துவங்கள் ஆன்மாவுக்குத் துணையாக இருப்பவை என்பது புலப்படுகின்றது. உற்ற + ஆன்ம + தத்துவம் = உற்றான்மதத்துவம் எனப் புணர்ந்தது.

இங்கு இறைவனை ஆதி எனவும் காட்டியுள்ளார். மாணிக்கவாசகப் பெருமானும். ஆதியை எனவும் திருமுறைகளும் பெருமானைப் பல இடத்தும் ஆதியை எனக் கூறியிருத்தல் காணலாம். இது இறைவன் தொடக்கமில் காலத்தவன் என்பதைக் காட்டி நிற்கின்றது.

மேலும், சிவாகமத்தை அருள் நூல் எனவும் மற்றைய பொருள் நூல் எனவும் கொண்டு பொருள் காண்க. மேலும் வித்தியாதத்துவங்களை உயிரின் துன்ப நிலைகளை நீக்குதற்கும் ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களின் பிணிப்பை நீக்கித் தன்னையும் இறைவனையும் உணருவதற்கான அறிவைத் தருவதுமாகையாலும் அம்மலங்களின் தீய செயல்களில் இருந்து எம்மை நாம் திருத்தி அவற்றை நீக்குவதற்கான (மார்க்கத்தை) வழியை வித்தியா தத்துவம் தரும். ஆகையால் அதனைத் தீதறவே என அடைகொடுத்துக் காட்டியவாறு தெளிக. உத்தம குணங்கள் கைவரப் பெற்ற மாணவன் ஆகையால் உத்தமனே என்றார். மாணவர்களில் மூன்று நிலைகள் உண்டு. இதனைத் தமிழ் இலக்கணம் காட்டும். அவற்றுள் முதன்மை மிகு மாணவன் என்பது கூறும் எதனையும் விளங்கிக் கொள்ளும் ஆற்றலும் ஆய்வும் உடையவன்

என்பதும் சிவநெறியில் தான் கொண்ட வழியில் சிறிதும் வழுவாது உறைப்பாக நிற்பவன் என்பதும், எதனையும் அறிந்து கொள்ளும் ஆவல் உடையவன் என்பதும் சொல் செயல் சிந்தனை யாவும் நெறிப்பட உணருபவன் என்பதும் விளங்க உத்தமன் என்றார். இதனை அறிந்து கொள்வது உனக்கு ஞானத்தைப் பற்றிய தெளிவு அடைய உதவியாய் இருக்கும் என்பதை உணர்த்த நன்றா என்றார்.

இனி இத்தத்துவங்கள் மற்றயவை போல நுகர்வுகளுக்கானவல்ல என்பதையும் இவை அறிவுதர ஞானநெறிக்கு இட்டுச் செல்லும் என்பதையும் காட்டுவதற்கு உனக்கு நன்றா என்றார். மாணவன் ஞானநிலைப்படியில் நிற்பவராகையால் உத்தமனே உனக்கு நன்றா என உன் உயிர் உய்வுக்கு இதனை ஆராய்ந்துப் பார், அதன் உண்மை விளக்கம் வெளிப்படும் என்பதனை தெளிய வைக்கக் காண் எனவும் கூறியமை காண்க. உத்தமனே உனக்கு நன்றா காண் என்றார். சில ஆசிரியர்கள் ஏ என வருவதையும் காண் என்பதையும் அசைநிலைகள் ஆக்கி அவற்றிற்குப் பொருள் காணாது விடுத்தனர். ஏ என்பது பிரிநிலை ஏகாரம் மற்றும் கல்வி கற்கும் மாணாக்கரில் இருந்து சிவஞானம் கற்கும் மாணவரை இனம்காட்டிப் பிரித்தோதுவதற்காக உத்தமனே என ஏ காரம் காட்டி ஓதினார். எனவே இவ்வேகாரம் அசையன்று. பிரிநிலை ஏகாரம் எனக் காண்க. இனித் தீதறவே என்பதில் வரும் ஏகாரமும் பிரிநிலைக்கண் வந்தது நோக்குக ஏனெனில் இவ்வித்தியா தத்துவங்களே தீயனவற்றையும் நல்லனவற்றையும் எமக்குப் பிரித்து இனம் காட்டவல்லதாக வருவதால் தீமையைப் பிரிக்கும் என பிரிநிலை ஏ காரமாகவும் வந்தது தெளிக.

## வெண்பா 18

### வித்தியா தத்துவங்கள் பற்றிய விளக்கம்.

**காலம் நியதி கருதும் கலை வித்தை**
**ஏல அராகம் புருடனே மாயை - மாலறவே**
**சொன்னோம் அடைவாகச் சொன்ன இவைதம் உண்மை**
**உன்னி உரைக்க நாம் உற்று.**

## இதன் பொருள்

**காலம்** - கால தத்துவம், **நியதி** - நியதி தத்துவம், **கருதும் கலை** - எண்ணுதற்கான கலைதத்துவம், **வித்தை** - வித்தை தத்துவம், **ஏல அராகம்** - ஏற்கும் தன்மைத்தான அராக தத்துவம், **புருடனே** - புருட தத்துவம், **மாயை** - மாயை தத்துவம் ஆகிய, **மால் அற வே சொன்னோம்** - மயக்கம் நீக்குதற்கான ஏழு வித்தியா தத்துவங்களையும் கூறினோம், **அடைவாகச் சொன்ன இவை** - முறையாக எடுத்துச் சொல்லிய இத்தத்துவங்களுக்குரிய, **தன் உண்மை** - உண்மை நிலைகளை விளக்கத்தை, **உன்னி உரைக்க நாம் உற்று** - இவ்விடத்தே நாம் எடுத்துரைப்போம். அவற்றினை ஆராய்ந்து அறிவாயாக.

## வெண்பா 19

### வித்தியா தத்துவங்களின் தொழிற்பாடு

**எல்லை பலம் புதுமை எப்போதும் நிச்சயித்தல்**
**அல்லல் தரும் கிரியை ஆன்மாவுக்கு - ஒல்லை**
**அறிவு ஆசை ஐம்புலனும் ஆரவரும் காலம்**
**குறியா மயக்கு என்று கொள்.**

## இதன் பொருள்

**எல்லை பலம் புதுமை** - முற்கூறப்பட்ட வித்தியா தத்துவங்களில் காலம் என்னும் தத்துவம் உயிர்கள் அனுபவித்து முடிவுறும் கால எல்லையாகிய இறந்த காலத்தையும், அவ்வாறு முடிந்த பின்னர் நிகழ்வில் அனுபவித்துக் கொண்டிருப்பதற்கான பயன் என்னும் நிகழ்காலத்தையும் வரும் பிறவிகளில் அனுபவித்தற்கான ஏற்கும் புதுமை என்னும் எதிர்காலத்தையும் கொண்டிருக்கும். இக்காலங்களின் செயல் எல்லையை (முடிவு) அறிவித்தலும் பயன்தருதலும் புதுமையுள் புகுத்தலும் ஆகும், **எப்போதும் நிச்சயித்தல்** -நியதி தத்துவம் வினைமுதல் செய்த வினைப்பயனை அவ்வினை முதலே அனுபவிக்கச் செய்ய எப்போதும் விதி பண்ணி நிற்கும், **அல்லல் தரும் கிரியை ஆன்மாவிற்கு** - கலை தத்துவம் ஆணவத்தை ஆன்மாவிடத்து நின்று

சிறிது நீக்கி அதன் செயலாற்றலை எழுப்பி நிற்கும், **ஒல்லை அறிவு** - வித்தை தத்துவம் விரைவான அறிவாற்றலை எழுப்பி நிற்கும், **ஆசை** - அராகத் தத்துவம் விருப்பு ஆற்றலை (விழைவு) எழுப்பி நிற்கும், **ஐம்புலனும் ஆரவரும்** - புருட தத்துவம், உயிர் மேலே கூறிய ஐந்து தத்துவங்களுடன் இணைந்து நின்று ஐந்து புலன்களையும் நுகரும் காலத்தில் அப்பெயர் பெறும், **குறியா மயக்கு என்று கொள்** - மாயைதத்துவம் நிலையற்ற பொருள்களை நிலையானவை என மயக்கி நம்பச் செய்யும்.

## கருத்துரை

கால தத்துவம், நியதி தத்துவம், எண்ணத்தக்க கலை தத்துவம் வித்தை தத்துவம் ஏற்கும் தன்மைத் தான, அராக தத்துவம், புருட தத்துவம் மாயை தத்துவம் ஆகிய மயக்கம் நீக்குவதற்கான ஏழு வித்தியா தத்துவங்களை இங்கு எடுத்துக் கூறினோம். முறையாக எடுத்துச் சொல்லிய இத்தத்துவங்களுக்குரிய உண்மை நிலைகளை (விளக்கம்) இவ்விடத்தே எடுத்துரைப்போம். அவற்றினை ஆராய்ந்து அறிவாயாக. முற்கூறப்பட்ட வித்தியா தத்துவங்களில் காலம் என்னும் தத்துவம் உயிர்கள் அனுபவித்து முடிவுறும் கால எல்லையாகிய இறந்த காலத்தையும், அவ்வாறு முடிந்த பின்னர் நிகழ்வில் அனுபவித்துக் கொண்டிருப்பதற்கான பயன் என்னும் நிகழ்காலத்தையும், வரும் பிறவிகளில் அனுபவித்தற்கென இருக்கும் புதுமை என்னும் எதிர்காலத்தையும் காட்டி நிற்கும். இக்காலங்களின் செயல் எல்லையை (முடிவு) அறிவித்தலும், பயனைத் தருதலும், புதுமைகள் புகுதலும் ஆகும். நியதி தத்துவம் வினைமுதல் செய்த வினைப் பயனை அவ்வினைமுதலே அனுபவிக்கச் செய்ய எப்போதும் விதி பண்ணி நிற்கும். கலைதத்துவம் ஆணவத்தை ஆன்மாவினிடத்து நின்று சிறிது நீக்கி அதன் செயலாற்றலை எழப்பி நிற்கும். வித்தை தத்துவம் விரைவான அறிவாற்றலை எழுப்பி நிற்கும். அராக தத்துவம் விருப்பு ஆற்றலை (விழைவை) எழுப்பி நிற்கும். புருட தத்துவம் மேலே கூறிய ஐந்து தத்துவங்களுடனும் உயிர் இணைந்து நின்று ஐந்து [illegible]ன்களையும் நுகரும் காலத்தில் [illegible]ப்பெயர் பெறும். மாயை தத்துவம் [illegible] பொ[illegible] நிலை[illegible] என உயிரை ம[illegible]க்கி நம்பச்

## விரிவுரை

ஆசிரியர் 18-ம் 19-ம் செய்யுள்களில் வித்தியா தத்துவங்கள் எனப்படும் 7 தத்துவங்களையும் வரிசைப் படக் கூறி அவற்றின் செயற்பாடுகளையும் அதே வரிசைக் கிரமத்தில் கூறியுள்ளார். இவ்விரு செய்யுளும் வித்தியா தத்துவம் பற்றியதாகையால் இவற்றின் விரிவுரையை ஒன்றாகக் கொண்டு உரைக்கின்றோம்.

வித்தியா தத்துவங்கள் முந்திய ஆன்ம தத்துவங்கள் போலல்லாது உயிரின் செயற்பாட்டிற்கான மேம்பாட்டினைச் செய்கின்றன. இவை காலம் நியதி கலை வித்தை அராகம் புருடன் மாயை என்பன. இவை பற்றிய விளக்கமும் செயற்பாடும் பற்றி விரித்துரைப்பது இங்கு வேண்டற்பாலது.

இங்கு கூறப்பெற்ற ஏழு தத்துவங்களும் மாயையென்னும் தத்துவத்தில் இருந்து பரிணமித்தவையும் விரிந்தவையுமே. இவற்றுள் கலை வித்தை அராகம் என்ற மூன்று தத்துவங்களும் தருகின்ற அறிவு இச்சை செயல் அசுத்த மாயையால் தரப்படுவன. ஆதலின் அவை உயிர்களின் முன்வினைகளுக்கீடான அனுபவத்தை தர வேண்டியிருப்பதால் அவை உண்மை ஞானத்தைக் கொடா. எனவே இவை தவிர்ந்த காலம் நியதி மாயை என்னும் தத்துவங்களே உயிரின் முன்வினைக் கீடான அனுபவத்தை தந்து நிற்பதோடு அத்தத்துவங்களால் இயக்கப்படுவன. எனவே அவை உயிர்களுக்கு உண்மை விளக்கத்தைத் தருவதோடு, சுத்தத்தத்துவங்களுக்கு உயிரை இட்டுச் செல்வன என்பதை அறிதல் வேண்டும்.

### மாயை தத்துவம்

மாயை இருவகை. ஒன்று அசுத்த மாயை மற்றது சுத்த மாயை. இங்கு வித்தியாதத்துவத்தில் உள்ள மாயை காலம் நியதி கலை என்னும் மூன்றினையும், தனது பகுதிகளில் இருந்து தோன்றச் செய்கின்றது. அசுத்த மாயையில் இருந்துதான் மாயை தத்துவம் தோன்றுகின்றது.

இவ்வசுத்த மாயை விரிவுகளை உடையது. இவ்வசுத்த மாயை இறைவன் ஆணைவழி நிற்கும் சீகண்ட உருத்திரர் கலக்கியதும் தோன்றுவது மாயை. அதில் தோன்றுவதே மாயை தத்துவம். இம்மாயை தத்துவங்களில் இருந்து தான் மற்ற வித்தியா தத்துவங்கள் தோன்றுவன. எனவே இவ்வேழு தத்துவங்களும் அசுத்த தத்துவங்களே. இதனை சிவஞான சித்தியார்.

**நித்தமாய் அருவாய் ஏக நிலையதாய் உலகத்திற்கு ஓர்**
**வித்துமாய் அசித்தாய் எங்கும் வியாபியாய் விமலனுக்கு ஓர்**
**சத்தியாய் புவனபோகம் தனுகரண மும் உயிர்க்காய்**
**வைத்ததோர் மலமாய் மாயை மயக்கமும் செய்யும் அன்றே**

எனத் தரும்

இங்கு மாயையின் குணங்களைக் கூறவந்த அருணந்தி சிவம் மயக்கமும் செய்யும் அன்றே என்றார். அவ்வாறே மனவாசகங் கடந்தாரும் மாயையின் தொழில் கூற வந்தபோது வெண்பாவில் குறியா மயக்கு என்று கொள் எனக் கூறியமை நோக்கலாம். இச்செய்யுள் மூலமும் சித்தியார் செய்யுள் மூலமும் மாயைப் பற்றிய அறிவு விளக்கம் போதுமானது. பொங்கு புலன் அருந்தப் போதந் தரு மாயை எனவும் மூலமாம் மாயை மயக்கல் எனப் பிறரும் கூறுவார்கள்.

விரிவு என்பது பரந்து விரிந்து பட்டிருப்பது. பூமி விரிவான பொருள். அதில் குடம் வனைய எடுப்பது சிறிதளவே. அது போன்று விரிவுடைய மாயையின் நின்றும் தோன்றுவது மாயாத்தத்துவம். இம்மாயை இருந்து அடுத்துவரும் காலத்தத்துவத்திற்கு தோற்றம் தருவதாயுள்ளது.

## காலதத்துவம்

அடுத்து மாயை தத்துவத்தில் இருந்து தோன்றுவது காலதத்துவம்.

காலதத்துவம் மூன்று நிலைகளையுடையது. அவை கடந்தகாலம், நிகழ்காலம், வருங்காலம் என்பன. அவற்றைத் தமிழ் இலக்கணம் இறந்த காலம் எனவும் நிகழ் காலம் எனவும் எதிர்காலம் எனவும் கூறும். இறந்து

போனவற்றைத் தெரிவிப்பது இறந்தகாலம் கடந்துபோனது. எனவே இது இறந்த காலம் எனப்பட்டது. அடுத்தது தற்போது நிகழ்வில் உள்ளது நடைபெற்றுக் கொண்டிருப்பது. இதனை நிகழ்காலம் என்பர். இதனை அடுத்து வருவது வரும் காலம், எதிர் நோக்கப்பட்டுக் காத்திருக்கும் காலம். இதனை எதிர்காலம் என்பர். இம்மூன்றும் உயிருக்கு நுகர்ச்சியின் முடிவாகிய கால எல்லையைக் காட்டி நிற்பது இறந்தகாலம். அதன் விளைவுகளை பலன் (பயன்) ஆகியவற்றைக் காட்டி நிற்பது நிகழ்காலம். இனி வரும் என்னும் புதுமை - புதுவருவாய் - எதிர்பார்ப்பைக் காட்டி நிற்பது எதிர்காலம் எனவும் கூறுவர்.

ஆசிரியர் கால தத்துவத்தின் தொழிற்பாட்டைக் கூறும்போது எல்லை பலம் புதுமை என்றார். இங்கு புதுமை என்பது புதியனவற்றை அனுபவிக்கக் காத்திருக்கும் காலம் எனக் கொண்டு அதன் தொழிற்பாட்டை புதுமை என்றார். புதுமை என்பது புதிய வருவாய் எனக் கண்டு கொள்க.

காலம் என்பது ஒரு உயிருக்கு நீட்சியாகவும் குறுகியதாகவும் இருக்கும். இவ்வாறே எப்பொருளுக்கும் கருதப்படும். இதனைக் கந்தப் புராணம் குறுமையாமுயிர் வாழ்க்கையர் கொண்ட தொல் வளம் போல் சிறுமையோ இது எனக் காட்டியிருத்தல் கால எல்லையைக் காட்டி நிற்றல் காண்க. காலமாய் காலமின்றி என்பது அது. அவ்வாறே மற்றைய நிகழ்காலம் எதிர்காலமுமாம். வருவழிக் காண்க.

அசுத்த மாயா தத்துவங்கள் எல்லாம் சடப் பொருள்கள் ஆதலால் மாயை ஆகிய காரணத்தில் இருந்து வந்த காரியப் பொருளான மாயை தத்துவம் சடப்பொருளே. சடம் அறிவில்லாத பொருள். அது தானாகத் தொழிற்படுவதில்லை. இறைவனுடைய சத்தி செலுத்தி நிற்கும்போது தான் அது தொழிற்படுகின்றது. எக்காரித்தையும் நிகழ்த்த வல்லதாகின்றது. இக்காலத்தத்துவம் பற்றி சிவஞான சித்தியார் தெளிவு தருகின்றது.

**மாயையில் கால மோடு நியதிபின் கலாதி தோன்றும்**
**ஆய அக்காலம் மூன்றாய் ஆக்கியும் அளித்தும் போக்கிக்**
**காயமோடு உலகுக் கெல்லாம் கால சங்கையினைப் பண்ணி**
**நாயகன் ஆணையாலே நடத்திடும் சகத்தை எல்லாம்**

இக்கால தத்துவம் இல்லையென்றால் செயல்கள்யாவும் முன்னும் பின்னுமாய் முரணித் தோன்றும். அதனால், இயல்பான தன்மையும் இல்லாது ஒழியும். உயிர் அவத்தைகளை அடையும் போது இக்காலத்தத்துவம் அதற்குத் துணைபுரிகின்றது. உயிர் மூலாதாரத்தில் அடங்கிக் கிடக்கின்றபோது அதனை விழிப்பு நிலைக்குக் கொண்டு வருவது இக்காலம் என்பதனை மூல அரும்கட்டில்.... என்னும் போற்றிப்பஃறொடை காட்டுகின்றது. மேலும் ஒருவன் செய்த வினை தூலஉடல் கழிந்தபோது, இக்காலத் தோடும் புத்தி தத்துவத்தோடும் பூமியில் இருக்கும் என்பது சித்தாந்தக் கருத்து. எனவே காலம் என்பது உயிரின் உயர்வுக்கு இன்றியமையாமை காணலாம். வினைகளைப் பற்றி அறியும்போது காலத்தின் நிலை மேலும் தெளிவுபடும்.

### நியதி தத்துவம்

இத்தத்துவம் காலதத்துவம் தோன்றுவதுபோல் மாயையில் இன்னொரு பகுதியில் தோன்றுவது. மாயையின் இருந்து தோன்றுவது. இதனை விதி என்று கூறுவார்கள். ஆன்மா செய்கின்ற வினைகளை செய்த அவ்வான்மாவே அனுபவித்தல் வேண்டும். அவ்வான்மா விற்கென இன்னொரு ஆன்மா அதனைத் தான் எடுத்து அனுபவித்தல் ஆகாது. எனவே, இதனையே நுகரவும் ஏனையவற்றை நுகராதிருக்கவும் என வரையறுத்து விதி பண்ணி நிறுத்துவது நியதி தத்துவமாகும். இது ஆன்மாவை விதிப்படி நெறிப்படுத்தி நிற்பதாகும். பாச நிலையில் இறைவன் நேராக நின்று உயிர்க்கு எதனையும் செய்வதில்லை. எனவே இந்நியதி கொண்டு தனது ஆணையால் வினைகளை வரையறுத்தற்கு இந்நியதி தத்துவம் கருவியாய் நிற்கின்றது. இதுவும் சடமாகையால் தானே தொழிற்படாது. இறைவன் ஆணைவழி நின்றே தொழிற்படும்..

இந்நியதி பற்றிச் சிவஞான சித்தியார் கூறுவதை அறியலாம். இவ்வாறு காட்டுவதின் நோக்கம் உண்மை விளக்கத்தில் காட்டிய இவற்றைத் தெளிவு படுத்துவதற்கும் விரித்துரைத்தற்குமாம். நியதிப்பின் தோன்றிக் கன்மம் நிச்சயம் பண்ணி நிற்கும், எனக் காட்டியுள்ளார். இதனை இந்நூலாசிரியரும் எப்போதும் நிச்சயித்தல் என்றார். அதாவது உயிரின் வினைக்கு ஈடாக இங்கு உரியது இது உரியதன்று என நுகர்ச்சியை நியதி தத்துவம் ஒருவரையறைக்கு உட்பட்டு நின்று நியமிக்கும் என்பதே இதனை இருபா இருபஃது என்னும் நூல் காலமும் தேசமும் வாலிதின் நோக்கி குறைவு நிறைவு..... எனத் தரும்.

## கலைத் தத்துவம்

மாயை தத்துவத்தினின்றும் நியதி விதி தத்துவம் தோன்றிய பின்னர் தோன்றுவது கலை தத்துவம். இது சீகண்ட உருத்திரால் கலக்குண்டு வரும் மாயையில் இருந்து தோன்றுவது. இதன் தொழில் ஆணவமல மறைப்பைச் சிறிது நீக்கி ஆன்மாவின் கிரியா சக்தியை எழுப்புவதும் தொழிற்படவைப்பதும் ஆகும். ஆன்மாவிற்கு வேண்டியது ஞானமே. அவ்வாறிருக்க கிரியையைத் தருவதாகிய கலையை ஏன் முதலில் கூறவேண்டும். கொள்ளவேண்டும். என்னும் வினா வருகின்றது. இதற்கு விடையாக ஞானசத்தி உயிருக்கு வேண்டுவதே. இதில் ஞானம் கிரியை இச்சை ஆகிய இவைகள் தானே தொழிற்படாது. அவை சடமாகையால் இவற்றை இயக்குவது இறைவன் ஆணையே. ஞானம் வருமாயினும் தொழிற்படாத நிலையில் அது தோன்றுவதானால் ஏற்படும் பயன் எதுவுமில்லை. எனவே கிரியா சத்தி தருகின்ற கலையையே இங்கு முதற் கூறினார். கலித்தல் என்பது அகற்றுதல் நீக்குதல் எனப் பொருள் தரும். இதனைஅடிப்படையாகக் கொண்டே கலை என்ற சொல் பிறந்தது. எனவே கலையென்பது ஆணவமலத்தை நீக்கி ஆன்மாவின் செயல் சத்தியை எழுப்பிச் செலுத்துகின்ற கருவிக்குக் கலையெனப்பட்டது. இதனை சித்தியாரில்

**அயர்வு இலாக் கலையில் தோன்றி ஆணவம் ஒதுக்கிச் சித்தின்**
**செயல்புரி கிரியா சத்தி தெரிவிக்கும் சிறிதே**

என்றார் அருணந்திசிவம்

இதனையே இந்நூலாசிரியர் சொற்சுருக்கமாக அல்லல் தரும் கிரியை ஆன்மாவுக்கு என்றார். இக்கிரியா சத்தி ஏற்படுவதால் வினை இன்றி இருந்த உயிர் வினையைப் புரிந்து துயர்ப்பட வைக்கும் என்பதை நோக்கி அல்லல்தரும் கிரியை என்றார். இக்கலாதியால் வரும் ஞானம் விபரீத ஞானமே. எனவே இந்த ஞானம் துறக்கப்படுவன. எனவே உண்மை விளக்கம் யாதோ எனின் இக்கலையான கருவியையும் துறத்தல் வெண்டும் என்பதே.

## வித்தை தத்துவம்

கலை தத்துவம் தோன்றிய பின்னர் அக்கலை தத்துவத்தினின்றும் தோன்றுவது வித்தை என்னும் தத்துவம். இது ஆணவ மல சத்தியைச் சிறிது அடக்கி ஆன்மாவின் ஞான சத்தியை எழுப்புகின்றது. முன்பு மாயை தத்துவத்திலிருந்து கால தத்துவமும் நியதி தத்துவமும் கலை தத்துவமும் தோன்றும் எனக் குறிப்பிட்டேன். விருத்தியாகிய மாயை தத்துவத்தின் பகுதிகளிலிருந்தே அம்மூன்று தத்துவங்களும் தோன்றின. வித்தை தத்துவமும் அதற்கு அடுத்துத் தோன்றுகின்ற அராக தத்துவமும் மாயையில் இருந்து நேரடியாகத் தோன்றுவதில்லை. அவை கலை தத்துவத்தில் இருந்து வித்தை தத்துவமும், இவ்வித்தை தத்துவத்தில் இருந்து அராகத் தத்துவமும் தோன்றும்.

ஆன்மாவின் அறிவு ஒன்றே. ஞானம் கிரியை இச்சை ஆகிய செயல்பற்றி, ஞானசத்தி, கிரியா சத்தி, இச்சா சத்தி என மூன்றாக வழங்கப்படுகின்றது. இது அறிவாகிய ஒன்றன் நிலை வேறுபாடே அன்றி அவை தம்முள் வேறுபடவில்லை. கிரியையை எழுப்புவதாகிய கலையினின்றும் வித்தை தோன்றும். கலையிலிருந்து அராகம் பரிணமிக்கும். இவ்வராகம் இச்சையை எழுப்புவதாகும். இவற்றுள் ஒரு கருவி மட்டும் போதுமே எதற்காக மூன்றும் தேவைப்படுகின்றது என்னும் வினாவிற்கு விடையாக ஒரு கருவி ஒரே நேரத்தில் ஒரு செயலைத்தான் செய்யுமே அல்லாமல் அது பல தொழில்களைச் செய்ய வல்லது அல்ல. இவை மூன்றும் ஒருங்கே உயிருக்குத் தேவை ஏற்படும்போது அவை தனித்தனி தமக்குரிய நுண்ணிய தொழிலைப் புரியும். எனவே ஞானம் இச்சை கிரியை ஆகிய இத்தொழில்களைப் புரியும் போது அவை தனித்தனி வேண்டப்படுகின்றன. வித்தை என்பது அறிவு. அராகம்

என்னும் சொல்லுக்கு விருப்பம் விழைவு என்னும் தமிழ்ப் பதங்களைக் கூறுவர். ராகம் என்னும் வட சொல் தமிழில் வழங்கும்போது அராகம் என ஆயிற்று. இது இலக்கண விதி ரகரம் சொல்லின் முதல் எழுத்தாக வருவதில்லை. அது தமிழ் இலக்கணத்தில் வழுவாகும். அது அகரத்தை முன்வைத்து அராகம் எனவரும். ரவி என்பது இரவியாகவும், ராவுதல் என்பது அராவுதல் எனவும் வந்தன.

**வித்தை உயர் கலை அதனில் தோன்றி அறிவினை உதிக்கப் பண்ணும் என்பது சித்தியார் கலை ஆதி தத்துவங்கள் சால அறிவு இச்சை செயல் பூத்தல் என்பதும் காண்க.**

## அராக தத்துவம்

வித்தை தத்துவத்தை விளக்கும்போது அது கலையில் இருந்து தோன்றும் எனக் கண்டோம். இங்கு அராக தத்துவம் வித்தை தத்துவத்தில் தான் தோன்றும். வித்தை தத்துவத்தில் கூறப்பட்ட விளக்கங்கள் அராக தத்துவத்திற்கும் பொருந்துமாகையால் அதன் விளக்கத்தை அங்கு பொருந்திக் காண்க.

ராகம் என்பது வடசொல். அராகம் என்பது அதன் தமிழ் வடிவம். இதன் பொருள் விருப்பு விழைவு ஆசை என்பன. இதனைச் செய்யுளில் ஒல்லை ஆசை எனக் குறிப்பிட்டிருத்தல் காணலாம். இதன் தொழில் ஆசையை விழைவாற்றலை சிறிதே விளங்கச் செய்யும். இதனால் விழைவு என்னும் விருப்பத்தை உயிருக்கு உண்டு பண்ணி நிற்பது இவ்வராக தத்துவமே. இதனை விச்சையில் அராகம் தோன்றி விதி வழி போகத்தின்கண் இச்சையைப் பண்ணி நிற்கும்.

வித்தை - விச்சை என்றாயிற்று. இச்சை - விருப்பு

## புருட தத்துவம்

**விச்சையில் அராகம் தோன்றி விதிவழி போகத்தின் கண்
இச்சையைப் பண்ணி நிற்கும் தொழில் அறிவு இச்சை மூன்றும்
வைச்சபோது இச்சா ஞானக் கிரியைகள் முன் மருவி ஆன்மா
நிச்சயம் புருடன் ஆகிப் பொதுமையில் நிற்பன் அன்றே**

எனச் சிவஞான சித்தியார் புருட தத்துவம் பற்றிய விளக்கத்தைத் தரும். இங்கு இந்நூலாசிரியர் ஐம்புலனும் ஆரவரும் காலம் எனக் காட்டினார். இப்புருட தத்துவத்தைப் பற்றிக் குறிப்பிடும்போதும் இது ஒரு தனித் தத்துவமாகக் கருதப்படவில்லை. இது வித்தை அராகம் ஆகிய ஐந்தும் ஆன்மாவுக்கு ஒரு சட்டை போன்று நின்று தொழிற்படுவதால் இது புருடன் என்னும் பெயரைப் பெறுகின்றது. புருடன் என்பது ஆன்மாவைக் குறிக்கும் ஒரு சொல். ஆயினும் இங்கே அச்சொல் வித்தியா தத்துவத்திலுள்ள புருடன் என்னும் பெரியருடைய தத்துவத்தைக் குறிக்கின்றது. இது ஆன்மாவுக்கு சட்டை போன்று ஒட்டி இருக்கும். அவ்வாறு இருப்பதனால் பஞ்சகஞ்சுகம் எனவும் இது அழைக்கப் படுகின்றது. பஞ்ச என்பது ஐந்து, கஞ்சுகம் என்பது சட்டை. சட்டை அணிந்திருப்பவனைக் கஞ்சுகதாரி எனவும் கஞ்சுகன் எனவும் அழைக்கப்பெறும். எனவே ஐந்து சட்டைகள் போன்ற தத்துவங்களால் போர்வைபோலச் சட்டைபோல ஒட்டி வைத்திருப்பதால் பஞ்ச கஞ்சுகம் என்றாயிற்று. இவ்வமைப்பு நீங்கிவிட்டால் புருடன் என்னும் தத்துவம் இல்லையென்றாகும். ஆயினும் பஞ்சகஞ்சுகனாக நிற்கும் புருடன் என நின்ற ஆன்மா பொதுவகையில் போகத்தை நுகரும் தகுதியைப் பெறும். பின்னர் பிரகிருதியோடு அசுத்த மாயா தத்துவங்களோடு தொடர்பு கொள்ளும்போதே அத்தகுதியைச் சிறப்பாகப் பெறுகின்றது. பிரகிருதியே உலக அனுபவத்தைத் தருவது ஆகையால் அதனோடு பொருந்தும்போது ஆன்மா புருடனாகும் நிலையை தகுதியை பெறுகின்றது. இதுவே புருட தத்துவத்திற்கான விளக்கமாகக் கொள்ளலாம்.

பிரகிருதிக்குக் கலை நேரான முதற்காரணம். அசுத்த மாயை முடிந்த முதற்காரணம். கலை என்னும் தத்துவத்தினின்றும் வித்தையும். வித்தையின் நின்று அராகமும் தோன்றும். அவற்றின் பின்னர். கலையில் இருந்து பிரகிருதி தோன்றும். ஆன்மா பிரகிருதியைப் பொருந்திய நிலையில் புருடன் என நிற்கும். காலம் முதலிய ஐந்தினோடும் புருடன் சேர்க்க ஆறு தத்துவங்கள் ஆகும். இநனோடு மாயை தத்துவத்தையும்

உடன் சேர்க்க அசுத்த மாயா தத்துவம், வித்தியா தத்துவம் என்பது காணக் கிடைகின்றது.




இவற்றுள் மாயையும் புருடனும் நீங்கலாக மற்றவை பரிணாம முறையில் தோன்றுவன. மாயையின் ஒரு கூறு காலமாக பரிணமிக்கும் இன்னொரு கூறு நியதியாகப் பரிணமிக்கும். மற்றொரு கூறு கலையாகப் பரிணமிக்கும்.

கலையின் ஒரு கூறு வித்தையாக விருத்தி அடையும். வித்தையின் ஒரு கூறு அராகமாக விருத்தி அடையும். கலையின் இன்னொரு கூறு பிரகிருதியாக பரிணமிக்கும். இவ்வாறு விரிவுடைய தத்துவங்கள் பரிணாமமாக வருவதும் கலையில் பிரகிருதி தோன்றுவதும் சிந்தனைக்குரியது.

புருட தத்துவம் உயிர் என்றும் உள்ளம் என்றும் நூல்கள் கூறும். உயிர் இன்ப வேட்கை உற்று உலகியல் இன்பத்தை நாடி நிற்கும் நிலையைப் - (இன்ப நினையை) புருட தத்துவம் எனவும் கூறுவர்.

வித்தியா தத்துவம் எனப் பெயர் வருவதற்கான காரணம் தான் என்ன என்பது சிந்தனைக்குரியது. இத்தத்துவங்கள் ஏழும் இறைவன் ஆணைவழி நிற்கும் அனந்த தேவர் என்பவரால் தோற்றவும் ஒடுக்கவும்

படுகின்றன. வித்தியேசுவரர்களுள் சிறந்த அவர் பெயரால் இவை வித்தியா தத்துவங்கள் எனப் படுகின்றன. இனி வித்தியா என்பது அறிவோடும் பந்தப் பட்டது. அறிவு என்பதும் அது. ஆன்மாவின் அறிவு இச்சை செயல்களைத் தோற்றுவிக்கும் கருவிகளாதலால் இவை வித்தியா தத்துவங்கள் எனப்பட்டன. இவ்வித்தியா தத்துவத்தை போசத்திருகாண்டம் எனவும் அழைப்பர். இவை ஆன்மாவிடத்தில் நுகர் வோனாம் தன்மையை உண்டாக்குதலால் இப்பெயரைப் பெற்றது. போசத்திரு - நுகர்வோன் காண்டம் தொகுதி என்பதால் போசத் திருகாண்டம் என்றாயிற்று. இவ்விருபாடலும் வித்தியா தத்துவங்கள் பற்றிய செய்தியினைப் புலப்படுத்தும்படி கூறியிருத்தலும் அவற்றின் விளக்கத்தை இங்கு சித்தியார் விளக்கத்தோடு காட்டி இருத்தலால் இவ்வித்தியா தத்துவம் கற்கும் மாணவர் இவை பற்றி நன்கு தெளிவர்.

மேலும் இத்தத்துவங்கள் உயிரின் இச்சை கிரியை ஞானம் ஆகியவற்றை எழுப்பி உயிரை உறுதிக்கு இட்டுச் செல்வன. இத் தத்துவங்களும் உயிரின் ஆணவம் கன்மம் மாயை என்பவற்றால் எய்தும் துன்பங்களைக் களைவதற்கு உதவி செய்து ஞானத்தை உண்டு பண்ணும். இந்த ஞானம் உயிரைப் பதிஞானத்திற்கும் கூட்டிச் செல்லும் தன்னை உணர வைக்கும். தலைவனையும் உணரப்பண்ணும். இருவினை ஒப்பு மலபரியாகம் சத்திநிபாதம் என்னும் ஆன்ம ஈடேற்றப் பாதைக்கும் இட்டுச் செல்லும். ஆகையால், கலை வித்தை அராகம் என்பனவற்றை நீக்கி உண்மை விளக்கத்தை உயிர் அறியும். மற்றைய மூன்றும் சுத்த மாயா தத்துவங்களால் இயக்கப் படுவன வாகையால், உயிர் நன்நெறி சென்று சுத்த தத்துவங்களைத் தலைப்படும் வரை வேண்டியதே. அதன் பின்னர் அவை வேண்டப்படுவதில்லை. இவை கருவிகள் ஆகையால் உயிர் அவற்றை நீக்கி நிற்பதே உண்மை விளக்கமாகும்.

இக்கருவி உயிரோடு ஒட்டியும் வெட்டியும் நிற்கும் நிலை இவ்வித்தியா தத்துவங்களின் தொழிற் பாட்டாலேயே நடைபெறும். இதனை இருபா இருபஃது ஆயன் கொல் பாதவத்தற்று என உவமை காட்டி நிற்கும்.

## வெண்பா 20

### சுத்த தத்துவங்கள்

**வித்தியா தத்துவங்கள் ஏழும் விளம்பினோம்**
**சுத்தமாம் தத்துவங்கள் சொல்லக்கேள் - நித்தமாம்**
**சுத்தவித்தை ஈசுரம்பின் சொல்லும் சதாசிவம் நல்**
**சத்தி சிவம் காண் அவைகள் தாம்**

### இதன் பொருள்

**வித்தியா தத்துவங்கள் ஏழும் விளம்பினோம்** - வித்தியா தத்துவங்கள் ஏழினையும் எடுத்து முன்னர் சொல்லினோம், **சுத்தமாம் தத்துவங்கள் சொல்லக்கேள்** - சுத்த தத்துவங்கள் எனப்படும் சிவ தத்துவம் பற்றி இனிமேல் கேட்பாயாக, **நித்தமாம்** - அவை என்றும் நிலைபேறு உடையன, **அவைகள் தாம் சுத்தவித்தை ஈசுரம்பின் சொல்லும் சதாசிவம் நல் சத்தி சிவம் காண்** - அவைகள் தாம் சுத்தவித்தை தத்துவம் ஈசுரத்தத்துவம் அதனைத் தொடர்ந்து வரும் மேலான சதாசிவ தத்துவம் நன்மை தரும் சத்தி தத்துவம் சிவ தத்துவம் என ஐந்து. இவற்றை முறைப்படி ஆராய்ந்து அறிந்து கொள்வாயாக.

## வெண்பா 21

### சுத்த தத்துவம் தொடர்ச்சி

**சுத்தவித்தை ஞானம் மிகும் தொன்மையாம் ஈசுரம் தான்**
**அத்தன் தொழில் அதிகம் ஆக்கி இடும் - ஒத்த இவை**
**சாதாக்கியம் என்றும் சத்தி சிவம் கிரியை**
**ஆதார ஞான உருவாம்.**

### இதன்பொருள்

**சுத்தவித்தை ஞானம் மிகும்** - இறைவனின் சத்தி மூன்று நிலைகளையுடையது அவை இச்சா சத்தி கிரியாசத்தி ஞானசத்தி என்பன. ஏறியும் இறங்கியும் தொழிற்படும். ஆயினும் இச்சா சத்தி என்றும் ஒரே ெ ற்றித்தாய் இருக்கும். ஏனைய இரண்டுமே கூடியும்

குறைவதுமாகும். அவ்வாறு கூடிக் குறைந்து கொள்ளுகின்ற வேளையில் ஞானம் மிகுந்தும் கிரியை குறைந்தும் நிற்கும் நிலையில் இத்தத்துவம் சுத்த வித்தை எனப்படும், **தொன்மையாம் ஈசுரம்தான் அத்தன் தொழில் அதிகம் ஆக்கிடும்** - பழமை மிக்க ஈசுரத் தத்துவம் என்பது கிரியா சத்தி மிக்கும் ஞானசத்தி குறைந்தும் நிற்கும் நிலையில் இத்தத்துவம் இப்பெயரைப் பெறும், **ஒத்த இவை சாதாக்கியம்** - முன்பு கூறப்பட்ட ஞானசத்தியும் கிரியா சத்தியும் சமநிலையில் ஒரே அளவினதாய் ஒத்து நிற்கும் வேளையில் நிற்கும் நிலைக்கு நிலைக்களமாய் இருப்பது, சதாசிவம் அல்லது சாதாக்கியம் எனப் பெயர் பெறும், **என்றும் சத்தி சிவம் கிரியை ஆதார ஞானம் உரு ஆம்** - இனி கிரியை மட்டும் கொண்டு தொழிற்படும் நிலைக்கு நிலைக் களமானது. சத்தி தத்துவம் எனப்படும். அவ்வாறே ஞானம் மட்டும் கொண்டு தொழிற்படும் நிலைக்கு நிலைக்களமாய் இருப்பது சிவதத்துவம் எனப்படும். இவ்வாறு சிவசத்திக்கு என்றும் இடமாய் உள்ளது இந்த ஐந்து சுத்த தத்துவங்கள் ஆகும்.

## கருத்துரை

வித்தியாதத்துவங்கள் ஏழினையும் எடுத்து முன்னர் சொல்லினோம். இனிமேல் சுத்த தத்துவங்க்ள் எனப்படும் சிவதத்துவங்கள் பற்றிச் சொல்வோம் கேட்பாயாக. அவை என்றும் நிலைபேறு உடையன. அவைகள் சுத்தவித்தை தத்துவம் ஈசுவரதத்துவம். அதனைத் தொடர்ந்து வரும் மேலான சதாசிவ தத்துவம் நன்மை தரும் சத்தி தத்துவம் சிவ தத்துவம் என ஐந்து. இவற்றை முறைப்படி ஆராய்ந்து அறிந்து கொள்வாயாக.இறைவனின் சத்தி மூன்று நிலைகளைக் கொண்டுள்ளது. அவை இச்சா சத்தியென்றும் கிரியா சத்தியென்றும் ஞான சத்தியென்றும் வழங்கப் பெறும். இவை ஒரோ வழி குறைந்தும் கூடியும் (ஏறியும் இறங்கியும்) தொழிற்படுவன. ஆயினும், இச்சா சத்தி என்னும் விருப்பாற்றல் என்றும் ஒரே பெற்றித்தாய் இருக்கும். இது மாற்றம் அடைவது இல்லை. ஏனைய (செயலாற்றல்) கிரியா சத்தியும், ஞானசத்தியும் ஆகிய (அறிவாற்றல்) இரண்டும் கூடியும் குறைவதுமாய் இருக்கும். அவ்வாறு ஞானம் மிகுந்தும் கிரியை குறைந்தும் நிற்கும் நிலையில் இத்தத்துவம் சுத்தவித்தை எனப்படும். பழைமை மிக்க ஈசுர தத்துவம் கிரியா சத்தி மிக்கும் ஞானசத்தி குறைந்தும் நிற்கும் நிலையில்

இத்தத்துவம் இந்தப் பெயரைப் பெறும். முன்பு கூறப்பட்ட ஞானசத்தியும் கிரியாசத்தியும் ஒரே அளவினதாய் ஒத்து நிற்கும் வேளையில் நிற்கும் நிலைக்கு நிலைக்களமாய் இருப்பது சதாசிவம் அல்லது சாதாக்கியம் எனப்படும் தத்துவமாகும். இனி கிரியை மட்டும் கொண்டு தொழிற்படும் நிலைக்கு நிலைக்களமானது சத்தி தத்துவம் எனப்படும். அதுபோல ஞானம் மட்டும் கொண்டு தொழிற்படும் நிலைக்கு நிலைக்களமானது சிவ தத்துவம் எனப்படும். இவ்வாறு சுத்த தத்துவங்கள் ஐந்து ஆகும்.

## விரிவுரை

18-ம் 19-ம் செய்யுள்களில் வித்தியா தத்துவங்கள் ஏழினையும் எடுத்துக் கூறினார். இதனை அடுத்து சிவ தத்துவங்கள் பற்றிக் கூறத் தொடங்கினார். சிவதத்துவங்கள், சுத்ததத்துவங்கள் இவை சுத்த மாயா தத்துவங்களில் தோன்றுவதால் சுத்தமாயா தத்துவங்கள் எனவும் சிவதத்துவங்கள் எனவும் கூறுவர். ஆன்மாவுக்கு ஞானத்தையும் செயலையும் அளிப்பதால் அவை ஆன்மாவை சுத்தமாக்கி நன்னிலைப் படுத்தற்கு ஏதுவாகவும் உள்ள காரணத்தால் இப்பெயரைப் பெற்றன.

ஆன்மா இச்சா கிரியா சத்திகளை உடையது. அதுபோல இறைவனும் சத்தியுடன் கூடி, இச்சா சத்தி கிரியா சத்தி ஞான சத்தி என முத்திறப்பட்டு விளங்குவன். இவற்றுள் இச்சையென்னும் விருப்பு விழைவு ஆற்றல் (சத்தி) என்றும் ஒரே தன்மைத்தாய் பெற்றித்தாய் விளங்கும். அதில் ஏற்றம் இறக்கம் என்பது இல்லை. இவற்றில் கிரியா சத்தி (செயல்) ஞான சத்தி (அறிவு) ஆகிய இரண்டும் தொழிற்படும் நிலையில், ஒன்று கூடியும் மற்றது குறைந்தும் இருதிறப்பட நிற்கும். மேலும் அவை இரண்டும் சமநிலை எய்தியும் நிற்பதுமாகும். ஞானம் என்பது சிவம். கிரியை என்பது சத்தி. இவை இரண்டும் இணைந்திருப்பது சிவசத்தி. இத்தத்துவங்கள் தம்முள் கூடியும் குறைந்தும் சமமாகவும் நிற்பதால் ஐந்து வகைப் பிரிவான தத்துவங்கள் பிறக்கின்றன. தோன்றுகின்றன.

ஞானம் கூடியும் கிரியை குறைந்தும் காணப்பட்டு தொழிற்படும் நிலைக்கு நிலைக்களமாய் இருப்பது சுத்தவித்தை. கிரியை கூடியும் ஞானம் குறைந்தும் காணப்பட்டுத் தொழிற்படும் நிலைக்கு

நிலைக்களமாய் இருப்பது ஈசுரம். இவை இரண்டும். அதாவது ஞானமும் கிரியையும் ஒத்த நிலையில் சமநிலையில் நின்று தொழிற்படும் நிலைக்கு நிலைக்களமாய் இருப்பது சாதாக்கியம். இதனை சதாசிவம் எனவும் அழைப்பர். இவை மூன்றும் இவ்வாறாக சத்தியும் சிவமும் தனித் திறத்துடன் கிரியையாகவும் ஞானமாகவும் நின்றும் தொழிற்படும் நிலை உண்டு. கிரியை உருவாக நின்ற நிலைக்கு நிலைக்களமாக அமைந்து தொழிற்படுவது சத்தி எனப்படும். ஞானமே உருவாக நின்ற நிலைக்கு நிலைக்களமாக அமைந்து தொழிற்படுவது சிவம் எனப்படும். இவ்வாறு இவ்வைந்து தத்துவங்களும் ஒன்றன்பின் ஒன்றாகத் தோன்றும். இவற்றின் தன்மை தொழிற்பாடுகள் பற்றிச் சிறிது விளக்கமாக அறியவேண்டும். ஆகையால் அவைப் பற்றிச் சிறிது விளக்குவோம்.

சுத்தத் தத்துவங்கள் என்பன சிவ சத்தி தத்துவங்களே. ஆயினும் அவற்றின் மேன்மை நோக்கிச் சிவதத்துவம் என அழைப்பர். இத்தத்துவங்கள் உயிரின் அறிவாற்றலையும் செயலாற்றலையும் மலங்களின் பிணைப்பில் இருந்து நீக்கி, அதற்கு உந்து கோலாக இருந்து உயிரைச் சிவபரம் பொருளின் நோக்குடைத்தாகக் கொண்டு வந்து நற்கதியை வழங்க வல்லதாக இருக்கின்றன. இறைவன் எதனையும் தானே நின்று தொழிற்படுத்துவதில்லை. அவன் தனது சங்கற்ப மாத்திரையாலும் தனது ஆணையாகிய சத்தியாலுமே செய்விக்கின்றான். அதாவது இறைவன் ஒன்றை நிலைக்களமாகக் கொண்டே செய்விப்பன். இதனை விறகில் தீயினன் என்னும் தொடக்கத்தையுடைய அப்பர் தேவாரத்தால் உணரலாம். அவ்வாறு நிலைக்களம் தூயதாகச் சுத்தமாக இருத்தல் வேண்டும். ஆன்ம தத்துவத்தில் இருந்தோ அன்றி அசுத்த தத்துவத்தை நிலைக்களமாகக் கொண்டோ இறைவன் அவற்றைச் செய்ய எண்ணுவதில்லை. இவை அசுத்தப் பொருள் சடப் பொருள். இதனால் இறைவன் முன்னிலையில் இவை நில்லா என்பதும், பரிசுத்த இறைவன் இதனை நிலைக்களமாகக் கொள்ளான் என்பதும் தெளிவு. இறைவன் நிலைக்களமாகக் கொள்வது சுத்தமான தூய்மையான இடத்தினையே முன்பு அசுத்த மாயையே 31 தத்துவங்களிலும் காணப்பட்டது. சிவதத்துவமான 5ம் சுத்தமாயையில் தோன்றுவது. மாயை என்பது இறைவன் வைப்பு ஆற்றல் ஆகும். எனவே மாயை இருவழிப்பட்டு அசுத்த மாயை என்றும் சுத்தமாயை என்றும் ஆகின்றது. இவை தோன்றுவதற்கான இடம் சுத்த மாயையே ஆகும்.

இறைவனது சத்தி சுத்தமாயையிற் பொருந்தி இந்த சுத்த தத்துவங்களைத் தோற்றிவிக்கும். அவையே சிவம் சத்தி சதாசிவம் ஈசுரம் சுத்தவித்தை என ஐந்துமாகும். மேலும் இச்சுத்த மாயையில் தோன்றும் தத்துவங்கள் போலன்றி அவை விருத்திப்பட்டுத் தோன்றுவனவாம். விருத்தி என்பது விரிவடைந்து நிற்பது. இதனைச் சிவஞான சித்தியார் நன்கு விளக்குகின்றது. மடித்து வைத்த கூடாரம் மடித்து வைக்கப்பட்ட நிலையில் செயலுக் கெனவரும் போது விரிக்கப்படுகின்றது. அவ்வாறு விரிக்கப்படும் போது கூடாரத்தினுள்ள துணிகள் சுருங்கிய நிலையில் இருந்து விரிக்கப்பட்டுப் பரந்து நிற்கின்றது. இதுவே விருத்தியாகும். சிவதத்துவங்களில் தோன்றும் தத்துவங்கள் பற்றி இனி அறிவோம்.

## சிவ தத்துவம்

இறைவன் சுத்த வடிவமானவன். தூய உடம்பினன் என அவன் குண நலத்தைப் பரிமேலழகர் எடுத்துக் காட்டுவார். இறைவனை மாயை தோற்றுவிப்பதில்லை. அவன் ஆதி அற்றவனல்லவா. உலகத்து உயிர்களின் உய்திக்கும் அறிவு பெறுதற்கும் தனது ஐந்தொழில்களைப் புரிவான். இவ்வாறு புரிவதற்காகத் தனது சக்தியைக் கொண்டு அதனைச் செயற்படுத்துவன். எனவே ஞானமும் ஆற்றலும் கொண்ட இறைவன் முதலில் ஞான சக்தியைத் தோற்றுவிப்பன். அதனை சுத்த மாயையை அதிட்டுத்து நின்று தோற்றுவிப்பன். அதாவது, அவன் சுத்த மாயையின் ஒரு பகுதியை தனது நோக்கால் சங்கற்ப மாத்திரையால் இது விரிவடையத்தக்கது என நிற்பன். அவ்வளவிலே சுத்த மாயையின் ஒரு பகுதி விரிவடையும், செயல்படுவதற்கான பக்குவத்தையும் பெறும். அப்பக்குவத்தைப் பெற்ற அறிவு சக்தியே ஞான சக்தி. இது சிவ தத்துவம் எனவும் வழங்கப் பெறும். இது முப்பத்தாறு தத்துவங்களில் முதல் தத்துவம். சிவனின் தொழிற்பாடுகளுக்கு அமைய இது பல பெயர்களால் அழைக்கப் பெறும். இத்தத்துவத்தை நாதத் தத்துவம் எனவும் அழைப்பர். சிவபரம் பொருளிலிருந்து இச்சிவதத்துவம் தோன்றும். இது சுத்ததத்துவம். பரம்பொருள் வேறு தத்துவங்கள் வேறு என்பதனை நாம் நன்கு புரிந்து கொள்ளவேண்டும். இந்நிலையில் ஞானம் மட்டுமே காரியப்படும். தொழிற்படும்.

## சத்தி தத்துவம்

சுத்த மாயையைத் தனது நோக்கால் விருத்திப் பட வைத்த இறைவன் தனது கருத்தால் செயலாற்றலைச் செலுத்தி நிற்பன். இறைவன் இச்சக்தி தத்துவத்தை தனது ஞான சக்தியால் விரிவடையத்தக்கது என நோக்காலும், கருத்தாலும் சங்கற்பப்படுத்துவன். இந்தவேளை சிவ தத்துவத்திலிருந்து ஒரு பகுதி விருத்திப் பட்டு நிற்கும். இத்தோற்றமே சக்தி தத்துவம் என வழங்கப் பெறுகின்றது. இது சுத்த மாயையில் தோன்றும் இரண்டாவது தத்துவம். இது முழுமையும் செயலாற்றலையே கொண்டு விளங்குவதால் சக்தி தத்துவம் என பெயர் பெற்றது. மேலும் இது சிவ தத்துவத்திலும் தூலமாய் விளங்குவதால் லயதத்துவம் எனவும், சக்தியாக விளங்குவதால் விந்து தத்துவம் எனவும் அழைப்பர். இது இறைவனின் கிரியா சக்திக்கு இடமாய் இருப்பதாகும்.

## சதாசிவ தத்துவம்

சுத்தமாயா தத்துவத்தின் மூன்றாவதாக வைத்து எண்ணப்படும் தத்துவம் சதாசிவத் தத்துவமாகும். இங்கு இறைவன் இரண்டாவது தத்துவமாக விளங்கும் சக்தி தத்துவத்தின் ஒரு கூற்றினை தனது திருக்குறிப்பால் முன்னர் விருத்தியடைந்த ஞான சக்தியையும் கிரியா சக்தியையும் சிறப்பாக நோக்கியும், சிறப்பாகக் கருதியும், இது இவ்வாறாக விரிவடைக என எண்ணுவான். அவ்வேளை இந்த ஞான சக்தியும் கிரியா சக்தியும் ஒத்த நோக்கமும் கருதலுமாய் நிற்பதால் அவ்விரு சக்தியும் விருத்தியடையும். அவை இரண்டும் சம அளவில் கூடுதல் குறைதல் எதுவுமின்றி விருத்திப்படும். இவ்வாறு விருத்திப்பட்ட இரு சக்திகளும் இணைவதால் வருவதே சதாசிவ தத்துவம் ஆகும். இங்கு சக்தியும் சிவனும் (கிரியா ஞானம்) ஒத்த அளவில் ஒத்த நிலையில் நிற்கும் நிலையெனக் கொள்ளுதல் வேண்டும். இது ஒரு சாந்த நிலை. இதனைச் சாதாக்கிய தத்துவம் எனவும் அழைப்பர். இதனை இந்நூலாசிரியர் ஒத்த இவை சாதாக்கியம் என்றும் கூறுனார். இத்தத்துவம் அணு சதாசிவர் முதலியோருக்கு இடமாக விளங்குகின்றது. இத்தத்துவத்தைத் தொழிற்படுத்தும் தெய்வம் சதாசிவமாகும். இது தன்னைச் செலுத்தி நிற்கும் முதல்வனுக்குரிய அனைத்து நாமங்களையும் கொண்டு விளங்கும்.

## ஈசுர தத்துவம்

ஈசுர தத்துவம் சுத்த மாயையில் விருத்திப் பட்டுத் தோன்றும் நான்காவது தத்துவமாகும். சதாசிவ தத்துவத்தின் பின்னர் அதிலிருந்து விருத்திப்பட்டு வருவது இது. இத்தத்துவத்தை இறைவன் தோற்றுவதற்காக சதாசிவ தத்துவத்தில் சம நிலையில் இருக்கும் கிரியா சக்தியைச் சிறப்பாக நோக்கியும், ஞான சக்தியை குறைவாகக் கருதியும் இது இவ்வாறு விரிவடையத் தக்கது என எண்ணுவான். இந்த நிலையில் கிரியா சக்தி மிகுந்தும், ஞான சக்தி குறைந்தும் தோன்றுவதே ஈசுர தத்துவமாகும். இத்தத்துவமே அநந்ததேவர் வித்தியேசுவரர் உருத்திரர்கள் ஆகியோருக்கு இடமாக இருக்கும். இதுவும் சிவபெருமானால் அதிட்டிக்கப்படுவதினால், அப்பெருமானின் பெயராகிய ஈசுவரன் என்னும் நாமத்தைக் கொண்டிருக்கும். அம்முதல்வனுக்குரிய பெயர்கள் அனைத்தையும் கொண்டிருக்கும். இங்கு செயலாற்றல் கூடியும், ஞான ஆற்றல் குறைந்தும் காணப்படும், தொழிற்படும் நிலையெனக் கொள்ளலாம்.

## சுத்தவித்தை தத்துவம்

இந்தத் தத்துவம் சுத்தமாயா தத்துவங்களில் இறுதியாகவும், ஐந்தாவதாக இருப்பதும் ஆகும். இத்தத்துவத்தில் இறைவன் ஞான சக்தியை அதிகமாகச் செலுத்தியும். கிரியா சக்தியைக் குறைவாக செலுத்தியும், நோக்கியும், கருதியும் நிற்பன். இவ்வேளையில் இருந்து ஈசுவரத் தத்துவத்தில் விருத்திப்பட்டுத் தோன்றுவதே இத்தத்துவமாகும். மேலும் இத்தத்துவம் இறைவனின் தூல ஈசுவரத் தத்துவமாக விளங்கி இறைவன் பெயர்கள் அனைத்தையும் பெற்று நிற்கும். இத்தத்துவம் மலவாசனையுடைய உருத்திரன் திருமால் அயன் இந்திரன் ஆகிய அதி தெய்வங்கள் யாவருக்கும் இடமாய் இருக்கும். இச்சுத்தவித்தையிலிருந்து அவ்வதிதெய்வங்கள் இறைவனின் ஆணைவழி அசுத்த மாயா தத்துவங்களைச் செலுத்தித் தொழிற்படுத்துவர். அசுத்த மாயையிலுள்ள இத்தத்துவம் வித்தியா தத்துவம் எனவும்(வித்தை). சுத்த மாயா தத்துவத்தில் இது சுத்த வித்தை எனவும் வழங்கப் பெறும். இரண்டிலும் உள்ள வேறுபாடுகள் காரணமாக இத்தத்துவம் சுத்த வித்தை எனவும் மற்றது வித்தியா தத்துவம் (வித்தை) எனவும் வழங்கப் பெறும்.

இங்கே தத்துவங்கள் தோன்றிய விருத்தியடைந்த நிலை விளக்கப்பட்டுள்ளன. அதாவது இறைவனின் இச்சா சத்தி என்றும் ஒரே நிலைத்தாய் நிற்க நித்தமாய் ஏனைய அறிவாற்றலாகவும் செயலாற்ற லாகவும் ஞான சத்தியும் கிரியா சத்தியும் தனித்தனியாகவும் சமமாகவும் நின்றும் ஒன்றின் ஒன்று மிக்கும் குறைந்தும் செயல்படும். இவ்வாறு செயல்படுவதால் சிவம் சத்தி சதாசிவம் ஈசுரம் சுத்தவித்தை என்னும் ஐந்து தத்துவங்களும் சுத்தமாயையின் விரிவுகளாய் தோன்றின எனச் சுருக்கமாகக் கூறலாம். இந்த ஐந்து தத்துவங்களும் இறைவனது சத்தி. அத்தத்துவங்களாகிய இவற்றை நிலைகளமாகக் (கொண்டு) பற்றிநின்று இவற்றின் வழியாக கீழேயுள்ள மற்றையத் தத்துவங்களைச் செலுத்தி நிற்கும் செலுத்தும் கருவியாக இச்சிவ தத்துவம் இருப்பதால் இதனைப் பிரேரக காண்டம் எனவும் வழங்குவர். பிரேரகம் - செலுத்துதல் காண்டம்; பகுதி. (பிரிவு) பிரேரக காண்டம் செலுத்தும் பகுதி. இத் தத்துவங்கள் வரக் காரணம் தான் என்ன என்பதை சிந்திக்கும்போது சிவஞான சித்தியார் விடை தருகின்றது.

**எல்லாமாய்த் தத்துவங்கள் இயைந்தது என் அணுவுக்கு என்னில்**
**தொல்லாய கன்மம் எல்லாம் துய்ப்பித்துத் துடைத்தற்கும் பின்**
**நில்லாமை முற்று வித்து நீக்கவும் கூடி நின்ற**
**பொல்லாத ஆணவத்தைப் போக்கவும் புகுந்தது அன்றே**

என்பதாகும்.

இவற்றால் 36 தத்துவங்களையும் ஆசிரியர் சிவாகம முறைப்படி எடுத்துரைத்தார் என்க.

## வெண்பா 22

**ஆறாறு தத்துவமும் சொன்னோம் அடைவாக**
**மாறா மலம் இரண்டும் வா சொல்லக் - கூறில்**
**அறியாமை ஆணவம் நீ ஆனசுக துக்கம்**
**குறியா வினை என்று கொள்.**

## இதன் பொருள்

ஆறாறு தத்துவமும் சொன்னோம் அடைவாக - 36 தத்துவங்களையும் முறைப்படி எடுத்துக் கூறினோம். இனி, மாறா

மலம் இரண்டும் வா சொல்லக் கூறில் - இனி தம் இயல்பில் நின்றும் நீங்குதல் இல்லாத ஆணவமலம் கன்ம மலம் (வினை) என்னும் இரண்டு மலங்கள் பற்றி உமக்குக் எடுத்துரைப்போம். வா - அருகிருந்து கேட்பாய், குறியா கூறில் அறியாமை ஆணவம் - ஆணவத்தின் இயல்பை குறிப்பாக கூறுதாயின் அது அறியாமை அது அஞ்ஞானத்தை உயிருக்குத் தருவதாகும், நீ ஆன துக்கம் குறியா வினை என்னு கொள் - நீ அடைந்து வரும் இன்ப துன்பங்களுக்குக் காரணமாக நிற்பது இருவினைகள் தாம் என்பதை குறிப்பாக அறிந்து கொள்வாயாக.

## கருத்துரை

36 தத்துவங்களையும் முறைப்படி எடுத்துக் கூறினோம். இனி தம் இயல்பில் நின்றும் நீங்காது உயிரைப் பிணிந்திருக்கும் ஆணவ மலம் கன்மமலம் என்னும் மலங்கள் பற்றிக் குறிப்பாக எடுத்துரைப்போம். வா அருகிருந்து கேட்பாய். ஆணவத்தின் இயல்பைக் குறிப்பாக கூறுவதாயின் அது அறியாமை. அது உயிருக்கு அஞ்ஞானத்தை விளைவிப்பதாகும். நீ அடைந்துவரும் இன்பதுன்பங்கள் இதம் அகிதங்களுக்குக் காரணமாய் நிற்பது இருவினைகள் தாம் என்பதைக் குறிப்பாக அறிந்துகொள்வாயாக.

## விரிவுரை

மாயையினின்றும் தோன்றுகின்ற தத்துவங்கள் 36 னையும் ஆசிரியர் எடுத்துக் கூறி முடித்தார். அவை

| | | |
|---|---|---|
| ஆன்மதத்துவங்கள் | - | 24 |
| வித்தியா தத்துவங்கள் | - | 7 |
| சுத்த தத்துவங்கள் | - | 5 |
| ஆக | - | 36 ஆகும் |

இவற்றின் தன்மைகளை எடுத்துக் கூறிய ஆசிரியர் அடுத்துவரும் மலங்களின் பொது இயல்புகளையும் காரியம், அதன் தொழிற்பாடு களையும் கூறத் தொடங்கினார். மலங்கள் ஆணவம் கன்மம் மாயை என்பன. மாயை பற்றிய இயல்புகளையும் அதன் செயல்பாடுகளையும் முற்கூறிய 36 தத்துவங்களில்போது கூறி முடித்தார். இங்கு இம்

மாயைக்குக் காரணமாக வரும் கன்மமும் துன்பத்திற்குக் காரணமான ஆணவமும், அவற்றின் இயல்புகளையும் (தொழிற் பாடுகளையும்) காரியத்தையும் கூறத் தொடங்கினார். அவ்வாறு கூறும்போது செய்யுளில் மாறாமலம் எனக் காட்டினார். அதன் பொருள் யாதொவெனின், இம்மலங்கள் உயிரோடு காரியப் படுவதோடு அவை என்றும் ஒரே பெற்றித்தாய் மாறாது அநாதியாக இருக்கும் என்பதே. இங்கு ஆணவத்தை ஆன்மா அநாதியாகப் பற்றியிருக்கின்றது. ஆன்மா எப்போதும் ஒரு பொருளைப் பற்றிச் சார்ந்து நிற்பதால் அநாதியே தோன்றிய உயிர், அநாதியே தோன்றிய ஆணவத்தைப் பற்றிக் கொண்டது. இந்த ஆணவம் உயிருக்கு ஒரு செயற்கையான இயல்பு என்பதால் இது உயிர்க்கு வந்த - உயிர் பற்றிக் கொண்ட குற்றம் எனப்படுகின்றது. இதனை திருவருட்பயன் ஆசு என்னும் சொல் கொண்டு தெளிவிக்கின்றது. உயிரின் உண்மை இயல்பு அறிவுடைமை ஆணவத்தைப் பற்றிக் கொள்வதினால், அதன் அறிவு இருட் படுகின்றது. அஞ்ஞானம் அடைகின்றது. இந்த அஞ்ஞானமே ஆணவ மலத்தின் இயல்பான குணம். அதனால், அது உயிரைப் பற்றிய போது அதற்கு அஞ்ஞானத்தைத் தந்து அதன் அறிவை மறைத்து மயக்கி நிற்பதாகும். இது தன் குணத்தினின்றும் மாறுபடுவதில்லை.

உயிர்தான் பற்றியிருப்பது ஆணவத்தை என உணரும்போதும், சிவபெருமானை சிக்கெனப் பிடிக்கும்போதும் ஆணவம் அகலுகின்றது. ஒளிமுன் இருள் விளங்கித் தோன்றாது. எனவே தான் உயிர் இறைவனைப் பற்றி நிற்கும்போது ஆணவம் தன் வலி கெட்டு நிற்கின்றது. வலி கெட்டது என்பது, தான் பற்றிக் கொண்ட உயிரின் இடத்தில் இருந்து விலகி நிற்பது எனக் கொள்ளலாம். இவ்வாற்றால் ஆணவம் அழிந்து போனதாகக் கருதிவிடக் கூடாது. ஆணவம் அநாதிப் பொருள். தோற்றமில் காலத்துப் பொருள். அது என்றும் அழிவதில்லை. அதனால், அது மாறாமலம் எனப்பட்டது. இயல்பில் மாறுவதுமில்லை. ஆணவ மலம் உயிரின் அறிவை மயக்கி அதற்கு அறியாமையை உண்டு பண்ணுவது எனக் கூறினார் ஆசிரியர். இந்த ஆணவமலத்தை உயிர் அறியாமல் இருப்பதோடு தன்னையும் அறிவதில்லை. இதுவே ஆணவத்தின் சொருப இலக்கணம். ஆணவம் தன்னையும் காட்டாது. தன்னைப் பற்றி இருக்கும் பொருளையும் அறிய வொட்டாது. இதனைத் திருவருட்பயன்

**ஒரு பொருளும் காட்டாது இருள் உருவம் காட்டும்**
**இரு பொருளும் காட்டாது இது** எனத் தரும்.

எனவே அறியாமை என்பது ஆணவ மலத்தை அறியாமை எனவும் ஆணவத்தின் இயல்பு அறியாமை எனவும் ஆணவத்தின் இயல்பு அறியாமையைத் தருவதுமாம். ஆணவம் தன் முனைப்புத் தோன்றிய வழி உயிருக்குத் தன்னையும் அறியவிடாது. உயிருக்கு வரும் நல்லறிவையும் விளக்க ஒப்பாது. தடுத்து மறைத்து நிற்கும் என்பதனை விளக்க அறியாமை ஆணவம் என்றார். அறியாமை என்பது அஞ்ஞானம், இதனைச் சிவஞானசித்தியார்

**ஒன்றதாய் அநேக சத்தி உடையதாய் உடனாய் ஆதி**
**அன்று அதாய் ஆன்மாவின் தன் அறிவோடு தொழிலை ஆர்த்து**
**நின்று போத்திருத்துவத்தை நிகழ்த்திச் செம்பினில் களிம்பு ஏய்த்து**
**என்றும் அஞ்ஞானம் காட்டும் ஆணவம் இயைந்து நின்றே**
எனத் தருகின்றது.

இச்செய்யுளால் ஆணவமலத்தின் இயல்பு தொழிற்பாடு என்பன விளங்கும். இவற்றையே அஞ்ஞானம் காட்டும் என்பதை இந்நூல் ஆசிரியர் அறியாமை ஆணவம் எனச் சுருங்கக் கூறி விளங்க வைத்தார்.

இதனைத் தொடர்ந்து வினைகள் பற்றிக் கூற முற்பட்ட ஆசிரியர் இந்த வினையையும் மாறாத மலம் எனக் காட்டியவாறு செய்யுளில் காண்க. இதுவும் அநாதி தோன்றிய மலமே. ஆயினும், ஆணவம் தொழிற்பட ஆரம்பித்தபோது உயிர் வினைகளைப் புரிகின்றது. அவ்வினைகளைப் புரிகின்றபோது, அவை காரியப் பொருளாய் நின்று அவற்றை அனுபவிக்க வைக்கின்றது. இது உயிருக்கு இடையில் வந்து தோற்றியது போல காணப்படினும் இது அநாதியே தோன்றியது. எனவே தான் இக்கன்மமும் மூலகன்பம் எனப்படுவதோடு ஆகந்து மலம் எனவும் அழைக்கப்படும். ஆகந்து மலம் இடையில் வந்து பொருந்தியது எனப் பொருள்தரும். இந்த வினை அநாதியே. ஆயினும் இவை உயிர்களுக்கு உயிர் மாறுபாடாக வேறாக வந்து தோன்றுகின்றது.

அவ்வாறு உயிர் தான் செய்யும் கன்மங்களுக்கு ஏற்ப (வினைகளுக்கு) பிறவி எடுக்கின்றது. பிறவி எடுக்கும்போது தான் புரிந்த வினைகளைத்

தானே அனுபவிக்கின்றது. எமக்குள்ள அறிவின்மைக் காரணமாக இறைவனின் மறைப்பாற்றல் காரணமாக அவ்வினைகளை நான் புரிந்தேன் என்றோ அவற்றை நான் அனுபவிக்கின்றேன் என்றோ எமக்குத் தெரிவதில்லை. இதனால், கன்மம் அநாதியென்பது தெளிவு. இதனைத் தமிழில் வினை என்பர். இந்த வினை நல்வினை தீவினை என்றாகி உயிருக்குப் பயன் தரும்போது சுக துக்கங்களில் இதம் அகிதங்களில் புகவைக்கின்றது. இவை பாவம் புண்ணியம் என வரும். புண்ணியத்தால் நற்பிறவி எடுத்தலும், துய்த்திலும், தீவினையால் துன்பப் பிறவியை எடுத்து தனது வினையை துய்ப்பதுமாகும். இவ்வினைகள் பற்றிய அறிவை அனுபவத்தால் அறிந்து கொண்ட உயிர் இறை அருளும் வரப்பெற்று இவற்றை நீக்கப் பெற்று நன்னிலையை அடையும். இவை பற்றிய சிறப்பு விளக்கங்களை இருபா இருபஃது பொருளுரையயும் விரிவுரையும் என்னும் எனது ஆக்கத்தில் வெளிவந்த நூலில் மிக தெளிவாக விளக்கியுள்ளேன். இங்கு விரிப்பில் பெருகும் என்பதனால் அதனை வந்துழிக் கண்டு தெளிக. மேலும் இங்கேயும் சித்தியாரில் தரப்படும் செய்யுளைக் காட்டுதல் பொருத்தம் ஆகையால் அதனையும் கற்போரின் கவனத்திற்கு அறியத் தருகின்றேன்.

**தன்மமோடு அதன்மம் ஆகி தான் இரு பயனும் தந்து**
**நன்மை தீமையினும் இன்பத் துன்பினும் நாடிக் காண**
**முன்னமே ஆன்மாவின் தன்மும்மலத்து ஒன்றது ஆகிக்**
**கன்மமும் மூலம் காட்டி காமிய மலமாய் நிற்கும்**

**இருவினை அநாதி ஆதி இயற்றலால் நுகர்வால் அந்தம்**
**வருமலம் சார்ந்து மாயா உருவுகள் மருவி ஆர்த்துத்**
**தருசெயல் முறைமை யாலே தான்பல பேதம் காட்டி**
**அரு அதாய் நின்று அரன்தன் ஆணையின் அமர்ந்து செல்லும்**

இவற்றால் மனவாசகங் கடந்தார் இருவினையையும் சுருங்கச் சொல்லி விளங்க வைத்தார். அவர் வினையைப் பற்றிக் கூறும் போது நீ ஆன சுகதுக்கம் குறியா வினை என்று கொள் என்றார். எனவே வினையே இன்ப துன்பம், சுக துக்கம், இதம் அகிதங்களைத் தருவன என்பது தெரிந்து தெளிவிக்கப் பெற்றது. அடுத்த செய்யுளில் இவ்வினையை வல்வினை என கூறுவதும் காண்க.

இந்தத் தன்மை வாய்ந்த ஆணவ மலத்தையும் கன்ம மலத்தையும் அவற்றின் இயல்பையும் நன்கு அறிந்து அவற்றினை நீக்குதற்கான முயற்சியில் ஆன்மா ஈடுபடவேண்டும். அவ்வாறு சாதனையில் நின்று இவற்றை வெற்றி கொள்வதே உண்மை விளக்கம் என்பதையும் அறிய வேண்டும். இவ்வாறு இவற்றை வென்றார், சென்றார் இன்ப வீடு என இங்கு முந்திய சொற்றொடரைக் கொண்டு வந்து இயைத்து பொருள்கண்டு சாதனை காண்போம். அச்சாதனை வீடு என்னும் பயனைத் தரும். இதுவே, நலம் தரு உண்மை விளக்கம் எனக் கொள்க.

## வெண்பா 23

### நான்யார் என் உள்ளம் ஆர்

**ஆறாறு தத்துவமும் ஆணவமும் வல்வினையும்**
**மாறா அருளால் வகுத்துரைத்தீர் - வேறு ஆகா**
**என்னை எனக்கு அறியக் காட்டீர் இவை கண்டேன்**
**உன்னரிய தேசிகரே உற்று**

## இதன் பொருள்

**ஆறாறு தத்துவமும்** - முப்பத்தாறு தத்துவங்களையும், **ஆணவமும்** - ஆணவத்தின் இயல்பினையும், **வல்வினையும்** - கொடிய வினையையும், **மாறா அருளால்** - என்றும் மாறுபடாத அருளினாலும் (குறைவுபடாத) **வகுத்துரைத்தீர் இவை கண்டேன்**- அவை இன்னவாறு என வகுத்துச் சொல்லினீர்கள் அவற்றை நான் நன்கு விளங்கிக் கொண்டேன், **வேறு ஆகா** - இத்தத்துவங்கள் ஆணவம் வினைகள் ஆகிய இவற்றின் நின்றும் வேறாகாமல் அவை தரும் இன்பத்தையே உண்மை என நம்பி அதில் நின்றுவிட்டேன். அதனால் நான் அவற்றினின்றும் வேறாகி நிற்பதற்கு (நீங்கி), **என்னை அறியக் காட்டீர்** - நான் யார் என் உள்ளம் ஆர் என்கின்ற வினாக்களுக்கு ஏற்ற விடை தந்து என் இயல்பினை எனக்குக் கூறியருள்வீர். **உன் அரிய தேசிகரே உற்று** - இவற்றை யான் தெளிவுறும்படியாக எண்ணுதற்கரிய பெருமையையுடைய எனது குருமூர்த்தியே! உணர்த்தி அருள்க.

## கருத்துரை

முப்பத்தாறு தத்துவங்களையும் ஆணவத்தின் இயல்பினையும் கொடிய வினையின் தன்மையையும் என்றும் மாறபடாத அருளினால் இவை இன்னவாறு என வகுத்துக் கூறினீர். சொல்லினீர். நான் நன்கு விளக்கிக் கொண்டேன். இத்தத்துவங்கள் ஆணவம் வினைகள் ஆகிய இவற்றின் நின்றும் வேறாகாமல் அவை தரும் இன்பத்தையே அவற்றுடனேயே உண்மை என நம்பி அதில் நான் நின்றுவிட்டேன். அதனால், நான் அவற்றினின்றும் வேறாகி நிற்பதற்கு (நீங்கி - விலகி) நான்யார் என் உள்ளம் ஆர் என்கின்ற வினாக்களுக்கு ஏற்ற விடை தந்து என் இயல்பினை (ஆன்மா) எனக்குக் கூறியருள்வீர். இவற்றை யான் தெளிவுறும்படியாக எண்ணுதற்கரிய பெருமையையுடைய எனது குருவே உணர்த்தி அருள்க.

## விரிவுரை

ஆன்மா அறிய வேண்டிய உண்மைகள் பல. அவற்றில் முதல் அறிய வேண்டியது தனக்கொரு துணைவன் இறைவன் உளன் என்பதே. ஆன்மா சிற்றறிவுடைய பொருளாயிருந்தும் அப்பரவான்மாவைப் பற்றி முதலில் தெரிந்து கொள்வதில்லை. காரணம் அவ்வான்மாவுடன் அநாதியாகவே பிணிப்புண்டு, அதற்கொரு குற்றமாக இருக்கும் ஆணவமே. இங்கு ஆசிரியர் தமது குருவிடம் முதலில் கேட்டு அறிந்து கொண்டவை மும்மலங்களும் அவற்றின் இயல்புகளும். தொழிற் பாடுகளுமே. ஆணவத்தின் இயல்பினை அஞ்ஞானம் - அறியாமைதான் ஆன்மாவை அந்த இறை நினைப்பை மறைத்து நிற்கின்றது. மேலும் இந்த ஆணவம் தான் உயிரைப் பற்றியிருக்கின்றேன் என்னும் நினைப்பையும் வராமல் உயிரைத் தடுத்து நிற்கின்றது. இவ்வாறு மறைத்துத் தடுத்து நிற்பதால் ஆன்மா தான் ஆணவத்தின் கட்டில் - பிணிப்பில் உள்ளேன் என்பதை உணருவதில்லை. நான் எனது என்னும் ஆணவச் செருக்கும் அவ்வாணவத்தின் காரிங்களான மோகம் அஞர் செருக்கு எனவாய எண்வகைக் குணங்களும் முனைந்து நிற்பதால் அது இறைவனைப் பற்றியோ தனக் கொரு காவலன் உண்டு என்பதையோ உணராமல் உலகத்திற்கு யானே காவலன் எனக் கொண்டு அறியாமைப் பட்டு அஞ்ஞானப்பட்டு நிற்கின்றது.

ஆணவம் சடப்பொருள் அறிவற்ற பொருள். அது அறியாமையையே தரும். இறைவனை அறிய வொட்டாது. இவ்வாணவ முனைப்பே நல்வினை தீவினை என்னும் கன்ம வினையைப் புரிய வைக்கின்றது. இக்கன்ம வினைகளைப் புரிகின்ற ஆன்மா அவ்வினைகளை அனுபவிக்கின்றது. அவ்வினைகளை இறைவனே உயிர்களுக்கு அனுபவிக்கும்படி ஊட்டுகின்றான். அவை அவற்றை நுகருகின்றன. அனுபவிக்கின்றன. ஆன்மா அதை ஏன் அனுபவிக்கின்றேன் என்ற நிலையைத் தெரியாமல் உணராமல் அறியாமல் அனுபவிக்கின்றது. அவ்வாறு நுகர்ச்சியை நுகரும் வேளையில், அந்நுகர்வை அனுபவித்தற்கு உதவ மாயை என்னும் மலம் வந்து புகுகின்றது. இம்மாயை ஆன்மாவின் குணங்களை ஆர்த்து உலக இன்பத்தில் ஆன்மாவை அடைய வைக்கின்றது. இதற்கென அது தனு கரண புவன போகங்களைக் கொடுத்து ஆன்மாவை அவற்றை நுகர்ந்து இன்பம் அனுபவிக்க வைக்கின்றது. இவ்வனுபவிப்பின் போது முயற்சியாலும் விருப்பு வெறுப்புகளாலும் மேலும் புதிய வினைகளைப் புரிந்து மாறாத பிறவித் துயரில் அழுந்தித் துயர்படுகின்றது.

இந்தத் தனு கரண புவன போகங்களைக் கொடுத்து ஆன்மாவை அவை தாம் செய்த வினைகளை நுகரச் செய்வது மாயையே. இது இறைவனின் ஆணைவழி நிற்கும் சத்தி. இச்சத்தி இறைவனுக்கு ஒரு சத்தியாக பரிக்கிரக சத்தியாக விளங்குகின்றது. இறைவன் ஐந்தொழில் இயற்றுபவன். இதில் தனது மறைப்பாற்றல் என்னும் தொழிலை திரோதான சக்தியைக் கொண்டே செய்விக்கின்றான். இதனால், ஆன்மா இந்த மறைப்பின் காரணமாக தான் புரியும் கன்மங்கள் இவையென்றும், அவற்றை அனுபவிக்கவேண்டியது தான் என்றும், அதனை அனுபவிக்கும்போது ஏற்படும் இதம் அகிதங்களால் தான் எடுக்க விருக்கும் பிறவிகள் பற்றியும், அப்பிறவிகள் தோறும் மீண்டும் மீண்டும் புரிகின்ற வினைகள் பற்றியும் (சஞ்சிதம் பிராரத்தம் ஆகாமியம்) எதுவும் தெரியாமல் இருக்கின்றது. இச்சத்தியை திரோதன சத்தி என்பர். இவ்வாறு மும்மலக் கட்டினுள்ளே இருக்கின்ற ஆன்மா, அப்பாசக் கட்டினுள் அழுந்தி, நில்லாதனவற்றையெல்லாம் நிலையான பொருள்கள் என உணரும். ஆணவ அறிவில் அல்லல்படுகின்றது. இதனைப் பாச ஞானம் என்பர்.

இவ்வாறு புல்லாகி..... தாவரசங்கமத்துள் எல்லாப் பிறப்பினையும் எடுத்து எடுத்து இளைத்து விடுகின்றது. இப்பிறவிகளின் அனுபவிப்பால் ஏற்படும் இன்ப துன்ப நிலைகளைக் கொண்டு ஆன்மா சிந்திக்கின்றது. அப்போது அதன் உண்மை இயல்பான அறிவு - சிற்றறிவு ஓரளவு உதவி செய்கின்றது. மாயையும் தன்னிடத்தில் தோன்றிய கலை என்னும் தத்துவங்கள் கொண்டு ஆணவத்தின் அறியாமையை விலக்கி அறிவு தலைப்பட வைக்கின்றது. இச்சிந்தனையும் இறை அருளும் ஆன்மாவை தான் இதுவரை அடைந்து வந்த பிறவிக்கெல்லாம் காரணம், தான் பொய்யான பொருள்களிலே கொண்ட விருப்பே என்பதனையும் அவை பொய் பொருள் எனவும் காணுகின்றது. அவை அறிவற்ற சடப் பொருள் என்பதனையும் கண்டமையால் அறிவுடைய பொருள் ஒன்று உளது என எண்ணத் தலைப்படுகின்றது. அந்த ஒரு பொருள் தான் தன்னை இயக்குகின்றது என்பதையும் உணர்ந்து கொள்ளுகின்றது. அப்படி யானால், அச்சடப் பொருளும் நான் அல்ல, அறிவுப் பொருளாய் என் வினைகளை எனக்குத் தந்து என்னை நுகரவைப்பது வேறோர் பொருள் என்றால் நான் யார் என்னும் வினாவை தனக்குத்தானே கேட்கின்றது. வினவுகின்றது. அந்த நிலையிலே நின்ற மாணிக்க வாசகப் பெருமான் **நான் யார் என் உள்ளம் ஆர் ஞானங்களார் என்னை யார் அறிவார்** வானோர் 'பிரான் எனை ஆண்டிலனேல் என்னும் கருத்தோடு தன்னைப் பற்றிச் சிந்திக்கிறது.

இவ்வாறாக எண்ணிய நூலாசிரியர் தன் குருவிடம் முப்பொருள் கூறும் சைவ சித்தாந்த அறிவைப் பெற விழைந்தவர் மும்மலங்களின் இயல்பையும் அதன் தொழிற்பாட்டையும் தெரிந்தவர். அதற்கு அடுத்தபடியாக உயிர் என்பது என்ன? அதன் இயல்பு என்ன? ஆணவத்திற்கும் ஏனைய மலங்களுக்கும் என்ன தொடர்பு? ஆணவ மலங்களுக்கும் உயிர்களுக்கும் என்ன தொடர்பு? இறைவனுக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பு என்பன போன்ற கேள்விகளைக் கேட்கத் தலைப்படுகின்றார். இதனையே வேறாக அறியக் காட்டீர் என்றார். ஆணவம் தன்னின் வேறானது என்பதையும் இறைவனையும் தன்னின் வேறான் பொருள் என்பதையும் தனது ஆன்ம அறிவில் அறிந்து கொண்ட உணர்ந்து கொண்ட உயிர் தன்னைப் பற்றி அறிய விழைகின்றது. நான் யார் என வினவுகின்றது. இத்தகு அறிவை வள்ளுவரும் தன்னுயிர் தானறப் பெற்றானை என்றார். இறைவனைப்

பற்றிய அறிவு பெறுமுன்னர் தன்னைப் பற்றிய அறிவு வேண்டும் எனக் காட்டினார். அதுவே பசு ஞானம் பாசஞானத்தில் இருந்து வந்த உயிர் பதிஞானத்திற்கு வருகின்றது. இனி இவ்வுயிரைக் கருவியென்றும் பிராணன் என்றும் உடல் என்றும் இந்திரியம் என்றும், எனவரும் ஆன்மவாதிகள் கூறி வாதிப்பர். அந்தப் பரபக்கச் சிந்தனையையும் உடைத்து எறிந்து சைவ சித்தாந்த நெறியில் உயிர் என்பது யாது. அதன் இயல்பு தொழில் குணம் என்பன யாவை என்பதை வினவினார்.

இனி முன்னே கூறியவற்றால் அறியப் பெற்ற தத்துவங்களும், மலங்களும் ஆன்மா அல்ல என்பதையும் உணர்ந்த பின்னரே இதனை வினவுகின்றார். ஒரு உண்மையில் இருந்து இன்னொரு உண்மைக்கு வரும் ஆசிரியர். அந்த உண்மை விளக்கத்தைப் பெறும் பொருட்டு ஆன்மா என்பது என்ன என்னும் வினாக்களை வெளிப்படுத்துகின்றார். தான் முன்பு வினை காரணமாக அடைந்த துன்பம் நினைவுக்கு வரவே வல்வினை என்றார். கொடியவினை எவ்வாறேனில் வினையைத் தந்து வினையை அனுபவிக்கும் வழி மேலும் வினைகளை புரிய வைத்துப் பிறவிக்கு ஏதுவாக நிற்கின்ற காரணத்தால் வல்வினை என்றார். துதிப் போர்க்கு வல்வினைபோம் என்னும் கந்தசஷ்டி வரிகள் இங்கு நினைவு கூரத்தக்கது.

இறைவன் அருள் என்றும் ஒரே பெற்றியாய் இருக்கும். வேண்டுதல் வேண்டாமை கொண்ட பெருமான் இன்னார் இனியார் எனக் கொள்ளாத பிரானின் அருள் எல்லாரிடத்தும் ஒரு பெற்றித்தாய் இருக்கும் என்பதனைச் செய்யுளில் மாறா அருளால் என அறிய வைத்தார். இச்சொற்றொடர் மெய்கண்டார் தமது மாணாக்கரிடத்தும் ஏனையோரிடத்தும் அருளுடைமையில் மாறாது இருந்தார் என்பதையும் தொட்டுக் காட்டுகின்றது.

அவ்வாறு மாறாத அருளுடைய இறைவன் நீயே. இதனை வகுத்துரைக்க வல்லவர். ஆகையால் மாறாத அருளால் வகுத்துரைத்தீர். இனியும் வரும் வினாக்களுக்கும் அத்தகு பெற்றியாய் நின்று வகுத்து உரைக்க வேண்டும் எனக் கேட்கின்றார். தனது குருவை விளித்து அவரின்

பெருமையைக் காட்ட உன்னரிய தேசிகரே என்றார். உற்று அறியக் காட்டீர் எனப் பொருள் காண்க. இனி தன் ஆசிரியர் தன்னிடத்தே மிக்க அன்புடையர், இவ்வன்பு தன் மாட்டு மாறாத அன்பு என்பதைக் காட்ட மாறாத அன்பு, தானும் அவ்வாறே மாறா அன்புடையர் என்பதும் உய்த்து உணரவைத்தார். சைவ சித்தாந்தத்தில் இறை இயல்பு காட்டி நிற்கும் ஒரு சொற்றொடரை மாறா அருளால் எனச் சுருங்கச் சொல்லிய பாங்கு நோக்கி இன்புறத்தக்கது.

## வெண்பா 24

### ஆன்மாவின் இயல்பு

**நன்றா உரைக்கக்கேள் நல்லசித்தின் முன் அசித்து இங்கு**
**ஒன்றாது சித்து அசித்தை ஓராது - நின்று இவற்றை**
**அன்றே பகுத்து அறிவது ஆன்மாவே என்று மறை**
**குன்றாமல் ஓதும் குறித்து**

### இதன் பொருள்

**நன்றா உரைக்கக் கேள்** - என் மாணக்கனே, நான் சொல்லப் போகும் செய்திகளை, உயிரைப் பற்றி அறிவினை, மிகவும் உற்றுக் கேட்பாயாக, **நல்ல சித்தின்முன் அசித்து இங்கு ஒன்றாது** - என்றும் ஒரே பெற்றித்தாக தூய அறிவாய் பேரறிவாய் விளங்கும் பரம் பொருளின் முன்னர் அறிவில்லாத உலகப் பொருள்கள் விளங்கித் தோன்றமாட்டா, **சித்து அசித்தை ஓராது** - பேர் அறிவுப் பொருளாகிய சிவபரம்பொருள், அந்த அறிவற்ற அப்பொருள்களை இவை இவை எனப் பகுத்து அறியான். அவற்றை அவன் அனுபவிப்பதும் இல்லை, **நின்று இவற்றை அன்றே பகுத்து அறிவது ஆன்மாவே** - அறிவில்லாது விளங்கும் உலகப் பொருள்களை ஆன்மா இவை இவை எனப் பகுத்தறிந்து தான் வேறு அவை வேறு எனப் பிரித்தறிய முடியாதவாறு அது அதுவாகவே நிற்கும், எனினும் பின்னர் பதி ஞானம் அடைந்து சிற்றறிவுடைய ஆன்மா பேரறிவாம் சிவத்தைச் சார்ந்து அத்திருவருளோடு பொருந்தி நின்று அறிவைப் பெற்று நிற்பது எனலாம், **மறை குன்றாமல் ஓதும் குறித்து** - இவ்வாறு சிவாகமங்கள் உயிரின்

இயல்பு பற்றியும் அதன் பண்பு பற்றியும் குறிப்பாக விளக்கிக் கூறுகின்றன.

## கருத்துரை

என் மாணாக்கனே. நான் சொல்லப்போகும் செய்திகளை உயிர் பற்றிய அறிவினை மிகவும் உற்றுக் கேட்பாயாக. என்றும் ஒரே பெற்றித்தாய் தூய அறிவாய் பேரறிவாய் விளங்கும் பரம்பொருளின் முன்பு அறிவில்லாத உலகப் பொருள்கள் விளங்கித் தோன்ற மாட்டா. பேரறிவுப் பொருளாகிய சிவப்பரம்பொருள் அந்த அறிவற்ற அப்பொருள்களை இவை இவை எனப் பகுத்து அறியான். அவற்றை அவன் அனுபவிப்பதும் இல்லை. அறிவில்லாது இருக்கும் உலகப் பொருள்களை இவை இவை எனப் பகுத்தறிந்து தான் வேறு அவை வேறு எனப் பிரித்தறிய முடியாதவாறு ஆன்மா அதுவாகவே நிற்கும். எனினும், பின்னர் பதி ஞானம் அடைந்து சிற்றறிவுடைய ஆன்மா பேரறிவாம் சிவத்தை சார்ந்து அத்திருவருளோடு பொருந்தி நின்று அறிவைப் (பெறுகின்றது) பெற்று நிற்பது எனலாம். இவ்வாறு சிவாகமங்கள் உயிரின் இயல்பு பற்றியும் அதன் பண்பு பற்றியும் குறிப்பாக விளக்கிக் கூறுகின்றன.

## விரிவுரை

இங்கு நூலாசிரியர் ஆன்மாவின் இயல்பு தான் என்ன? அதன் பண்பு என்ன? என்பதைத் தனது குருவிடம் வினவியபோது ஞான குருவாகிய மெய்கண்டார், தனது நன்மாணக்கரைப் பார்த்து, ஓ! நல்ல மாணாக்கனே என விளித்து அன்பினைக் காட்டியபின், நான் இங்கு உயிரின் இயல்புகள் பண்புகள் பற்றிக் கூறவுள்ளேன். அவற்றை மிகவும் கவனமாக மனதை அலையவிடாமல் உற்றுக் கேட்பாயாக எனக் கூறி அவற்றினைப் பற்றிய விளக்கத்தைக் கூறத்தொடங்கினார்.

அவர் கூறும் கூற்றை குறிப்பாகக் கூறுவதாயின் உயிர் சார்ந்ததன் வண்ணமாம் தன்மை கொண்டது என்பது. சார்ந்ததன் வண்ணம் என்ன என்பதை விளங்கிக் கொண்டால் ஆசிரியர் கூறிய கருத்து இங்கே புலப்பட்டுவிடும். அதனை உலகப்பொருளோடும் சிவத்தோடும் ஆன்மா நிற்கும் நிலையெனக் கொண்டு விளக்கத்தைச் சொல்வோம்.

உலகப் பொருள்கள் யாவும் சுட்டி அறியப் படுகின்ற பொருள்கள். இவை இவை இன்ன பொருள் எனக் குறிப்பாக அறியும் பொருள்களையே சுட்டி அறிவது என்பது. இது பசு இது ஆடு இவன் மனிதன் எனப் பொருள்களை குறித்து அறிவது தான் சுட்டி அறிதல் என்பது. அறிவால் அறிந்த பொருள்கள் யாவும் அழிபொருள்கள். அவை சடப் பொருள்கள். இவை யாவும் சுட்டி அறியப்படும் பொருள். எனவே சுட்டி அறியாத பொருள் ஒன்றும் இருத்தல் வேண்டும். அவ்வாறு சுட்டி அறியப் படாத பொருள் யாதோ எனின் அது சிவபரம்பொருளே. இவ்வண்ணத்தன் என அறிய ஒண்ணாதே என்பது திருமுறை. அறிவு சிற்றறிவு பேரறிவு என்பது. அறிவைப் பற்றி அறியும்போது வருவது. இங்கு அறியாமை என்பது. அறிவற்ற பொருள்கள். அது எதனையும் பகுத்தறியும் தன்மை அற்றது. அவ்வாறு அறிவில்லாத பொருள்களைச் சடப்பொருள் என அழைப்பர். அதனை அசத்து எனவும் கூறுவர். அ என்பது அன்மைப் பொருளைக் குறிக்கும், எதிர்ச்சொல். சத்து என்பது அறிவுடைய பொருள். எனவே அசத்து என்பது அறிவற்ற சடப்பொருள். அ + சத்து = அசத்து. ஆன்மா சிற்றறிவுடைய பொருள். பகுத்துணரும் பண்புடைய பொருள். ஆயினும் அது ஆணவ மலப் பிணிப்போடு அதன் வண்ணம் ஆகி தானும் அறியாமை வயப்பட்டு நிற்கும். அவ்வாறு நிற்கும்போது அவ்வான்மா அவ்வசத்துப் பொருளோடு அதனின் தான் வேறில்லை என்னும்படியாக ஒன்றித்து அது அதுவாக நிற்கும். அது அசத்து என நிற்கும். இறைவன் சத்துப் பொருள். பேரறிவுடைய பொருள். வாலறிவன் என்பர் வள்ளுவர். அதாவது தூய அறிவுடைய பொருள். அறிவுடைய பொருள் அறிவைச் சென்று சாருதல் இயல்பு. அறிவற்ற பொருள் அறிவுடைய பொருளைச் சென்று தானாகச் சேருவதில்லை. இறைவன் சர்வ வியாபகி. அவனிடத்தே இப்பிரபஞ்சம் உயிர்கள் உள்ளனவும் இல்லனவும் அடக்கம். இறைவன் அவையே தானாகி நிற்பவன் ஆகையால் அவற்றை அறிய வேண்டிய கட்டாயம் அவனுக்கு இல்லை. அவையே தானாக நிற்பதினால் சுட்டி அறியவேண்டிய தேவையும் இல்லை. இறைவனிடத்தே உயிர்களும் சட சித்துப் பொருள்கள் யாவும் அடக்கம் என்பதை கந்தப்புராணம்.

**கூறி மற்றினைய தன்மை குரைகடல் உலகம் திக்கு**
**மாறிலாப் புவனம் அண்டம் வானவர் உயிர்கள் யாவும்**

**ஆறுமா முகத்து வள்ளல் மேனியில் அமைந்த தன்றி**
**வேறிலை என்ன ஆங்கோர் வியன் பெரு வடிவம் கொண்டான்**

**எனக் காட்டும்**

**அண்டமும் புவனம் யாவும் அமரரும் பிறவும் தன்பால்**
**கண்டிடும் வடிவம் ஒன்று காட்டிக்**

**எனவும் காட்டும்**

எனவே அப்பொருள்கள் இறைவனைச் சென்று அடைவதில்லை. இறைவனுக்கு அப்பொருள்களால் ஆவது ஒன்றும் இல்லை. அவன் அவற்றை நுகர்வதும் இல்லை. ஆதலால் அசித்துப் பொருள் சிவத்தை ஓராது இதனை ஆசிரியர் நல்லசித்தின்முன் சித்து அங்கு ஒன்றாது எனவும் சித்து அசித்தை ஓராது எனவும் செய்யுளில் காட்டினார்.

இனிச் சிற்றறிவுடைய ஆன்மா தன் இனமாகக் கருதப் படும் அறிவுப் பொருளை சார்தல் இயல்பே. முன்பு, ஆணவ மலப் பிணிப்பின் காரணமாக அறியாமை வயப்பட்டு நின்ற ஆன்மா திருவருளின் துணைகொண்டு உணர்த்த உணர்தலின் அறியாமை ஓரளவு நீங்கப் பெற்று அறிவுடைப் பொருளாக நிற்கின்றது. ஆகின்றது. அது ஆன்மாவின் இயற்கை இயல்பு. சிற்றறிவுடைமை. எனவே தன் அறிவு விளங் கியமையால் தனக்குத். துணையாக விளங்கும் தனக்கு உண்மை ஞானத்தை விளைவிக்கும் வீட்டின்பத்தைத் தரும், பரம் பொருளே தனக்குள்ள உண்மையான பற்றுக் கோடு எனக் கொண்டு இறைவனைச் சார்ந்து அவ்விறைவனே தான் என்னும்படியாக ஒன்றித்து பிரிப்பின்றி நிற்கும். அவ்வாறு நிற்கும் வேளையில் ஆன்மா சத்துப் பொருளாக நிற்கின்றது. முன்பு அறியாமைப் பொருளைச் சார்ந்து அதன் வண்ணமாய் நின்ற உயிர் பின்னர் அறியாமை நீங்கி அறிவு வந்தபோது தன் இயல்பை உணர்ந்து பேரறிவுப் பொருளைச் சார்ந்து நிற்கின்றது. ஆன்மா சத்தாகவும் அசத்தாகவும் நிற்கின்றது. இதனால் ஆன்மா சதசத்து எனப்படுகின்றது. ஒரு பொருள் ஒரே நேரத்தில் ஒன்றையே செய்யும். எனவே உலகப் பொருளாகிய செயற்கைப் பொருளோடு நின்றபோது அறிவற்ற அசத்தாக நின்றது. பின்னர் இறைவனோடு ஒன்றி சத்தாக நிற்கின்றது. இதனால் சதசத்தாக ஆன்மா உளது என்பது பெற்றோம். அது அசத்தையும் சத்தையும் அறிவதாக உள்ளது.

இரண்டையும் அறியவல்லது. அதனையே ஆசிரியர் நின்று இவற்றை அன்றே பகுத்தறிவது ஆன்மாவே என்றார். இதனால் ஆன்மாவின் இயல்பும் சடப் பொருளின் இயல்பும் இறைவனின் இயல்பும் பேரறிவும் தன்வயத்தன் என்னும் குணங்களும் தெரிய வருகின்றன. இதனால் ஆசிரியர் கூறவந்த சார்ந்ததன் வண்ணமாதல் எனும் இயல்பும் சதசத் தாகவும் விளங்கும் குணமும் தெளிவாகின்றது. ஆன்மா எப்போதும் ஒன்றினைச் சார்ந்து தான் நிற்கும் பொருளாக அது நிற்கும் என்பதும் பெற்றாம். இதனை சிவஞானபோதம் அடுத்தது காட்டும் பளிங்கு போல எனக் காட்டும். இப்பாடலில் அன்றே என்னும் சொல் காணப்படுகின்றது. இதனால் ஆன்மா ஆதியாக அறிவுடைய பொருள் என்பதும் அது உள்பொருள் என்பதும், அது அழிவதில்லை. என்பதும் காணப்படு கின்றது. இவற்றை அன்றே பகுத்தறிவது என்னும் சொற்றொடர் இதனை விளக்குகின்றது. இதனை மனவாசகங்கடந்தாரின் ஞான குருவாகிய மெய்கண்டார். இருதிறன் அறிவுள்ளது இரண்டலா ஆன்மா எனக் காட்டினார்.

ஆசிரியர் செய்யுளில் ஆன்மாவே என எகாரம் வைத்து ஓதினார். இதில் இறைவனையும் பாசமாகிய மலங்களையும் பிரித்து ஓதினார். அதனால் இது பிரிநிலை ஏகாரம் ஆகி வந்தது. மேலும் மறை குன்றாமல் ஓதும் குறித்து என்றார். இதில் குறித்து என்பது குறியாக எனக் கொண்டு ஆன்மாவைப் பற்றிக் குறிப்பாகக் கூறும் என்றார். இதனால் ஆன்மா சார்ந்ததன் வண்ணமாம் தன்மை கொண்டது என்பதும் அது சதசத்து என்பதும் இரண்டலா ஆன்மா என்பதும் விதந்து காட்டப்பட்டது என்பதை அறிக. அவ்விரண்டையும் அறிவதாய் உபதேசியாய் நின்றது எதுவோ அதுவே ஆன்மா.

இதனால் உண்மை விளக்கம் கூறவந்த ஆசிரியர் ஆன்மாவின் குணவியல்பு சிற்றறிவு, இயற்கை இயல்பு அதன் அறிவுடைமை எனக் காட்டினார். எனவே பொய் பொருளாகிய மலங்களைச் சார்ந்து நிற்கும் செயற்கை அறிவின் நீங்கி அதன் உண்மை இயல்பை உணர்ந்து பேரறிவுடைய இறைவனைச் சார்ந்து நிற்றல் வேண்டும். அதுவே உயிர்க்குரிய பற்றுக்கோடு. வினைகளை நீங்குதற்கு இறை அருள் துணை செய்யும், உயிர் அவ்விறைவன் வழி சார்ந்து நிற்றலே அதற்குப் பெருமையும் பேறும் எனக் காட்டி உண்மை விளக்கம் செய்தார் எனக் கண்டு கொள்க.

## வெண்பா 25

### தத்துவங்கள் ஆன்மா அல்ல என்னும் உண்மை விளக்கம்

**தத்துவங்கள் ஆறாறும் தம்மைத்தாம் என்று அறியா**
**எத்தன்மை என்னில் இயம்பக்கேள் - சுத்தமாம்**
**ஆறு சுவையும் அறியாவே தம்மைத் தாம்**
**கூறில் அவை இவைபோல் கொள்**

### இதன் பொருள்

**தத்துவங்கள் ஆறாறும் தம்மைத்தாம் என்று அறியா** - 36 தத்துவங்களும் கருவிகள் ஆதலாலும், அறிவுள்ளன போலத் தோன்றினாலும் அவை அறிவற்ற சடப் பொருள்கள். எனவே அவை தம்மில் ஒன்றை தாமே அறியா. இவ்வாறு தத்துவங்கள் ஒன்றை ஒன்று அறியாது உணராது. (சடம் சடத்தை அறியாது சேராது.), **எத்தன்மை என்னில் இயம்பக் கேள்** - அது எவ்வாறு தம்மைத்தாம் அறியமாட்டா வென்பதை நான் கூறுவேன் கேட்பாயாக, **சுத்தமாம் அறுசுவையும் அறியாவே தம்மைத்தாம்** - அறு சுவைகளான இனிப்பு புளிப்பு உவர்ப்பு துவர்ப்பு கைப்பு கார்ப்பு என்பன உண்ணும் உணவில் கலந்தோ தனியாகவோ இருப்பினும், அவை ஒன்றினது சுவையை மற்றொன்று அறிவதில்லையே, **கூறில் அவை இவைபோல் கொள்** - இதற்கென ஒரு எடுத்துக்காட்டைக் காட்டுவோம். அத்தத்துவங்களும் இச்சுவைபோலத் தம்மைத் தாம் அறிய மாட்டாதனவே. இதனை அறிந்து உணர்ந்து கொள்வாய்.

### கருத்துரை

36 தத்துவங்களும் கருவிகள் ஆதலாலும் அறிவுள்ளன போலத் தோன்றினாலும் அவை அறிவற்ற சடப் பொருள்கள். எனவே அவை தம்மில் ஒன்றை தாமே அறியா. இவ்வாறு தத்துவங்கள் ஒன்றை ஒன்று உணராது. (சடம் சடத்தை அறியாது சேராது). அது எவ்வாறு தம்மை தாம் அறிய மாட்டா என்பதை நான் கூறுவேன் கேட்பாயாக. அறு சுவைகளான இனிப்பு புளிப்பு உவர்ப்பு துவர்ப்பு கைப்பு கார்ப்பு என்பன உண்ணும் உணவில் கலந்தோ தனியாகவோ இருப்பினும் அவை ஒன்றினது சுவையை மற்றொன்று அறிவதில்லை. இதற்கென ஒரு

எடுத்துக்காட்டைக் காட்டுவோம். அத்தத்துவங்களும் இச்சுவைபோலத் தம்மைத் தாம் அறியமாட்டதனவே. இதனை உணர்ந்து அறிந்து கொள்வாய்.

## விரிவுரை

முந்தைய செய்யுளிலே ஆன்மாவின் இயல்பினைப் பற்றி விளக்கிய ஆசிரியர் இச்செய்யுளில் ஆன்மாவைத் தத்துவங்கள் எனக் கூறுவோர் கூற்றினை மறுத்துத் தத்துவங்கள் ஆன்மாவல்ல என்பதைத் தெளிய வைக்கின்றார். ஆன்மா தத்துவம் ஆவதில்லை என்பதையும், தத்துவங்கள் ஆன்மா அல்லவென்பதையும் நிறுவி உண்மை விளக்கம் செய்கின்றார்.

36 தத்துவங்களையும் முன்னர் முறைபடக் கூறினார். அவை தோன்றும் முறைமை பற்றியும் கூறினார். அவற்றுள் ஒரு சில பரிணாம வளர்ச்சியால் ஆவதென்றும் ஒரு சில விருத்தி அடைந்து தோன்றுவனவெனவும் குறிப்பிட்டார். இறைவன் உயிர்கள் தற்போதம் பெற்று முத்தியை அடைய வேண்டும் என்னும் பேரிரக்கம் கொண்டவன். அவனுக்கு ஆன்மாவால் ஆகும் நன்மை எதுவும் இல்லை. அவன் அமலன், அவன் இயல்பாகவே பாசங்களின் நீக்கியவன். இது இவ்வாறாக, ஆணவ மலப்பிணிப்பில் கிடக்கும் ஆன்மாவின் அஞ்ஞானம் அறியாமை விலக்கி அதனைச் சோதனைகளுக்கு ஆளாக்கி அவற்றால் அனுபவம் அடைந்து தன்னையும் தன் முதல்வனையும் அறிகின்றது. இந்த அறிவு வளர்ச்சியைக் கொடுப்பதற்காக இறைவன் தன் அருளால் அதனை வளர்க்கின்றான். தனது அருட்சத்திகளில் ஒன்றான மாயை மூலமாகத் தனு கரண புவன போகங்களைப் படைத்து உயிரை நுகர்வுபடச் செய்கின்றான். இவ்வுலகம் உடல், கருவி என்பன எல்லாம் நிலையில்லாத பொருள்கள் எனவும் அவை அசித்து எனவும் சடப் பொருள்கள் எனவும் முன்னர் பார்த்தோம். எனவே மாயையில் தோன்றும் தனு கரணம் புவனம் போகங்களும் அழிவனவே. அழியும் பொருள்கள் யாவும் சடப் பொருள்கள் சுட்டியறியப்படும் பொருட்கள். அறிவில் பொருட்கள். எனவே மாயையில் தோன்றிய இப்பொருட்களும் அழிவனவே. மாயையில் தோன்றிய கருவிகளும் நிலையில்லாதன. கருவிகளாகிய தத்துவங்களும் அழியும் தன்மைத்தனவே. தத்துவங்கள்

ஆகிய பூதங்கள் புலன்கள் கரணங்கள் என்பன யாவும் சடப்பொருட் களாகவும் (அவற்றின்) அறிவற்ற பொருள்களாகவும் விளங்குகின்றன. குருடனுக்குக் குருடன் வழி காட்ட இயலாது. அதுபோல இத்தத்து வங்களும் அறிவில் பொருள்கள் ஆகையால் எதனையும் தாமே அறியாது அத்தோடு அவை சடமாகையால், அறிவற்றனவாகையால் தம்மையும் அறியாது. அறிவுள்ள ஒரு பொருளே அதனை அறியும் என்பது இதனால் கண்ட உண்மை விளக்கம்.

அறிவற்ற சடப் பொருள் ஆகிய கருவி அறிவற்ற இன்னொரு கருவியை அறிய முடியாதல்லவா. அதனாலே தான் ஆசிரியர் தத்துவங்கள் ஆறாறும் தம்மைத் தாம் என்று அறியா என்றார். தாம் தத்துவங்கள் என்புதனையும் அறியா. மற்றைத் தத்துவங்களையும் இவை எனவும் அறிய மாட்டாதன. இதனை ஆசிரியர் தம்மை அறியாது தாமும் தம்முள் அறியாது. என்று கூறினார். தம்முள் என்பது தமது உண்மை நிலையையும் தத்தமக்குள் உள்ள உண்மை நிலையையும் அறியாதன என்பதே. இந்த விளக்கத்தைக் கேட்ட மாணவருக்கு ஒரு ஐயம் தோன்றுகின்றது. பஞ்ச பூதங்கள் தன் மாத்திரைகள் ஞானேந்திரியம் கன்மேந்திரியம் என்பனவற்றை நோக்கும்போது அவை தம்மைத் தாம் அறியா. தாமும் அறியா என்பது சரி. ஆயினும் தத்துவங்களில் கலை வித்தை மனம் என்பன தொழிற்படுகின்றனவே. எனவே அவை எவ்வாறு அறியாது. அவற்றை அறிவில் பொருள் என எவ்வாறு கொள்ளலாம் என வினாவை எழுப்புகின்றது. அதனை அக்கருத்தைக் குறிப்பால் ஆசிரியர் உணருகின்றார். எனவே மேலும் விளக்கம் தேவை என்பதை அறிந்து கொண்ட குரு ஒரு உவமை மூலம் அதனை விளக்க முற்படுகின்றார். அறிந்த ஒன்றைக் கொண்டே அறியாத ஒன்றை நிறுவதுதான் ஆசிரியர் தொடக்கத்தில் இருந்தே கையாளும் உத்தி என்பதை நாம் இங்கு கவனத்தில் கொள்ள வேண்டும். எனவே எம்மால் உணர்ந்து அறியக் கூடிய ஒரு எடுத்துக் காட்டை உவமையைக் காட்டுகின்றார். உவமை இதோ. நாம் தினமும் பல வகை உணவுப் பண்டங்களையும் உணவையும் உண்ணுகின்றோம். அவ்வுணவுகள் பல வகையான சுவைகளைக் கொண்டிருக்கின்றன. காரமான உணவு உறைப்பு இனிப்பு உணவு கசப்பான உணவு என இவை சுவை எனப்படுகின்றன.

உலகிலுள்ள எல்லாப் பண்டங்கள் பதார்த்தங்கள் உணவுகள் யாவும் அறுவகைத் தான இச்சுவைகளில் அடங்கும். அவை யாவன இனிப்பு,

புளிப்பு, உவர்பு, கார்பு, துவர்ப்பு, உறைப்பு என்பன. இந்த சுவைகளின் உண்மைத் தன்மையை உணர்வது நாக்கு ஒன்றே. நாக்கின் நுனியில் இருக்கும் சிங்நுவை என்னும் பொருள் அதனைப் புலன்வழி அறிகின்றது. சுவையான பொருள்களை உண்ணும்போது சுவையாக இருக்கின்றது என நாம் கூறுகின்றோம். இச்சுவைகள் ஒன்றாக இருந்தோ தம்முள் கலந்தோ சுவையைத் தருகின்றது. ஏனெனில் அச்சுவையை உண்டு உற்று உணரும் புலன் அறிவு உயிர்களிடம் தான் உள்ளது. அச்சுவைகள் தம்மைத் தாம் இனிப்பு என்றோ அல்லது புளிப்பு என்றோ அறிவதில்லை. இவ்வாறு தம்மை அறியாதவாறு போல இனிப்புச் சுவை தன்னின் வேறான கைப்புச் சுவையை அல்லது புளிப்புச் சுவையை பகுத்து அறிய வல்லனவன்று. அவை அறிவில் பொருட்கள். அதனால் தம்மையும் அறியாது தம்மைச் சார்ந்திருக்கும் பிறபொருளையும் அறியாது. அதுபோலவே தத்து வங்களும் சடப் பொருள்கள் அறிவற்ற பொருட்கள் நிலையில்லாப் பொருட்கள் அழியும் பொருட்கள் ஆகையால் தம்மையும் அறிவதில்லை. தன்னுடன் கூடிய மற்றைய தத்துவங்களையும் அறிவதில்லை.

நீரில் ஆகாயம் காற்று அனல் என்பன கலந்திருக்கின்றன. இதனால் நீர் தான் இக்கூட்டுப்பொருட்களால் ஆனது என்பதைத் தான் அறிவதில்லை. அதுபோல அதனோடு கலந்திருக்கும் காற்று அனல் வெளி என்பனவும் தாம் நீரில் கலந்திருக்கின்றோம் என அறிவதில்லை. இவற்றை அறிவது ஒன்று உளது. அதுதான் உயிர் என்பது. உயிர் அறிவுடைய பொருள். தத்துவங்களோடு பொருந்தி அறிவைப் பெறுகின்றது. சுவைப் புலனை இதுதான் இது எனப் பகுத்துணர்ந்து கொள்ளும் அறிவு ஆன்மாவுக்கே உண்டு. எனவே தத்துவங்கள் வேறு ஆன்மா வேறு. ஆன்மா நல்லறிவைப் பெற்று சிவத்தைத் தலைப்படும் போது இத்தத்துவங்களால் பயனில்லை என்பதை உணர்ந்து அவற்றை நீக்கி விடுகின்றது. இறைவனை அறிந்து அவன்வழி நின்று உணரும்போது இத்தத்துவங்களின் உதவி உயிருக்குத் தேவைப்படவில்லை. ஏனெனில் தத்துவங்களால் அடையும் பயன் அப்போது உயிருக்கு ஒன்றும் இல்லை. எனவே உயிர் அவற்றை விலக்கிவிடுகின்றது.

இங்கு பொருள் வேறு அதன் வழிவரும் தத்துவங்கள் வேறு, சிவம் வேறு. அதனின்றும் மாயையால் வரும் தத்துவம் வேறு என்பதனை நாம் நன்கு புரிந்து கொள்ளவேண்டும். தத்துவங்கள் கருவிகளேயன்றிக்

கருத்தாவல்ல. எனவே அறிவுடைப் பொருளாக நிற்கும் ஆன்மா சதசத்தாக இருக்கும். ஆன்மா சிதசித்தாக இருக்கும் ஆன்மா தத்துவங்களைப் பொருந்தி அறிவைப் பெறும் பொருளாக நிற்கின்றது. எனவே தத்துவங்கள் வேறு ஆன்மா வேறு என்பது நிரூபணமாகின்றது. அதனைச் செய்யுளில் அவை இவைபோல் கொள் எனக் கூறி நிற்பதால் சட அறிவுடைய புலன்வழி கண்ட சுவைகள் தத்துவங்கள் போன்றன. தன்னையும் தம்மோடு இருக்கும் பிற பொருளையும் அறியாது தம்மின் வேறான உயிரையும் அறியாது. இதனால் ஆன்மா தத்துவங்கள் அல்ல என உணர்த்தினார். இங்கு சிவஞான போதச் சூத்திர கருத்தை

**உளது இலது என்றலின் ஆன்மா உளது**
**ஐம்புலன் அறிதலின் ஆன்மா உளது**
**ஒடுக்கம் அறிதலின் ஆன்மா உளது**
**உணர்த்த உணர்தலின் ஆன்மா உளது**

ஆராய்ந்து நினைவு கொண்டு தத்துவங்கள் என்பன ஆன்மா அல்ல. கரணங்கள் அவற்றுள் ஒன்று எனவும் காட்டி நிற்றல் காணலாம்.

இங்கு அருணந்தி சிவசாரியார் இயற்றிய இருபா இருபஃது என்னும் நூலில் ஒரு மாண்புரை.

**கால முதலிய கருவி ஆயின்**
**மாலும் பிரமனும் எனை வந்து அடையார்**
**ஒதுங்காலை ஒன்றை ஒன்று உணரா**
**சேதனம் அன்று அவை பேதை செயலும் இச்**
**சேதனவானால் செயல் கொள வேண்டும்**

எனக் காட்டி தத்துவங்களும் கருவிகளும் ஆன்மா அல்ல வென்பதைக் காட்டியவாறு காண்க. இதனால் தத்துவான்மவாதிகளையும் மறுத்துரைத்தவாறு காண்க. மேலும் உயிர் வேறு, இறைவன் வேறு, கருவிகள் வேறு, எனவும் காட்டியவாறு காண்க.

எனவே இக்கருவியால் வரும் இன்பம் நிலையானவை அல்ல. அவை உயிருக்கு ஓரளவு காலத்திற்கு அறிவைத் தந்து நிற்பன எனவும் கருவியால் வரும் இன்பம் பொய்யான இன்பம் எனவும் இதனைவிட மேலான

இன்பம் என உள்ள பேரின்ப நிலைக்கு நீ செல்வாயாக என உண்மை விளக்கத்தை உய்த்து உணர்ந்து கொள் எனக் கூறிய மறைபொருள் காண்க.

## வெண்பா 26

### தத்துவங்களை அறிவது ஆன்மாவே

**அறுசுவையும் அருந்தி அவை தம்மை**
**வேறு ஒருவன் கூறியிடும் மேன்மைபோல் - ஆறாறும்**
**ஒன்றை ஒன்று நாடி உணர்ந்து ஓதில் அதில் உற்றறிவாய்**
**நின்ற பொருள் தானே காண் நீ**

## இதன் பொருள்

**அறுசுவையும்** - இனிப்பு, புளிப்பு, கைப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு எனும் அறுவகைச் சுவைகளையும், **அருந்தி அவை தம்மை வேறொருவன்** - அச்சுவைகளுக்கு வேறாக நிற்கின்ற ஒரு மனிதன் - (ஆன்மா) அச்சுவையுடைய உணவினை உண்டு, **கூறியிடும் மேன்மை போல்** - அச்சுவையில் இவை இனிப்பு இவை கைப்பு இவை புளிப்பு என்பன போன்ற சுவைகளின் வேறுபாடுகளைத் தெரிந்து, அவற்றைக் குறித்துச் சொல்லுகின்ற மேம்பாடுடைய தன்மை போல, **ஆறாறும் ஒன்றை ஒன்று நாடி உணர்ந்து** - முப்பத்தாறு தத்துவங்களையும் ஒவ்வொன்றாக ஆராய்ந்து அவற்றின் தன்மை இதுதான் என உன் உள் அறிவால் உணர்ந்து, **ஓதில்** - கூறி நிற்பாய் ஆனமையால், **அதில் உற்று அறிவாய்** - நீ அவற்றில் பொருந்தி நின்று அவற்றை அறிந்து கொள்வாய், **நின்ற பொருள் தானே காண் நீ** - எனவே அந்த 36 தத்துவங்களின் தன்மையை உண்மை விளக்கத்தைத் தெளிந்து அவற்றின் வேறாய் நிற்கின்ற அறிவுடைப் பொருள் நீயாகிய ஆன்மா தான் என்பதை கண்டு கொள்வாய். அதுவே உன் மேன்மை - இதனால் தத்துவங்கள் தரும் இன்பம் அறிவு என்பன சட அறிவுகள் என்பதை உணர்ந்து, உண்மை அறிவாகிய இறைவனை நாடு.

## கருத்துரை

இனிப்பு, புளிப்பு, கைப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு எனும் ஆறுவகைச் சுவைகளையும், அச்சுவைகளுக்கு வேறாக நிற்கின்ற ஒரு மனிதன் (ஆன்மா) அச்சுவையுடைய உணவை உண்டு அச்சுவையில் இவை இனிப்பு, இவை கைப்பு இவை புளிப்பு என்பன போன்ற சுவைகளின் வேறுபாடுகளைத் தெரிந்து, அவற்றைக் குறித்துச் சொல்லுகின்ற மேம்பாடுடைய தன்மை போல, முப்பத்தாறு தத்துவங்களையும் ஒவ்வொன்றாக ஆராய்ந்து அவற்றின் தன்மை இதுதான் என உன் உள் அறிவால் உணர்ந்து கூறி நிற்பாய் ஆனமையால், நீ அவற்றில் பொருந்தி நின்று அவற்றை அறிந்து கொள்வாய். எனவே, அந்த 36 தத்துவங்களின் தன்மையை உண்மை விளக்கத்தைத் தெளிந்து அவற்றின் வேறாய் நிற்கின்ற அறிவுடைப் பொருள் நீயாகிய ஆன்மா தான் என்பதைக் கண்டு கொள்வாய். அதுவே உன் மேன்மை - இதனால் தத்துவங்கள் தரும் இன்பம் அறிவு என்பன சட அறிவுகள் என்பதை உணர்ந்து உண்மை அறிவாகிய இறைவனை நாடு.

## விரிவுரை

முந்திய செய்யுளில் தத்துவங்கள் ஆன்மா அல்ல எனக் காட்டினார். அத்துடன் அவை தம்மையும் தான் சார்ந்திருக்கும் பொருளையும் அறியவல்லவன அல்ல என்பதும் காட்டினார். மேலும் தத்துவங்களே ஆன்மா எனக் கூறும் தத்துவ வாதிகளின் பரபக்கச் சிந்தனையை மறுத்து சைவசித்தாந்த உண்மையை வலியுறுத்தினார். அதற்காக எடுத்துக் காட்டாக காட்டிய உவமை மூலம் தத்துவங்களைப் பொருந்தி நின்று அறிவை உணர்வது ஆன்மா என்பதும் காட்டினார். இச்செய்யுளும் ஆன்மாவின் மேன்மை காட்டுதற்கென வந்த செய்யுளே.

அறுசுவை உண்டி அமர்ந்தில்லாள் ஊட்ட மறுசிகை நீக்கி உண்பாரும், என்னும் பாடல் வரி நாலடியார் என்னும் நூலில் வருவது. அங்கே இல்லாள் ஊட்டுவதும் கணவன் அதனை உண்டு அவற்றின் சுவையை மெச்சி மீண்டும் மீண்டும் வாங்கி உண்பதனையும் காண்கின்றோம். இங்கே ஒரு மனிதன் அவ்வுணவை உண்டு அதன் சுவைகளைப் புலன்வழி பெற்று அதனை மீண்டும் மீண்டும் சுவைக்க விரும்புகின்றான். இதனால் அவன் புலனால் வரும் சுவை இன்பத்தை நாடி நிற்கின்றான்.

**கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புலனும்**
**ஒன்டோடி கண்ணே உள**

என்பர் வள்ளுவப் பெருந்தகை. இதனால் புலன்களால் பெறும் அறிவு ஆன்மாவை அதிலே உறைப்பாக நிற்கவைக்கின்றது. அதற்கு மேலே வேறு இன்பம் இல்லை என எண்ணித் துயர்படுகின்றது. இந்தச் சுவைகளை அறியும்போது உண்ணும் உணவில் புளிப்புக் கூடின வழியோ அன்றி இனிப்பு அதிகமான போதோ குறைந்த போதோ அதனை அது காணும். உணரும். இதனைக் கூறிநிற்கும் மனிதன் ஒரு ஆன்மாவே, அறுசுவை வேறு என்பதும் அச்சுவைகள் தம்மை அறியாதன. அதனை அருந்தி உண்பவனையும் அறியாது என்பதும் காட்டுகின்றார். கண்டோம்.

இங்கு ஆன்மாவாகிய மனிதன், உயிருடைப் பொருளாகிய மனிதன் அதன் சுவையை பொருளை எடுத்து உண்பதோடு அல்லாமல் அதன் சுவையையும் இன்னதென எடுத்துரைக்கின்றான். அவற்றை அவன் கூறி நிற்பதினால் அச்சுவையின் வேறாக அவன் உள்ளான் என்பதும், மேம்பாடான அறிவுடையவன் என்பதும் இவ்வுவமையால் பெறப்பட்டன.

இவ்வாறே தத்துவங்களையும் உயிர் பொருந்தி நின்று அவற்றை நுகர்ந்து அறிவைத் தானே பெறுகின்றது. தத்துவங்கள் சடப் பொருள்கள். அவை அறிவில்லாத பொருள்கள் என்பதும் முன்னர் கண்டோம். உயிர் அறிவுடைய பொருள். தத்துவங்களின் வேறான பொருள். எனவே இந்த ஆன்மாவாகிய நீயே மேன்மையுடையை. அத்தகு மேன்மை உடைய அறிவைக் கொண்டு மேன்மை இல்லாத சடப் பொருளைப் பொருந்தி நின்று அதன் வழி வரும் அனுபவத்தையும் அதனால் அடையும் நல்லறிவையும் பெறுகின்றாய் என்றார். இதனை ஆசிரியர் அதில் உற்று அறிவாய் நின்ற பொருள் தானே காண் நீ என்றார். மேலும் இங்கு நின்ற பொருள் எனக் கூறி தத்துவங்களின் நிலையாமையையும் உயிரின் நித்தமுடைமையையும் காட்டியவாறும் காண்க. அவ்வாறு நிற்பதுவே ஆன்மா. அதுவே அதன் சிறப்பு என்றார். உன் அறிவால் ஆராய்ந்து உணர்ந்து கொள், என்பதை நாடி உணர்ந்து

என்றார். தானே காண் நீ என்பதினால் தத்துவங்களையும் அதன் இயல்புகளையும் உணர்ந்து கொள்ளும் ஆற்றல் ஆன்மாவுக்கே உண்டு. இதனைப் பிரிநிலை ஏகாரமாய் கொண்டு கூட்டிப் பொருள் காண்க. நின்ற பொருள் என்பதினால் அத்தத்துவங்கள் ஒருபோது தேவையற்றனவாகின்றன. சிவஞானம் - பதிஞானம் - பெற்றபோது அந்த இறை ஞானத்தில் ஆன்மா தானே அதுவாய் வியாபகப் பொருளாய் நிற்கும் நிலையில் தத்துவங்கள் தேவையற்றதாகி விடுகின்றன. இறைவனோடு நின்ற பொருள் அநாதிப் பொருள் என்பது மட்டுமன்றி அத்தத்துவங்கள் இல்லாமல் தானே வேறு பொருளாக நின்ற பொருளாய் விளங்குவது ஆன்மா என்பதும் அறியக் கிடக்கின்றது. எனவே ஆன்மா அழிவதில்லை. அது நித்தியப் பொருள், அநாதிப் பொருள். சைவ சிந்தாந்தம் காட்டும் முப்பொருள் உண்மையில் இதுவும் ஒன்று என்பதும் பெற்றாம்.

எனவே 36 தத்துவங்களில் பொருந்தி அவற்றை அறிந்து கொண்டது ஆன்மா. தத்துவம் வேறு ஆன்மா வேறு எனக் காணப்பட்டது. இதனை அனுபவத்தால் கண்டு கொள் என்பதையும் காட்டுவதற்கு தானே காண் நீ என்றார்.

ஒருவன் என்பது ஆன்மாவைக் குறித்து நிற்கும் நிலை. மேலும் தத்துவங்கள் நிலையில்லாதன. அவை அழியும் தன்மைத்தன. பொய்யான இன்பத்தைத் தருவன. அவற்றை நீக்கும் போதே இறைவனைத் தலைப்படலாம் என்பதினால் அதனை உணர்ந்து அவற்றை விட்டு நீங்கிக் கொள். உன் உள்ளறிவால் அதனை உணர முடியும். தத்துவங்கள் நீயல்ல. எனவே உனக்கு அதனால் வரும் அறிவு பாச அறிவு. இதனை உணர்ந்து பதி அறிவைப் பெறுவாயாக. உன் இயல்பான தன்மை அறிவு. அறிவுடைமை. அறிவின்மை அஞ்ஞானத்தைத் தரும் இவற்றின் வழிச் செல்லாது விட்டு உண்மையை அறிந்து உய்திக்கான வழியை நீயே காண் எனக் காட்டி உண்மை விளக்கத்தை ஊட்டியவாறும் உணர்க.

## வெண்பா 27

### இறைவன் வேறாய் நிற்றல்

**குன்றா அருளாலே கூறினீர் என்வடிவு**
**பொன்றாத நும் உருவம் போதியீர் - நின்று அருக்கன்**
**கண்ணுக்குக் காட்டுமாப் போலே உனதறிவின்**
**நண்ணிஅறி வித்திடுவோம் நாம்**

## இதன் பொருள்

**குன்றா அருளாலே கூறினீர் என்வடிவு** - பூரணப் பேரருளினாலே அடியேன் தெளியும் படியாக என் (உயிரின்) உண்மை இயல்பினை சொல்லி அருளினீர், **பொன்றாத நும் உருவம் போதியீர்** - எக்காலத்தும் அழியாத தூய ஞானமே உருவாக நிற்கும் உமது இயல்பினை (பரவான்மா) அடியேன் தெளிந்து உய்யும்படி எனக்கு எடுத்துச் சொல்லி உபதேசம் செய்து அருளுவீராக, **நின்று அருக்கன் கண்ணுக்குக் காட்டுமாப் போல** - சூரியன் தனது கதிரொளியினால் கண்ணுக்குக் காணும்படி ஒளியினைத் தந்து கலந்து தான் வேறாக நின்று பொருள்களைக் கண்டு அறியும்படி செய்கின்ற அத்தன்மை போல, **உன் அறிவில் நண்ணி** - யானும் உனது அறிவிலே பொருந்தி (நின்று) அதற்கு வேறாய் நின்று, **அறிவித்திடுவோம் நாம்** - உயிராகிய உனக்கு பொருள்களைக் கண்டு அறிந்து கொள்ளும்படி செய்து நிற்கின்றேன். அதனை உணர்ந்து கொள்வாயாக.

## கருத்துரை

பூரணப் பேரருளினாலே அடியேன் தெளியும்படியாக என் (உயிரின்) உண்மை இயல்பினைச் சொல்லி அருளினீர். எக்காலத்தும் அழியாத தூய ஞானமே உருவாக நிற்கும் உமது இயல்பினை (பரவான்மா) அடியேன் தெளிந்து உய்யும்படி எனக்கு எடுத்துச் சொல்லி உபதேசம் செய்து அருள்வீராக. (எனக் கேட்ட மாணவனுக்கு விடையாக) சூரியன் தனது கதிரொளியினால் கண்ணுக்குக் காணும்படி ஒளியினைத் தந்து கலந்து தான் வேறாக நின்று பொருள்களை கண்டு அறியும்படி செய்கின்ற அத்தன்மை போல, யானும் உனது அறிவிலே பொருந்தி (நின்று) அதற்கு

வேறாய் நின்று, உயிராகிய உனக்குப் பொருள்களைக் கண்டு அறிந்து கொள்ளும்படி செய்து நிற்கின்றேன். அதனை நீ உணர்ந்து கொள்வாயாக.

## விரிவுரை

நூல் ஆசிரியர் தனது குருவாகிய மெய்கண்ட தேவ நாயனாரைத் திருவெண்ணெய் நல்லூர்த் திருக்கோயிலில் எழுந்தருளி இருக்கும் சிவபிரான் எனக் கண்டு நிற்கின்றார். இதனை அவர் செய்யுளிலே காட்டியுள்ளமையை நாம் அறிகின்றோம். அருள் நந்தி சிவாச்சாரியார் அத்தெய்வமே வந்து தனக்கு ஞானாசிரியனாக நின்று சிவஞானம் போதித்துத் தன்னை ஆட்கொண்டார் எனவும் காட்டுவார். அந்நிலை பற்றி இந்நூல் ஆசிரியர் மனவாசகங்கடந்தாரும் இச்செய்யுள் மூலம் மெய்கண்டாரையே இறைவனாகக் கண்டு குன்றாத நும் உருவம் போதியீர் என விண்ணப்பித்த வண்ணம் காணலாம். நும் என்னும் சொல் மெய்கண்டார் ஆகிய குருவும் சிவபிரானும் ஒருவரே எனக் கொண்டு வேறின்மை காணாது வேண்டி நிற்றல் தெளிகின்றோம்.

இறைவன் உண்மைப் பொருள் நிலையான பொருள். குறைவிலாத அமுதான பொருள். நிறைவான அரும்பொருள். அழியாத பொருள். எனவே தான் ஆசிரியர் குன்றா என்னும் சொல்லைக் காட்டி நும் உருவம் என்றார். முப்பொருள்களும் உண்மைப் பொருள்கள். அழியாப் பொருள்கள். நிலையான பொருள்கள். அநாதிப் பொருள்கள். இறை உயிர் தளை என்பன அவை. இதுவரை இறைவன் ஞானகுரு மெய்கண்டார் உயிரையும் தன்னையும் பற்றிய இயல்புகளைக் கூறினார்.

அதனை ஆசிரியர் பெருமானே நினது பேரருளினாலே, பேரறிவி னாலே சிற்றறிவுடைய அடியேனுக்குக் கூறி அருளினீர் என்றார். இதனைக் குன்றா அருளினாலே எனக் காட்டி இறைவனின் பேரரு ளினையும் பேரறிவினையும் வியந்து கூறியும், தனது சிற்றறிவின் இழிவுபற்றியும் வேறுபடக் காட்டும் வண்ணமாக குன்றா அருளாலே என்றார். மேலும் அறிவில் பொருள்களாகிய மும்மலங்களையும் விளக்கினீர் என்பதனையும் ஈண்டு வருவித்து உரைக்க.

இவ்வாறு வினவிய ஆசிரியர் இனி யான் அறிந்து தெளியும்படி போதியீர் என்றார். இங்கே கூறினீர் என்பதும் போதியீர் என்பதும் இருதன்மைத்தான சொற்கள். கூறுதல் அறிதற்பொருட்டு. போதித்தல் உணருவதோடு உய்திபெறும் பொருட்டு. ஆதலால் அவ்விரு சொற்களும் கையாளப் பட்ட பான்மையை உணர்ந்து கொள்ளலாம்.

இறைவன் ஞானமே வடிவானவன். நூலாசிரியர் தனது கேள்விகளைக் கேட்ட போது ஞானாசிரியர் அவரைப் பார்த்து யோகம் நிகழ் புதல்வா என்றார். அதாவது ஞானப் பொருளை வேண்டி நிற்கும் மாணாக்கனே எனப் பொருள் கண்டோம். சரியை கிரியை யோகம் ஆகிய நெறிகள் எல்லாம் கடந்து யோக நெறியில் நிற்கும் மாணாக்கனை யோகம் நிகழ் புதல்வா என்றாரல்லவா. மாணவன் வேண்டி நிற்பது ஞான அறிவு என்பது வெள்ளிடை அதனைக் கூறுதல் இயலாது. அதனைப் போதித்தலே உபதேசித்தலே முறைமை ஆகும் என்பதினால் இறைவனை மெய்கண்டாரைப் பார்த்து அதனை எனக்குப் போதியீர் என்றார். ஞான குரு கூறுவது இல்லையென்பதும் அதனைப் போதித்தலே முறைமை ஆகும் என்பதினால் போதியீர் என்றார்.

அடுத்து நூலாசிரியர் என் வடிவு என்றும் நும் உருவம் என்றும் கூறிநிற்கின்றார். இதனால் வடிவு என்பதும், உருவம் என்பதும் உயிரின் இயல்பையும் இறைவன் இயல்பையும் கூறும்படி வேண்டினார் எனப் பொருள் காண்க.

இறைவன் என்றும் உயிர்களுக்கு அருள் புரிவான். கேவல நிலையிலும் சகல நிலையிலும் இறைவன் உயிருக்கு வெளிப்படாமலே, கரந்து நின்றே, மறைந்து நின்றே அருளுகின்றான். அவ்வாறு அருளுகின்ற அவன் உயிருடன் ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நின்று அருள் புரிவான். இங்கு ஆசிரியர் தனது குருமுதல்வரான மெய் கண்டார் கூறிய அவையே தானேயாய், என்னும் வரிகளுக்குக் கூறப்படும் அவையேயாய் தானேயாய் அவையே தானேயாய் என்னும் முக்கூற்று முறைமையை மாற்றி இறைவன் வேறாய் தானேயாய் நிற்கும் முறைமையை முதலில் கூறுகின்றார். இவ்வாறு சொல்ல வேண்டிய காரணம் ஆசிரியர் தான் சொல்லப் புகுந்த சித்தாந்த உண்மை விளக்கத்தை ஆகமங்கள் சொன்ன

அடைவிலேயே அதனை எடுத்துரைக்கின்றார் எனக் கொள்ள வேண்டும். எனவே இறைவன் உயிர்களுக்கு வேறாய் நிற்றலையே இங்கு காட்டுகின்றார். உயிர் வேறு, இறைவன் வேறு, இரண்டும் இரண்டு பொருள்கள். ஆயினும் இறைவன் அருளின்றி உயிருக்கு உய்தி இல்லை. அவன் உய்திதருவான் என்பதை உதாரணம் காட்டி விளக்குகின்றார்.

சூரியன் ஒளி எவ்விடத்தும் ஒரே பெற்றித்தாய் இருக்கும். அவ்வொளி காலையில் பரந்தபோதுதான் உலகிலே இருக்கின்ற பொருட்கள் விளக்கம் ஆகின்றன. சூரிய ஒளியினால் பொருட்கள் ஒளிவிளக்கம் பெற்றுத் துலங்குகின்றன. அவ்வாறு துலங்க நிற்பினும் கண் அப்பொருளைக் கண்டறிய வல்லது அன்று. எனவே தான் சூரிய ஒளி கண்ணுக்கும் ஒளி கொடுத்தே காண வைக்கின்றது. சூரியன் கண்ணுக்கு வேறாய் நின்றே அப்பொருளை காண வைக்கின்றது. அவ்வேறாய் நிற்றலையே சிவஞான போதம் தானேயாய் என்னும் சொல் கொண்டு விளக்குகின்றது. தானேயாய் என்பது இறைவன் ஆன்மாவின் வேறாய் நின்று அருளும் முறைமையே பேசப்படுகின்றது. ஆசிரியர் காட்டும் எடுத்துக்காட்டும் மெய்கண்டார் தரும் எடுத்துக் காட்டும் இங்கே ஒன்றாகவே இருக்கின்றது. அதாவது கண் காண வேண்டிய பொருளைக் கண்ணுக்கு வேறாய் நின்று கதிரவன் தன் ஒளியினாலே காணுமாறு விளக்கிக் காட்டுகின்றது.

அது போன்று ஆன்மா அறிய வேண்டிய பொருளை அறிவை அவ்வான்மாவுக்கு வேறாய் இறைவன் தன் அருளினாலே அறியுமாறு அதற்கு உணர்த்தி நிற்கின்றான். இறைவன் வேறாய் நிற்பதற்குக் காரணம் உயிருக்கு உணர்த்தும் பொருட்டேயாம். இதனைச் சிவஞான முனிவர் இறைவன் தானேயாய் கண் காண்டற்குக் கதிரவன் துணையாய் இருத்தல் போல உயிர் எதனையும் அறிதற்கு இறைவன் துணையாகின்றான். எனினும் அக்கண்ணுக்குக் கதிரவன் வேறாதல் போல இறைவனும் உயிரினும் வேறாவான். இதனை வேறாய் நிற்றல் என்பர். இவ்வாறு நிற்பது உயிர். எதனையும் அறியத் தான் அதற்கு அறிவித்தற்குரிய துணையாய் நிற்பதற்காம் என விளக்குவார்.

இனி காட்சி நிகழும் இடத்தில் கண்ணொளியும் கதிரவன் ஒளியும் இரண்டறக் கலந்து நிற்பினும் கண்ணொளியின் தன்மை வேறு. கதிரவன்

ஒளியின் தன்மை வேறு. அவையாவன கண் காணும் தன்மையுடையதே அன்றிக் காட்டும் தன்மை உடையதன்று. கதிரவன் ஒளி காட்டும் தன்மை உடையதாம். இறைவன் கலப்பினால் உயிர்களேயாய் நிற்பினும் பொருள்தன்மையால் அவற்றின் வேறாய் நிற்றல் விளங்கும். இதனை நூலாசிரியர் இங்கு நின்று அருக்கன் கண்ணுக்குக் காட்டுமாப் போல் உன் அறிவில் நண்ணி அறிவித்திடுவோம் நாம் என்றார்.

இதனால் நாம் பெற்ற உண்மை விளக்கம் யாதோ வெனில் இறைவன் வேறு உயிர்கள் வேறு என்பது. இதனையே ஆசிரியரும் கூறவந்த பொருளாகக் காட்டி நிற்றல் புரிகின்றது. இது இறைவன் உயிரின் வேறாய் நிற்றல் என்னும் இயல்பினைக் காட்டுகின்றது. மேலும் இறைவனும் உயிரும் பொருள் தன்மையால் இரண்டாயும் கலப்புத் தன்மையால் ஒன்றாயும் நிற்கும் அத்துவித சம்பந்தமும் தெளிவாகின்றது. எனவே இறைவன் உயிரின் வேறாவான் என்பதும் உயிரேயாயும் அத்துவிதமாய் நிற்கும் நிலையும் காட்டப்பட்டது. சிந்தித்து உணர்க.

இச்செய்யுளிலே நாம் என்ற சொல் தனிச் சொல்லாக வெண்பாவில் காட்டப்படுகின்றது. இறைவன் உயிருக்கு உணர்த்தும் பொருட்டு ஞானாசிரியானாக வந்து உபதேசிப்பன் என்னும் சைவ சித்தாந்த உண்மையும் தெளிவாகின்றது. எனவே இறைவன் வேறு ஞானாசிரியன் வேறு அல்ல, இறைவனே ஞானாசிரியன். ஞானாசிரியனே இறைவன். இங்கு உயிருக்கு உண்மை விளக்கத்தை உணர்த்துபவன், வேறாய் நிற்கும் ஞானாசிரியன் என்பதும், அந்த ஞானாசிரியனும் இறைவனும் ஒன்றேயாம் என்பதும் காணும்படியாகத் தெளியும்படியாக நாம் என்னும் சொல் வைக்கப்பட்டிருப்பதையும் உணர்ந்து தெளியலாம். ஆசிரியர் இங்கு மலமும் உயிரும் இறைவனும் ஒன்றல்ல என்னும் முப்பொருள் உண்மையைத் தெளிவுறுத்தினார் எனலாம்.

## வெண்பா 28

### ஒன்றாய் நிற்றல்

**அன்றியும் கேள் ஆன்மாவால் ஆய்ந்து அறியும் ஐம்பொறிகள்**
**இன்றி அறியா இவையென்ன - நின்றதுபோல்**
**ஓவாமல் உன்னை உணர்த்துவோம் உன் அறிவில்**
**மேவாமல் மேவி நாமே**

## இதன் பொருள்

**அன்றியும் கேள்** - உன்னுடன் யான் வேறாய் நிற்பதோடு மட்டுமன்றி ஒன்றாயும் நிற்பேன். அதனையும் கேட்பாயாக, **ஆன்மாவால் ஆய்ந்து அறியும் ஐம் பொறிகள்** - ஆன்மாவானது மெய் வாய் கண் மூக்கு செவி ஆகிய அறிகருவிகள் ஐந்தினோடும் பொருந்தி நின்றே தன் அறிவாற்றலை ஆராய்ந்து அனுபவமாக அறிவு விளக்கம் பெறுகின்றது, **இன்றி அறியா** - அவ்வாறு உயிரானது ஐம்பொறிகளோடு ஒன்றுபட்டு நிற்கவில்லையென்றால் அவைகள் தமக்கு எதுவித தொழிற்பாடும் இன்றி ஏதொன்றையும் அறியமாட்டா, **இவை என்ன நின்றது போல்** - இதுபோன்றே ஐம்பொறிகளை அறிவதற்கு உயிர் அப்பொறிகளைப் பொருந்தி அப்பொறிகளாய் (சார்ந்ததன் வண்ணமாய்) நிற்றல் போல, **ஓவாமல் உன்னை உணர்த்துவோம்** - யானும் உன்னை விட்டு நீங்காமல் நீயேயாய் நின்று ஒன்றாக நின்று உன்னை நீ உணரும்படி உணர்த்தி நிற்போம், **உன் அறிவில் மேவாமல் மேவி நாமே** - அது எவ்வாறெனில் உமது அறிவிலே நாம் பொருந்தியும் பொருந்தாமலும் நின்று அவ்வாறு உணர்த்திடுவோம்.

## கருத்துரை

உன்னுடன் யான் வேறாய் நிற்பதோடு மட்டுமன்றி ஒன்றாயும் நிற்போம். அதனையும் கேட்பாயாக. உயிர் மெய் வாய் கண் மூக்கு செவியென்னும் இவ்வறிகருவிகளினோடும் பொருந்தி நின்றே தன் அறிவாற்றலை ஆராய்ந்து விளக்கம் பெறுகின்றது. அவ்வாறு உயிர் ஐம்பொறிகளோடு ஒன்றுபட்டு நிற்கவில்லை யென்றால் அவை தமக்கு எதுவித தொழிற்பாடும் இன்றி ஏதொன்றையும் அறியமாட்டா. இதுபோன்றே ஐம்பொறிகளை அறிதற்கு உயிர் அப் பொருள்களைப் பொருந்தி அப்பொருள்களாய்(சார்ந்ததன் வள்ணமாய்) நிற்றல் போல யானும் உன்னை விட்டு நீங்காமல் நீயேயாய் நின்று ஒன்றாக நின்று உன்னை நீ உணரும்படி உணர்த்தி நிற்போம். அது எவ்வாறெனில் உமது அறிவிலே நாம் பொருந்தியும் பொருந்தாமலும் நின்று அவ்வாறு உணர்த்திடுவோம்.

மேவாமல் மேவல் என்பது திருவுள்ளக் குறிப்பால் மேவுதல். இது நோக்கல் நோக்குப் போல் மேவாமல் மேவல் என்ப. நோக்கல் நோக்கு

கண்ணால் நோக்காது மனதால் கருத்தால் நோக்குதல். இது இரண்டன் மருங்கின் நோக்கல் நோக்க மவ்விரண்டன் மருக்கின் ஏதுவுமாகும். எனவும் (தொல் சொல் 93) நூற்பாவால் உணர்க. என விளக்கம் தரும். இக்கருத்தை சித்தாந்த பண்டிதர் திரு.ப. இராமநாத பிள்ளை தருதல் காண்க. தேர்ந்து உணர்க.

## விரிவுரை

முந்தைய செய்யுளில் இறைவன் உயிரோடு பொருந்தியும் பொருந்தாமலும் நின்று அறிவை உணர்த்திய தன்மையையும், அவ்வாறு நிற்கும் நிலையை வேறாய் நிற்றல் - தானேயாய் - என ஆசிரியர் தொட்டுக் காட்டுகிறார். இங்கு தானேயாய் நிற்றல் இறைவனின் சிறப்பு இயல்பு எனவும் காணலாம். இந்தச் செய்யுளிலே உயிர்களோடு ஒன்றித்து நிற்கும் நிலையை காட்டுகின்றார். இவ்வாறு உயிர்களோடு ஒன்றித்து நிற்றல் என்பது, இறைவனின் பொது இயல்பு எனவும் காணவேண்டும்.

மெய் வாய் கண் மூக்கு செவியாகிய ஐம்பொறிகளும் ஊறு சுவை ஒளி நாற்றம் ஒலி என்னும் புலன்களைக் கொண்டுள்ள அறிகருவிகள். இவற்றைத் தன்னோடு பொருத்தி உயிர், தன் அறிவைப் பெறுகின்றது. அதாவது உயிரின் தொழிற்பாடு, ஒன்றித்தல் என்பது இல்லையெனில் இச்சுவைகள் இவைதாம் என ஐம்புலன்களாயினும் சரி உயிர்கள் ஆயினும் சரி உணர்வதற்கு ஏது இல்லை. இன்னும் சொல்லப் போனால் உயிரறிவே புலன்களின் வழிவரும் சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்பனவற்றை அறிகின்றன. புலன்கள் தாமாக எதனையும் அறியும் வல்லமை அற்றன. இவை தத்தமக்குரிய அறுசுவை முதலியனவற்றையும் உணரமாட்டா. தமக்கல்லாத இன்னொரு புலனறிவையும் பெறமாட்டா. முன்பு ஆசிரியர் அறுசுவையும் அறியாவே தம்மைத்தாம் எனவும் அறுசுவையும் அருந்தி அவை தம்மை வேறொருவன் கூறியிடும் மேன்மைபோல் எனவும் காட்டியவை புலன்கள் தம்மையும் அறியா, தம்மைச் சார்ந்த பொருளையும் அறியா. அவற்றை சென்று அவற்றைப் பொருந்தி அறிய வல்லது ஆன்மாவே. இப்புலன்கள் அடங்கி விட்டால் அவ்வறிகருவிகள் ஐந்தும் செயலிழந்து விடுகின்றன. எனவே தான்

இவ்வறிகருவிகளுடன் ஆன்மா பொருந்தி நிற்கவே அவையாய் நிற்கவே அறிவினைப் பெறுகின்றது. உயிர் ஒன்றாய் புலன்களோடு ஒன்றித்து நிற்றலாலேயே புலனறிவைப் பெறுகின்றது. அது அதுவாய் நிற்றல். இவ்வாறே உயிரும் தனித்து நின்று எதனையும் அறியமாட்டா. அறியும் பொருள் இதுதான் என உயிர்கள் தாமாக அறியும் தன்மை அற்றனவாக உள்ளன. காணும் கண்ணுக்குக் காட்டும் உள்ளம் போல் உள்ளத்தைக் கண்டு காண எனவரும் சிவஞான போத சூத்திரம் இதனை விளக்கும். உயிர் தான் காணும் பொருளைக் கண்டு நிற்பினும் அந்தப் பொருள் இதுதான் என அறிய வல்லது அன்று. இவ்வாறாயின் உயிர் எப்போது பொருளை அறிய வல்லதாகின்றது. பொருள் தன்னைப் பார்த்து நிற்கும் கண்ணையும் அறியாது. உயிரும் இப்பொருள் இதுதான் எனவும் அறியாது. அதனை அறியும்படி செய்பவன் இறைவன். அப்போது இறைவன் உயிர்காணும் பொருளிலும் கண்ணிலும் உயிரிலும் கலந்து அவையேயாய் தான் காட்டியும் கண்டும் நின்கின்றான். இந்நிலையில் இறைவன் உயிர்க்கு அறிவிப்பவனாகவும் அறிபவனாகவும் நிற்கின்றான். ஒன்றியும் ஒன்றாமலும் நிற்கும் நிலைமை புலனாகின்றது. இறைவன் ஒன்றாய் நின்று அவையே தானேயாய் நின்று உயிருக்கு விளக்கம் தருகின்றான். இறைவன் அவ்வுயிரோடு அவையேயாக பிரித்தறிய முடியாதவாறு கலந்து அறிவை ஊட்டுகின்றான். இந்த நிலையில் கூட இறைவன் காட்டுபவனாகவும், காணுபவனாகவும், உயிரோடு ஒன்றித்து நின்றே இரண்டினையும், உயிர் அறியும்படி உணர்த்தி நிற்கின்றான்.

இறைவன் எல்லா இடங்களிலும் எல்லாப் பொருள்களிலும் பிரிப்பின்றிக் கலந்து ஒன்றாய் நிற்கின்றான். உடல் வேறு உயிர் வேறு ஆயினும் உயிர் தங்குதற்கு இடம் கொடுத்த உடலும் உயிரும் பிரித்தறியாதவாறு ஒன்றாய் நிற்கின்றது. இவ்வாறே உயிரும் இறைவனும் வேற்றுமை தெரியாதவாறு ஒன்றித்து நிற்கின்றனர். இறைவன் உயிர்களிலும் உலகத்திலும் யாவற்றிலும் ஒன்றாய்க் கலந்து அவையேயாய் நிற்கின்றான். இறைவனின் இத்தன்மை இல்லாது எந்தப் பொருளும் தனித்து நிற்றல் என்பது எக்காலத்தும் இல்லை. கேவல சகல முத்தி ஆகிய மூன்று நிலைகளிலும் இறைவன் ஒன்றாய் இருக்கின்றான். பொருள்கள் யாவும் தமது இயல்[illegible]த்தல் இறைவன் துணைகொண்டே இறைவனே எப்பொரு[illegible]பெறவைக்

கின்றான். அவன் கலப்பு இல்லாமல் எதுவுமே இல்லை. உயிரின் இயக்கத்திற்கு எந்நிலையிலும் இறைவன் அவைகளுடன் ஒன்றாய் இருத்தல் வேண்டப் படுகின்றது.

இச்செய்யுளில் ஐம்பொறிகள் உயிருக்கு உவமையாயிற்று. மீண்டும் உயிர் இறைவனுக்கு உவமையாயிற்று. ஆசிரியர் இங்கு மேவாமல் மேவி என்னும் சொற்றொடரை கூறியிருத்தல் சிந்தனைக் குரியது. கடவுள் மெய்பொருள் பூரண ஞானப் பொருள். ஆன்மாவும் அறிவுடைப் பொருள். சிற்றறிவுடைய பொருள். பூரண அறிவுடைய பொருளும் சிற்றறிவுடைய பொருளும் வேறு, இருவேறு தன்மைகளை உடையன. ஒருபொருள் தன் தன்மையை இழக்காமல் இன்னொரு பொருளோடு பொருந்தி ஒன்றாய் அப்பொருளோடு நிற்றலே மேவாமல் மேவுதல். இதனை அத்துவிதம் எனவும் உரைக்கலாம். இருபொருட்கள் பொருட்தன்மையையால் வேறுபட்டு பிரிப்பின்றி நிற்றல். அரக்கோடு சேர்த்திய அக்கல்பொடி போல என சிவஞான போதம் உவமை காட்டும். இறைவன் உயிரோடு பொருந்தி, தான் சிறிதும் தோன்றாமல் உயிர் ஒன்றே உளது என்று சொல்லும் வண்ணம் பிரிப்பின்றி அதனோடு ஒன்றுபட்டு நிற்கின்றான். அவ்வாறு நிற்பினும் அவன் தன் இயல்பில் மாறவில்லை. மாறுவதுமில்லை. எதிலும் தோய்வின்றி நிற்பன். இந்நிலையே மேவாமல் மேவுதல் என ஆசிரியர் செய்யுளில் தந்தார் எனலாம். இந்த ஒன்றாய் நிற்றல் என்பதனை சிவஞான போதத்திற்குச் சிற்றுரையும் பேருரையும் எழுதிய சிவஞான முனிவர் அவையேயாய் இறைவன் உயிர்களேயாய் உடலில் உயிர் கலந்து நிற்பது போல் உயிரிடத்து கலந்து நிற்கும் நிலை இதுவாகும். இதனை ஒன்றாய் நிற்றல் என்பர். இவ்வாறு நிற்பது உயிர் உடல் (தத்துவங்கள்) முதலியவற்றுடன் நின்று நிலைத்தற்கேயாம் என்றார்.

இதற்கு உதாரணமாக பின்வரும் வெண்பாவைக் காட்டுவர்.

**பண்ணும் ஓசையும் போலப் பழமதும்**
**எண்ணும் சுவையும் போல் எங்குமாம் - அண்ணல்தாள்**
**அத்துவிதமாதல் அருமறைகள் ஒன்றென்னாது**
**அத்துவிதம் என்றறையும் ஆங்கு**

இறைவன் முதல்வன் உயிர்கள் அவன் அடிமைகள். இவ்விரு இயல்புகளின் தன்மை இழக்காமல் இறைவன் சகல நிலையிலும் முத்தி நிலையிலும் ஒன்றாய் நிற்றல் எனவும் அவையேயாய் என்பதற்கும் பொருள் எனவும் உணர்க.

## வெண்பா 29

### உடனாய் நிற்றல்

**அக்கரங்களுக்கு எல்லாம் அகரவுயிர் நின்றாற்போல்**
**மிக்கவுயிர்க்கு உயிராய் மேவினோம் - எக்கண்ணும்**
**நில்லா இடத்து உயிர்க்கு நில்லாது அறிவு என்று**
**நல் ஆகமம் ஓதும் நாடு**

## இதன் பொருள்

**அக்கரங்களுக்கு எல்லாம் அகரஉயிர் நின்றாற்போல்** - எழுத்துக்களுக்கு எல்லாம் அகரம் என்னும் உயிர் எழுத்து முதலாவதாக நின்றும் மற்றைய எழுத்துக்கள் பிறப்பதற்கு அவற்றோடு உடனாய் நின்றும் இயக்கி உதவுமாறு போல, **மிக்க உயிர்க்கு** - மிகுதிப் பாடாயிருக்கும் எல்லா உயிர்களிடத்தும், **உயிராய் மேவினோம்** - உயிரே என்னும்படியாக உயிருக்குயிராய் உடனிருந்து அவற்றுடன் கலந்து இருக்கின்றோம் இயக்குவோம், **எக்கண்ணும் நில்லா இடத்து** - அவ்வாறன்றி நாம் எல்லா இடத்தும் உடனாய் நின்று அறிவித்தால் அல்லாது, **உயிர்க்கு நில்லாது அறிவு** - உயிர்களுக்கு அறிவு வருவதில்லை நிகழ்வதில்லை, **என்று** - என்பதனை, **நல் ஆகமம் ஓதும் நாடு** - மெய்ப் பொருளையே கூறி நிற்கும் சிவாகமங்கள் எடுத்துரைக் கின்றன. அதனை ஆராய்ந்து அறிந்து கொள்வாயாக.

## கருத்துரை

எழுத்துக்களுக்கு எல்லாம் அகரம் என்னும் உயிரெழுத்து முதலாவதாக தொடக்கமாக ஆதியாக நின்றும் மற்றைய எழுத்துக்கள் யாவும் பிறப்பதற்கும் அவற்றோடு உடனாய் நின்றும் இயக்கி உத்வுமாறு

போல, எல்லா உயிர்களிடத்தும் உயிரே என்னும்படி உயிர்க்குயிராய் உடனிருந்து அவற்றில் கலந்து இயக்குவோம். அவ்வாறன்றி நாம் எல்லா இடத்தும் உடனாய் நின்று அறிவித்தால் அன்றி உயிர்களுக்கு அறிவு வருவதில்லை நிகழ்வதில்லை என்று மெய்பொருளையே கூறி நிற்கும் சிவாகமங்கள் மேற்கூறியவற்றையே எடுத்துரைக்கின்றன. அதனை ஆராய்ந்து அறிந்து கொள்வாயாக.

## விரிவுரை

உயிர் எழுத்துக்கள் மெய்யெழுத்துக்க்ள் உயிர்மெய் எழுத்துக்கள் ஆகிய எல்லா எழுத்துக்களுக்கும் முதலான ஆதியான அகரமாகிய உயிர் எழுத்துடன் பொருந்தியே பிறக்கின்றன. இவற்றின் பிறப்பினைக் கூறவந்த தமிழ் இலக்கணம் அ. ஆ இரண்டும் அங்காத்து இயங்கும் எனவும் மெய்யின் இயக்கம் அகரமோடு சிவணும் எனவும் கூறுகின்றது. அதாவது அகரம் ஆகிய முதல் எழுத்து-அங்காத்தல் வாயைத் திறத்தல் - என்னும் சிறு முயற்சி நிலையில் பிறக்கின்றது. இந்த உயிர் எழுத்துக்களோடும் ஒன்றி இயைந்து பொருந்தி உடனாக நின்றபோதுதான் மற்றைய எழுத்துக்கள் பிறக்கின்றன. அதனால், அகர உயிர் எழுத்து மற்றைய எழுத்துக்கள் எல்லாவற்றுடனும் கலந்து இருக்கின்றது. அவ்வெழுத்து தானாகவே முன்னாகவே நிற்கின்றது. இந்த அகரமாகிய உயிர் இல்லையென்றால் மற்றைய எழுத்துக்கள் பிறப்பதும் இல்லை. அதனால் அவை இயங்குவதும் இல்லை. எனவே எழுத்துக்களுக்கெல்லாம் முதன்மையாகவும் முதலெழுத்தாகவும் மற்றையவற்றுடன் கலந்தும் நிற்பது இவ் அகர எழுத்தென்பது தெளிவு. இதனை ஆசிரியர் அகர உயிர் நின்றாற் போல என்றார். அவையே தானேயாய் என்றார்.

அதுமட்டுமன்றி அவ்வுயிர் எழுத்து மற்றைய உயிர் எழுத்துக்கள் பிறப்பதற்கும் இயங்குவதற்கும் ஆதாரமாய் உயிராய் நிற்கின்றது. இந்த உண்மையைப் பல ஞானிகள் எடுத்துக் காட்டாக எடுத்தாண்டமையை இங்கு காட்டுவோம்.

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

என திருவள்ளுவரும்

**அகர உயிர் போல் அறிவாகி எங்கும்**
**நிகரில் இறை நிற்கும் நிறைந்து**

என உமாபதி சிவமும்

**அகர உயிர் இன்றேள் அக்கரங்கள் இன்றாம்**

என மெய் கண்ட தேவ நாயனாரும்

**அகர முதலானை**

எனத் திருமுறையும் காட்டுகின்றன.

உலக மொழிகளிலெல்லாம் அகர எழுத்தே ஆதியாக முதலாக உள்ளது. தமிழ் சிங்களம் வடமொழி மலையாளம் தெலுங்கு ஆங்கிலம் என்றின்னோரன்ன மொழிகளிலெல்லாம் அகரமே முதலாக முதலெழுத்தாக உள்ளதென்பது மொழியியல் வல்லுநர்கள் காட்டுவர்.

அவைபோலவே இறைவனும் இவ்வுலகத்திற்கு முதல்வனாகவும் உயிர்களுக்கு உயிராகவும் கலந்து நின்று அவற்றுடன் உடனாக இயைந்து பொருந்தி நின்று அதன் அறிவை இயக்குகின்றான். கேவல நிலையிலும், சகல நிலையிலும் உயிர்களுடன் மறைந்திருந்து உடனாகக் கலந்து அவற்றின் அறிவைத் தொழிற்பாட்டை இயக்குகின்றான். அவன் இன்றி ஓர் அணுவும் அசையாது. மேலும் இறைவன் முத்திநிலையில் ஞான குருவாய் வெளிப்பட்டு உயிர்களுடன் கலந்து ஒன்றாயும் உடனாயும் நிற்கும் நிலை பிரிப்பின்றி, அது அதுவாக நிற்கும் நிலை, அவையே தானாய் நிற்கும் நிலை, உடன் நின்று அருளுகின்ற நிலையென்பது விளங்கும்.

இதனை அத்துவிதம் எனச் சிவாகமங்கள் விளக்கும் கூறிநிற்கும். இக்கருத்துப் பற்றியே ஆசிரியர் என்று நல் ஆகமம் ஓதும் நாடு என்றார். மேலும் எக்கண்ணும் என்னும் ஒரு சொல்லை அமைத்து அதற்கு அழுத்தம் கொடுத்திருக்கின்றார். இதனை ஆராயுமிடத்து உயிர் எழுத்துக்கள் உயிரோடு மட்டுமன்றி மெய்யெழுத்துக்களுடனும் உயிர் மெய்யெழுத்துகளுடனும் உடனாய் நின்று அவற்றை இயக்கும். உயிர் எழுத்தென்பது உயிரையும் மெய்யெழுத்து என்பது உடலையும் போலும் எனக் காட்டுகின்றார். உயிர் அறிவுடைய பொருள். உடல் அறிவற்ற பொருள். உயிர் சித்துப் பொருள். மெய்-உடல் அசித்துப் பொருள். சடப்பொருள்.

எக்கண்ணும் என்பது சித்துப் பொருளிடத்தாயினும் சடப் பொருள்களிடத்தாயினும் அவற்றின் இயக்கத்திற்கு இறைவன் அவற்றுடன் உடனாய் நின்று இயக்காத வழி அவை இயங்கமாட்டா. இதனையே ஆசிரியர் எக்கண்ணும் நில்லா இடத்து உயிர்க்கு நில்லாது அறிவென்றார்.

எனவே இறைவன் இப்பொருள்கள் எல்லாவற்றிலும் உடனாய்ச் செறிந்து கலந்து நிற்கின்றான். எக்கண்ணும் என்பது இறைவனின் வியாபகத் தன்மையையும் எடுத்துக் காட்டுவதோடு மற்றைய எல்லாம் அவனுள் அடக்கம் என்பதும் தெளிவாகின்றது.

இம்மூன்று செய்யுள்களாலும் இறைவன் உயிர்களோடும் சரி சடப் பொருள்களோடும் சரி ஒன்றாய் வேறாய் உடனாய் கலந்து இயக்கு கின்றான். இறைவன் ஒன்றாய் வேறாய் உடனாய் நிற்பதன் காரணம் தான் என்னையோ எனின் கலப்பினால் உடலில் உயிர்போல் அவ்வுயிர் களேயாய் பொருட்தன்மையால் கண்ணில் அருக்கன் போல் அவற்றின் வேறாய், உயிருக்கு உயிராதல் தன்மையால் கண்ணொளியில் ஆன்மபோதம் போல் உடனுமாய் நின்று அருளுவான். இம்மூன்று தன்மைகளில் நின்று உயிர்களுக்கான தனது தொழிலைப் புரிவான். இதனை வடமொழியில் அபேதம் பேதம் பேதாபேதம் என்பர். இக்கருத்தையே வழி நூலாசிரியராகிய உமாபதி சிவம்.

> ஒன்று எனும் அதனால் ஒன்று என்று உரைப்பது உண்டு ஆகையாலே
> நின்றனன் வேறாய்த் தன்னின் நீங்கிடா நிலைமை யாலே
> பின்றிய உணர்வுக் கெட்டாப் பெருமையன் அறிவின் உள்ளே
> என்றும் நின்றிடுத லாலே இவன் அவன் என்ன லாமே

என்றார்

உடனாய் நிற்றலைச் சிவஞானசித்தியார் அக்கரங்கள் தோறும் சென்றிடும் அகரம் போல நின்றனன் சிவனும் சேர்ந்தே எனவும்

வேறாய் ஒன்றாய் நிற்றலை

> உருவோடு கருவி எல்லாம் உயிர்கொடு நின்று வேறாய்
> வருவது போல ஈசன் உயிர்களின் மருவி வாழ்வான்

தரும் உயிர் அவனை ஆகா உயிர் அவை தானும் ஆகான்
வருபவன் இவைதான் ஆயும் வேறு ஆய் மன்னி நின்றே

எனவும் காட்டுவர்

இத்னை சிவஞான போதம்

அரக்கொடு சேர்த்தி அணைத்த அக்கற்போல்
உருக்கி உடங்கி இயைந்து நின்று - பிரிப்பின்றித்
தானே உலகாம் தமியேன் உளம் புகுதல்
யானே உலகு என்பன் இன்று

எனத் தருகின்றது.

இது கலப்பினால் நிற்றலான் உலகேயா மென்பர் உடங்கியைந்து எனவும் பொருட்தன்மையால் வேறாய் நிற்றலால் தானேயா மென்பார் நின்று எனவும் உயிருக்குயிராய் நிற்றலால் தானே உலகென்பார் பிரிப்பின்றி எனவும் கூறினார்.

இதனைச் சிவஞான முனிவர் உடன் நிற்பதை அவையே தானேயாய் இறைவன் உயிர்களோடு உடனாய் கண்ணொளி பொருளைக் காண்டற்கு உயிரின் அறிவு உடனாய் நிற்றல் என்பர். இவ்வாறு நிற்பது இன்ப துன்பங்களைத் துய்த்தற்கேயாம்.

எனவே இறைவன் உயிருடன் ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்பது உயிர் உடலோடு நிலைத்தற்கும், அறிதற்கும், தொழிற்படுத்தற்குமேயாகும் என்பது புலனாகின்றது. இறைவன் தன் நிலையில் சிவன் என்றும் உயிர்களோடு இம்மூவகையிலும் நிற்கும் போது சத்தி யெனவும், ஐந்தொழில் இயற்றும் போது பதி எனவும் பெயர் பெறுவன் என்றார்.

## வெண்பா 30

### இறைவன் கூத்தைத் தெளியக்கூறுக என வேண்டுதல்

நற்றவத்தோர் தாம் காண நாதாந்தத்து அஞ்செழுத்தால்
உற்று உருவாய் நின்று ஆடல் உள்ளபடி - பெற்றிட நான்
விண்ணார் பொழில் வெண்ணெய் மெய்கண்டநாதனே
தண்ணார் அருளாலே சாற்று.

## இதன் பொருள்

நற்றவத்தோர் தாம் காண - நல்ல தவத்தினையுடைய மெய்ஞ்ஞானிகள் தமது திருநோக்கத்தில் கண்டு மகிழ்ந்து நிற்கும்படியான, நாதாந்தத்து - நாத தத்துவத்தையும் கடந்த நிலையிலே முடிவிலே, அஞ்செழுத்தால் உற்று - திருவைந்தெழுத்து என்னும் பஞ்சாக்கரத்தால் அமைந்த, உருவாய் நின்று - திருமேனியை வடிவாய்க் கொண்டு, ஆடல் உள்ளபடி பெற்றிட நான் - இயற்றும் திருநடனத்தை உண்மையாக உள்ளபடி (நான்) அடியேன் கண்டு அறியும் வண்ணமும் நுகரும் வண்ணமும், விண்ணார் பொழில் - வானளாவிய பூஞ்சோலைகள் சூழ்ந்திருக்கும், வெண்ணெய் மெய்கண்ட நாதனே - திருவெண்ணெய் என்னும் திருத்தலத்தில் எழுந்தருளி இருக்கும் மெய்கண்ட தெய்வமே, தண்ணார் அருளாலே சாற்று - தண்ணளிமிக்க உனது அருளினாலே கூறுவீராக.

## கருத்துரை

நல்ல தவத்தினை உடைய மெய்ஞ்ஞானிகள் தமது திருநோக்கத்தில் கண்டு மகிழ்ந்து நிற்கும்படியான, நாத தத்துவத்தையும் கடந்த (நிலையிலே) முடிவிலே, திருவைந்தெழுத்து என்னும் பஞ்சாக்கரத்தால் அமைந்த திருமேனியை வடிவமாகக் கொண்டு இயற்றும் திருநடனத்தை உண்மையாக உள்ளபடி அடியேன் கண்டு அறிந்து தெளியும் வண்ணமும் நுகரும் வண்ணமும், விண்ணளாவிய பூஞ்சொலைகள் சூழ்ந்திருக்கும் திருவெண்ணெய் என்னும் திருக்கோயிலில் எழுந்தருளி இருக்கும் மெய்கண்ட தெய்வமே தண்ணளி மிக்க உனது அருளினாலே கூறுவீராக.

## விரிவுரை

இறைவன் திருச்சிற்றம்பலத்தே நின்ற நிலையில் நடனம் இயற்றுவார். அவ்வாறு நடனமாடும் தெய்வம் தீயினைக் கையில் ஏந்தி ஆடுவான். கைகளை எறிந்து ஆடுவான். வலது பாதத்தை முயலகன் என்னும் ஆணவப் பொருள் மீது மிதித்து ஊன்றி, மற்ற இடது பாதத்தை தூக்கி நின்று ஆடுவான். அவன் ஆடும்போது அவனுடைய திருமேனியில் சந்திரன் நதி கொன்றைமலர் பாம்பு, சூலம் முதலியனவும் ஆடும். அவன் திருச்சடை நாலாபுறமும் சிதறி நின்று ஆடும். அபயகரம் ஒன்று, அங்கு

ஆடும். மானும் ஆடும். மழுவாடும். அவன் அருகே என்றும் பிரிப்பின்றி நிற்கும் சத்தியம்மையும் ஆடுவாள்.

நாதத்தின் அந்தமும் நாற்போத அந்தமும்
வேதத்தின் அந்தமும் மெய்ச்சிவானந்தமுந்
தாதற்ற நல்ல சதாசிவா னந்தத்து
நாதப் பிரம்மஞ் சிவ நட மாமே

இவ்வாறு சிவபெருமான் ஆடும் ஆடுகின்ற நடனத்தைத் திருமூலநாயனார் திருமந்திர நூலில் எடுத்துக் கட்டினார். இப்பரவெளியிலே சிவன் நின்றாடும் ஆனந்தத் திருத் தாண்டவத்தைக் காட்டினார்.

பெருமான் ஆடுகின்ற இந்த நடனத்தைக் கூத்து என்றும், ஆட்டம் என்றும், நட்டம் என்றும், நடம் என்றும், பலவாறாக அழைப்பர். இதனால், எம் இறைவன் சிற்றம்பலவன் என்றும் பொன்னம்பலவன் என்றும் ஆடியபாதன் எனவும் அம்பலவன் எனவும் அழைப்பர். இறைவன் இக்கூத்தினை

உருவோடு அருவோடு உருபர ரூபமாய்
திருவருட் சத்திக்குள் சித்தானந்தன்
அருளுருவாக நின்று ஆடலுற்றானே.

எனவும் திருமந்திரம் எடுத்துரைக்கின்றது.

இவ்வாறு ஆடுகின்ற ஆட்டத்தைக் காணவல்லவர்கள் தவஞானிகள். அவர்கள் 36 தத்துவங்களையும் அறிந்து, இவற்றின் இறுதியில் உள்ள நாத தத்துவத்தின் எல்லையையும் (அந்தம்) கடந்து நிற்கும் வேளையில், சிவனைக் கூடி நிற்கும் வேளையில் காணுவார்கள். பாசப் பிணிப்பாலும் பசுப் பிணிப்பாலும் கட்டுண்டிருக்கும் சகலரின உயினங்கள் இவ் வாட்டத்தைக் கண்டு உணரமாட்டா. ஆயினும் அத்தகைய நிலையில் இருக்கும் ஆன்மா சிவனைச் சார்ந்து, அவன் வண்ணமாக நிற்கும்போது அதனைக் கண்டு மகிழ்வர். இவ்வாறே தில்லைச் சிற்றம்பலத்தே தீயாடும் கூத்தனை, பதஞ்சலி முனிவர் புலிக்கால் விக்கிரபாதர் - முனிவர் ஆகிய

தவமுடையாராகிய இப்பெரும் செம்பொருட் துணிவினராகிய சிவனடியார்களிருவரும் தொன்மைத் தென்னாட்டினர். அவர் அந்நடனத்தைக் கண்டு களிக்கின்றனர். சிவன் வாசலின் இருபக்கமும் நின்று அவர்கள் கண்டு மகிழ்கின்றனர்.

**தத்துவம் ஆடச் சதாசிவந் தானாடச்**
**சித்தமும் ஆடச் சிவசத்தியும் ஆட**
**வைத்த சராசரம் ஆட மறை ஆட**
**அத்தனும் ஆடினான் ஆனந்தக் கூத்தே**

**சிவமாடச் சத்தியும் ஆடச் சகத்தில்**
**அவமாட ஆடாத அம்பரம் ஆட**
**நவமான தத்துவ நாதாந்த மாடச்**
**சிவமாடும் வேதாந்த சித்தாந்தத் துள்ளே.**

இந்நடனத்தைக் கண்டு நிற்கும் அன்னையாம் அருட்சத்தி அந்த ஆனந்த நடனத்தைக் கண்டு அகமகிழ்ந்து சத்தியாய் நின்று உலக இயக்கத்திற்கும் உயிர்கள் இயக்கத்திற்கும் சித்திக்கும் முத்திக்குமாக நின்று உதவி நிற்பள். எனவே இந்த நடனம் உலக இயக்கத்திற்கும் உயிர் இயக்கத்திற்குமாகவே ஆடப் படுகின்றது. இவ்வாட்டாம் நின்று விட்டால் யாவுமே நின்றுவிடும். நான் அசைந்தால் அசையும் உலகமெல்லாம் எனவும், அவனன்றி அணுவும் அசையாது எனப் பிறரும் காட்டியது. இதன் பெருமையையும் தன்மையையும் காட்டவே.

அவ்வாறு நின்றாடும் இறைவன் ஆடும் நடனம் நாதாந்த நடனம் என அழைக்கப் பெறும். நாதம் என்பது நாத தத்துவத்தைக் குறித்து நிற்கின்றது. இறைவன் உயிர்களுக்கு அறிவு வரும் பொருட்டு அவர்களுக்குக் கருவிகளையும் கரணங்களையும் தந்துள்ளான். இவைகள் தத்துவங்கள் என அழைக்கப் படுகின்றன. இந்தத் தத்துவங்களுடன் பொருந்தி நின்று இறைவன் உயிர்களுக்கு அறிவு வருவதற்கான வகைகளை அருளுகின்றான். உயிர்களும் தமது ஆன்ம அறிவில் இத்தத்துவங்களைப் பொருந்தி நின்று அறிவினை ஞானத்தைப் பெறுகின்றது. அசுத்தமாயா தத்துவங்களான 31 தத்துவங்களையும்

கடந்து, சுத்தமாய தத்துவளான 5 தத்துவங்களுடன் பொருந்த தூய அறிவினைப் பெறுகின்றது. இவ்வாறு பொருந்திய உயிர் இறைவனைப் பற்றி நின்று அவனையே கண்ணாகக் கண்டு நிற்கின்றது. இறைவனைப் பற்றிய அறிவு ஞானம் வரும் வரைக்குமே உயிர்களுக்கு இந்தத் தத்துவங்களின் தேவை வேண்டப் படுகின்றது. சிவத்தை உணர்ந்தபோது இத்துவங்களின் தேவை உயிருக்கு வேண்டுவதில்லை. எனவே உயிர் இந்த 36 தத்துவங்களுடன் கூடி அவை வேண்டாத போது அவற்றை நீக்கி விடுகின்றது. இந்த 36 தத்துவங்களில் முடிவாக விளக்கும் தத்துவம் நாத தத்துவம் எனப்படுகின்றது. இது சிவத்தால் அருளப்படும் தத்துவத்தின் சிறப்புமிகு தத்துவம். இத்தத்துவத்தையும் கடந்தால் இறைவியையும் இறைவனையும் காணும் வாய்ப்பு உயிர்க்கு ஏற்படுகின்றது.

இத்தத்துவங்களைப் பொருந்தி அறிவினைப் பெற்ற உயிர், இந்த நாதாந்தத்தைத் தாண்டிய எல்லையில் சிவனைக் காணுகின்றது. அப்போது அது இறைவன் தன்னோடு பிரிப்பின்றி ஒன்றாய் வேறாய் உடனாய் நின்று அருளியமைமை உணருகின்றது. தனது உண்மை நிலை இதுதான் என உணர்ந்து கொண்ட உயிர் இறைவன் உலகு உயிர் சத்தி என்பன யாவும் இயங்குவதற்கான நடனத்தை ஆடிக் கொண்டிருக் கின்றான் எனத் தெளிகின்றது. அந்த ஆனந்த நடனத்தை உணர்ந்து கொண்ட உயிர் இறைவன் எக்காலத்தும் அவன் ஆடிக் கொண்டிருக் கின்றான் என்பதை உணருகின்றது. ஆடிக் கொண்டிருக்கின்றான் என்பது இறைவன் பல பல வடிவங்களில் நின்று தனது திருவிளையாடல் களைப் புரிந்து நிற்கின்றான் என்பதே.

இறைவனின் நடனம் பயிலுதல் என்னும் சொல் கொண்டு திருவாசகத்திலும் 9ம் திருமுறையிலும் காட்டப்படுகின்றது. பயிலுதல் என்பதை மாணிக்க வாசகர் சிவபுராணத்தில் பயின்றாடும் நாதனே எனவும் நட்டம் பயிலவல்லானுக்கே பல்லாண்டு கூறுதுமே என்னும் இவ்வரிகள், இறைவன் சலிப்பின்றி எந்நேரமும் ஆடிக்கொண்டிருக் கின்றான் என்பதை எடுத்து விளக்குகின்றன.

இவ்வாறு தோற்றத்திற்கும் அறிவு வருவதற்கும் என ஆடும் ஆட்டத்தை ஆடிக் கொண்டிருக்கும் இறைவன் அவற்றின் இளைப்பாற்

றுக்காகவும் ஆடுகின்றான். இந்த இளைப்பாற்றல் என்பது உயிர்கள் பலவகையான பிறவிகளை யெடுத்து அதில் அடைந்த துன்பத்தினால் இளைப்படைந்து விடுகின்றது. இந்தக் களைப்பை இளைப்பை நீக்குவதற்கு அவ்வுயிர்களை உறக்க நிலைக்குக் கொண்டு வருகின்றான். அவ்வாறு உறக்க நிலைக்குக் கொண்டு வரும் நடனம் ஊழி நடனம் எனப்படுகின்றது. பல் ஊழி காலம், பிறவியெடுத்த உயிர் தான் பெற்ற அனுபவத்தாலும் ஞானம் பெற்றுத் தன் உண்மை இயல்பை அறிந்து நிற்கும் வேளை இறைவனால் ஆட்கொள்ளப் படுகின்றது. இவ்வாறு ஆட்கொள்ளப்பட்ட உயிர் அப்போது நாதாந்த தத்துவத்தையும் கடந்து இறைவனை நாடி அவர் தரும் இன்பநிலையை பேரின்ப நிலையை அடைகின்றது. இவ்வாறு வந்த உயிர் இறைவன் ஆடுகின்ற ஆனந்த நடனத்தைக் காணுகின்றது. அத்தகு உயிர்களுக்கு தனது ஆனந்த நடனத்தைக் காண்பிக்கின்றான். இந்த ஆனந்த நடனத்தை இறைவன் அம்மையை இடமாகக் கொண்டு அம்மையும் கண்டு களிக்குமாறு ஆடிக்கொண்டிருக்கின்றான். இங்கே இந்த ஆனந்த நடனக் காட்சியை நாதாந்தத்து நடக்கும் நடனத்தைக் காட்ட வந்த திருமூல நாயனார் தனது திருமந்திர நூலில் பின்வருமாறு காட்டுகின்றார்.

**நாதத்தின் அந்தமும் நாற்போத அந்தமும்**
**வேதத்தின் அந்தமும் மெய்ச்சிவா னந்தமும்**
**தாதற்ற நல்ல சதாசிவானந் தத்து**
**நாதப் பிரமஞ் சிவநட மாமே**

**சிவமாதி ஐவர் திண்டாட் டமுந்தீரத்**
**தவமார் பசுபாசம் அங்கே தனித்துத்**
**தவமாம் பரனெங்கும் தானாக ஆடும்**
**தவமாம் சிவானந்தத் தேர்ஞானக் கூத்தே.**

எனத்தருவார்.

சித்தனாகிய சிவபெருமான் பேரின்பமே பெருவடிவமாக உள்ளவன். உருவாக நின்று ஆடல் புரிகின்றான். அதனையே சேக்கிழார் பெருமான் சிற்றம்பல திருவருள் உருவம் என்றார். இதனை இங்கு மனவாசகங் கடந்தார் உற்று உருவாய் நின்று ஆடல் என்கிறார். இறைவன் தத்துவங்

கடந்தவன். நாதம் என்னும் தத்துவமே 36 தத்துவங்களின் முடிவான தத்துவம். அவற்றிலிருந்து பிறப்பவையே மற்றவை. இறைவன் நாத வடிவாக நிற்பன். அவன் அதன் தத்துவமாகி நாத தத்துவத்தையும் கடந்து சிவபரம் பொருளாக நின்று ஆடுபவன். அந்த நாத அந்தத்தில் முடிவில் நின்று ஆடுவான். எனவே நாத அந்தம் 36 தத்துவங்களையும் கடந்து அப்பாலே நின்று ஆடுகின்றான் என்பது போதகும்.

இந்த நடனம் பல வகையாக அழைக்கப்பெற்றதாயினும் அவை இங்கு மூன்றாக காட்டப் படுகின்றது. அவை ஊன நடனம், ஞான நடனம், ஆனந்த நடனம் என அழைக்கப் பெறுகின்றன. இவற்றில் முதலிரண்டையும் இறைவன் உயிர்களையே இடமாகக் கொண்டு உயிர்களுக்கு உய்தி தரும் பொருட்டு ஆடும் நடனங்கள் என அழைக்கப் பெறும். ஊன நடனம் என்பது உயிர்களின் தோற்றத்திற்காக வென ஆடும் ஆட்டம் எனலாம். இங்கு இறைவன் சூக்கும உடலோடு கூடிய ஆன்மா, தனது அறிவு பெறும் பொருட்டு, உடலொடு கூடி அறிவினைப் பெறவேண்டும் என்னும் நோக்கோடு இந்த நடனத்தைப் புரிகின்றான். இவ்வாறு ஆடுதலால் சூக்கும உடல் கொண்ட உயிர் தூலவடிவம் பெறுகின்றது. இத் தூல உடலை வழங்குவதற்கெனவே இறைவன் இந்த நடனத்தை ஆடுகின்றான். இது பற்றிய விளக்கத்தை பின்னால் வரும் ஊன நடனம் பற்றிய விரிவுரையின் போது செய்யுள் 35ல் தருவோம். அங்கு கண்டு அறிக. இவ்வாறு உடல் கொண்ட உயிர் பல்வேறு பிறிவிகளையெடுத்து அறிவினைப் படிமுறையில் பெறுகின்றது. இங்கு அறிவினைப் புகட்டுவதற்கென இறைவன் மீண்டும் உயிர்களையே இடமாகக் கொண்டு ஆடும் நடனம் ஞான நடனம் என அழைக்கப் பெறுகின்றது. இதுபற்றிய விளக்கத்தைப் பின்னர் பாடல் 36 கூறவிருப்பத்தால் அங்கு கண்டு தெளிக. இந்த நடனத்தை தானும் அறிந்து, அதன் மீது விருப்பு, வேட்கை கொண்டு அவ்வானந்த நிலையெய்திக் காணவிழையும் எண்ணமுடையவராகிய ஆசிரியர் ஆகையால் உள்ளபடி பெற்றிட நான் சாற்று என்றார். அருளாலே சாற்று என்பதன் கருத்து வெளிப்படை.

இனி இந்நடனம் ஊன நடனம் எனவும் ஞான நடனம் எனவும், ஆனந்த நடனம் எனவும் அறியப்படும். இவற்றின் உண்மை இயல்பை

உண்மை விளக்கத்தை ஆசிரியர் அடுத்து வரும் பாடல்களில் தெளிவுறுத்தலை அங்கு காண்போம்.

## வெண்பா 31

### நடனம் செய்யும் இடமும் நோக்கமும்

**எட்டும் இரண்டும் உருவான லிங்கத்தே**
**நட்டம் புதல்வா நவிலக்கேள். சிட்டன்**
**சிவாயநம என்னும் திருஎழுத்து அஞ்சாலே**
**அவாயம் அறநின்றாடு வான்.**

## இதன் பொருள்

**எட்டும் இரண்டும் உருவான லிங்கத்தே** - எட்டும் இரண்டும் என்னும் எண்களைக் கூட்டினால் வரும் பத்து எண்ணைக் குறிக்கும். யகரம் என்னும் எழுத்தை உருவமாகக் கொண்டு விளங்கி நிற்கின்ற அந்த உயிரினை இடமாகக் கொண்டு சிவபொருமான் 8 + 2 = ய, **நட்டம் புதல்வா நவிலக்கேள்** - செய்கின்ற திருநடனத்தின் இயல்பைக் கூறுகின்றோம். நன்மாணாக்கனே! கேட்பாயாக, **சிட்டன்** - சித்தனாகிய சிவபெருமான், **சிவாயநம என்னும் திரு எழுத்து அஞ்சாலே** - சி. வா. ய. ந. ம. என்று கூறப்பெறுவதாகிய சிறப்பு எழுத்துக்களான திருவைந்தெழுத்தையே தனது திருமேனியாகக் கொண்டு, **அவாயம் அற** - உயிர்களின் துன்பமாகிய பிறவி நீங்கும்படி, **நின்று** - அவ்வுயிர்களையே இடமாகக் கொண்டு, **ஆடுவான்** - திருநடனம் செய்து நிற்பன் என அறிவாயாக.

## கருத்துரை

எட்டும் இரண்டும் என்னும் எண்களைக் கூட்டினால் வரும் பத்து எண்ணை குறிக்கும் யகரம் என்னும் எழுத்தை உருவமாகக் கொண்டு விளங்கி நிற்கின்ற அந்த உயிரினை இடமாகக் கொண்டு சிவபெருமான் செய்கின்ற திருநடனத்தின் இயல்பை கூறுகின்றோம். நன்மாணாக்கனே! கேட்பாயாக. சித்தனாகிய சிவபெருமான் சிவாயநம என்று கூறப்

பெறுவதாகிய சிறப்பு எழுத்துக்களை திருவைந்தெழுத்தையே தனது திருமேனியாகக் கொண்டு உயிர்களின் துன்பமாகிய பிறவி நீங்கும்படி, அந்த உயிர்களையே இடமாகக் கொண்டு திருநடனம் செய்து நிற்பன் என அறிவாயாக.

## விரிவுரை

தமிழ் எழுத்துக்களான வரி வடிவுகள் ஒன்று இரண்டு முதலிய எண்களுக்கு வடிவம் இட்டு அவற்றைப் புலப்படும் வண்ணம் தமிழ் ஆன்றோர்கள் தந்துள்ளார்கள். அவ்வாறு தரும் போது 10 என்னும் எண்ணுக்கு ய என்னும் எழுத்தையே வடிவமாகக் கொடுத்துள்ளார்கள். சிவாயநம என வரும் திருவைந்தெழுத்தில் உள்ள நடு எழுத்தாகிய யகரம் உயிரைக் குறிப்பதாக உள்ள வரி வடிவ எழுத்தாகும். இதனால் எட்டும் இரண்டும் கூட்டிவரும் பத்து என்னும் எண்ணுக்கும் உயிருக்கும் அதனையே ஆன்மா - உயிர் - எனக் கொள்ளுமாறு காட்டி எட்டும் இரண்டும் உருவான லிங்கத்தே என்றார். இங்கே இலிங்கம் எனக் குறிக்கப்படுவது உயிரையே. சிவாய நம வில் வரும் யகரம் உயிரைக் குறித்து நிற்கும் எழுத்தாகும். இனி இலிங்கத்தே என ஏகாரம் பிரிநிலை காட்டி இலிங்கத்தினை இடமாக் கொண்டு சிவபிரான் திருநடனம் செய்வது உண்மையாவதால் நட்டம் புதல்வா நவிலக்கேள் என்றார். நீ கேட்ட சிவநடனம் பற்றிய. வினாவிற்கு விடையைக் கூறுவேன் கேள் என்பதை புதல்வா நவிலக் கேள் என்றார். புதல்வா என்பது அன்பின் நிமித்தம் மாணவனை விளித்துக் கூறியது. நவிலல் - கூறுதல் சொல்லுதல். எனவே மாணாக்கனே நான் சொல்வேன் நீ கேட்பாயாக என்றார்.

சித்தனாகிய சிவபெருமான் இந்த உயிரையே ஆதார இடமாகக் கொண்டு ஆடுவான். எவ்வாறு ஆடுவான் என்பதனை விளக்க சிவாய நம என்னும் ஐந்தெழுத்தாலே என்றார். இறைவனின் திருமேனி சிவாய நம என்னும் மந்திர எழுத்துக்களால் திருவைந்தெழுத்தால் ஆகிய திருவுருவத் திருமேனி. அத்திருமேனி உருவத்தைக் கொண்டே இறைவன் ஆடுவான். இதனையே செய்யுளில் சிட்டன் சிவாயநம என்னும் திரு எழுத்து அஞ்சாலே நட்டம் நின்று ஆடுவான் என்றார். எனவே ஆதார

இடம் - உயிர் - லிங்கம், ஆடுபவன் சிவன் - சிட்டன். உயிர் யகரம் என்ற வரிவடிவம். இறைவன் சிவாய நம. எனவே இறைவன் திருநடனம் செய்யும் இடம் உயிர். இறைவனுக்கு உயிரில் மட்டும் தானா ஆட இடம் கிடைத்தது. ஏன் அவ்வாறு உயிரை ஆதாரமாகக் கொண்டு ஆடவேண்டும் என்னும் கேள்விக்கான விடையும் கிடைக்கின்றது. அவன் அவ்வாறு ஆடுவது உயிரினை இயக்கி அதற்கு அறிவினைப் புகுத்தி நிற்றற்கும், அவ்வாறு புகுத்தி நிற்றலில் தனது ஐந்தொழிலையும் ஆன்மா விடத்தே இயற்றி - புரிந்து அதனைப் பிறவிகள் தோறும் நுகரவைத்து அறிவினை ஊட்டுதற்கும், அப்பிறவித் துன்பத்தை ஆன்மா மீண்டும் அடையா வண்ணம் நீக்குவதற்கும், அவன் நின்று ஆடுவன். இங்கு நின்று என்னும் சொல் கொண்டு ஆன்மா பக்குவம் எய்தும் வரை மறைவாக நின்று ஆடுவன் என்பதைக் குறித்தது.

பிறவியை அறுத்தற் பொருட்டே ஆடுவான் என்பதனை அவாயம் அற என்னும் சொல் கொண்டு தெளிய வைத்தார். எனவே இங்கு திருநடனம் செய்யும் இறைவன் திருமேனியும் அவன் திருநடனம் செய்யும் இடமும் அதனால் விளையும் அடையும் நன்மைப் பயனும் எடுத்துரைக்கப் பெற்றன.

இங்கே ஆன்மாவை லிங்கம் என்னும் சொல்லால் குறிக்கப் படுகின்றது. ஆன்மாவைப் பிண்ட லிங்கம் எனத் திருமந்திரம் கூறும்.

**மானுடர் ஆக்கை வடிவு சிவலிங்கம்,**
**மானுட ராக்கை வடிவு சிதம்பரம்**
**மானுட ராக்கை வடிவு சதாசிவம்**
**மானுட ராக்கை வடிவு திருக்கூத்தே.** என்பதால்

மானிடர் யாக்கையின் (உடம்பு) வடிவு. சிவலிங்கம் மக்கள் வடிவு. திருச்சிற்றம்பலம் மக்கள் வடிவு அருளாளனாகிய சதாசிவம். மக்கள் வடிவு அம்பலவாணர் இயற்றும் அருட்கூத்து. சிவபெருமான் மக்கள் யாக்கையை நடமாடும் திருக்கோயிலாகக் கொண்டு வடிவாய் அரங்காய் வகுப்பாய், வாய்வாய்ப் பயனித்துள்ளான் அருள்கின்றான். சிவாய நம

வெனும் சித்தம் ஒருக்கி அவாயம் அறவே அடிமை யதாக்கிச் என்பதும் இங்கு இச்செய்யுளோடு ஒப்பு நோக்குவதற்குரியது.

இங்கு சிவபெருமான் உயிரையே இடமாகக் கொண்டுள்ளான். இதனை மாணிக்கவாசகர் உடலிடம் கொண்டாய் எங்கெழுந்தருளுவது இனியே என்றார். இறைவன் திருச்சிற்றம்பலமே இடமாகக் கொண்டும் ஆடுவன். நற்சிற்றம்பலத்தே தீயாடும் கூத்தன் எனவும். தில்லைச் சிற்றம்பலமே இடமாக கூத்து உகந்தாயை எனவும் இடம் காட்டினார். இவைதான் அவன் ஆடும் இடமன்று. இறைவன் சர்வ வியாபகமாய் இருப்பதால் அந்த இடப்பரப்பெல்லாம் அவன் ஆடும் இடம் எனக் காண்க.

## வெண்பா 32

### கூத்தப் பெருமான் திருமேனி

**ஆடும்படி கேள் நல் அம்பலத்தான் ஐயனே**
**நாடும் திருவடியிலே நகரம் - கூடும்**
**மகரம் உதரம் வளர்தோள் சிகரம்**
**பகரும்முகம் வாமுடியப் பார்.**

## இதன் பொருள்

**ஐயனே** - நல்ல மாணாக்கனே, **ஆடும்படி கேள் அம்பலத்தான்** - நன்மையைத் தருகின்ற திருச்சிற்றம்பலத்தை உறைவிடமாகக் கொண்ட கூத்தப் பெருமான் ஆடுகின்ற திருநடனத்தின் முறைமையை கேட்பாயாக, **நாடும் திருவடியிலே நகரம்** - அன்பர் விரும்பி நிற்கின்ற அவரது தூக்கிய திருவடியிலே திருப்பாதத்திலே ந கார எழுத்து நிலைபெறும், **கூடும் மகரம் உதரம்** - அவன் திருவயிற்றிலே ம கர எழுத்து நிலைபெறும், **வளர் தோள் சிகரம்** - வளர்ந்தோங்கிய தோள்களிலே சிகார எழுத்து நிலைபெறும், **பகரும் முகம் வா** - திருமுகத்திலே வா காரம் என்னும் எழுத்து இருப்பதாக வேதம் சொல்லும், **முடி ய பார்** - திருமுடியின் கண்ணே யகர எழுத்து நிற்பதையும் உணர்ந்து அறிவாயாக.

## கருத்துரை

நல்ல மாணாக்கனே! நன்மையைத் தருகின்ற திருச்சிற்றம்பலத்தை உறைவிடமாகக் கொண்ட கூத்தப்பெருமான் ஆடுகின்ற திருநடனத்தின் முறைமையைக் கேட்பாயாக. அன்பர்கள் விரும்பி நிற்கின்ற அவரது தூக்கிய திருப்பாதத்திலே ந கர எழுத்து நிலைபெறும். அவர் திருவயிற்றிலே ம கர எழுத்து நிலை பெறும். வளர்ந்தோங்கிய தோள் களிலே சிகார எழுத்து நிலைபெறும். திருமுகத்திலே வா காரம் என்னும் எழுத்து நிலைபெற்று இருப்பதாக வேதம் சொல்லும். திருமுடியின் கண்ணே யகர எழுத்து நிலைபெற்று நிற்பதையும் உணர்ந்து அறிவாயாக.

## விரிவுரை

முந்திய செய்யுளிலே சிவபெருமான் திருநடனம் செய்யும் இடத்தினை யும் அது இயற்றுவதற்கான நோக்கத்தையும் எடுத்துக் கூறினார். அவ்வாறு கூறிய ஆசிரியர் அத்திருநடனத்தை இயற்றி நிற்கும் இறைவனின் திருமேனிக் கோலத்தை இப்பாடலில் விளக்குகின்றார். இறைவனின் திருமேனி திருவைந்தெழுத்தையே வடிவமாகக் கொண்டது. இந்த எழுத்துக்கள் மந்திர ஆற்றல் கொண்ட எழுத்துக்கள். அவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு பொருளை உணர்த்தி நிற்பன. இத்திருவைந்தெழுத்து தூல, பரும ஐந்தெழுத்து, சூக்கும, நுண் ஐந்தெழுத்து, அதிசூக்கும, அதிநுண் ஐந்தெழுத்து என மூன்று திறப்படும். தூல ஐந்தெழுத்து என வரிவடிவாக இருக்கும் நிலையில் பருவெழுத் துக்கள் எனக் கொண்டு உயிரையே தானமாகக் கொண்டு இறைவன் ஆடுகின்ற கூத்தாகவும். சகல ஆன்மாக்களுக்கும் அருள்புரியும் நிலையில் அந்த திருவைந்தெழுத்தை வடிவாகக் கொண்டும் அவ்வாறு நிற்கும் எழுத்து வரிசையில் தனது சத்தியைக் கொண்டு அவ்வுயிர்களுக்குச் செய்ய வேண்டிய யாவற்றையும் அந்நிலையில் இருந்து செய்வதாகும். இவ்வாறே சூக்கும நிலையில் இருக்கும்போது தூய நிலையை அடையும் ஆன்மாக்களுக்கு அவற்றுடன் இயைந்து அவற்றை ஆதாரமாகக் கொண்டு ஆடும் நடனம் எனக் கொள்ளலாம். ஆயினும் இவ்விருவகைத் திருமேனியில் இந்தத் திருவைந்தெழுத்துக்கள் இடம் மாறி நின்று தொழிற்படுகின்றன.

தூலத்தில் நிற்கும் போது அவ்வான்மாவுக்கு ஏற்புடைத்தான வழியில் நின்று அதற்குரிய இடத்தில், ஐந்தொழில் புரியும் நோக்கத்தையும் கொண்டே ஆடுகின்றான். அவ்வாறே பசு ஞானம் நீங்கிப் பதிஞானம் பெற்ற ஆன்மாக்களுக்கு சூக்கும பஞ்சாக்கரத்தில் பொருந்தி நின்று அவற்றிற்கான தொழிலைப் புரிவன். அதற்காகவே இத்திருவைந் தெழுத்துக்கள் இடம் மாறி நிற்கின்றன. இனி அதிசூக்கும திருவைந் தெழுத்துத் திருமேனி என்பது உயிர் பாச பசு நிலைகளைக் கடந்து இறைவனே யாவும் என நினைத்து பக்குவ நிலையை அடையும்போது அதனுடன் இணைந்து ஆடும். அந்த நடனத்தின்போது கொள்ளும் திருமேனி எனவும் காணலாம்.

முன்பு மறைந்தும் பின்னர் மறைந்தும் வெளிப்பட்டும் இறுதியில் வெளிப்பட்டும் நிற்கும் நிலையிலே காணப்படும். வெளிப்பட்டு நிற்கும் திருவைந்தெழுத்துத் திருமேனி அதிசூக்கும பஞ்சாக்கரத் திருமேனி எனவும் கொள்ளலாம். இம்மூன்றுடன் காரண திருவைந்தெழுத்து எனவும் மகா காரண திருவைந்தெழுத்து எனவும் இரு வேறு திருவைந்தெழுத்துத் திருமேனி கொண்டும் இறைவன் ஆடுவான்.

இவற்றில் அதிசூக்கும பஞ்சாக்கரத்திலும் அதிநுட்பமாய் நிற்பது காரண பஞ்சாக்கரத் திருமேனி எனப்படும். இஃது உயிர் தன்னை மறந்து சிவனை மட்டுமே உணர்ந்து நிற்கும் நிலையாகும். இந்நிலையில் இறைவன் கொள்ளும் திருமேனி இதுவே ஆகும். அடுத்த திருமேனியாகக் காணப்படும் மகா காரண பஞ்சாக்கரத் திருமேனி காரண பஞ்சாக்கரத் திருமேனியிலும் அதி நுட்ப பஞ்சாக்கரம் எனக் கொள்ளலாம். இங்கு உயிர் இறைவனை அடைந்து ஆனந்தத்தில் மூழ்கும் நிட்டையில் ஆன்மாவை இடமாகக் கொண்டு ஆனந்தமாகவே ஆடும் பஞ்சாக்கரத் திருமேனி எனவும் கொள்ளலாம்.

இங்கு தரப்பட்ட விளக்கம் திருவைந்தெழுத்தின் வகை தொகைகளாக காணப்பட்ட போது வரும் எழுத்துக்களால் இறைவன் அவ்வத்திருமேனி வடிவத்தில் பஞ்சாக்கர முறையில் நின்று அருளுவான் எனக் கொண்டு தரப்பட்ட விளக்கமாகும். ஆயினும் திருவைந்தெழுத்தாலான இந்த திருமேனி வடிவத்தில் நிற்கும் நிலையில் இறைவன் ஒவ்வொரு

நிலையிலும் தனது சத்தியை வேறுகாட்டி உணர்த்தும் திருமேனிகள் எனக் கொள்ளல் பொருந்துவதாகும்.

| | | | | |
|---|---|---|---|---|
| தூல பஞ்சாக்கரம் | - | நமசிவாய | - | அருவம் |
| சூக்கும பஞ்சாக்கரம் | - | சிவாயநம | - | அருவுருவம் |
| அதிசூக்கும பஞ்சாக்கிரம் | - | சிவாய | - | உருவம் |
| காரண பஞ்சாக்கரம் | - | சிவா | - | உருவம் |
| மகா காரண பஞ்சாக்கரம் | - | சி | - | உருவம். |

மாணிக்க வாசக சுவாமிகள் சிவபெருமானின் வடிவங்களை திருமேனிகளைப் பற்றிக் கூறுகின்றபோது. திருமேனி ஒன்றல்லன் என்றார். உயிர்கள் நிற்கும் பக்குவ வேறுபாட்டு நிலைக்கேற்ப அவற்றினை ஆதாரமாகக் கொண்ட இறைவன் நடனம் செய்து அதற்கு அப்பக்குவ நிலையில் செய்ய வேண்டிய ஐந்தொழில் முறைமையை நிகழ்த்துவதே, இப்பஞ்சாக்கரத் திருமேனி கொண்டு ஆடும் திருநடனமாகும். எவ்வாறாயினும் இறைவனின் திருமேனி வடிவம் நம்மனோர்க்கு ஐந்து எழுத்துக்கள் குறைவற நிற்கும் நிலையேயாகும். அந்த வடிவத்தையே ஆசிரியர் இங்கு எமக்கு எடுத்துரைத்தார் எனக் கொள்க.

இச்செய்யுளில் இறைவனின் திருமேனியில் அமைந்துள்ள திருமுடி, முகம், தோள், உதரம், திருவடி என்பனவற்றைக் காட்டி, பாதாதி கேச வரிசையில் இந்த ஐந்தெழுத்தையும் காட்டிக் குறித்துரைத்தார். இது நம சிவாய என்னும் தூல பஞ்சாக்கரத் திருமேனி வடிவமாகும்.

| | | |
|---|---|---|
| திருவடி | - | நகரம் |
| உதரம் | - | மகரம் |
| தோள் | - | சிகரம் |
| முகம் | - | வகரம் |
| திருமுடி | - | யகரம் |

இந்த எழுத்துக்களின் மந்திர ஆற்றலை, பின்னர் கூறவிருப்பதால் அவற்றின் விளக்கத்தை வரும்வழி கூறவிருக்கின்றேன். அப்போது உணர்த்து தெளிக.

முந்திய வெண்பாவில் இறைவன் புரிகின்ற திருநடனம் - அவாயம் அற நின்றாடுவான் என்பதால் இறைவன் உயிர்களின் உய்திக்காக ஈடேற்றத்துக்கான அந்த ஆன்மாக்கள் நிற்கும் தகுதிக்கு பக்குவத்திற்கு ஏற்ப ஆன்மாவைச் செலுத்தி நிற்க அந்த அந்த இடங்களிலே செய்யும் தொழில்களுக்கேற்ப திருவைந்தெழுத்துக்களாலான திருமேனி கொண்டு உயிரை இடமாக ஆதாரமாகக் கொண்டு திருநடனம் செய்து அருளுதற்கே. இத்தகைய பல கோலங்களைக் கொண்டவன் எனக் காண்பதே சிறப்பாகும். இப்பாடலில் இக சுகத்தை தரும் நம சிவாய திருவைந்தெழுத்தையுடைய திருச்சிற்றம்பலவன் திருமேனி வடிவம் காட்டப்பட்டது.

## வெண்பா – 33

### கூத்தப் பெருமானின் திருமேனி (தொடர்ச்சி)

**சேர்க்கும் துடி சிகரம் சிக்கனவா வீசுகரம்**
**ஆர்க்கும் யகரம் அபயகரம் - பார்க்கிலிறைக்கு**
**அங்கி நகரம் அடிக்கீழ் முயலகனார்**
**தங்கும் மகரமது தான்**

## இதன்பொருள்

**பார்க்கில் இறைக்கு** - நாம் ஆராய்ந்து பார்ப்போமானால் இறைவனுக்கு, **சேர்க்கும் துடி சிகரம்** - சிவபரம் பொருளுக்கு சூக்கும பஞ்சாக்கிரத்தின் போது அதன் எழுத்துக்கள் பின்வருமாறு அவர் திருமேனியில் பொருந்தி இருப்பதைக் காண்போம். உடுக்கினை ஏந்தி இருக்கும் வலது திருக்கரத்தில் சி என்னும் எழுத்து பொருந்தி இருக்கும், **சிக்கன வா வீசுகரம்** - நடனத்தின் போது தூக்கிய திருவடியைக் காட்டி நிற்கும் இடது கரத்தில் வா என்னும் எழுத்துப் பொருந்தி இருக்கும், **ஆர்க்கும் யகரம் அபயகரம்** - யாவருக்கும் அபயமளித்துக் காக்கும் கரமாகிய அபயகரம் ய கர எழுத்தைப் பொருந்தி இருக்கும், **அங்கி நகரம்** - தீயினை ஏந்தி நிற்கின்ற திருக்கரம் ந கர எழுத்தைப் பொருந்தி நிற்கும் - **அடிக்கீழ் முயலகனார் தங்கும் மகரமது தான்** - சிவபெருமான் தனது திருப்பாதத்தை முயலகன் மீது நின்று ஊன்றியவண்ணம் தங்கி நிற்கும் வலது பாதத்தில் மகார எழுத்துப் பொருந்தி நிற்கும் இவ்வாறான

முறையிலே இருப்பது சிவாய நம என்னும் சூக்கும பஞ்சாக்கரத் திருமேனி எனக் கொள்வோம்.

## கருத்துரை

நாம் ஆராய்ந்து பார்க்கப்போனால் இறைவனுக்கு சூக்கும பஞ்சாக் கரத்தின்போது அதன் எழுத்துக்கள் பின்வருமாறு அவர் திருமேனியின் பொருந்தி இருப்பதைக் காண்போம். உடுக்கினை ஏந்தி இருக்கும் வலது திருக்கரத்தில் சி என்னும் எழுத்துப் பொருந்தி இருக்கும். நடனத்தின்போது தூக்கிய திருவடியைக் காட்டி நிற்கும் இடது கரத்தில் வா என்னும் எழுத்துப் பொருந்தி இருக்கும். யாவருக்கும் அபயமளித்துக் காக்கும் கரமாகிய அபயகரம் ய என்னும் எழுத்தைப் பொருந்தி இருக்கும். தீயினை ஏந்திய திருக்கரம் ந கர எழுத்தைப் பொருந்தி நிற்கும். சிவபெருமான் தனது திருப்பாதத்தை முயலகன் மீது ஊன்றிய வண்ணம் தங்கி நிற்கும் வலது பாதம் மகர எழுத்தைப் பொருந்தி நிற்கும். இவ்வாறான முறைமையில் இருப்பது சிவாய நம என்னும் சூக்கும பஞ்சாக்கரத் திருமேனி எனக் காண்போம்.

## விரிவுரை

இந்தச் செய்யுளில் இறைவன் சூக்கும பஞ்சாக்கரத் திருமேனி கொண்டு விளங்குவார் என்பதைக் காட்டுகின்றார். அவ்வாறு சூக்கும திருமேனி கொண்டிருப்பது சி. வா. ய. ந. ம. எனவரும். இங்கு சி என்பது சிவனையும் வா என்பது சத்தியையும் ய என்பது ஆன்மாவையும் ந என்பது திரோதானத்ததையும் ம என்பது ஆணவ மலத்தையும் குறிப்பதாகும். முன்பு நமசிவாய எனக் கூறப்பட்ட போது இது போன்றே அவ்வெழுத்துக்கள் அதனதன் தன்மையோடு நிற்பதைப் பார்த்தோம். ஆயினும் அவை சேர்ந்து அணைந்திருக்கும் கருவிகள் - உறுப்புகள் - இடம் மாறுபட்டிருக்கின்றன. இதனை ஊன்றிக் கவனித்தால் அது இனிது புரியும் புலப்படும்.

| நமசிவாய என்னும் தூல பஞ்சாக்கரத்தில் | | சிவாய நம என்னும் சூக்கும பஞ்சாக்கரத்தில் |
| --- | --- | --- |
| திருவடி | - ந - | தீயினை ஏந்திய கை |

| | | |
|---|---|---|
| திருவயிறு | - ம - | முயல்கன் மீது ஊன்றிய கால் |
| திருத்தோள் | - சி - | உடுக்கை ஏந்திய கரம் |
| திருமுகம் | - வா - | வீசி ஆடும் கரம் |
| திருமுடி | - ய - | அபயகரம் |

சிவன் திருமேனி திருவைந்தெழுத்தால் அமைந்தது எனக் கண்டோம். அதன் எழுத்துக்கள் தூல திருவைந்தெழுத்திலும் . சூக்கும திருவைந்தெழுத்திலும் இடம் மாறிக் கிடக்கின்றன. இறைவன் உயிருக்குச் சுகம் செய்யும் பொருட்டே இத்திருமேனி கொண்டு விளங்குகின்றான் என முன்பு கண்டோம். அந்நடனத்திற்கு ஆதாரமான இடம் உயிரேதான். இதனைப் பார்க்கில் இறைக்கு என்னும் சொற்றொடர் காட்டி ஆராய வைக்கின்றார். அந்த ஆய்வின் முடிவுதான் என்ன ஆம் சிறிதளவு புரிகின்றது. தூல திருவைந்தெழுத்துக்கான நம சிவாய என்பது சகல நிலையில் இருந்து பாச ஞானத்தில் அழுந்தி உலக இன்பத்தை நாடி அதனை அனுபவித்தற்கு ஏதுவாய பயன்களைக் கொடுக்கும் திருமேனியாக விளங்குகின்றது. ந என்பது திருவடியிலும் மகரம் உதரத்திலும் திருவயிற்றிலும் சி தோளிலும் வா முகத்திலும் ய திருமுடியிலும் அமையப் பெற்று உலக இன்பத்திற்கு ஏதுவான நலன்களைத் தருவதாக நிற்பதை காண முடிகின்றது. இங்கு உயிர் உச்சியில் - திருமுடியில் நிற்பதும் மகரம் ஆகிய ஆணவ மலம் வயிற்றில் இருந்து அறிவை மயக்குவதாகவும் இன்னும் உலக போகப் பொருள்களை அளிக்க வல்லதாய் விளங்குவதும் காண்க. இத்தூல திருவைந்தெழுத்தை ஓதி நிற்போர் (நமசிவாய) என்பது இம்மையிலே நற்பயனையும் நுகர்வையும் அடைவர்.

இனி இவ்வுயிர் அறிவினாலும் சிவன் அருளினாலும் பாச நிலையில் இருந்து விடுபட்டு பசு ஞானத்தை அடைகின்றது. பசு ஞானத்தை அடைந்த உயிர் தனித்து நிற்றல் இயலாது. அதன் இயல்பு எதனையும் அது சார்ந்திருக்கும் இயல்பு. எனவே பாச ஞானத்தினின்றும் நீங்கி பசு ஞானத்தையும் கடந்து பதிஞானத்தைப் பற்றுகின்றது. அவ்வாறு சார்ந்து பற்றி நிற்கும் ஆன்மா இறைவனை நாடி நிற்பதும் இருவினை ஒப்பு மலபரி பாகம் அடைகின்றது. இந்தப் பாச ஞானத்தினை விடுவிக்க இறைவன் தனது திருமேனியில் அமையும் திருவைந்தெழுத்தை வேறு

நிலைக்கு மாற்றி உயிருக்கு அருளுகின்றான். அது இருக்கும் முறைமையை நோக்கின் அது நமக்குப் புலனாகின்றது.

சி என்பது உடுக்கை ஏந்திய கரமெனத் தரப்படுகின்றது. உயிரின் உணர்வில் மாயையை விலக்குவதாகும். வா என்பது வீசி ஆடும் கரம் உயிரினை வா என அழைத்து அருள் வழங்குவதாகும். ய என்பது அபயகரம் இது இனிதிருக்க எனத் தேற்றம் தந்து அஞ்சாதே என அபயம் அளிப்பதாகும். ந என்பது தீயினை ஏந்திய கரமாகக் காண்பதாம். அது மாயைச் சுட்டெரிக்கும் கையாக நிற்கின்றது. திருவடி முயலகனை மிதிக்கும் பாதம் அது ஆணவத்தை மிதித்து அடக்கி நிற்கும் நிலையாகும். இதனால் சிவாய நம என்னும் சூக்கும திருவைந்தெழுத்துத் திருமேனி உயிருக்கு மறுமைக்கான வழியில் செலுத்தி, செல்வதற்கு நீக்குவன நீக்கி, எடுப்பனவற்றை எடுத்து கொடுப்பனவற்றைக் கொடுக்கும் திருமேனி என்பது தெளிவாகின்றது. ஆன்மா பக்குவநிலையை எய்தும்போது இருவினைகள் மேலும் சேரா வண்ணம் நகரத்தையும் ஆணவ மலம் அடங்கிய நிலை கொண்டு மலபரிபாகம் பெறுவதை மகரத்தையும் யகரம் அருள் வழங்கி தனக்குரிமையாக்கும் தன்மையையும் அபய கரமான ய என்பது உயிருக்கு அபயம் கொடுப்பதாகவும் அமைந்து முத்தி நிலைக்கு இட்டுச் செல்லும் மந்திரமாகவும், திருமேனியாகவும் விளங்குகின்றது. சிவாய நம என்னும் திருவைந்தெழுத்தை முறைப்படி ஓதுவார் உலக இன்ப துன்பங்களிலிருந்து விடுபட்டு திருவடிப் பேறு கருதி நிற்போர் கூறும் மந்திரமாகவும், இறைவனும் அந்நிலையில் உயிரை ஆதாரமாகக் கொண்டு அதற்கென அமைந்த திருமேனி கொண்டு உயிருக்கு அறிவை ஞானத்தை தருவான் என்பதும் காணலாம். மேலும் சிவாய நம என்பவற்றினைக் குறிக்கும் அங்கங்களாக சிவாய என்றும் சிவா என்றும் சி என்றும் வழங்கும் திருமேனிகளான அதி சூக்கும பஞ்சாக்கரம், காரண பஞ்சாக்கரம் மகா காரண பஞ்சாக்கரம் ஆகியன, சூக்கும பஞ்சாக்கிரத்தில் உளவாகையால் இறைவன் திருமேனி இவ்விரு இடங்களிலும் சிறப்பாக நின்று அருளுதலை காண்கின்றோம்.

முன்பு ஆசிரியர் என் வடிவம் எனவும் நும் உருவம் எனவும் கூறியதை இங்கு சிறிது சிந்திக்க வேண்டும். இறைவன் மூன்று நிலைகளில் திருமேனி கொண்டவன். அருவம் அருவுருவம் உருவம் என்பன அந்த நிலைகள்.

நமசிவாய என்னும் திருவைந்தெழுத்து இறைவன் உயிர்களுடன் மறைந்திருந்தே அருளுவான் அருள் புரிவான். ஆகையால் அத்திருமேனி அருவத்திருமேனியாகக் கொள்ளல் வேண்டும். சிவாய நம என்னும் திருவைந்தெழுத்து சூக்கும திருவைந்தெழுத்து எனப்படும். இதில் இறைவன் அருவமும் உருவமும் ஆகிய திருமேனி அருவுருவ திருமேனி கொண்டு உயிர்களுக்கு மறைந்தும் வெளிப்பட்டும் அருளுவான். இனி அதிசூக்குமத் திருமேனி என்பது இங்கு உண்டு எனக் கண்டோம். அது சிவாய என்னும் திருவைந்தெழுத்தோடு கூடியது. இங்கே சிவன் உருவத்திருமேனி கொண்டு உயிரின் தகுதிக்கு ஏற்ப அருள் பாலிப்பன் எனக் கொள்ளலாம். எனவே இறைவன் திருமேனி உயிர்களுக்கு அவ்வத்தகுதியில் பக்குவத்தில் நிற்கும் போது படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என்னும் ஐந்தொழிலைச் செய்யும் திருமேனியாகவும், அத்தொழில்கள் புரியும்போது இடம் உயிரையே ஆதாரமாகக் கொண்டு செய்வதும், இம்மையின் பயன் விரும்புவோர்க்கு உயிரிடத்து நடனமும் மறுமை விரும்புவோர்க்கு தில்லையிலும் திருநடனம் செய்வன் என்பதும் இங்கு உணரச் கூடியதாக இருக்கின்றது.

எளியது வாதுசெய் வார்எங்கள் ஈசனை
ஒளியை உன்னி உருகு மனத்தராய்த்
தெளிய ஓதிச் சிவாயநம வென்னும்
குளிகை இட்டுப் பொன்னாக்குவன் கூட்டையே

எனவும்

சிவன் அருளாய சிவன் திரு நாமம்
சிவனரு ளான்மாத் திரோத மலமாயை
சிவன் முதலாகச் சிறந்து திரோதம்
பவமத கன்று பரசிவ மாமே

எனவும்

தெள்ளமு தூறச் சிவாய நமவென்று
உள்ளமு தூற ஒருகால் உரைத்திடும்
வெள்ளமு தூறல் விரும்பியுண் ணாதவர்
துள்ளிய நீர்போற் சுழல்கின்ற வாறே

எனவும்

திருமூல நாயனார் கூறிய திருமந்திரங்கள் புலப்படுத்தும். உண்மைகள் கண்டு தெளியற்பாலது. எனவே மறுமைப் பயன் வீட்டு இன்பம் வேண்டுவோரும் பிறவி நீக்க நிற்போரும் சிவாய நம என்னும் திருவைந்தெழுத்து மந்திரத்தை ஓதுவதோடு அவ்வெழுத்துக்களோடு கூடிய சிவன் திருமேனியைக் கண்டு வழிபடுதல் வேண்டும். எனவே, சதாசிவத் திருமேனி - அருவுருவத்திருமேனி சிவாய நம என்னும் திருமந்திரம் ஆகும். இத்திருமேனி சிவாலயங்களில் தாபிக்கப்பட்டு விளங்கும் சிவலிங்கத் திருமேனி என்பது தெளிவு. எனவே மறுமைப் பயன் வேண்டின் பிறவித் துயர் நீக்கம் வேண்டின், வீட்டின்பம் பெற விழையின் சதாசிவத் திருமேனியாகிய சிவலிங்க மூர்த்தத்தைக் கண்டு, சிவாய நம என ஓதி வழிபட்டு வரவேண்டும். அவ்வாறு ஒன்றி நின்று வழிபட்டு வரின் மலமாயை தன்னோடு வல்வினையும் அற்றுப் போகும். இதுவே இந்தப் பாடல் மூலம் தரக்கிடக்கும் உண்மை விளக்கமாகும்.

## வெண்பா 34

### திருவாசியும் சிவனொளியும்

**ஓங்காரமே நல்திரு வாசி உற்றதனில்
நீங்கா எழுத்தே நிறைசுடராம் - ஆங்காரம்
அற்றார் அறிவர் அணி அம்பலத்தான் ஆடல் இது
பெற்றார் பிறப்பற்றார் பின்**

### இதன் பொருள்

**ஓங்காரமே நல் திருவாசி** -சிவபெருமானுடன் பிரிப்பின்றி நிற்கும் நல்ல திருவாசியே (பிரணவ) ஓங்கார வடிவமாகும், **அதனில் நீங்கா எழுத்தே நிறை சுடராம்** - அந்தத் திருவாசியில் அமைந்துள்ள என்றும் விட்டுப் பிரியாது நிற்கும் ஐம்பத்தொரு சுடர்களும் பூரண நிறைவுக் கொண்ட திருவைந்தெழுத்துக்களைக் குறிப்பதாகும், **உற்று அதனில் நீங்காத எழுத்தே** - அத்திருவாசியை என்றும் விட்டுப் பிரியாது விளங்கும் அப்பஞ்சாக்கர வடிவே இறைவன் திருமேனியே, **நிறை சுடராம்** - இது பூரண ஞானமாக விளங்கும் சிவபரம் பொருளாகும், **ஆங்காரம் அற்றார் அறிவர்** - எனது உடைமை என்றும்

நான் என்றும் உள்ள ஆணவச் செருக்குகளை அகந்தைகளை விட்டு நீங்கி அவை இல்லையாம்படியாக நிற்கும் அறிவுடைய மெய்ஞ் ஞானிகள், **அணி அம்பலவன் ஆடல் இது** - அழகு விளங்கும் திருச்சிற்றம்பலத்தே நின்று ஆடுகின்ற ஆடல் பிரானின் கூத்து இது என்பதை அறியவல்லவர்கள், **இது பெற்றார்** - அதனை உணர்ந்து அக்கூத்தப்பிரானின் திருநடனத்தை கண்டு வழிபட்டவர்கள், **பிறப்பற்றார் பின்** - இனிமேல் தொடர்ந்துவரும் பிறப்பு என்பது இல்லையெனும் நிலையை அடைந்தவராவர்.

## கருத்துரை

சிவபெருமானுடன் பிரிப்பின்றி நிற்கும் நல்ல திருவாசியே (பிரணவ) ஓங்கார வடிவாகும். அந்தத் திருவாசியில் அமைந்துள்ள என்றும் விட்டுப் பிரியாது நிற்கும் ஐம்பத்தொரு சுடர்களும் பூரண நிறைவு கொண்ட திருவைந்தெழுத்துக்களைக் குறிப்பதாகும். அத்திருவாசியை என்றும் விட்டுப் பிரியாது விளங்கும் அப்பஞ்சாக்கர வடிவே இறைவன் திருமேனியே. இது பூரண ஞானமாக விளங்கும் சிவபரம் பொருளாகும். எனது என்றும் நான் என்றும் உள்ள ஆணவச் செருக்குகளை அகந்தைகளை விட்டு நீங்கி, அவை இல்லையாம்படி நிற்கும் அறிவுடைய மெய்ஞ்ஞானிகள், அழகு விளங்கும் திருச்சிற்றம்பலத்தே நின்று ஆடுகின்ற ஆடல் பிரானின் கூத்து இது என்பதை அறியவல்லவர்கள். அக்கூத்தப்பிரானின் திருநடனத்தைக் கண்டு வழிபட்டவர்கள் இனிமேல் தொடர்ந்து வரும் பிறப்பு என்பது இல்லை என்னும் நிலையை அடைந்தவர் ஆவர்.

## விரிவுரை

பஞ்சாக்கரத்தின் இயல்பினையும் அப்பஞ்சாக்கரத்தையே இறைவன் திருமேனியாகக் கொண்டவன் என்பதனையும் முந்திய செய்யுளில் கூறிய ஆசிரியர் பிரணவ மந்திரம் என்பது என்ன அதன் பொருள் என்ன என்பதனையும் அதற்கான விளக்கத்தையும் தந்து அந்த ஓங்காரத்தின் உள்ளே விளக்கமாக நின்று தில்லை சிற்றம்பலத்தே எம்பிரான் - சிவபிரான் - திருநடனம் செய்கின்றார் எனவும் கூறி, அத் திருநடனத்தை தரிசித்தவர்கள் அடைகின்ற நற்பேற்றினையும் இச்செய்யுளில் கூறுகின்றார்.

தில்லையிலே சென்று எம்பெருமானின் திருவுருவத்தை நாம் காணும்போது அப்பெருமான் பின்பாகத் திருவாசி இருப்பதைக் காணுகின்றோம். இத்திருவாசியும் சிவபரம்பொருளும் இணைந்தே பிரிப்பின்றி இருப்பதையே நாம் காண முடிகின்றது. இந்தத் திருவாசி ஓ என்னும் தமிழ் எழுத்தின் வரிவடிவாக வளைந்து இருப்பதை நாம் காண்கின்றோம். அது அழகு மிக்கதாகத் தோன்றுகின்றது. ஊனக் கண்கொண்டு பார்த்து நிற்போருக்கு அது வெறிமனே நிற்கும் பொருளாகவே தெரியும். ஆனால், தில்லைப் பிரானின் மீது இடையறாது அன்பு கொண்டு அவர் நாமத்தையே உச்சரித்துக் கொண்டு இருக்கும் மெய்ஞ்ஞானிகள் அதனை ஓம் என்னும் பிரணவ வடிவாகவே காண்பார். அத்திருவாசியின் வடிவம் ஓம்கார வடிவமே. இதனையே செய்யுளில் ஓங்காரமே நல் திருவாசி என்றார்.

இத்திருவாசியின் மேலே அந்த வளைவான பகுதியெங்கும் 51 சுடர்கள் போன்ற அமைப்பு உள்ளது. அந்த அமைப்பு 51 அக்கரங்களைக் குறித்து நிற்கும். அது அங்கே தனித்தனியாக தனிச் சுடராக நிற்பதை நாம் காணுகின்றோம். இந்த 51 எழுத்துக்களே கூத்தப் பெருமானின் திருவடிவமாக. பஞ்சாக்கரத் திருமேனியாக இருப்பதையும் நாம் காணுகின்றோம். அந்த 51 எழுத்தே அடங்கி திருவைந்தெழுத்து மந்திரமாக சிவாய நம என்னும் மந்திரமாக இருக்கின்றது என்பதை திருமூலர் தனது திருமந்திரம் என்னும் நூலிலே விளக்கியுள்ளார். அத்திருவாசியில் உற்று அதனை விட்டு நீங்காதிருப்பவர் திருச்சிற்றம்பலவர். அத்திருச்சிற்றம்பலமுடையார் உற்று நீங்காது நிற்கின்றார். இன்னும் தெளிவாகச் சொல்வதாயின் எம்பெருமான் அத்திருவாசியினுள் உற்று தனது திருநடனத்தைச் செய்கின்றார். எனவே அவ்விரண்டும் - திருவாசியும் திருமேனியும் - ஒன்றாக அமைந்து விளங்குவதே சிவபெருமானின் முழு உருவ அமைப்பாகும். எனவே பிரணவ வடிவமான ஓம் என்பதும் திருவைந்தெழுத்தும் உற்று இணைந்து காணப்படுகின்றது என்பதே. எனவே எம்பெருமானின் திருப்பெயரை உச்சரிக்கும்போது ஓம் சிவாய நம என உச்சரித்தல் வேண்டும். இவ்வாறு ஓம் சிவாய நம எனக் காணும் ஞானிகள், தமது அறிவிலே மெய்ஞ்ஞானமும் இறைவனின் திருநடனமும் தோன்றும் படி காண்பார்கள். அவ்வாறு நிற்பவர்கள் பாசத் தொடர்பு அற்றவர்களாய்

அவற்றின் நின்றும் நீங்கியவர்களாய் இருத்தல் வேண்டும் இதனை வள்ளுவர்

**யான் எனது என்னும் செருக்கறுப்பான் வானோர்க்கு**
**உயர்ந்த உலகம் புகும்** எனவும்

**பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்**
**பற்றுக பற்று விடற்கு** எனவும்

கூறியது கண்டு தெளியலாம். இவ்வாறு நீங்கியவர்கள் மலபரிபாகம் அடைந்து சத்திநிபாதம் அடையப் பெற்றவராய் நிற்கும் மெய்யறி வுடையவர்களே.

அவர்கள் சிவபிரானையே சிந்தையிலே எப்போதும் எண்ணி யிருப்பார்கள். அச்சிவன் பணியே தம்பணியெனக் கொள்ளும் பண்பாளர்கள் மேலும் அவர்கள் பார்க்கும் இடமெல்லாம் சிவன் நீக்கமற நிறைந்திருப்பவன் எனக் காண்பர். ஆதலால், திருச்சிற்றம் பலத்தே நடனத்தைச் செய்யும் கூத்தப்பிரானின் திருக்கூத்தினை காணும் தெளியும் தகுதியைப் பெற்றவராகின்றனர். அவர்கள் அந்தச் சூக்கும பஞ்சாக்கரத்தை ஓமென்னும் பிரணவத்துடன் ஓதி நிற்பவர்களாய், ஒலி வடிவாலும், காணும் காட்சியாலும் திருவாசியையும் எம்பெருமானெனக் கண்டு அப்பெருமானின் பேரருள் நிலை எய்தியவராகின்றனர். அத்திருநடனத்தைத் தில்லையிலே காணும் பாக்கியம் பெற்றவர்கள் தமது பிறவிப் பிணி நீங்கியவர்களாய் இறைவனுடன் அத்துவிதமாகக் கலந்தவர்களும் ஆகிவிடுகின்றனர். பேரின்ப நிலையை அடைந்தவர்கள் ஆகின்றனர். அங்கு அவர்கள் காணும் நடனம் ஊன நடனமாகவோ அன்றி ஞான நடனமாகவோ காணமாட்டார். அத்தில்லையிலே இடம்கொண்டு பெருவெளியில் ஆடுகின்ற ஆனந்த நடனமாகவே காணுகின்றனர். ஆனந்தக் கூத்தாகவே காண்கின்றனர். ஆனந்த நிலையெய்தியவருக்குப் பிறப்பு வருமா என்ன? வராது. அவர்க்கு மீண்டும் பிறவி இல்லை. எனவே தான் அத்திருவாசி ஆகிய பிரணவத்தையும் சிவாய நம என்னும் பஞ்சாக்கரத் திருமேனியையும் ஆனந்த நடனத்தில் காணும் காட்சியினராகவும் அதனைத் தவிர வேறெதனையும் காணாத

மாட்சியினராகவும் மெய்ஞ்ஞானிகள் விளங்குவதால் அவர்க்குப் பிறப்பு இல்லா தொழியும் இதனை நூலாசிரியர் அணி அம்பலத்தான் ஆடல் இது பெற்றார் பிறப்பு அற்றார் பின் என்றார்.

இங்கு அப்பர் பெருமான் அணி தில்லையம்பலவன் திருமேனி வடிவத்தையும் அவர் ஆடும் பெருநடனத்தையும், அதைக் காண்பார் அடையும் பயனையும் காட்டிப் பாடிய தேவாரம்

**குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயில் குமிழ்சிரிப்பும்,**
**பனித்த சடையும் பவளம் போல் மேனியில் பால் வெண்ணீறும்**
**இனித்தமுடைய எடுத்தப் பொற்பாதமும் காணப்பெற்றால்**
**மனித்தப் பிறவியும் வேண்டுவதே இம்மானிலத்தே**

என்பதாகும்.

இந்தப் பாடல் மனித்தப் பிறவியும் வேண்டுவதே எனக் கூறியிருப்பினும் பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான் என்னும் மாணிக்க வாசக சுவாமிகளின் திருவாசகத்தை மனதிற்குக் கொண்டு வருகின்றது. அப்பர் பெருமான் பெரும் சிவஞானி. அவரே இக்கூத்தைக் கண்டு மகிழ்ந்து தன் பிறவி வேர் அறுத்தவர். பிறவியை நீக்கியவர் என்பதனைப் பெரிய புராணம் எடுத்துரைக்கின்றது. இது பெற்றார் பிறப்பு அற்றார் என்பது சத்திய வசனமாகக் காட்டப் படுவதை உணர்க. அம்பலவனை அணி அம்பலத்தான் என்றார். இதனையே மாணிக்க வாசக சுவாமிகளும் அணி தில்லைச் சிற்றம்பலத்தே தீயாடும் கூத்தன் என்றார்.

இனி அஞ்செழுத்து சுடர் எழுத்து. ஒளி எழுத்து என்றார். ஓம் என்னும் பிரணவ மந்திரம் நாதம் விந்து அகரம் உகரம் மகரம் என்னும் ஐந்து பொருள்களால் ஆனது. அது சதாசிவனையும் உருத்திரனையும் குறிக்கும். எனவே ஓங்காரமும் இவ்வதி தெய்வங்களின் தொழில்களாகிய படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என்னும் ஐந்து தொழில்களையும் - பஞ்ச கிருத்தியங்களையும் - உணர்த்துகின்றது. சிவாய நமவும் இறைவனையே உணர்த்தும். ஓம் என்னும் மந்திர ஒலியும் சிவாய நம என்னும் ஒலியும் மந்திரப் பொருளால் ஒன்றே ஆகும்.

அவற்றின் நின்றும் நீங்கியவர்களாய் இருத்தல் வேண்டும் இதனை வள்ளுவர்

**யான் எனது என்னும் செருக்கறுப்பான் வானோர்க்கு**
**உயர்ந்த உலகம் புகும்** எனவும்

**பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்**
**பற்றுக பற்று விடற்கு** எனவும்

கூறியது கண்டு தெளியலாம். இவ்வாறு நீங்கியவர்கள் மலபரிபாகம் அடைந்து சத்திநிபாதம் அடையப் பெற்றவராய் நிற்கும் மெய்யறிவுடையவர்களே.

அவர்கள் சிவபிரானையே சிந்தையிலே எப்போதும் எண்ணியிருப்பார்கள். அச்சிவன் பணியே தம்பணியெனக் கொள்ளும் பண்பாளர்கள் மேலும் அவர்கள் பார்க்கும் இடமெல்லாம் சிவன் நீக்கமற நிறைந்திருப்பவன் எனக் காண்பர். ஆதலால், திருச்சிற்றம் பலத்தே நடனத்தைச் செய்யும் கூத்தப்பிரானின் திருக்கூத்தினை காணும் தெளியும் தகுதியைப் பெற்றவராகின்றனர். அவர்கள் அந்தச் சூக்கும பஞ்சாக்கரத்தை ஓமென்னும் பிரணவத்துடன் ஓதி நிற்பவர்களாய், ஓலி வடிவாலும், காணும் காட்சியாலும் திருவாசியையும் எம்பெருமானெனக் கண்டு அப்பெருமானின் பேரருள் நிலை எய்தியவராகின்றனர். அத்திருநடனத்தைத் தில்லையிலே காணும் பாக்கியம் பெற்றவர்கள் தமது பிறவிப் பிணி நீங்கியவர்களாய் இறைவனுடன் அத்துவிதமாகக் கலந்தவர்களும் ஆகிவிடுகின்றனர். பேரின்ப நிலையை அடைந்தவர்கள் ஆகின்றனர். அங்கு அவர்கள் காணும் நடனம் ஊன நடனமாகவோ அன்றி ஞான நடனமாகவோ காணமாட்டார். அத்தில்லையிலே இடம்கொண்டு பெருவெளியில் ஆடுகின்ற ஆனந்த நடனமாகவே காணுகின்றனர். ஆனந்தக் கூத்தாகவே காண்கின்றனர். ஆனந்த நிலையெய்தியவருக்குப் பிறப்பு வருமா என்ன? வராது. அவர்க்கு மீண்டும் பிறவி இல்லை. எனவே தான் அத்திருவாசி ஆகிய பிரணவத்தையும் சிவாய நம என்னும் பஞ்சாக்கரத் திருமேனியையும் ஆனந்த நடனத்தில் காணும் காட்சியினராகவும் அதனைத் தவிர வேறெதனையும் காணாத

மாட்சியினராகவும் மெய்ஞ்ஞானிகள் விளங்குவதால் அவர்க்குப் பிறப்பு இல்லா தொழியும் இதனை நூலாசிரியர் அணி அம்பலத்தான் ஆடல் இது பெற்றார் பிறப்பு அற்றார் பின் என்றார்.

இங்கு அப்பர் பெருமான் அணி தில்லையம்பலவன் திருமேனி வடிவத்தையும் அவர் ஆடும் பெருநடனத்தையும், அதைக் காண்பார் அடையும் பயனையும் காட்டிப் பாடிய தேவாரம்

**குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயில் குமிழ்சிரிப்பும்,**
**பனித்த சடையும் பவளம் போல் மேனியில் பால் வெண்ணீரும்**
**இனித்தமுடைய எடுத்தப் பொற்பாதமும் காணப்பெற்றால்**
**மனித்தப் பிறவியும் வேண்டுவதே இம்மானிலத்தே**

என்பதாகும்.

இந்தப் பாடல் மனித்தப் பிறவியும் வேண்டுவதே எனக் கூறியிருப்பினும் பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான் என்னும் மாணிக்க வாசக சுவாமிகளின் திருவாசகத்தை மனதிற்குக் கொண்டு வருகின்றது. அப்பர் பெருமான் பெரும் சிவஞானி. அவரே இக்கூத்தைக் கண்டு மகிழ்ந்து தன் பிறவி வேர் அறுத்தவர். பிறவியை நீக்கியவர் என்பதனைப் பெரிய புராணம் எடுத்துரைக்கின்றது. இது பெற்றார் பிறப்பு அற்றார் என்பது சத்திய வசனமாகக் காட்டப் படுவதை உணர்க. அம்பலவனை அணி அம்பலத்தான் என்றார். இதனையே மாணிக்க வாசக சுவாமிகளும் அணி தில்லைச் சிற்றம்பலத்தே தீயாடும் கூத்தன் என்றார்.

இனி அஞ்செழுத்து சுடர் எழுத்து. ஒளி எழுத்து என்றார். ஓம் என்னும் பிரணவ மந்திரம் நாதம் விந்து அகரம் உகரம் மகரம் என்னும் ஐந்து பொருள்களால் ஆனது. அது சதாசிவனையும் உருத்திரனையும் குறிக்கும். எனவே ஓங்காரமும் இவ்வதி தெய்வங்களின் தொழில்களாகிய படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என்னும் ஐந்து தொழில்களையும் - பஞ்ச கிருத்தியங்களையும் - உணர்த்துகின்றது. சிவாய நமவும் இறைவனையே உணர்த்தும். ஓம் என்னும் மந்திர ஒலியும் சிவாய நம என்னும் ஒலியும் மந்திரப் பொருளால் ஒன்றே ஆகும்.

ஓம் என்பதின் உள்ளொளி சிவாய நம ஆகும். ஓங்காரம் உலகை இயக்கும் திருவைந்தெழுத்து மந்திரம். திருவாசி ஓம் என்னும் வடிவ அமைப்பாக நிற்கின்றது. திருவாசியின் உள்ளொளியாக விளங்கும் அம்பலவாணர் வடிவம் திருவைந்தெழுத்தேயாக நிற்கின்றது.

**சிவாய நம என்று சிந்தித்திருப்போருக்கு**
**அவாயம் ஒருபோதும் இல்லை**

எனவும்

**ஓம் சிவாய நம என**
**சித்தம் ஒருங்கி அவாயம் அறவே அடிமையதாக்கி**

எனத் திருமூலரும் கூறியுள்ளார்.

அவாயம் அற என்பது பிறப்பின்மையைக் குறித்தன. ஆசிரியர் அதனையே செய்யுளில் பெற்றார் பிறப்பற்றார் பின் என்றார். பிறப்பற்றார் என்பது அவாயம் அற என்பதை உணர்த்துவது கண்டு தெளியலாம்.

இங்கு ஒன்றை நாம் கூற வேண்டும். இலங்கையில் வாழும் சைவத் தமிழராயினும், வேறு சமயத்தவராயினும் ஒரு பொருளை, ஒரு கருத்தை ஏற்கும்போது ஓம் என்றே கூறுகின்றனர். சிறு குழந்தைகள் முதல் முதியோர் வரை இவ்வாறு கூறி நிற்பது, இறைவனின் திருவெழுத்தாகிய பஞ்சாக்கரத்தையே கூறி நிற்பதாக அமையும். அவ்வாறு கூறுதல் தம்மையும் அறியாது இறைமந்திரத்தை எப்போதும் கூறுவதோடு பிறருக்கும் அதனை ஏற்கும்படி செய்வது எமக்குப் பெருமை தருகின்றது. தமிழ் நாட்டில் கடந்த 500 ஆண்டுகளுக்கு முன்னர் ஓம் எனச் சொல்லும் வழக்கம் இருந்துள்ளது. அது காலப்போக்கில் ஆம் என ஆகிவிட்டது. மகாபாரதத்தில் இந்த ஓம் என்பதை ஏற்கின்றேன் என்னும் பொருளில் வைத்து வில்லிபுத்தூரர் பாடியது காணக்கிடக்கின்றது. இவ்வாறு ஓம் எனச் சொல்லி ஏற்கும் முறை மீண்டும் தமிழகத்தில் வழக்கத்திற்கு வரவேண்டும். இது என் விருப்பமாகும்.

## வெண்பா 35

### சிவபெருமான் நிகழ்த்தும் ஊன நடனம்

**தோற்றம் துடியதனில் தோயும் திதி அமைப்பில்**
**சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் - ஊற்றமா**
**ஊன்று மலர்ப்பதத்தில் உற்ற திரோதம் முத்தி**
**நான்ற மலர்ப்பதத்தே நாடு**

## இதன்பொருள்

**தோற்றம் துடியதனில்** - இறைவனின் நான்கு திருக்கரங்களில் உடுக்கை ஏந்திய திருக்கரம் ஒன்று. அத்திருக்கரம் அவ்வுடுக்கையை இயக்கி ஒலி உண்டாக்குகின்றது. அவ்வாறு ஒலியை எழுப்புதல் படைத்தல் என்னும் தொழிலுக்கானதே, **தோயும் திதி அமைப்பில்** - மற்றோரு கரம் அஞ்சேல் என அமைந்த கையாக உயிர்களுக்கு அபயம் தரும்படி காத்தல் என்னும் தொழிலைப் புரிகின்றது. நிலை நிறுத்தல், **சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்** - இன்னொரு திருக்கரம் தீயினை ஏந்தி நிற்கின்றது. அந்திருக்கரம் உயிர்களின் கால எல்லை வரை நின்று பின்னர் அழித்தலை செய்கின்றது, **ஊற்றமா ஊன்று மலர்ப்பதத்தில் உற்ற திரோதம்** - உறுதியாக முயலகன்மீது ஊன்றி நிற்கும் தாமரை மலர் போலும் திருப்பாதம் மறைத்தல் தொழிலைச் செய்கின்றது, **முத்தி நான்ற மலர்ப்பதத்தே** - எடுத்து உயரத் தூக்கிய மலர்போலும் திருவடி உயிர்களுக்கு முத்திப் பேற்றினை வழங்கும் அருளல் என்னும் தொழிலைச் செய்கின்றது. **நாடு** - எனவே உயிர்களுக்கு நலம் விளைக்கும் அத்தகைய சிறப்பு வாய்ந்த குறிப்பை உணர்ந்து எண்ணிப் பற்றி நிற்பாயாக.

## கருத்துரை

இறைவனின் நான்கு திருக்கரங்களில் உடுக்கை ஏந்திய திருக்கரம் ஒன்று. அத்திருக்கரம் அந்த உடுக்கையை இயக்கி ஒலி உண்டாக்குகின்றது. அவ்வாறு ஒலியை எழுப்புதல் படைத்தல் என்னும் தொழிலுக்கானதே. மற்றொரு கரம் அஞ்சேல் என அமைந்த கையாக, உயிர்களுக்கு அபயம் தரும்படி காத்தல் என்னும் தொழிலைப் புரிகின்றது. (நிலைநிறுத்தல்)

இன்னொரு திருக்கரம் தீயினை ஏந்தி நிற்கின்றது. அத்திருக்கரம் உயிர்களின் கால எல்லை வரை நின்று பின்னர் அழித்தல் தொழிலைச் செய்கின்றது. உறுதியாக முயலகன்மீது ஊன்றி நிற்கும் தாமரை மலர் போலும் திருப்பாதம் மறைத்தல் தொழிலைச் செய்கின்றது. எடுத்து உயரத்தூக்கிய மலர்போலும் திருவடி உயிர்களுக்கு முத்திப் பேற்றினை வழங்கும் அருளல் என்னும் தொழிலைச் செய்கின்றது. எனவே உயிர்களுக்கு நலம் விளைக்கும் அத்தகைய சிறப்பு வாய்ந்த குறிப்பை உணர்ந்து அதனை எண்ணிப் பற்றி நிற்பாயாக.

## விரிவுரை

இறைவன் பல வடிவங்களில் உருவங்களில் தோற்றம் தருபவன். உருவமாக அருவமாக தோற்றம் அளிப்பன் அது அருவுருவம். அவன் உருவமாகத் தோற்றம் செய்வான். இவ்வாறு அவன் செய்யும் தோற்றங்கள் யாவும் உயிர்களின் உய்த்திக்காக, ஈடேற்றத்திற்காக அவன் கொள்ளும் வடிவங்கள். உருவங்கள். அவனுடைய திருமேனி மூர்த்தங்கள் 25 என வேதம் உரைக்கின்றது. அதில் ஒரு வடிவமே மூர்த்தமே திருநடராசா வடிவம். அது ஆடிய நிலையில் உள்ளது. அந்த நிலையில் நின்றபடி, ஆடியபடி நின்றருளும் மாட்சியைக் குறிப்பது. அவ்வாறு அவன் ஆடும்போது அப்பெருமானின் திருமேனியில் விளங்கும் அத்தனை உறுப்புகளும் ஆடுவன. அந்த உறுப்புகள் அங்கங்கள் என அழைக்கப்படுகின்றன. அவனது திருமேனி அருளையே வடிவமாகக் கொண்டுள்ளது.

அவன் திருமேனியில் தோன்றும் இவ்வங்கங்கள் மூன்று வகைப்படும். திருவடியும் திருக்கரமும் அது போன்ற அங்க உறுப்புகள் பிரத்தியங்கம் எனப்படும் அவ்வங்கத்துடன் கூடி நிற்கும் பொருள்களான சூலம் மழு பாம்பு, தீ அபயமுத்திரை, நெருப்பு மான் என்பன சாங்கம் எனப்படும். அங்கத்தைச் சார்ந்திருக்கும் ஆடை மாலை அணிகள் தவிசு கொன்றை என்பன உபாங்கம் என வழங்கும். இவ்வாறு மேலே கூறிய அங்கம் பிரத்தியங்கம் சாங்கம் உபாங்கம் என்பனவும் அவனின் அருள்களே.

இறைவன் அருள் வடிவானவன். அவனுடன் இணைந்திருக்கும் இவையும் அருளேயாம். இறைவன் அவையே தானேயாய் நிற்பன். அது

எவ்வாறெனின் அவன் உயிருடன் ஒன்றாய் வேறாய் உடனாய் நிற்பவன் என்பதே. அவையேயாய் தானேயாய் அவையே தானேயாய் என்பன அவன் இயல்பு. இவற்றை அபேதம் பேதம் பேதாபேதம் என வடமொழியில் கூறுவர். இவ்வாறு உயிருடன் கலந்து தனது அருட் திருமேனியை வடிவாமாகக் கொள்வன். இறைவன் இவ்வமைப்பான இவ்வடிங்களை தனது தேவைக்காக மேற்கொள்பவன் அல்லன். அவனுக்கு அவை வேண்டப்படுவதன்று அவ்வடிவங்களில் நிலைகளில் நிற்கின்றான் என்றால் அதற்குக் காரணம் என்ன? இறைவன் தனது உடைமைப் பொருளான அடிமைப் பொருளான உயிர்களிடத்தே கொண்ட பேரன்பின் காரணமாகும். அவ்வுயிர்களின் துன்ப நிலையை நீக்கிச் சுகம் அளிப்பதற்கென இன்ப நிலைக்குக் கொண்டு வர விழைந்தே இத்திருமேனி வடிவங்களை மேற்கொண்டுள்ளான். அவன் உயிர்களையே ஆதாரமாக கொண்டும் அதனையே இடமாகக் கொண்டும் தனது நடனத்தை நிகழ்த்துகின்றான். தனது திருவிளையாடல்களைப் புரிகின்றான். அவன் வியாபகப் பொருள். அவன் பொதுவாக இந்த ஆடலை எல்லா இடத்தும் இயற்றுவன். அவன் சிறப்பாக நின்று ஆடுமிடம் உயிரிடமும் தில்லைச் சிற்றம்பலமுமாம். **தில்லைச் சிற்றம்பலமே இடமாக நட்டம் பயிலவல்லானுக்கே பல்லாண்டு கூறுதுமே** என்பது திருமுறை. அவன் ஆடும்போது பல நிலைகளில் நின்று ஆடுவான். இங்கே கூறவரும் நடனங்கள் மூன்று நிலைகளில் பேசப்படுகின்றது. அவை ஊன நடனம் எனவும் ஞான நடனம் எனவும் ஆனந்த நடனம் எனவும் காணலாம். மெய்ஞ்ஞானிகள் இந்த மூன்று நிலைகளிலும் இவ்வாட்டத்தைக் காண்பர். இங்கே உண்மை விளக்கம் தரும் மனவாசகங்கடந்தார் இறைவனின் இத்திருநடனங்களைக் கூற விழைந்தபோது ஊன நடனத்தை முதலில் கூறி விளக்குகின்றார். இச்செய்யுள் அந்த ஊன நடனத்தையே கூறுகின்றது.

ஊனம் என்றால் குறைபாடுகளையுடையது என்பது பொருள். இதனால் நாம் இறைவனின் நடனம் குறைபாடு உடையதெனக் கருதிவிடக் கூடாது. இதன் உண்மை விளக்கம் யாதெனில் இந்த நடனத்தை இயற்றும் போது உயிர்கள் அறியும் அறிவு சிறிதளவே என்பதை உணர்த்துவதேயாம். ஆகையால் இதனை ஊன நடனம் என்றார்.

இறைவன் உயிர்களை தனது திருவைந்தொழில்களான படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என்னும் இவற்றிற்கு உட்படுத்துகின்றான். அவன் செய்யும் இந்த ஐந்தொழில்கள் உயிர்களின் உய்திக்காக என்பதை நன்கு கருத்தில் தெளிந்து கொள்ளுதல் வேண்டும். இத்தொழில்கள் பற்றிய விளக்கம் இங்கு சிறிதளவேனும் வேண்டப்படுவதால் அதனை சிறிது விளக்குவோம்.

இத்தொழில்களைப் பற்றி மாணிக்கவாசக சுவாமிகள்

**ஆர்த்த பிறவித் துயர் கெட நாம் ஆர்த்தாடும் தீர்த்தன்.**
**தில்லைச் சிற்றம்பலத்தே தீயாடும் கூத்தன்.**
**இவ்வானும் குவலயமும் எல்லோமும் காத்தும்**
**படைத்தும் கரத்தும் விளையாடி**

எனத் தருவர். இதனை மேலும் ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய் போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின் தொழும்பின் எனவும் சிவபுராணத்துள் கூறியுள்ளார்.

படைத்தல் காத்தல் அழித்தல் ஆகிய முத்தொழிலும் மாயா காரியங்களான சடப் பொருள்களிடத்தே நிகழ்வன. மாயை மாமேயம் என்னும் காரியத்தால் தனு கரண புவன போகங்களை ஆக்கி உயிர்களைக் காத்தற்பொருட்டும் அவை அவற்றை அனுபவித்தற் பொருட்டும் உதவுகின்றது. இப்பொருள்கள் தோன்றி அழிவன. எனவே இந்த மூன்று தொழிலும் ஊன நடனத்தின் போது மாயா காரியப் பொருளிடத்தே நடப்பனவாகும். மற்று மறைத்தல் அருளல் ஆகிய இரு தொழில்களும் உயிரிடத்தே இறைவன் கொண்ட பெருங்கருணையால் பேரிரகத்தால் நிகழ்வன. இதுவே ஊன நடனம் நடப்பதற்கான காரணமும் விளைவுகளும்.

ஆன்மா அழிவதில்லை. அது அநாதியே தோன்றிய உள்பொருள். பல. நிலையானவை. அநாதியே மலப் பொருள்களாக உள்ள பாசப் பொருட்களைத் தனது அறியாமையால் பற்றிக் கொண்டன. அதனால் அது உயிர்க்குற்றம். இறைவன் இந்தக் குற்றத்தில் இருந்து உயிர்களை மீட்க வேண்டியதால், உயிர்களுக்கு உதவவுள்ளான்.

இந்தக் குற்றப் பொருள்கள் அழியக்கூடியன. நீங்கும் தன்மையன. உயிர்க்குணங்கள் அழியக் கூடிய பொருள்களுக்கே வேண்டும். இனி உள்ளதே தோன்றும் இல்லது தோன்றாது என்னும் சற்காரியவாத அடிப்படையில் உயிர் ஒரு பெற்றித்தாய் இருக்க அதன் வினைக் கேற்ப உடல் வடிவங்களை எடுத்து நுகர வைத்து அதன் அறியாமையை நீக்கி அறிவை வளர வைப்பதே இறைவன் திருவுள்ளம். இறைவன் யாண்டும் எப்போதும் எப்பொருளிலும் கலந்து இருக்கின்றான். ஆகையால், அறிவில்லாத பொருள்களை அழித்து தோற்றுவித்து கால எல்லைவரை நிலைக்க நிறுத்தி வைத்திருப்பது அவனே. இம் மாயா காரியப் பொருட்களைக் கொண்டு ஆன்மா நுகர்வைச் செய்து, மேலும் மேலும் வினைகளைப் புரிந்து பிறவிகளை எடுக்கின்றன. இப்பிறவியினின்றும் உயிர்கள் நீங்க வேண்டும். அதன் மெய்யறிவு படிப்படியாக வளரவேண்டும். இவ்வாறு வளர்ந்து வரும் வேளையில் அறிவு வளரப் பெற்று இந்தப் பிறவியைத் துயரம் எனக் காணுகின்றது. அதனை நீக்க வேண்டும் என விரும்பி உயிர் அதற்கான மார்க்கத்தில் செல்லுகின்றது. இப்பிறவியை அறுக்க வல்லவன் இறைவன் ஒருவனே எனத் துணிவு கொள்ளுகின்றது. இதனால் இறைவனைச் சிக்கெனப் பிடித்து அவனை வணங்குகின்றது. வாழ்த்துகின்றது. பல பிறவிகளை எடுத்து இளைத்த உயிர் இத்துன்பத்தை அறுப்பவன் இறைவன் என்னும் நிலையை உணருகின்றன. பிறப்பறுக்கும் பிஞ்ஞகன் தன் பெய்கழல்கள் வெல்க என்றார் மாணிக்கவாசகப் பெருமான். எனவே உயிர்களின் அறிவு வளர வேண்டி, இறைவன் உயிர்களின் குறைகளைக் குற்றங்களை நீக்குவதற்கெனச் செய்கின்ற திருநடனமே ஊன நடனமாகும். இதனால் இறைவன் செய்கின்ற நடனத்தில் கருணைத் தன்மை புரிகின்றது.

இவ்வாறே இறைவன் சூக்கும ஐந்தொழில்களையும் அதி சூக்கும ஐந்தொழில்களையும் ஆன்ம உய்திக்காகப் புரிவான். இவையும் ஊன நடனத்தின் போது விளைவது ஆகையால் அவை பற்றியும் இங்கு விளக்குவோம்.

தூல ஐந்தொழில் பற்றிய விளக்கத்தை முன்பு காண்டோம். இது நிகழ்வது உயிர் சகல நிலையில் இருக்கும் போதேயாம். இந்த ஐந்தொழிலும் உயிர் இடத்தே நடைபெறுகின்றது. அவற்றிற்காகவே

நடைபெறுகின்றது. இது செய்யப்படுவதன் நோக்கம் உயிர் மாயா காரியப் பொருள்களை, பொய்ப் பொருள்களை உண்மைப் பொருளென்று மெய்ப்பொருளென்று நம்பி அதில் நாட்டம் விருப்பு வைத்து அனுபவித்தற்கேதுவாகவே இத்தொழில்கள் நடைபெறுகின்றன. சூக்கும ஐந்தொழில்களும் உயிர்களுக்காகவே செய்யப்படுவன. ஆயினும் அது வேறு நோக்கோடு செய்யப்படுவன. உயிர் கனவு நனவு உறக்கம் பேருறக்கம் உயிர்ப்படங்கல் என்னும் ஐந்து அவத்தைகளை அடை கின்றது. இதில் உறக்கம் என்பது ஒடுக்க நிலையாகும். இவ்வாறு உறங்கும் வேளையிலும் இறைவனின் செயல் நம்மிடம் நிகழ்கின்றது. இவ்வேளை களைப்புற்று இருந்த உயிர் புதிய தெம்பைப் பெறுகின்றது. இறைவனின் செயல் நம்மிடம் தொடர்ந்து நடைபெறுகின்றது. புத்துயிர் பெறுகின்றது. இதனால் இது தினமும் நடைபெறும் உறக்க நிலை.

இனி ஒடுக்கம் என்பது மகாசங்கார காலத்தில் நிகழ்வது. அப்போது இறைவன் எல்லாவற்றையும் ஒடுக்கி தான் தனிமையாக நிற்கின்றான். தானேயாய் நிற்கின்றான். இக்காலத்தில் உயிர்கள் எல்லாம் தமது இன்ப துன்பங்களை அனுபவிக்கும்போது அடைந்த இளைப்பை நீக்குவதற்கு இறைவன் அந்த உயிர்களை உலகங்களை எல்லாம் ஒடுக்க நிலைக்குக் கொண்டு வருவான். இதனால் உயிர்கள் எல்லாம் உறக்கநிலையை அடைகின்றன. இந்த நிலையிலும் இறைவன் ஆடிக்கொண்டிருப்பவன். இறைவன் நித்திய அவதிதனாய் நிற்பதால் உயிர்களுக்கெல்லாம் உறக்கத்தை அளித்துவிட்டேன் என்னும் மகிழ்வில் ஆடுகின்றான். இதனை நள்ளிரவில் நின்றாடும் நாதன் என சிவபுராணம் தருகின்றது. இதன் பின்னராக அவ்வுயிர்களின் இளைப்பு நீங்கிவிட்டன என்பதை அறிந்த இறைவன். அதனை மீளத் தோற்றுவிப்பான். இத்தோற்றத் திற்கென ஆடுகின்றான். அவன் என்றும் பயின்று ஆடுபவனாகையால், அங்கு ஒலியும் ஒளியும் பிறக்கின்றன. எல்லாப் பொருள்களும் மீளத் தோற்றம் பெறுகின்றன.

உயிர்களை காத்தலும் அழித்தலும் அருளலும் மறைத்தலும் ஆகிய செயலை இறைவன் நுண்ணிய முறையில் இங்கு செய்வன். ஆகையால் இது சூக்குமமாகச் செய்கின்றான். இத்தொழில்கள் சூக்கும ஐந்தொழில் எனப்படுகின்றது. காத்தும் கரந்தும் விளையாடி நிற்கும் இறைவன்

கழிதரு காலம்வரை அவற்றின் வினைகளைக் காத்தும் அவற்றைக் கரந்தும் நிற்பன். அவன் கருத்துடைக் கடவுள் ஆகையால் அவ்வேளை யிலும் அவன் ஆடும் நடனம் ஊன நடனமாகும்.

இனி அதிசூக்கும ஐந்தொழில் பற்றிய விளக்கத்தையும் காண்போம். உயிர் ஐந்தவத்தைப் படுமென முன்பு கண்டோம். அவ்வேளை உயிர் புருவநடுவில் நின்று சாக்கிர - நனவு - நிலையில் கருவிகளோடு கூடிப் பொருள்களை அறிந்து வருவதாகிய விழிப்பு நிலையில் இறைவன் உயிர்களோடு உயிர்க்குயிராய் உள் நின்று இடைவிடாது உணர்த்தி வருகின்றான். அவ்வாறு இறைவன் கண்டும் காட்டியும் உணர்த்த வில்லையாயின் உயிருக்கு அறிவு நிகழாது. இதனால் அவற்றிற்கான அறிவினை ஊட்டும் இறைவன் இந்த நிலையில் இயற்றுவது அதிசூக்கும ஐந்தொழில் எனப்படுகின்றது. இதுவும் உயிர்களை இடமாகக் கொண்டு செய்யும் தொழில். இதற்கென இறைவன் செய்யும் நடனமும் ஊன நடனமே. இவ்வாறு காட்டி அறிவை இறைவன் ஊட்டி நிற்பவன். உயிர்கள் அறிவித்தால் அன்றி அறியாதனவாகையால் அவை முழு அறிவையும் இந்நிலையில் பெற்று விடவில்லை. இங்கும் அறிவு குறை அறிவே என்பதால் இதுவும் ஊன நடனத்தின் பாற்படும். நடனம் என்பது தொழில் இயற்றுதல் எனவும் பொருள் காணலாம். இறைவன் ஆடும்போது அவன் நால்வகை அங்கங்களும் ஆடும். பிரபஞ்சம் முழுவதும் இதனால் ஆடும். என முன்னர் கண்டோம். இவ்வாறு ஊன நடனத்தில் இறைவனின் ஐந்து அங்கங்கள் குறிப்பாகக் காணப்படுவதோடு அவற்றினால் ஆகும் ஐந்தொழிலும் இவை என இச்செய்யுளில் குறிக்கப்பட்டுள்ளன. உலக தோற்றம் ஒலியில் நாதத்தில் பிறப்பதால் அதற்காக உடுக்கை ஒலிக்கும் கரமும், அபயத்திருக்கரம் காத்தல் தொழிலையும், தீயை ஏந்திய திருக்கரம் அழித்தல் தொழிலையும் காட்டி விளக்கம் தருகின்றன. இனி இறைவனின் இன்னொரு சக்தியான திரோதான சத்தியே மறைப்பைச் செய்வது. இதனை திரோதாயி என்றும் திரோதை எனவும் அழைப்பர். இத்திரோதான சத்தியே இறைவனின் மறைப்பாற்றல் தொழிலுக்கு ஆன காரியத்தைச் செய்கின்றது. அதனால் திரோதானத்தையே ஊன்று மலர்ப்பாதத்தில் காட்டினார். ஊன்றிய மலர்ப்பாதத்தால் முயலகனின் மீது ஊன்றி நிற்பதால் அது ஆணவ மல அடக்கத்தை நெகிழ்ச்சியை உணர்த்துகின்றது. மாயா காரியமாகிய

ஆணவம் திரோதத்தால் அடங்கும் அம்மலர்ப்பாதத்தையே அதற்குக் காட்டினார். சங்காரம் என்பது அழித்தல் தீ தன்னைச் சார்ந்த எப்பொருளையும் அழிப்பது. எனவே அது அழித்தல் தொழிலை செய்வதாகவும் கூறப்பட்டது. அத்திருக்கரம் அத்தீயினைத் தாங்கி நிற்பதால் அவ்வங்கம் அழித்தலை செய்யும் என்றார். இனி இறைவனின் திருவடிப் பேறு என்பது முத்தி நிலை அத்திருவடியே யாண்டும் கூறி நிற்கும் அருள் ஆகையால் அம்மலர்ப்பாதம் அருளளித்தல் என்னும் தொழிலுக்காயிற்று.

முன்னர் சிவாய நம என்னும் மந்திரத்தில் எழுத்துக்கள் நிற்கும் நிலையில் அவை நிற்கும் இடமும் அதற்கான தன்மையையும் காரணத்தையும் கண்டோம். அத்திரு அங்கமே இங்கு காட்டப் படும் திருவடியாகும். இனித் தாள் என்றும் பாதம் என்றும் பதம் என்றும் அடியென்றும் கூறப்படும் இவை ஒரு பொருள் கூறித்த பல சொற்கள். இங்கு இத்தூக்கிய திருவடியே அண்ணாமலையான் அடிக்கமலம் என்றார் மாணிக்கவாசகர். எனவே இறைவனின் எல்லா உறுப்புகளும் மேன்மைக்கு இட்டுச் சென்று மேன்மையைத் தரும். முத்தியைத் தரும். இங்கு இத்திருவடியே அருளானமையால் அதுவே முத்தியை தரும் திருவடி என்றார். அதனை நாடு என்றார். மெய்கண்ட தேவ நாயனார் ஊன நடனத்தைக் கூறிய வழியும் அம்மலர்ப்பாதமே முத்தி தரும் திருவடி என்றார். அதனை ஒட்டி அவரின் மாணாக்கரான இந்நூலாசிரியர் மனவாசகங்கடந்தாரும். நான்ற மலர் பதத்தை நாடு எனக் கூறியது காண்க. குறிப்பை அறிந்து கொள் என்பதிலும் அதனோடு இதுவும் உளது. அதை நாடு என இரட்டுற மொழிதலைக் கண்டு உணர்க.

இங்கு

திருந்துநர் சீயென்று உதறிய கையும்
அருந்தவர் வாவென்று அணைந்த மலர்க்கையும்
பொருந்தில் இமைப்பில் யவ்வென்ற பொற்கையும்
திருந்தத்தீ யாகும் இருநிலை மவ்வே

மருவும் துடியுடன் மன்னிய வீச்சு
மருவிய அப்பும் அனலுடன் கையும்

கருவின் மிதித்த கமலப் பாதமும்
உருவில் சிவாய நமவென வோதே

அரன்துடி தோற்றம் அமைத்தல் திதியாம்
அரன் அங்கி தன்னில் அறையிற் சங்காரம்
அரனுற் றணைப்பில் அமருந் திரோதாயி
அரனடி என்றும் அனுக்கிர கம்மே.

எனவும்

திருமந்திரத்தில் திருக்கூத்துத் தரிசனம் என்னும் பகுதியில் கூறி இருத்தல் இங்கே மனவாசகங் கடந்தார் பாடல்களும் ஒத்திருத்தலை கண்டு உண்மை விளக்கம் காண்போம்.

இந்த ஊன நடனம் ஆன்மாவைத் தனுகரண புவன போகங்களில் அழுத்தி அதனை நுகரச் செய்வதற்காக இயற்றப்படும் நடனம். ஆகையால் அது உயிர்க்கு வேண்டிய முழு அறிவினையும் தராது. ஆதலால் அதனை ஊன நடனம் என்றார்.

## வெண்பா 36

### ஞான நடனம்

மாயை தனைஉதறி வல்வினையைச் சுட்டுமலம்
சாய அமுக்கி அருள்தான் எடுத்து - நேயத்தால்
ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தானழுத்தல்
தான் எந்தை யார் பரதம் தான்

## இதன் பொருள்

**மாயை தனை உதறி** - இறைவன் தனது திருக்கரத்தில் ஏந்திய உடுக்கையை அசைத்தலால் பக்குவம் எய்திய உயிரின் உணர்வில் இருந்து மாயையை அகற்றுவதாக அமையும், **வல்வினையைச் சுட்டு மலம் சாய அமுக்கி** - ஆணவ மலம் தனது சத்தி, வீறு, ஆற்றல் சாயும்படி அதனை ஊன்றிய திருவடியால் மீள எழாதவாறு அமுக்கி நிற்பதாக அமையும் அதனோடு இருவினைகளைத் தீயினை ஏந்திய கை சுட்டு எரித்து விடுவதாக அமையும், **அருள் தான் எடுத்து** - எடுத்து தூக்கிய திருவடி பிறப்பு இறப்புக்களில் மாறி மாறி வந்த ஆன்மாவை, அந்த

நிலையினின்றும் அகற்றி உயர் பதவிக்குக் கொண்டு செல்வதாக அமையும், நேயத்தால் - உயிர்களின் மேல் வைத்து பேரன்பின் காரணத்தால், ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தான் அழுத்தல் - எடுத்த பொற்பாதமும் அப்பாதத்தை காட்டியபடி எடுத்து வீசிநிற்கும் திருகரமும் யான் எனது என்னும் அகங்காரச் செருக்கை அற்றுப் போம்படி செய்து அடக்கம் கொண்டு அதிலே நில் என்னும் கருத்துப்பட அமைந்த திருக்கையும், திருப்பாதம், உயிரைப் பேரின்ப நிலைக்கு இட்டு அழுத்தும் குறிப்பாக அமையும், தான் எந்தையார் பரதம் - அச்செயல்கள் எமது தந்தையாராகிய சிவபரம்பொருள் இயற்றும் ஞான நடனம் ஆகும்

## கருத்துரை

இறைவன் தனது திருக்கரத்தில் ஏந்திய உடுக்கையை அசைத்தலால் பக்குவம் ஏய்திய உயிரின் உணர்வில் இருந்து மாயையை அகற்றுவதாக அமையும். ஆணவ மலம் தனது வீறு வேகம் ஆற்றல் சாயும்படி அதனை ஊன்றிய திருவடியால் மீள எழாதவாறு அமுக்கி நிற்பதாக அமையும். அதனோடு கொடிய வினைகளை தீயினை ஏந்திய கை சுட்டு எரித்து விடுவதாகவும் அமையும். எடுத்துத் தூக்கிய திருவடி பிறப்பு இறப்புக்களில் மாறி மாறி வந்த உயிரை அந்தப் பிறப்பு இறப்புக்களின்றும் அகற்றி, உயர் பதவிக்குக் கொண்டு செல்வதாக அமையும். உயிர்களின் மேல் வைத்த பேரன்பின் காரணத்தால் எடுத்த பொற்பாதமும் அப்பாதத்தைக் காட்டிய எடுத்து வீசி நிற்கும் திருக்கரமும் யான் எனது என்னும் அகங்காரச் செருக்கை அற்றுப் போம்படி செய்து, அடக்கம் கொண்டு அதிலே உறைப்பாக நில் என்னும் கருத்துப்பட அமைந்த திருக்கையும், திருப்பாதம் உயிரைப் பேரின்ப நிலைக்கு இட்டுச் சென்று அதனை அதனுள் அழுத்தும் குறிப்பைக் குறிப்பதாக அமையும். இச்செயல்கள் எமது தந்தையாராகிய சிவபரம் பொர்ருள் இயற்றும் ஞான நடனம் ஆகும்.

## விரிவுரை

முன்னர் ஊன நடனத்தைப் பற்றிக் கூறி ஆசிரியர் விளக்கினார். இச்செய்யுள் மூலம் சிவபரம்பொருள் இயற்றும் ஞான நடனத்தை எடுத்து விளக்குகின்றார். ஞானம் என்பது அறிவு. நடனம் என்பது

இறைவன் செய்யும் திருக்கூத்து. இறைவன் செய்யும் ஐந்தொழில் களையும் அவற்றால் வரும் பயன்பாடுகளையும் விளக்குகின்றார். இறைவன் ஞான நடனத்தை இயற்றும் இடமாக உயிரையே ஆதார இடமாகக் கொண்டு நிகழ்த்துகின்றான். இந்நடனம் உயிரின் நன்மைக்காகச் செய்யும் அறிவுக்கான நடனமாகும். தொழிலாகும். ஊன நடனத்தில் உயிரின் அறிவு பாச அறிவோடு கூடிய அறிவே. ஆகையால் அது இருள் அறிவு எனக் காணலாம். இந்நிலையில் ஆன்மா பாசவழியில் நின்று தனு கரண புவன போகங்களில் பொய் இன்பங்களில் அழுந்தி அதனை அனுபவித்தலாகும். இவ்வாறு அவ்வனுபவிப்பை ஊட்டி உயிர்களின் மேல் கொண்ட நேசத்தினால் வருவது. அத்திருவருளே மாயை ஆற்றலாக நின்று ஆணவ மலத்தின் தொழிற்பாட்டுக்கு உதவி நிற்கின்றது. இது ஆன்மாவின் அறிவை மயக்கி ஆன்மாவின் உண்மை இயல்பை மறைத்து நின்று அதனை நுகர வைக்கின்றது. இவ்வாறு அனுபவிக்கச் செய்யும் தத்துவங்கள் கருவிகள் ஆகியன ஆன்மாவிற்கு அசுத்தமாய் இருப்பதால், அது ஆன்ம தத்துவத்திடத்தும் அசுத்தமாயா தத்துவம் வரையில் நீண்டிருக்கும். இங்கே சைவ சித்தாந்தின் அசுத்த தத்துவங்கள் 31. தத்துவங்களில் 31 வது தத்துவமாக விளங்குவது மாயை தத்துவமாகும். இங்கு தான் மாயை சத்தி அஞ்ஞானத்தை விளைவித்து நின்று ஆன்மாவின் அறிவை மறைக்கின்றது. இதனால் ஆன்மாவின் அறிவு வெளிப்படாது. அஞ்ஞானத்தில் நின்று அறியாமையில் மூழ்கி நிற்கின்றது. இவ்வாறு நிற்கும் இந்த சக்தி உயிரின் நிலையில் மாற்றம் ஏற்படுவதை உணருகின்றது. உயிர் பொய்ப்பொருள் மெய்ப்பொருள் என்பன இருப்பதையும் உணருகின்றது. இவ்வேளை இந்த ஆற்றல் ஒளிப்பொருளாக, அறிவு கொடுத்து ஆன்மாவின் அறிவை விளக்கம் செய்கின்றது.

இந்த மாயை அசுத்த மாயை எனவும் சுத்தமாயை எனவும் இருதிறப்படும். உயிர் அசுத்த மாயையின் தொழிற்பாட்டில் இருந்தும் வெளிப்பட்டு சுத்த மாயையின் அறிவு விளக்கத்திற்குள் செல்லுகின்றது. உயிர் தனது சிற்றறிவாலும் அனுபவத்தாலும் இறை அருளாலும் மேன்மை அடைவதை உணருகின்றது. பாச ஞானம் பசு ஞானம் என்பன விடுபடும் நிலை உருவாகின்றது. இறைவன் அருளோடு கூடிய உயிர் பதி ஞானத்தைத் தலைப்படுகின்றது. இந்த நிலையில் இருந்து தான்

இறைவன் உயிரின் அறிவு விளக்கத்திற்கு தான் முன்பு செய்த ஊன நடனத்தினின்றும் விலகி ஞான நடனத்தைச் செய்ய வருகின்றான். நம சிவாய என நின்ற உயிர் அந்த நிலையில் நம என்னும் திரோதான சத்தியையும் மலநீக்கத்தையும் அடைய முயலுகின்றது. இதனை அறிந்த இறைவன் உயிரின் பக்குவ நிலையை கண்டு அதற்கு சிவஞானத்தை உணர்த்த வருகின்றான். அவ்வேளை அவன் அவ்வுயிரையே இடமாக் கொண்டு சிவாய நம என்னும் பஞ்சாக்கிர நிலையில் நின்று நடனம் செய்து ஆடுகின்றான்.

அந்த வேளையில் இறைவன் திருமேனி சிவாய நம என்னும் நிலைக்கு வருகின்றது. அவன் திருமேனியில் இருக்கும் அங்கம் உபாங்கம் என்பன அப்படியே இருக்க அதன் தொழிற்பாடு வேறுபடுகின்றது. உடுக்கை ஏந்திய திருக்கரம் முன்பு இறப்பையும் பிறப்பையும் ஊட்டிய நிலைமாறி அந்த இறப்புக்கும் பிறப்புக்கும் காரணமான மாயையை அந்த உடுக்கை எழுப்பும் ஒலி மூலம் இறைவன் அகற்றுகின்றான். உயிரைப் பிறப்பினின்றும் நீக்க வேண்டும். அதற்கு உதவி அருள்புரிந்து நிற்றலும் பின் அந்த ஆன்மாவை ஞானத்தின்வழி இட்டுச் சென்று பேரின்பத்தை அடைய வழி செய்யவும் இந்த நடனம் ஞான நடனமாக நிற்கின்றது. எனவே மாயை சக்தியின் துணையுடன் உயிர் சிவ தத்துவங்களை தெளிந்து விளங்கிக் கொள்வதற்கு அதனைத் தயார்ப் படுத்தலே இந்த ஞான நடனத்தின் குறிக்கோள் ஆகும். அங்கு ஊன நடனத்தில் நமசிவாய என்னும் திருவைந்தெழுத்தை திருமேனியாகக் கொண்ட இறைவன் இந்த நிலையில் அவனது பஞ்சாக்கரத் திருமேனி அதிசூக்கும நிலையை எய்துகின்றது. அப்போது இறைவனின் திருமேனி ஞானவிளக்கமாக, அறிவு விளக்கமாக நிற்பதை உயிர் கண்டு உணருகின்றது. இந்த வேளையில் ஆன்மாவிற்கு துன்பங்களைப் புரிந்த மூன்று மலங்களையும் தனது அங்க அசைவினால் அகற்றி நல்வழிப் படுத்துகின்றான். இந்த நிலையில் அவன் பயிலும் நடனம் ஞானம் நடனம் ஆகும். இது உயிர்களின் அறிவு விருத்திக்காக ஆடுகின்ற ஆட்டமே.

இந்த ஞான நடனத்தில் முன்பு நின்று ஆடிய தொழில் புரிந்த அங்கங்களும் உபாங்கங்களும் தொழில் மாறி நிற்கும். அவ்வாறான நிலையையே ஆசிரியர் இங்கு விளக்குகின்றார். அவ்வாறு செய்யும்

தொழில்களை அவ்வக் கருவிகளோடு இணைத்துப் பார்க்க வேண்டும். பொருள் காணவேண்டும். முன்னர் கூறிய செய்யுள் முறைமையிலேயே கருத்து கண்டு தெளிய வேண்டும்.

| ஊன நடனத்தில் | | உறுப்புக்கள் | | ஞான நடனத்தில் |
|---|---|---|---|---|
| படைத்தல் | - | உடுக்கை ஏந்திய கரம் | - | மாயையை உதறுதல் |
| காத்தல் | - | அபயகரம் | - | அங்காரத்தை அடக்கி பேரின்பத்திற்கு அழுத்துதல் |
| அழித்தல் | - | தீயை ஏந்திய கரம் | - | வினைகளை சுட்டெரித்தல் |
| மறைத்தல் | - | ஊன்றிய திருவடி | - | செருக்கை அடக்குதல் |
| அருளுதல் | - | தூக்கிய திருவடி | - | பிறப்பை நீக்கி பேரின்ப நிலை அருளுதல் |

இதன் மூலம் அங்கங்கள் ஒன்றாயிருக்க அதன் தொழிற்பாடு - கிருத்தியங்கள் - ஊன நடனத்திலும் ஞான நடனத்திலும் வேறுபட்டிருத்தலை கண்டு உணரலாம். உடுக்கையை அசைத்தலால் மாயையும் தன்னிலையில் அசையும் அகலும். நெருப்பு சார்ந்த பொருள்களை அழிக்கவல்லது. இத்தீயினை ஏந்திய திருக்கரத்திலுள்ள நெருப்பு, இறைவன் திருக்கரத்தில் சார்ந்திருப்பதால் அது நல்லனவே செய்யும். அது உயிரின் வலிய வினைகளைச் சுட்டெரிக்கும். ஞான குரு தீக்கையில் வினைகளைச் சுட்டெரித்தல் போன்றது இது. இறைவனின் திருக்கையில் உள்ள தீ தீவினைகளையும் நல்வினைகளையும் தீய்த்து, இருவினை ஒப்பினை உயிருக்குக் காட்டி உணர்த்தி நிற்கும். அந்த நிலையை உயிர் அடையும். இனி ஊன்றிய திருவடி ஆன்மாவின் அகங்காரத்தை, ஆணவத்தை, நான் எனது என்னும் செருக்கை அடக்கும். அது ஆணவத்தின் திண்மையை அழித்து நெகிழ்வடையச் செய்யும். அதனைத் தொழிற்பட விடாது அடக்கும். இதனால் பாசநீக்கமும் ஆணவ அடக்கமும் பெற்று உயிர் மலபரிபாகம் எய்துகின்றது. இனி எடுத்த

பொற்பாதம், தூக்கிய திருவடி இருவினை ஒப்பும் மல பரிபாகமும் எய்திய வழி உடனிகழ்வாக சத்திநி பாதத்தை வழங்கும். அவ்வாறு வருவதால் இனி உயிருக்கு மீண்டும் பிறப்பு இறப்பு என்பது வராநெறி வந்து கூடும். அதனைக் காட்டி நிற்பது தூக்கிய திருவடி. அத்திருப்பாதத்தால் செருக்கு அறவும், அடங்கி நில் எனவும் உணர்த்திய அபயகரமும் அப்பொருள்கூட அமைந்த திருவடியும் உயிரைப் பேரின்ப நிலைக்கு எடுத்துச் செல்லும். உயிரை அழுந்த வைக்கும்.

இவ்வாறாக இந்த அங்கங்களும் உபாங்கங்களும் ஞான நடனத்தில் குறை ஏதும் இன்றி உயிரின் குறைபாடுகளை குற்றங்களை நீக்கி, அப்பயன்களை ஆன்மா அடையும் படி செய்கின்றது. இங்கும் இறைவன் ஆன்மாவையே இடமாகக் கொண்டு இந்த ஞான நடனத்தை புரிகின்றான் என்பது தெளிவாகின்றது. உயிரின் மெய்யறிவைப் படிப்படியாக வளர்த்து அதனைப் பேரின்ப நிலைக்கு எடுத்துச் செல்வதே இந்த ஞான நடனத்தின் உள் பொருள் என்பது உணரலாம். இவ்வாறாக உயிர்கள் இறைவனின் வடிவத்தையும் இங்கு கூறப் பெற்ற அங்கங்களையும் அதன் தொழில்முறைமையையும் மனதில் கண்டுகொள்ள வேண்டும். இறைவனை இந்த நிலையில் தரிசிக்கும் முறைமையும் அதுவே ஆகும். இந்த ஞான கூத்தின் காட்சியையும், அதனால் வரும் பயனையும் விளைவையும் திருமூலர் தனது திருமந்திரத்தில் திருக்கூத்துத் தரிசனம் என்னும் பகுதியில் கூறியுள்ளார்.

**சிவமாதி ஐவர் திண்டாட் டமும்தீர**
**தவமார் பசுபாசம் ஆங்கே தனித்துத்**
**தவமாம் பரனெங்கும் தானாக ஆடும்**
**தவமாம் சிவானந்தத் தோர் ஞானக் கூத்தே**

என்றார்

சிவம் சத்தி சதாசிவம் ஈசுரம் சுத்தவித்தை என்னும் ஐந்து தத்துவங்களும் அதற்கான அதிதெய்வங்களும். தனது தொழிற் பாட்டினை உயிர்மீது செய்வதற்கு இயலாமையால் இதனை ஐவர் திண்டாட என்றார். அவர் உலகை நோக்கிச் செய்யும் உழைப்பாகிய படைத்தல் காத்தல் அழித்தல் என்றின்னோரான்ன தன்மைகள்

உயிர்களுக்கு மீண்டும் ஏற்படாதவாறு அருளும் திருநடனமே ஞான கூத்தாகும். இதனையே திருமூலர் காட்டி விளக்கம் செய்தார். இந்த நடனமே, நற்றவமே வடிவாகச் சிறந்த சிவானந்தத் தோர் அருளல் கண்டு நுகரும் திருவடி ஞானத் திருக்கூத்தென்க. இதுவே உண்மை விளக்கமும் ஆகும்.

## வெண்பா 37

### ஆனந்த நடனம் பற்றிக் கூறுவது

**மோனந்த மாமுனிவர் மும்மலத்தை மோசித்துத்**
**தானந்த மானிடத்தே தங்கியிடும் - ஆனந்தம்**
**மொண்டு அருந்தி நின்று ஆடல்காணும் அருள் மூர்த்தியாக்**
**கொண்ட திரு அம்பலத்தான் கூத்து**

## இதன் பொருள்

**மோனந்த மாமுனிவர்** - உரை உணர்வுகளைக் கடந்து பேச்சுக்கள் தம் உணர்வு எதுவும் இன்றி, அதனையே எல்லையாகக் கொண்டு ஒழுகி நிற்கின்ற உயரிய மெய்ஞ்ஞானிகள் சீவன் முத்தர்கள், **மும்மலத்தை மோசித்துத்** - ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களினால் வரும் மலவாசனைகளை மீண்டும் வரா நெறியில் நின்றொழுகும்படி செய்வித்து, **தான் அந்த மானிடத்தே தங்கியிடும்** - அவை யாவும் அற்ற நிலையில், இந்த சுத்த நிலையில் நிற்கும் தாம் அந்த சிவானந்த அமுதத்தைத் தம் மெய்யுணர்வினால் கிடைக்கும் அப்பேரின்பத்தை அள்ளித் துய்க்கும் (வகையாக) வண்ணம், **அருந்தி நின்று ஆடல் காணும் அருள் மூர்த்தியாக்** - உண்ண நின்று, தானும் அனுபவிக்க அந்த ஆடலைக் காணும்படி சிவாகம சுந்தரி நிற்ப, அதனைக் காட்டி அம்மையும் தானும் என்றும் பிரிப்பின்றி நிற்கும் தாதான்மிய சம்பந்தத்தைச் செய்யும், செய்தருளும் சிவபெருமான், **கொண்ட திருஅம்பலத்தான் கூத்து** - மேற்கொண்ட அத்திருக்கோலத்தை ஆனந்த நடனத்தை சிற்றம்பல வெளியிலே கொண்டுள்ளான். ஆடுகின்றான்.

### கருத்துரை

உரை உணர்வுகளைக் கடந்து பேச்சுக்கள் தம் உணர்வுகள் எதுவும் இன்றி அதனை எல்லையாகக் கொண்டு ஒழுகி நிற்கின்ற உயரிய மெய்ஞ்ஞானிகள் சீவன்முத்தர்களுக்கு, ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களினால் வரும் மலவாசனைகளை மீண்டும் வரா நெறியில் நின்றொழுகும்படி செய்வித்து அவை யாவும் அற்ற நிலையில் இந்தச் சுத்த நிலையில் நிற்கும். தாம் அந்தச் சிவானந்த அமுதத்தை தம் மெய்யுணர்வினால் கிடைக்கும் அப்பேரின்பத்தை அள்ளித் துய்க்கும் (வகையாக) வண்ணம், உண்ண நின்று, தானும் அனுபவிக்க அந்த ஆடலைக் காணும்படி சிவகாம சுந்தரி நிற்ப, அதனைக் காட்டி அம்மையும் தானும் என்றும் பிரிப்பின்றி நிற்கும் தாதான்மிய சம்பந்தத்தைச் செய்யும் செய்தருளும் சிவபெருமான் மேற்கொண்ட அத் திருக்கோலத்தை ஆனந்த நடனத்தைச் சிற்றம்பல வெளியிலே கொண்டுள்ளான். ஆடுகின்றான்.

### விரிவுரை

ஊன நடனத்தையும் ஞான நடனத்தையும் விளக்கிக் கூறிய ஆசிரியர் இந்தச் செய்யுள் மூலம் திருச்சிற்றம்பலத்தை, நடனம் செய்கின்ற இடமாகக் கொண்டு அப்பெருவெளியில் நின்று ஆனந்த மயமாகப் பேரின்ப மயமாக நின்று ஆடும் திருக்கூத்தே ஆனந்த நடனம் எனக் காட்டுகின்றார். இதுவரை இறைவன் உயிர்களுக்கு பின்னாலே அவற்றின் ஈடேற்றத்திற்கான ஐந்தொழில்களையும் பின்னர் உயிர்த் துன்பங்களுக்கான மலங்களை நீக்கியும் அடக்கியும் ஆன்மாவின் சிற்றறிவைத் தனது வியாபக அறிவினுள் வரும் வண்ணம் செய்து சிவ சிந்தனையிலே நிற்கும் வண்ணமும் செய்த திருநடனங்களைக் கண்டோம்.

இவ்வாறு ஆன்மா திருவடிப் பேற்றினை அடைவதற்கான பக்குவ நிலையில் நிற்கும் போது மாயை சத்தி ஒளிவடிவாய் நின்று சிவனுக்கு அந்த உயிரின் உண்மை நிலையை உணர்த்துவாள். அதனை அறிந்த இறைவன் இனிமேல் ஆற்ற வேண்டிய, செய்யவேண்டிய உதவிகள் எதுவும் வேண்டப் படுதல் இல்லையாதலால், அதனை தன் திருவடிப் பேற்றினிற்கு தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத் தருகின்ற வீட்டுப்

பேற்றினுக்கு இட்டுச் செல்வன். இதுவரை ஆன்மாவை முன்னாலே நிறுத்தி, அது படிமுறையில் திருந்தி முன்னேற்றுவதற்காகத் தனது பேருபகாரத்தை தொழிலைச் செய்த இறைவன் சிவபரம்பொருள் ஆன்மாவைத் தன் பின்னாலே வரும்படி செய்கின்ற இரசவாதம் எண்ணி எண்ணி வியக்கத்தக்கதாக உள்ளது. அந்த உண்மை நிலைக்கு உயரிய நிலைக்கு உயிரைக் கொண்டு செல்லும் தன்மையை உணர்ந்து கொண்ட உயிர், அவனே தனக்குப் பற்றுக் கொடு என எண்ணி அவன் பின்னாலே செல்கின்றது. இத்தகு நிலையை அருணந்தி சிவசாரியார் தனது இருபா இருபஃது என்னும் நூலில் 18வது செய்யுளில் வெகு சிறப்பாக எடுத்துக் காட்டுகின்றார்.

கோலம் கொண்ட ஆறு உணராதே
ஞாலம் காவலன் யான் எனக் கொளீ இப்
பொய்யை மெய்யெனப் புகன்று வையத்து
ஓடாப் பூட்கை நாடி நாடா
என்னுள் கரந்து என் பின் வந்து அருளி
என்னையும் தன்னையும் அறிவின்று இயற்றும்
என்னது யான் எனும் அகந்தையும் கண்டு
யாவயின் யாவையும் யாங்கணும் சென்று
புக்குழிப் புக்கு பெயர்ந்துழிப் பெயர்ந்து
மிக்க போகம் விதியால் விளைத்திட்டு
என் பணி யாளாய் எனைப் பிரியாதே
ஓடி மீள்கு என ஆடல் பார்த்திட்டு
என் வழி நின்றனன் எந்தை அன்னோ.
அருள்மிக உடைமையில் அருள்துறை வந்து
பொருள்மிக அருள்தலும் பொய்ப் பகை ஆதலும்
கைகண்டு கொள்ளனக் கடலுலகு அறிய
மெய்கண்ட தேவன் எனப் பெயர் விரீஇத்
தன்னுள் கரந்து தான்முன் னாகித்
தன்னதும் தானுமாய் என்னை இன்றாக்கித்
தன்னையும் என்னையும் தந்து தனது
செய்யாமையும் என் செயல் இன்மையும்
எம்மான் காட்டி எய்தல்
அம்மா எனக்கே அதிசயம் தருமே.

எனப் பாடியுள்ளார். இங்கு உயிரின் பின்னாலே நின்று அதற்கு வேண்டிய புவன போகங்களை உதவியும் இறைவன் நின்று அருள் புரிந்தான். அதன் பின்னராக, உயிர் தன்னையும் இறைவனையும் அறிந்து வரும் வேளையில் அதற்கு உதவும் முகமாக தன்னுள் கரந்து தான் முன்னாகித் தன்னையும் தந்து நின்றான். இதுவே இச்செய்யுள் தரும் செய்தி, இதன் பொருளுரையையும் விரிவுரையையும் யான் உரை எழுதிய இருபா இருபஃது என்னும் நூலில் கண்டு தெளியளாம்.

இறைவனையே துணையென்று அவனைப் பற்றி நின்று நிற்கும் நிலையில் இறைவன் தான் உயிருக்கு அளிக்க வேண்டிய பரிசைக் காண்பிக்கவும் அளிக்கவும் விழைகின்றான். உயிர் எல்லாம் இறைவன் செயல் என எண்ணிப் பேச்சற்று மூச்சற்று அவனாலே ஆட்கொள்ளப் பட்ட நிலையில் அது முத்தியின்பத்தைப் பெறுகின்றது. இறைவன் திருவடியிலே தங்கிவிடுகின்றது. ஆணவம் இல்லை கன்மங்கள் இல்லை பிறவியைத் தர மாயை இல்லை. இந்த நிலையில் ஆன்மா இறைவனைச் சுத்தப் பொருளாக காணுகின்றது. தானும் சுத்தப் பொருளாக நின்றதால் அது இறைவன் திருவடியை அடைவதோடு அவ்விறைவனையே காணுகின்றது. தில்லைப் பெருவெளியிலே நின்று ஆடுகின்ற ஆனந்த கூத்தையும் கண்டு களிக்கின்றது. அடியனேன் பெற்றவாறே என உள்ளம் களிக்கின்றது. உவகை கொள்ளுகின்றது. அந்த அழகு வாரிதியில் முங்கி மூழ்கி நிற்கின்றது. அமிழ்ந்து நிற்கின்றது. இந்த ஆனந்த நடனத்தைக் காணக் காண உயிர் பித்தாகி விடுகின்றது. இறைவன் தரும் பேரின்பத்தை உணர்ந்து ஆன்மா அதனைத் தரும் பாதத்தைச் சிக்கெனப் பிடிக்கின்றது. அவனை விட்டுப் பிரியாத நிலையில் அவனே தானேயாகிய அந்நெறியில் அத்துவிதமாய் கலந்து இருக்கின்றது. இந்த அத்துவித நிலையே பேரின்ப நிலை. பிரிப்பின்றி நிற்கும் நிலை. ஒன்றாம் நிலை. ஆனந்தத் தேனை அள்ளி அள்ளிப் பருகும் நிலை. இந்த நிலையையே மாணிக்க வாசக சுவாமிகள் கண்டார். அனுபவித்தார்.

தினைத்தனை உள்ள தோர் பூவினில் தேனுண்ணாதே
நினைத்தோறும் காண்தோறும் பேசுந்தோறும் எப்பொழுதும்
அனைத்தெலும்பு உள் நெக ஆனந்தத் தேன் சொரியும்
குனிப்புடையானுக்கே சென்றூதாய் கோத்தும்பி

தில்லையிலே திருவீற்றிருந்து அருளும் கூத்தப் பெருமான் கொடுத்த ஆனந்த இன்பப் பேற்றினைக் கண்டும் பேசியும் நினைத்தும் நின்றார். அப்பெருவெளியிலே இறைவன் ஆடுகின்ற ஆனந்த கூத்தை கண்டு நின்றால் அப் பேரின்ப நிலையெய்தினார் எனக் கூறவும் வேண்டுமோ. அங்கு அவர் அந்நிலையையும் உணர்வையும் கடந்து மௌனமாய் உணர்வாய் அதுவதுவாய் நின்றார். இவ்வாறு தவசீலர்களும் மெய்ஞ் ஞானிகளும் உரை இறந்து உணர்வதோர் உணர்வாக நின்று இறைவன் திருநடனத்தை ஆனந்த நடனத்தினை உணர்ந்து நின்று கண்டனர் அன்றோ. இவ்வாறு தவசீலர்களாக ஆகிவிட்ட ஆன்மாக்கள் அந்தச் சிவானந்த அமுதத்தை தமது மெய் உணர்வினால் கிடைக்கும் பேரின்பத்தை அள்ளி அள்ளி மிகவும் துய்த்து நிற்பர். அவ்வாறு அடையும் வண்ணமாக இறைவன் அவர்களுக்கு அந்த ஆனந்த நடனத்தால் அருந்த வைக்கின்றார். அப்பெருமானின் கருணைத் திறம் தான் என்னே.

தில்லையிலே ஆனந்த திருநடனம் செய்யும் இறைவன் தனது அருட்சத்தியாகிய அம்மையைத் தன் இடப் பாகத்தே நிறுத்தி அவ்வாடலை அந்த நடனத்தை காணும்படி செய்கின்றான். அவ்வாடல் விட்டு விட்டு நிறுத்தி ஆடும் ஆடல் அன்று. தொடர்ந்து ஆடும் ஆடல் பயிலும் ஆடல். அம்மையும் அப்பனைப் பிரிப்பின்றி நின்று அத்திருநடனத்தில் திளைத்திருக்கின்றாள். அக்காட்சியைத் தில்லைக்குச் சொன்றோர் தரிசிக்க முடியும். அதனை உணர்வினால் மெய்யறிவினால் காண்போர் அங்கு இறைவனின் பேரமுதப் பேரானந்த பெருநடனத்தைக் காணவல்லவராயின் அதற்கு இணையாக எது கொடுப்பினும் ஏற்பாரில்லை. இனி அத்திருநடனத்தை அம்மையும் உடனிருந்து கண்டு களித்திருப்பாள். அதுவே இறைவனுக்கும் இறைவிக்கும் இடையே இருக்கும் பிரிப்பின்றி நிற்கும் ஒன்றாய் நிற்கும் உடனாய் நிற்கும் தாதான்மிய சம்பந்தம். இத்தகைய நடனத்தில் உயிர்களுக்கான ஐந்தொழில்கள் இல்லை. ஆணவம் இல்லை. செயல் வேறு இல்லை. எல்லாம் சிவமயம். பேரின்பம் ஒன்றே பெற்றதாக ஆன்மா அவ்வமுத நடனத்தை ஆனந்த நடனத்தைக் கண்டு அதிலே அழுந்தி உறைந்து நின்று விடுகின்றது. இதுவே பெரியோர்கள் தவசீலர்கள் மெய்ஞ்ஞானிகள் போற்றும் திருநடனம். இதுவே ஆனந்த நடனம்.

இவ்வாறு ஆடுகின்ற ஆனந்த நடனத்தைத் தில்லைப் பரப்பிலே பெருவெளியிலே, அம்பலத்திலே இறைவன் ஆடுகின்றான். தில்லையில் இருக்கும் மூலத்தானத்தில் இங்கே காட்டப் பெற்றதாகிய மூவகை நடனமும் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றது. சிவனுடைய திருவடிக்கீழ் ஊன நடனமும் உலகியல் நடக்க நடத்தும் கூத்தும், ஆன்மா தன்னையும் இறைவனையும் அறியும் ஞான நடனமும் அதற்கு மேலாக அம்மையும் மெய்யடியார்களும் கண்டு களிக்கும் ஆனந்த நடனமும் நடைபெறு வதை அங்குள்ள ஆன்ம ஞானிகள் சிவஞானிகள் கூறுவதைக் கேட்டுத் தெளியலாம். இதனையே நூலாசிரியர் அம்மலத்தான் கூத்து என்றார். பாடலின் விளக்கம் இந்த செய்தியைத் தெளிவு படுத்தியது. இங்கு அருந்த நின்று ஆடல் காணும் அருள் என்பதால் இறைவனுடன் தாதான்மிய சம்பந்தமாய் நிற்கும் அம்மை சத்தியைக் குறித்து நிற்கின்றது. அவ்வானந்தத்தை உண்பதாகக் கூறாமல் மொண்டு என்னும் சொல் கொண்டு காட்டினார். காண்க. காணத் தெவிட்டாத உண்ண உண்ண அனுபவிக்க அனுபவிக்க மேலும் மேலும் வேண்டிநிற்பதோடு தெவிட்டும் நிலை இல்லை என்பதையும் உணர்த்தியவாறு கொள்க. மோசித்தல் - நீக்குதல் மோனம் - மௌனம் உணர்வு கடந்த நிலை.

இந்த ஆனந்த நடனத்தைத் திருமந்திரம் தந்த திருமூலர் காட்டும் காட்சியையும் காண்போம். அவர் தரும் இப்பாடலுக்கான் விளக்கங்கள் தேவையில்லை. பொருள் தெளிவாக உள்ளதால் அதனைத் தராது உள்ளேன். பாடல்கள் பின்வருமாறு.

தானந்தம் இல்லாச் சதானந்த சத்திமேல்
தேனுந்தும் ஆனந்த மாநடங் கண்டீர்
ஞானங் கடந்து நடஞ்செய்யும் நம்பிக்கிங்கு
ஆனந்தக் கூத்தாட ஆடலரங் கானதே

ஆன நடனம்மந் தகள சகலத்தர்
ஆன நடமாடி ஐங்கரு மத்தாக
ஆன தொழில ருளாலைந் தொழில் செய்தே
தேன்மொழி பாகன் திருநட மாடுமே

அடியார் அரனடி ஆனந்தங் கண்டோர்
அடியா ரவராவ ரத்தரு ளுற்றோர்
அடியார் பவரே அடியவர் ஆமால்
அடியார் பொன்னம் பலத்தாடல் காண்டாரே

எனவும் காட்டுவார்.

இறைவன் திருநடனம்

தேவரோ டாடித் திருவம்பலத் தாடி
மூவரோ டாடித் முனிசனத் தோ டாடிப்
பாவினுள் ஆடி பராசத்தியி லாடிக்
கோவினுள் ஆடிடுங் கூத்த பிரானன்றே

இங்கு இறைவன் முனிசனத்தோடாடி பராசத்தியிலாடி கோ (பசு உயிர் ) வினுள் ஆடி எனக் காட்டியிருத்தல் காண்க.

மாயை மாமாயை கடந்து நின்றார் ஆனந்தம் காண
நாயகன் நின்று நடம் செய்யும் அன்றே

எனவும்

தத்துவம் ஆடச் சதாசிவம் தானாடச்
சித்தமும் ஆடச் சிவசத்தி தானாடச்
வைத்த சராசரம் ஆட மறையாட
அத்தனும் ஆடினான் ஆனந்தச் கூத்தே

எனவரும் இச்செய்யுள்களால் தில்லையிலே கால் தூக்கி நின்றாடும் கருணைத் தெய்வம் சிவன், சத்தியோடு ஆடியும்அவ்வம்மை கண்டு களிக்க ஆடியும் மெய்ஞ்ஞானிகள் காண களிக்க ஆடியும் நிற்கும் ஆனந்தக் கூத்தே இங்கு காட்டப்பட்ட திரு ஆனந்த நடனமாகும். இந்தப் பேரின்ப நிலையை அனுபவிக்கும் நிலையே இதுவாம்.

இந்த மூன்று நிலைகளையும் கடந்த நிலைகளிலே சிவபெருமான் வேறு வேறு நிலைகளில் நின்று திரு நடனம் செய்துள்ளான். ஊழி நடனம், தாண்டக நடனம் எனப் பலவாறு இந்தக் கூத்துகள் கூறப் பெற்றுள்ளன. இக்கூத்துகளையெல்லாம் தில்லைப் பெருவெளியில்

இறைவன் திருநடனத்தைக் கண்டு களிக்க வல்லார் அதனோடு இத்திருக் கூத்துகளையும் கண்டு களிப்பர். இவ்வாறு நடனங்கள் யாவும் இறைவன் புரிவது அவன் செய்யும் திருவிளையாடல்களே என உணர்ந்து கொள்வோம்.

மேலும் ஒரு கருத்து. உயிர்கள் இருள் நிலை, பகல் நிலை, இரவும் பகலும் அற்ற நிலையென மூன்று நிலையில் வருவன. இருள் நிலை என்பது அறிவுபெறாத நிலை. இதுவே ஊன நிலை. இந்த நிலையில் இருந்து கொண்டு உயிர் ஒரளவு அறிவைப் பெறும். ஆனால், அது முற்றிய அறிவல்ல. எனவே, அதனை வழிநடத்தும் இறைவன் அதன் அறிவு வளர ஆடுவது ஊன நடனம் எனலாம். இதுவே இருள் நிலை. அடுத்துப் பகல் நிலையென ஒன்று எனவும் காண்போம். இங்கு உயிரின் அறிவு பெருமளவு விளக்கம் பகல் போன்ற நிலையில் இருக்கின்றது. இந்நிலையில் ஆடும் ஆட்டம் ஞான நடனம் எனலாம். இனி இவ்விரண்டும், பகலும், இரவும், அற்ற நிலையொன்றுண்டு. அதனை உண்மை மெய்ஞ்ஞானிகள் அடைந்திருப்போர். அவர்கள் அப்போது இரவும் பகலும் அற்ற பெருவெளியில் நிற்கின்றனர். இந்நிலையில் அவர்கள் இறை இன்பத்தை நுகர்ந்திருப்பர். இந்த நுகர்ச்சியின்போது அவர்கள் காண இறைவன் ஆடும் நடனம் ஆனந்த நடனம் எனலாம். எனவே இம்மூன்று வகை நடனத்தின் நிலை இதுவேயாம். இரவு, பகல், இரவுபகலற்ற நிலையே இம்மூன்று நடனம் இயற்றும் நிலையெனத் தெளியலாம்.

## வெண்பா 38

### தொழுவார்கள் அடையும் நற்பயன்

பரை இடமா நின்று மிகு பஞ்சாக்கரத்தால்
உரை உணர்வுக்கு எட்டா ஒருவன் - வரைமகள் தான்
காணும்படியே கருணை உருக்கொண்டு ஆடல்
பேணும் அவர்க்குண்டோ பிறப்பு

### இதன் பொருள்

பரை இடமா நின்று - பரரபரை என வழங்கப்படும் சிவகாமி அம்மையாம் அருளையே தனது ஆனந்த நடனத்திற்கு ஆதார இடமாகக்

கொண்டு, **மிகுபஞ்சாக்கரத்தில்** - மிகுபயன்களைத் தரும் திருவைந் தெழுத்தாகிய சிவாய நம என்னும் எழுத்தையே தனது திருமேனி உருவாக உடையராகி, **உரை உணர்வுக்கு எட்டா ஒருவன்** - சொல்லுக்கும் மனதிற்கும் எட்டாது அவற்றையும் கடந்து நிற்கும் ஒப்பற்ற தலைவராகிய சிவபெருமான், **வரைமகள் தான் காணும்படியே** - தனது இடது பாகத்தில் திருவீற்றிருக்கும் மலைமகளை அம்மையை தான் இயற்றுகின்ற நடனத்தைக் கண்டு களிக்கும்படியாக, **கருணை உருக் கொண்டு** - உயிர்கள் மீது கொண்டுள்ள இரக்க வடிவோடு அன்பே வடிவாகக் கொண்டு நின்று ஆடும் இந்த ஆனந்த நடனத்தைக், **பேணும் அவர்க்கு** - கண்டு களித்து அதனைத் தமக்குரிய பொருளெனப் பேணி நினைந்திருக்கும் மெய்ஞ்ஞானிகளுக்கு, **உண்டோ பிறப்பு** - பிறப்பு என்னும் பேதமை மீண்டும் வந்தடைவதும் உண்டோ? இல்லையே என்றவாறாம்.

## கருத்துரை

பராபரை என வழங்கப்படும் பார்வதி - சிவகாம சுந்தரி - அம்மையாம் அருளையே தனது ஆனந்த நடனத்திற்கு ஆதார இடமாகக் கொண்டு மிகுபயன்களைத் தரும் திருவைந்தெழுத்துக்களையே சிவாய நம என்னும் எழுத்தையே தனது திருமேனி உருவாக உடையராகி சொல்லுக்கும் மனதிற்கும் எட்டாது அவற்றையும் கடந்து நிற்கும் ஒப்பற்ற தனித் தலைவராகிய சிவபெருமான் தனது இடது பாகத்தில் திருவீற்றிருக்கும் மலைமகளை அம்மையைத் தான் இயற்றுகின்ற நடனத்தை கண்டு களிக்கும்படியாகவும் உயிர்கள் மீது கொண்ட இரக்க வடிவோடு அன்பே வடிவமாகக் கொண்டு நின்று ஆடும், இந்த ஆனந்த நடனத்தைக் கண்டு களித்து அதனைத் தமக்குரிய பொருளெனப் பேணி நினைந்திருக்கும் மெய்ஞ்ஞானியர்களுக்கு பிறப்பு என்னும் பேதமை மீண்டும் வந்தடைவதும் உண்டோ, இல்லையே என்றவாறு.

## விரிவுரை

ஊன நடனத்தால் அடையும் பயன்களையும் ஞான நடனத்தால் அடையும் பயன்களையும் மனவாசகங் கடந்தார். சிறந்த முறையில் சொல்லி விளங்க வைத்தார். இவற்றை முன்னர் எனது விரிவுரையில் விரிவாக எடுத்துரைத்துள்ளேன். இதுபோல முன்னைய செய்யுளில்

தில்லைப் பெருவெளியிலே அம்பலத்து ஆடல் புரியும் ஐயன் திருக்கூத்தினை ஆனந்தக் கூத்தை விளக்கிய ஆசிரியர் அந்த ஆனந்தக் கூத்துக்கான காரணத்தையும் அதன் பயன்பாட்டினையும் இந்தச் செய்யுளில் காட்டி நிற்கின்றார்.

முன்பு இறைவன் ஊன நடனத்தையும் ஞான நடனத்தையும் புரிந்தபோது இறைவன் உயிர்களையே இடமாகக் கொண்டு ஆடல் புரிந்தார். இங்கு அந்த ஆனந்த நடனத்தைப் புரியும் போது தனது சத்தியாகிய அம்மையையே ஆதார இடமாகக் கொண்டு தில்லைப் பெருவெளியில் ஆடுகின்றார் எனக் காட்டினார். அதனையே இங்கு செய்யுளில் பரை இடமாக நின்று என்றார். பரை என்பது பராபரையாம் பார்வதி அம்மையைக் குறித்து நிற்கும். எனவே ஆனந்த நடனத்தின் போது தமது சத்தியாக அருளாக விளங்கும் உமை அம்மையை இடமாகக் கொண்டு ஆடுகிறார் என்க. இடமாக என்பது திசையையும் பரப்பையும் குறித்த சொல். அம்மையை இடபாகத்தில் வைத்துள்ளார் எனவும் அவரையே ஆதாரமாகக் கொண்டுள்ளார் எனவும் பொருள் காணலாம்.

இறைவன் திருவைந்தெழுத்தையே தனது திருமேனியாகக் கொண்டுள்ளான் என்பதை முன்னர் பலவாறாக விளக்கியுள்ளேன். அத்தகு திருமேனியைக் கொண்ட இறைவன், இங்கும் அந்தத் திருவைந்தெழுத்தையே திருமேனியாகக் கொண்டுள்ளான் இதனைச் செய்யுளில் பஞ்சாக்கரத்தால் என்னும் சொற்கொண்டு தவளைப் பாய்ந்து என்னும் இலக்கண உத்தியால் அங்கு கூறியவற்றை இங்கு காட்டி நிற்றல் காண்க. ஞான நடனத்தில் திருவடிகளையும் உறுப்புக்களாகிய அங்கம் உபாங்கம் சாங்கம் ஆகியவற்றைக் காட்டிய ஆசிரியர் இங்கு மீண்டும் பஞ்சாக்கரத்தைத் தொடர்பு படுத்திக் காட்டுகின்றார். இவ்வாறு காட்டி இனிச் சொல்லப் புகுதற்கான ஐந்தெழுத்துண்மைக்கு அடிகோலி விடுகின்றார்.

இந்த ஐந்து எழுத்துத் திருக்கோலத்துடன் விளங்கும் இறைவன் எத்தகையவன். வாக்கு மனாதீதன் அவன் ஒருவனே என்பதை எடுத்துரைக்க உரை உணர்வுக்கு எட்டா ஒருவன் என்றார். இதனை விளக்கும் போது, இறைவன் யாரும் இவன் இவ்வண்ணத்தன் இவன்

அவன் எனச் சுட்டி உரைக்கும் பொருளாக இருப்பவன் அல்லன். அவன் உரை உணர்வு கடந்து நிற்கும் பொருள் அவன் உரை உணர்வு கடந்து நின்று உணர்வுக்கும் தெரிய அரியதோர் உணர்வானவன். அவனை வாக்குமனாதீத கோசரன் என்பர். அவனைக் காண வழியுண்டு. அது அவனை அன்பினால் அண்டி நின்று அறிவதாகும். இதனையே செய்யுளில் உரை உணர்வுக்கு எட்டா ஒருவன் என்றார்.

உரை உணர்வுக்கும் எட்டா ஒருவன், அன்பு கொண்டு ஒழுகும் மெய்ஞ்ஞானிகளுக்கு வெளிப்பட்டுத் தில்லை வெளியிலே திருக்கூத்தை நடிக்கின்றான். இறைவன் தன்னிடத்தே, தமது நினைவை இமைப் பொழுதும் விட்டு நீங்காத நினைவைக், கலையாதிருக்கும் மெய்ஞ்ஞானிகளுக்கும் முத்திப் பேற்றினை அடைந்த உயிர்களுக்கும் அப்பேரானந்தப் பெருநடனத்தைக் காணும்படி நடிக்கின்றான். ஆடுகின்றான். அதனையே இங்கு பேணும்அவர் என்றார்.

இனி அருளையே இடமாகக் கொண்டு அருட்சத்தியாகிய அம்மையும் காணும்படியாக ஆடுகின்றார். அதனை முன்னைய செய்யுளில் அருந்தி நின்று ஆடல் காணும் அருள் எனக் காட்டினார். இங்கு அதனை மீண்டும் வலியுறுத்து முகமாக வரை மகள் தான் காணும் படியே எனக் கூறியுள்ளார். அந்த நடனத்தின் சிறப்பைக் கூறவந்த ஆசிரியர் கருணையே உருக்கொண்டு ஆடல் என்றார். இறைவன் கருணைமய வடிவானவன். அன்பே உருவானவன். இதனைப் பெரிய புராணம் தந்த சேக்கிழார் கற்பனை கடந்த சோதி கருணையே வடிவமாக நின்று ஆடும் கூத்தைக் காட்டினார். கருணை கூர்முகங்கள் ஆறும் எனக் கச்சியப்ப சிவாச்சாரியார் காட்டினார். இதனால் நாம் இறைவன் இரக்கமும் பெருங்கருணையும் கொண்டிருப்பவன் என்பதை அறிகின்றோம்.

இவ்வாறு இடமும் இயல்பும் திருமேனியும் கருணையும் சத்தியும் அருளும் கொண்ட பேரானந்த நடனமாம் பெருங்கடலில் திளைத்திருப்பவர்களுக்கு அற்பமான பிறவிக் கடலை நீந்துவது அரிதல்லவே. அவர்கள் அவ்வாடல் கண்டு நிற்பதினால் அவரை அப்பிறவி வந்து அணுகாது. முத்தியிலே திளைத்திருப்பர். பரமசிவன் திருவடியில் பரமபதம் அடைந்து மீளா வகையில் நிற்பர் என்பதையும்

பிறவி அறுத்தவர் அவர் என்பதையும் எதிர் மறையில் கூறி அதற்கான விடையை உணரும் படி கூறி விடுகின்றார். இதனைச் செய்யுளில் ஆடல் பேணும் அவர்க்கு உண்டோ பிறப்பு என்று கூறியிருத்தல் காண்க. அதனையே மாணிக்க வாசக சுவாமிகள்

**மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே**
**கள்ளப் புலக் குரம்பைக் கட்டளிக்க வல்லானே**

என்றார்.

இவ்வாறு நிற்கும் ஆன்ம நிலையை

**யானாகி என்னை விழுங்கி வெறும் தானாய்**
**நிலை நின்றது கற்பகமே**

எனச் சான்றோர் கூறியிருக்கின்றார்.

திருஞான சம்பந்தப் பெருமான். அத்திருநடனத்தைத் திருச்சிற்றம் பலத்தே கண்டு கும்பிட்டுக் களித்தவர். கண்ணினின்றும் ஆனந்தக் கண்ணீர் மழை பொழிய அவ்வமுத நிலையைக் கண்ணால் கண்டு உண்டு களித்தவர். அவர் அத்திருநடனத்தை

**உணர்வின் நேர் பெறவரும் சிவபோகத்தை ஒழிவின்றி உருவின் கண்**
**அணையும் ஐம்பொறியளவினும் எளிவர அருளினை**

எனக் கூறிப்போற்றுதல் காண்க.

இத்தகு நிலையைக் கூறவரும் திருமூல நாயனார்

**விம்மும் வெருவும் விழும் எழும் மெய்சோரும்**
**தம்மையும் தாம்அறி யார்கள் சதுர்கெடும்**
**செம்மை நிறைந்த திரு அம்பலக் கூத்துள்**
**அம்மலர்ப் பொற்பாதத் தன்புவைப் பார்கட்கே.**

என அத்திருநடனத்தின் பயனையும் கூறியிருத்தல் காண்க. மேலும் இத்திருப்பாட்டில் பிறை இடமா நின்று எனவும் வரைமகள் தான் காணும்படியே கருணை உருக்கொண்டு ஆடல் எனவும் கூறியுள்ளார். இதனால் நாம் சில உண்மை விளக்கத்தைக் காணலாம். எத்திறம் ஈசன் நின்றான் அத்திறம் அவளும் நிற்பள் என்பது சிவஞான சித்தியார்.

இறைவன் கருதுகின்ற எந்த கருமத்தையும், அவன் நினைத்தவாறு முடித்து வைப்பவன் சத்தியே ஆவள். இறைவன் அதனைச் செய்தல் சங்கற்ப மாத்திரை என்பர்.

உயிர்களின் நன்மை கருதி அவற்றின் அறியாமையைப் போக்குவதற்கு அவற்றிற்கு அனுபவிப்பைக் கொடுப்பன். இதனால் அவை அனுபவம் பெற்று அறிவைப் பெறும். இந்த அனுபவிப்பைக் கொடுக்கப் பிறவியையும், தனு கரண புவன போகங்களையும் கொடுத்தருள்பவள் மாயையாவள். இதனை இறைவன் பரிக்கிரக சத்தி யென்பர். மேலும் இம்மாயை அசுத்த மாயை சுத்த மாயை என இருதிறப்படும். இங்கும் அன்னை தனது கருணையினால், உயிர்களுக்கு மறைப்பாற்றலாக நின்று உதவுவதோடு அவை அறிவு பெற்று வரும் போது அறிவாற்றலாக ஒளிப் பொருளாக நின்று உதவுகின்றாள். இவ்வாறாக இருவினை ஒப்பு மலபரிபாகம் என்பனவற்றிற்கும் உயிரை இறைவன் கருத்துப்படி இட்டுச் செல்பவளும் இந்த சக்தியே. இந்த நிலையில் அன்னை உயிருக்கு அருளின் கொடுப்பனவை அதிகமாக்கி நிற்பள். இதனைச் சத்திநிபாதம் என்பர். அதாவது சத்தியின் அருள் வீழ்ச்சி என்பதே. அதனை மீண்டும் கூறும்போது சத்தி வழங்கும் தீவிரதர அருளுடைமையே ஆகும். இவ்வாறாக முத்தி நிலைவரை உயிரை இயக்கி, அதனை தன் இயல்புக்குக் கொண்டுவர உதவுபவள் சத்தியென்பது விளங்கும். இந்நிலையில் இச்சத்தி இறைவனுக்கு உயிரின் பக்குவத்தை எடுத்துரைக்க அவனும் உயிரை மேலும் பக்குவப் படுத்தி முத்தி அளிக்கின்றான்.

இதனால் நாம் பெற்றுக் கொண்ட உண்மை விளக்கம் யாதெனில், அம்மையை ஆதாரமாகக் கொண்டும் இடமாக் கொண்டும் ஆடல்புரிகின்றான் என்பதன் கருத்தை அறிந்ததேயாம். அன்னை சத்தியே உயிரை முத்திநிலைவரை படிப்படியாக உயர்த்தி வருகின்றாள் என்பதே. இதனால் இறைவி இறைவன் செயல்களுக்கெல்லாம் உதவி நிற்பள் என்பது ஒன்று மற்றது இடமாக நின்று உதவுதல் அதனையே செய்யுளில் பரை இடமாக நின்று என்றார். இனி இத்தொழில்களைச் செய்விக்கும் இறைவன் ஒருவனே உயிர்களுக்கு முத்தி தர வல்லவன். அதனை யாதொரு தெய்வம் கொண்டீர் என்னும் சிவஞான சித்தியார் பாடல், ஆதலால் அறிந்து அருள் செய்வனவன்றே எனக் கூறும். முத்திப்

பேற்றை வழங்க வல்லவன் சிவபெருமான். மற்றைய அதிதெய்வங்களுக்கு அந்த ஆற்றல் இல்லை. அவ்வாறே அன்னை பராபரையும் முத்திக்கு இட்டுச் செல்வளே அன்றி அதனை உயிருக்கு கொடுத்தளிப்பவள் அல்ல. சிவபெருமான் ஒருவரே அதனை அருளுவன். இந்த நிலையில் அம்மைக்கும் எதுவித செயலும் இல்லை என்றாகின்றது. ஆதலால் அந்த அம்மையும் இறைவனின் ஆடலைப் பார்த்துப் பரவசப் படுகின்றாள். இறைவனும் அவள் காணும்படி நின்று ஆடுகின்றான். காணும்படி என்பதால் அவள் செய்ய வேண்டிய தொழிற்பாட்டையும் அறிந்தவளா கின்றாள். இதனையே ஆசிரியர் செய்யுளில் பரை இடமாக நின்று எனவும் காட்டி இருத்தல் காண்க. இறைவன் கருணை வடிவானவன். அவன் செயல்கள் யாவும் நேசத்தாலும் தன் கருணைத் திறத்தாலும் உயிர்களுக்கு அருள் செய்கின்றான்.

**தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத் தரும்**
**பின்னமிலான் எங்கள் பிரான்**

என்றார் உமாபதி சிவம். தெரிந்து தெளிக.

மேலும் இறைவன் ஆடுகின்ற கூத்தினையும் அதன் தன்மையையும் கூறுவோமாயின்.

1. ஊன நடனம் : கேவல சகலர் இன உயிர்களுக்கு நடத்தப்படுவது அனுபவிப்பைக் கொடுத்தற்கு ஆடும் ஆட்டம் இது உயிரை இடமாகக் கொண்டது.

2. ஞான நடனம் : சகலரின நிலை கடந்து ஞானியர்களாக நிற்கும் நெறியில் அவர்க்கு அறிவு விளக்கம் பெற வைப்பதற்கு ஆடும் நடனம் இது. உயிரை இடமாகக் கொண்டது.

3. ஆனந்த நடனம் : ஓர் அனுபவக் கூத்து. பேரானந்த பேரின்ப அனுபவத்தை விளக்குவது. சீவன் முத்தர்களும் அம்மையும் மெய்ஞ்ஞானிகள் முனிவர்கள் யாவரும் காண ஆடுவது. தில்லைப் பெருவெளியையும் அம்மையையும் இடமாகக் கொண்டது. இவற்றை நாம் இங்கு அறிந்து தெளிந்தோம்.

மேலும் இந்த நடனத்தைப் பற்றி சித்தாந்திகள் கூறியிருப்பினும், அந்த நடனத்தை தில்லையில் காணும்படியான நடனத்தைச் சுருங்கச் சொல்லி அதற்கு ஒவ்வொரு பெயரும் கொடுத்து விளக்கிய பெருமை மனவாசகங் கடந்தாருக்கு உரியது. பெருமைக்கும் வணக்கத்திற்கும் உரியவர் மனவாசகங் கடந்தார் என்றால் மிகையாகாது. அதனாற்றான் போலும் இச்செய்யுளில் கூட உரையும் உணர்வும் கடந்த பொருள் என்பதை உரை உணர்வுக்கு எட்டாத ஒருவன் என்றார். மெய்கண்ட நாயனாரை, அத்துவித மெய்கண்டார் என்பது போல மனவாசகங் கடந்த சிவன் கூத்தினை யாவரும் உணரும்படியும் அறியும்படியும் காட்டிய மையால் அப்பெயரே அவருக்குச் சாலும். வாழ்க அவர் பெருநாமம் திருநாமம்.

## வெண்பா 39

### அஞ்செழுத்தின் பொருள் விளக்கம் கூறும்படி வேண்டுதல்

**நாதாந்த நாடகத்தை நன்றா அருள் செய்தீர்**
**ஓதீர் எழுத்து அஞ்சும் உள்ளபடி - தீது அறவே**
**அஞ்செழுத்து ஈது ஆகில் அழியும் எழுத்தாய் விடுமோ**
**தஞ்ச அருட்குருவே சாற்று**

### இதன் பொருள்

**நாதாந்த நாடகத்தை** - நாத தத்துவத்தையும் கடந்து அதற்கு அப்பாலே நின்று தில்லைப் பெருவெளியில் சிவ பெருமான் ஆடி அருளுகின்ற திருநடனத்தை, **நன்றா அருள் செய்தீர்** - அடியேன் உணர்ந்து கொள்ளும் முறைமையிலே அதன் வழி நிற்பதற்கான நெறியிலே அறியும் வண்ணம் பொருள் விளங்கக் கூறி அருளினீர், **ஓதீர் எழுத்து அஞ்சும் உள்ளபடி** - இனி எனக்கு திருவைந்தெழுத்துக்களின் இயல்பையும், அவற்றைக் கூறவேண்டிய முறைமையினையும் பயனையும் வேதத்தில் கூறியவாறு உபதேசித்து அருள்வீராக, **தீதறவே** - தீயன எனச் சித்தாந்தம் கூறி விலக்கிய விலக்க வேண்டிய பொருள்களை அடியேனும் நீக்கி நிற்குமாறு செய்யவேண்டும், **ஈது ஆகில்** - இவ்வெழுத்துக்கள் வரி வடிவில் எழுதுப் படுவனவாயின், **அழியும் எழுத்தாய் விடுமோ** - சாமானிய எழுத்துக்கள் போல வைத்து

எண்ணப்படுவனவோ இத்திருவைந்தெழுத்து. என்னால் இதனைத் தெளிந்து கொள்ள முடிவில்லையே, தஞ்ச அருட்குருவே சாற்று - அடைக்கலம் அடைந்தவரின் குறை நீக்கி அவர்க்கு அபயம் அளிக்கும் அருட்குருவான என் மெய்கண்ட தெய்வமே. எனது அறியாமை நீங்கும் வண்ணம், அப்பொருள் பற்றி அடியேனுக்குக் கூறியருளவேண்டும்.

## கருத்துரை

நாத தத்துவத்தையும் கடந்து அதற்கு அப்பாலே நின்று தில்லை பெருவெளியில் எம்பெருமான் ஆடி அருளுகின்ற திருநடனத்தை அடியேன் உணர்ந்து கொள்ளும் முறைமையிலே அதன் வழி நிற்பதற்கான நெறியிலே அறியும் வண்ணம் பொருள் விளங்கக் கூறி அருளினீர். இனி எனக்கு திருவைந்தெழுத்துக்களின் இயல்பையும், அவற்றைக் கூறவேண்டிய முறைமையினையும் பயனையும் வேதத்தில் கூறியவாறே உபதேசித்து அருள்வீராக. தீயன எனச் சைவசித்தாந்தம் கூறி விலக்கிய விலக்கவேண்டிய பொருள்களை அடியேனும் நீக்கி நிற்குமாறு செய்யவேண்டும். இவ்வெழுத்துக்கள் வரி வடிவில் எழுதப் படுவன வாயின் அவைபோல் சாமானிய எழுத்துக்கள் போல வைத்து எண்ணப் படுவனவோ இதனைத் தெளிந்து கொள்ள முடியவில்லை. அடைக்கலம் என அடைந்தவரின் குறை நீக்கி அவர்க்கு அபயம் அளிக்கும் அருட் குருவான என் மெய்கண்ட தெய்வமே. எனது அறியாமை நீங்கும் வண்ணம் அப்பொருள் பற்றி அடியேனுக்குக் கூறிய அருளவேண்டும்.

## விரிவுரை

இறைவன் தத்துவங்களைக் கடந்தவன். தத்துவங்கள் மண் முதலாக நாதம் வரை நீண்டு நிற்கும். அவை 36 எண்ணிக்கை கொண்டன. இத்தத்துவங்களின் முடிவாக உள்ளது நாத தத்துவம். நாத தத்துவம் சிவ தத்துவங்களில் அடங்கும். சிவம் பேரறிவுடைய பொருள். இதை நாதம் என்பர். நாதம் என்பது ஒலி. இறைவன் ஒளியாகவும் ஒலியாகவும் ஓசையாகவும் உள்ளான். இதனை ஓசை ஒலி யெல்லாம் ஆனாய் நீயே என திருமுறை எடுத்துரைக்கின்றது. அவன் இந்த ஓசை ஒலிகளையும் கடந்தும் நிற்பவன். அதனையே நாதாந்த நாடகத்தான் என்றார். நாதம் என்பது ஒலி. அந்த ஒலியையும் கடந்த நிலையில் சொருப நிலையில் இறைவன் தனது திருக்கூத்தை இயற்றுகின்றான். அதாவது இறைவன்

நாத தத்துவத்தையும் கடந்த நிலையிலே நின்று ஆடுகின்றான் என்பது இங்கு காண்கின்றோம்.

முன்னரே இதன் விளக்கத்தைக் கூறியருள வேண்டும் என வேண்டிக் கொண்ட நூலாசிரியர் மீண்டும் அதனைப் பற்றிய செய்திகளை உண்மைகளைக் கூறியருளவேண்டும் என வேண்டுகின்றார். இதற்கு முன்னர் நான் கேட்டுக் கொண்டதற்கு இணங்கி, இறைவன் இயற்றுகின்ற நடிக்கின்ற நாடகத்தை நடனத்தை நான் அறிந்து உணரும் வகையில் உண்மை விளக்கம் அருளினீர். தற்போது அடியேனின் விண்ணப்பம், ஐந்தெழுத்து முறைமையைக் கூறியருள்வீர் என்றார். இதனையே செய்யுளில் நாதாந்த நாடகத்தை நன்றாக அருள் செய்தீர் எனவும் ஓதீர் எழுத்தஞ்சும் உள்ளபடி எனவும் கூறி இருத்தல் காணலாம். நாடகம் - நடனம்.

இந்த முத்திறத்து நடனங்களிலே இறைவன் திருவைந்தெழுத்துக் களால் ஆன, மந்திர எழுத்துக்களால் ஆன திருமேனியை வடிவமாகக் கொண்டு ஆடி நிற்கின்றான் என்பதை முன்னர் அறிந்தோம். இந்த ஐந்தெழுத்துக்கள் நமசிவாய எனவும் சிவாயநம எனவும் வரும். அந்தத் திருவைந்து - பஞ்சாக்கரம் - என்பது என்ன? அதன் இயல்பு என்ன? அக்கரங்கள் எல்லாம் வரி வடிவாக உள்ளன. அவை அழிந்து போவன. ஆயினும் இங்கு கூறப் பெற்ற ஐந்தெழுத்துக்களும், வரிவடிவு கொண்ட மற்றைய எழுத்துக்கள் போல் அழிந்து போகும் தன்மையுடைனவோ. அவை என்றும் அழியாத நிலைபேறுடையனவோ? இந்த எழுத்துக்களை எவ்வாறு நாம் கூறுதல் வேண்டும். அது கூறும் முறைமைதான் என்ன? என்பன போன்ற கேள்விகள் ஒருவற்கு எழுவது இயல்பே. இதனையே தன் மனதில் மனவாசகங்கடந்தாரும் கொண்டார் போலும். அதனாலே இக் கேள்விகளுக்கான விடைகளை திரிபு இன்றி அடியேன் அறிந்து தெளியும்படியும், அவற்றை முறைப்படி ஓதி அதன் பயனையும் நான் அடைய வேண்டும். அதன் உண்மைத் தன்மைகளை எனக்கு உபதேசித்து அருளவேண்டும் என வேண்டுகின்றார்.

திருவைந்தெழுத்து மந்திரம் ஓதுதற்குரியது. வேதத்தை ஓதுவார்கள் அதாவது அதனைப் பிறர்க்குத் தெரிவிப்பது அல்ல. அதனை அவர்

காதில் ஓதுதல் வேண்டும். வேதத்தை மறையென்பர். அதனை மறைத்துக் கூறவதால் அது மறை எனப் பட்டது. எனவே தான் மறைபோலும் உள்ள திருவைந்தெழுத்தும் குருவினால் ஓத உணரப்பட வேண்டியதே. அதன் பொருள் கூட உரைப்பதிலும் பார்க்க ஓதி அருளப்பட வேண்டியதே. இதனைச் செய்யுளில் ஓதீர் எழுத்தஞ்சும் உள்ளபடி என்றார். உள்ளபடி என்பதனால் அது வேதத்தில் கூறியருளப் பெற்ற அந்த உண்மைப்படி என்பதாம். இந்த ஐந்தெழுத்தை முறைப்படி ஓதுவதால் அது உயிரிடத்திலே ஊறி நிற்கும் ஆணவம் கன்மம் மாயை மாயேயம் திரோதான மறைப்பு ஆகியவற்றை நீக்கி அறிவை ஞானத்தை வளரச் செய்கின்றது. உயிருக்கு உறுதுணையாக நிற்பது. இதனையே நாதன் நாமம் நமச்சிவாயவே எனவும் நற்றுணையாவது நமச்சிவாயவே என்றும் திருமுறை வரிகள் தெளிபடுத்துகின்றன. நானேயோ தவம் செய்தேன் சிவாய நம எனப் பெற்றேன் என மாணிக்க் வாசக சுவாமிகள் கூறுவது அதன் அருமையையும் பெருமையையும் கருதி என்பது தெளிவு. இந்தப் பஞ்சாக்கரம் உயிரிடத்தே அணைந்து நிற்கும் ஆணவம் கன்மம் மாயை என்னும் செயற்கைப் பொருளை, அகற்றிவிட வல்லது. இதனையே உள்ளபடி ஐந்தெழுத்தை ஓதீர் என்றார். ஓதி உணர்ந்தவர்க்கெல்லாம் ஒரு பொருளாவது திருவைந்தெழுத்து. மந்திரங்களுக்கெல்லாம் தலையாய மந்திரம். எல்லா மந்திரங்களும் ஓம் நமசிவாய ஓம் சிவாய நம என்னும் பஞ்சாக்கர மந்திரங்களில் அடக்கம். எனவே தான் தனது திரிபு உணர்ச்சி ஐயம், அகலும்படியாகவும், தெளிவுபெறும்படியாகவும் ஓதி உணர்த்துவீர் என்றார்.

இனித் தஞ்ச அருட்குருவே எனக் கூறுகின்றார். இச்சொற்றொடர் தனது குருவாகிய மெய்க்கண்டாரை விளித்துக் கூறியது. இது மெய்கண்டாரை நோக்கிக் கூறுவதாயினும் திருவெண்ணெய் நல்லூரில் திருக்கோயிலில் திருவீற்றிருந்தருளும் ஞான பண்டிதராகிய எம்பெருமானையும் குறித்து நின்றது. மனவாசகங் கடந்தார் திருவெண்ணெய் நல்லூரில் இருந்து அருளும் சிவபரம்பொருளையும் தனது குருவையும் வேறுகாணதவர். எனவே தான் இங்கு சிவபரம் பொருளையும் வேண்டினார் எனத் தந்துள்ளேன். இறைவன் தஞ்சமென வரும் தன்னடியார்களுக்கு வருகின்ற குறைகளையும் துன்பங்களையும் நீக்கி அவர்க்கு அபயம் தந்தளிப்பவர். அச்

செம்பொருளை அடைக்கலம் என அடைந்த தேவர்களின் குறைகளையும் துன்பங்களையும் நீக்கி அருளிய கருணை வள்ளலல்லவா அவர். வான்வார் கழலுடையான் திருநடனம் ஆடும் கழலோன் எனப் படுகின்றது. அவன் திருமேனியே ஐந்தெழுத்துக்களின் வடிவமாக அமைந்ததெனின் அப்பஞ்சாக்கரத்தின் பெருமையை எவ்வாறு எடுத்து சொல்வது. எனினும் அவன் அருளாலே அவன் தாள் வணங்கி சிந்தை மகிழும் வண்ணம் நிற்கும் சீரிய அன்புடையர் அதனை எடுத்துக் கூற வல்லவர். எனவே தான் தஞ்ச அருட் குருவே சாற்று என்றார். இறைவன் குருவடிவாக வந்து உயிர்களுக்கு உபதேசம் செய்கின்றான். தஞ்சமென வந்தடைந்த அடியேனையும் தாங்குதல் நின்றன் அருட்சிறப்பன்றோ. நின் கடனன்றோ என வேண்டி நிற்கின்றார். ஒரு குருவே இதனைச் சொல்லவல்லவர். குருவிடத்தின் கேட்டு அல்லாது திருவைந்தெழுத்தை ஓதுவது சொல்லுவது கூடத் தவறு என்பதை இங்கு எடுத்துக் காட்டினார். தீக்கை பெறும் போது தீட்சா குரு ஓதித் தரும் பஞ்சாக்கிர முறையையே அதனைப் பெற்றோர் கூறி நிற்கவேண்டும். இங்கு மனவாசகங் கடந்தாரின் விழைவு விருப்பம் தீதறவே நிற்றல் ஆகும். எனவே அத்தீமை அகன்று அகற்றி நற்பேறு அளிப்பது அம்மந்திர எழுத்துக்களே. ஆதலால் தீதறவே சாற்று என்றார்.

இச்செய்யுளுக்கு முன்பு திருவைந்தெழுத்துப் பற்றிய சிறுவிளக்கம் தரப்பட்டது. அங்கு அதனைக் கூறிய ஆசிரியர் அங்கு இக் கேள்விகளுக்கான விடைகளைத் தராத காரணத்தால், இங்கு அதனைத் தரும்படி வேண்டினார். அப்போது பஞ்சாக்கரம் பற்றிய முழு விபரமும் அங்கு கூறப்படவில்லை. ஆதலால், தான் எடுத்துக்கொண்ட பொருளுக்கு விளக்கம் அளிக்க அதன் இயல்பு, அமைப்பு, மந்திர முறைமை, பயன், ஓதும் முறைமை ஆதியனவற்றை இச்செய்யுளில் கூறும்படி வேண்டினார்.

இனி உள்ளபடி என்பதனை சித்தாந்தத்தில் வேதங்களில் கூறிய வண்ணமே எனக்குக் கூறி அருள்க என வேண்டுவதும், ஆசிரியர் உள்ளபடி உரைக்கக்கேள் எனவும் கூறியமை மாறுபடில்லா வகையில் திரிபு ஐயம் எழாதவாறு கூறுவேன் எனப் பொருள் தர நிற்பது காண்க. வேதங்களை நன்கு தெளிந்த ஐயனே. வேதமே நீ கூறியவை தானே. எனவே அதனைக் கூறிய நீரே இங்கு தெளிவுறக் கூறுதல் சாலும். எனவே தான் ஓதீர் உள்ளபடி என்றார்.

## வெண்பா 40

### திருவைந்தெழுத்தின் அழியாத தன்மை கூறுவது

**உற்ற குறி அழியும் ஓதும் கால் பாடைகளில்**
**சற்றும் பொருள்தான் சலியாது - மற்றதுகேள்**
**ஈசன் அருள் ஆவி எழில் ஆர் திரோதமலம்**
**ஆசு இல் எழுத்து அஞ்சின் அடைவாம்**

## இதன் பொருள்

**உற்ற குறி அழியும் ஓதுங்கால்** - எழுத்துக்களின் தன்மையை ஆராய்ந்து பார்க்கும்போது அவற்றின் அடையாளமாகக் குறித்து சுட்டி உரைக்கப்படும் சொற்கள் அழியும் தன்மையுடையன, **பாடைகளில் சற்றும் பொருள் தான் சலியாது** - மொழிகளிலே. கூறப்பட்டிருக்கும் சிவநாமமாகிய திருவைந்தெழுத்துக்கள் ஒருபோதும் அழிவதில்லை, **மற்றது கேள்** - அது ஏன் அவ்வாறு அழிவதில்லை என்பதற்கான காரணத்தைக் கூறுவேன் கேட்பாயாக, **ஈசன் அருள் ஆவி எழில் ஆர் திரோதமலம் ஆசு இல் எழுத்து** - சிவன் சத்தி உயிர் அழகிய திரோதான சத்தி மும்மலங்கள் ஆகியனவற்றைத் தெரிவிக்கும் தெளிவிக்கும் சி. வா. ய. ந. ம. என்னும் குற்றமற்ற எழுத்துக்கள், **அஞ்சின் அடைவு ஆகம்** - திருவைந்தெழுத்தால் குறிக்கப்படும் முறைமை இதுவாகும். இதுவே வேதங்களில் கூறியருளப் பெற்றதுமாகும்.

## கருத்துரை

எழுத்துக்களின் தன்மையை ஆராய்ந்து பார்க்கும்போது அவற்றின் அடையாளமாகக் குறித்துச் சுட்டி உரைக்கப்படும் சொற்கள் அழியும் தன்மையுடையன. மொழிகளிலே கூறப்பட்டிருக்கும் சிவநாமமாகிய திருவைந்தெழுத்துக்கள் ஒருபோதும் அழிவதில்லை. அது ஏன் அவ்வாறு அழிவதில்லை என்பதற்கான காரணத்தைக் கூறுவேன் கேட்பாயாக. சிவன் சத்தி உயிர் அழகிய திரோதாயி மும்மலங்கள் ஆகிய இவற்றைத் தெளிவிக்கும் உணர்த்தும் எழுத்துக்கள் சி வா ய ந ம என்னும் குற்றமற்ற எழுத்துக்கள் திருவைந்தெழுத்தால் குறிக்கப் படும் முறைமை இதுவாகும். இதுவே வேதங்களில் கூறியருளப் பெற்றதுமாகும்.

## விரிவுரை

எழுத்துக்களினால் ஆனவை சொற்கள். எழுத்தே தனித்தும் தொடர்ந்தும் பொருள் தரின் அவை பதமாம். அச்சொற்கள் சுட்டி உரைக்கப்படும். பொருட்களுக்குப் பெயர் சொல்லி அழைக்கப் பயன்படுகின்றன. இவ்வாறு சுட்டி உரைக்கப்படும் பொருள்கள் மாயையின் காரியப் பொருள்கள் சடப்பொருள்கள். இவை தோற்றம் பெறுகின்றன. சொற்கள் அவற்றிற்கான அடையாளமாகப் பேசப் படுகின்றன. பொருட்கள் இவையென அறியப்படுகின்றன. இவ்வாறு அறியப்படும் பொருட்கள் சடப்பொருட்கள். ஆகையால் அவை அழிகின்றன. இதனால், இவற்றினை அழைக்கப்டும் எழுத்துக்களும் அழிகின்றன. இதுவே செய்யுளில் காணப்படும். ஓதுங்கால் உற்ற குறி அழியும் எனப்படுகின்றது. உணர்த்துகின்றது.

அவ்வாறு எழுத்துக்கள் அழியுமானால் பொருள்களும் அழிந்து விடுகின்றன. இறைவனின் திருமேனி திருவைந்தெழுத்தால் ஆனது இது சிவாயநம என்னும் அம்மந்திரச் சொல், அப்படியாயின் இங்கு சொல்லும் அல்லவா அழிய வேண்டும். அவ்வாறு அழியுமானால் இச்சொற்களுக்கு ஆற்றல் உண்டு எனக் கொள்வது எங்ஙனம். அது அழிவதா இல்லையா என்பது நூலாசிரியருக்குரிய ஐயம். சொற்களில் தனி எழுத்துக்களை உடைய சொற்களும் உள. கா பூ ஆ பா மா என்பன போன்ற சொற்கள். அவையும் அழிகின்றனவெனக் கொள்ளலாமே என்பது வாதம். எனவே எனது குருவே இந்த ஐயத்தை நீக்க உள்ளதை உள்ளபடி உரைத்தருளும் என முன் வேண்டினார்.

இதற்கு விடையினை அருளும் முகமாகவே எழுத்துக்களாலான சொல் இரு நோக்கில் அமையும். அவை சொல்லும் பொருளும் என்பனவெனக் கொள்ளுதல் வேண்டும். இதனால் பொருள் அழியும் தன்மையுடையன. ஆதலால், சொல்லும் அழியும் தன்மையுடையனவே எனக் கூறினார். மாணவனுக்கு ஒரு திகைப்பு. அப்படியாயின் சிவாயநம என்னும் திருவைந்தெழுத்தும் அவ்வாறாகுமோ என்பது. அவர் அக்கேள்வியைக் தொடுக்குமுன்னரே குரு விடையைக் கூறிவிடுகின்றார். பயப்படாதே திருவைந்தெழுத்து அழியாத இயல்புடையது. அதனை எடுத்த எடுப்பிலே கூறிவிடுகின்றார். மாணவனின் மனநிலை ஒருவாறு

தெளிகின்றது. எனினும் அது முழுமையாக முற்றாகத் தீரவில்லை. குருவைப் பார்க்கின்றான். அப்பார்வையின் காரணத்தைப் புரிந்து கொண்டார். விடை வருகின்றது.

இங்கே கூறப்படுகின்ற சிவாய நம என்னும் ஐந்து எழுத்துக்கள் தனி எழுத்துக்கள். அவை சொற்கள். அச்சொற்கள் உணர்த்தும் பொருள்கள் இவை. அவை அப்பொருளுக்கான அடையாள எழுத்துக்கள். மந்திர எழுத்துக்கள். அதில் வரும் சி என்னும் எழுத்து சிவனையும் வ என்னும் எழுத்து அருள் சத்தியாகிய அம்மையையும் ய என்னும் எழுத்து உயிரினையும் ந என்னும் எழுத்து மறைப்புச் சத்தியாகிய திரோதாயியையும் ம என்னும் எழுத்து ஆணவம் கன்ம மாயை என்னும் மலங்களையும் உணர்த்தும் எழுத்துக்கள். இங்கு கூறப்பட்ட ஐவகை பொருளும் சுட்டி கூறி அறியப்படுவனவல்ல. அவை அநாதிப் பொருள்கள். தோற்றமில் காலத்துப் பொருள்கள். அவை எக்காலத்தும் அழியும் தன்மையில்லாத பொருள்கள். அவை என்றும் உள்ள உள் பொருள்கள். தோற்றம் பெறும் பொருள்களே அழியும். அவற்றிற்கான சொல்லும் பொருளும் அழியும். இறை உயிர் தளை என்பன தோற்றமில் காலத்துப் பொருட்கள். என்று தோன்றியன எப்போது அழிவன என்பன உணர முடியாத கால நிர்ணயமற்ற பொருள்கள். எனவே அதற்கான அச்சொற்கள் தனி எழுத்துக்களும் அழியாது. அவை என்றும் அழியாதன. அழியும் பொருட்களுக்கான சொல்லும் பொருளுமே அழிவன. எனவே நிலையான என்றும் உள்பொருள்களுக்குரிய சொற்களும் என்றும் நிலையானவை. நிலைபெற்று நிற்பவை. அவை சத்தும் சித்துமான பொருள்கள் என்றும் உள்ள எழுத்துக்களே எனக் காரணம் காட்டி அவரின் ஐயத்தைப் போக்குகின்றார்.

சிவாய நம என்னும் இத்திருவைந்தெழுத்துக்கள் என்றும் உள்ள பொருள் சொல் என்றும் நிலையான சொல் என்பது காணக்கிடக் கின்றதல்லவா.

இதனை பாடைகளில் சற்றும் பொருள் சலியாது எனவும் சிவன் அருள் ஆவி எழிலார் திரோதமலம் ஆசு இல் எழுத்து அஞ்சின் அடைவாம். ஆசு இல் எழுத்து என்பது குற்றமற்ற எழுத்துக்கள் இவை

யெனவும் மற்றைய எழுத்துக்கள் குற்றமும் குறைபாடும் உடையன என்பது தெளிவு. இதனை எடுத்துக் கூறவந்த சந்தான குரவர் உமாபதி சிவம் தனது திருவருட்பயன் என்னும் சித்தாந்த சாத்திர நூலில்

**அருள் நூலும் ஆரணமும் அல்லாதும் ஐந்தின்**
**பொருள் நூல் தெரியப் புகின்**

எனக் காரணம் காட்டி சிவகாமங்களில் கூறப்படும் பொருள்கள் யாவும் திருவைந்தெழுத்தின் விளக்கமாகவே அமைந்திருக்கின்றன எனவும் இறை சத்தி பாசம் எழில் மாயை ஆவி உற நிற்கும் ஓங்காரத் துள் என்றார். ஓங்காரத்தின் உள்பொருளே சிவாய நம தானே. இதனை மாணிக்க வாசக சுவாமிகள். எண்ணிலேன் திருநாம அஞ்செழுத்து என்று நொந்து கொள்வது காண்க. மேலும் அவர் என்னை ஓர் வார்த்தை யுட்படுத்து எனக் கூறினார். இங்கு வார்த்தை என்பது சொல். அச் சொல்லானது பிரணவச் சொல். ஒரு சொல் அப்பிரணவமே சிவாய நம என்னும் மந்திர மொழியல்லவா. எனவே இச்செய்யுள் மூலம் மனவாசங் கடந்தார் கேட்ட முதல் கேள்விக்கான விடை கண்டாயிற்று.

இனி பஞ்சாக்கரம் என்பது தமிழில் திருவைந்தெழுத்து எனப்படும். இது ஐந்தெழுத்துக்களால் ஆனவை என்பது பொருள்படும். அட்சரம் என்பது வடமொழியில் கூறப்படும் சொல்லுக்கு அழியாதது எனப் பொருள் காணப்படுகின்றது. எனவே ஐந்து எழுத்துக்களான சிவாய நம என்னும் அக்கரங்களும் என்று அழியாதனவே.

## வெண்பா 41

**திருவைந்தெழுத்தின் வைப்பு முறைகளும்**
**அவற்றை ஓதும் முறைமையும் பயனும் கூறுவது**

**சிவன் அருள் ஆவி திரோதம் மலம் ஐந்தும்**
**அவன் எழுத்து அஞ்சின் அடைவாம் - இவன் நின்று**
**நம் முதலா ஓதில் அருள் நாடாது நாடும் அருள்**
**சிம் முதலா ஓதுநீ சென்று**

### இதன் பொருள்

**சிவன் அருள் ஆவி திரோதம் மலம் ஐந்தும்** - சிவனும் சத்தியும் உயிரும் திரோதாயியும் மலங்களும் ஆகிய இவை ஐந்தும், அவன்

**எழுத்து ஐந்தின் அடைவாம்** - சிவபெருமானை உணரவைக்கின்ற திருவைந்தெழுத்துக்களின் (சிவாய நம) உள்பொருள்களை வெளிப்படுத்துகின்ற பொருள்களின் வைப்புமுறையாகும், **இவன் நின்று நம்முதலா ஓதில்** - மாணாக்கனாகிய நீ இங்கு இருவகையாக வழங்கப்படும் திருவைந்தெழுத்தை நகர எழுத்தை முதலாக உடைய நம சிவாய மந்திரத்தை ஓதிக் கொண்டு வருவீராயின், **அருள் நாடாது** - அப்பெருமானின் திருவருள் முழுமையாக உன்னை வந்து சேர்வதில்லை. அதனால் பெறவேண்டிய சிவஞானமும் சிவப்பேறும் உன்னை வந்து அடையாது, **நாடும் அருள்** - நீ நாடி நிற்கின்ற சிவஞானமும் சிவனருளும் சிவப்பேறும் ஆகிய அருள் நிலை வந்து உன்னைச் சேரவேண்டுமாயின், **சிம் முதலா ஓது** - சி கரத்தை தொடக்கமாக, முதலாகவுடைய சிவாய நம என்னும் திருவைந்தெழுத்தை முறைப்படி ஓதி வருவாயாக, **நீ சென்று** - எனவே அதனை உனது குருநாதர் உப்தேசித்தபடியே சொல்வாய்.

## கருத்துரை

சிவனும் சத்தியும் உயிரும் திரோதாயியும் மலங்களும் ஆகிய இவை ஐந்தும், சிவபெருமானை உணர வைக்கின்ற திருவைந்தெழுத்துகளின் (சிவாய நம) உள் பொருள்களை வெளிப்படுத்துகின்ற பொருள்களின் வைப்பு முறையாகும். மாணவனாகிய நீ இங்கு இருவகையாக வழங்கப்படும் திருவைந்தெழுத்தில் நகர எழுத்தை முதலாகவுடைய நமசிவாய மந்திரத்தை ஓதிக் கொண்டு வருவீராயின் அப்பெருமானின் திருவருள் முழுமையாக உன்னை வந்து சேர்வதில்லை. அதனால் பெறவெண்டிய சிவஞானமும் இறையருளும் சிவப்பெறும் உன்னை வந்து அடையாது. நீ நாடி நிற்கின்ற சிவப் பேறும் சிவஞானமும் ஆகிய அருள் நிலைகள் உன்னைச் சேரவேண்டுமாயின் சி கரத்தைத் தொடக்கமாக முதலாகவுடைய சிவாய நம என்னும் திருவைந்தெழுத்தை முறைப்படி ஓதி வருவாயாக. எனவே அதனை உனது குருநாதர் உபதேசித்தபடியே சொல்வாய்.

## விரிவுரை

சிவாய நம என்னும் எழுத்துக்கள் அழியாதன என அதன் இயல்பு கூறிய ஆசிரியர் அந்த எழுத்துக்களுக்கான, எழுத்துக்களின்

தன்மையையும் அந்த எழுத்துக்கள் எப்பொருளை உணர்த்தி நிற்கின்றன என்பதையும் தெளிவித்தார். இங்கு ஆசிரியர் மேற்கூறிய கருத்தில் சிவாய நம என்னும் திருவைந்தெழுத்தின் முறைமையைக் கூறினார். சி என்பது சிவனையும் வா என்பது அருட்சத்தியையும் ய என்பது உயிரையும் ந என்பது திரோதான சத்தியையும் ம என்பது மலங்களையும் உணர்த்துகின்ற முறைமையைக் கூறுகின்றார். இறைவன் கொண்ட எழுத்துக்கள் என்பதையும் காட்டுவதற்கு அவன் எழுத்து என்றார். அந்த ஐந்தெழுத்தின் முறைமை என்பதை அஞ்சின் அடைவாம் எனவும் எடுத்துரைத்தார்.

இவ்வாறு கூறிய ஆசிரியர் உயிரைக் குறிக்கு முகமாக இவன் என்னும் சொல்லைக் கூறியும் மாணாக்கனை நீ என விளித்தும் கூறுவது நோக்கற்பாலது. இந்த திருவைந்தெழுத்தைக் கூறுவதற்கான முறைமையைக் கூறுகின்ற போது மாணக்கனை விழித்து நம் முதலா ஓதில் அருள் நாடாது என்றார். செய்யுளில் நகர எழுத்தை முதலாகவுடைய நம சிவாய எனச் சொல்லும் பஞ்சாக்கர எழுத்தையே நம முதலாய் என்றார். எனவே நம சிவாய எனவரும் முறையிலே இத்திருவைந்தெழுத்தை ஓதிக்கொண்டு வருவதினால் ஏற்படும் பயனையும் கூறிவிடுகின்றார்.

நம சிவாய மந்திரத்தை கூறுவதற்குத் தகுதியுடையோர் இவ்வுலக இன்பத்தை வேண்டியும் முத்தி இன்பத்தை நாடாதவர்களாயும் இருப்பவர்களே. எனவே நம சிவாய என்னும் நாமத்தை உரைக்கும் போதும் எப்பெருமானின் அருள் வெளிப்படாது. அருள் வெளிப்படவில்லையெனில் அதன் விளைவு மீண்டும் மீண்டும் பிறவியில் புக்கு இவ்வுலக இன்பத்தை மதித்து அதில் அழுந்தி நின்று விடும். ஆயினும் இறைவன் வெளிப்படத் தோன்றாவிடினும் உலக இன்ப நுகர்வு சிறப்பாக வந்து அடையும். எனவே உலக இன்பம் வேண்டுவோர் நமசிவாய மந்திரத்தை ஓதுவதே முறைமையாகும். இதனை ஆசிரியர் நம் முதலா ஓதில் அருள் நாடாது என்றார். நம என்னும் இவ்வெழுத்துக்களை தொடக்கமாக உடையது. தூலபஞ்சாக்கரம் என்பர். எனவே திரோதான சத்தியைக் குறித்து நிற்பது. திரோதான சத்தியென்பது மறைப்பாற்றலின் வெளிப்பாடு. மாயை என்னும் மலம் கன்மங்களையும் உள்ளடக்கி

நிற்கும். கன்மங்களுக்குக் காரணமாய் அமைவது ஆணவம். இந்த ஆணவத்தின் தொழிற்பாட்டுக்கு உதவி நிற்பது மாயை. ம என்பது ஆணவ மலத்தையும் குறிப்பதாகும். எனவே நம என்னும் எழுத்துக்கள் பாச எழுத்துக்கள். பாசத்தை அண்டி நிற்கும் உயிர் இவ்வுலக இன்பத்திலே திளைத்திருக்கின்றது. அதற்கு அறிவு வர வாய்ப்பில்லை. இங்கு அறிவு என்பது இறைவனைப் பற்றிய அறிவு. தன்னைப் பற்றிய அறிவு. இந்த இரண்டு எழுத்துக்களும் சிவாய என்னும் சீரிய எழுத்துக்களை அறியவிடாமல் முன்னின்று மறைக்கின்றது. அது சிவனையும் அருளையும் நாடவிடாது நிற்கின்றது. தன்னையும் இறைவனையும் அறியாது நிற்கும் நிலை பாச நிலை. இது உயிரினையும் பின்னே தள்ளி விடுகின்றது. இதனால் உயிர் தன்னியல்பையும் சிவன் இயல்பையும் சத்தியின் இயல்பையும் காணவிடாது. காணாது. இதனைத் தடுப்பது முன்னே இருளாக நிற்கின்ற மலங்கள் தாம். திரோதான சத்தி ஆணவத்தின் தொழிற்பாட்டுக்கு உதவுவதாலும் மலம் உயிரின் அறிவை இருட்படுத்தி நிற்பதாலும் உயிரின் அறிவு இவ்வளவிலேயே நின்று விடுகின்றது. சிவன்றிவும் தெளிவதில்லை.

இறைவன் ஒன்றாய் வேறாய் உடனாய் நின்றும் உயிருக்கு வெளிப்பட்டுத் தோன்றமாட்டான். இதனால் உயிர் அறிவு எதுவும் இன்றி ஆணவ மலத்தின் வழி நின்று அஞ்ஞானத்தால் அறியாமையால் இவ்வுலக இன்பமே பொருளென உண்மையெனக் காண்கின்றது. இறைவனை வேண்டி நம சிவாய என ஓதுவதால் இந்த நம என்னும் எழுத்துக்கள் சிவனையும் சத்தியையும் உயிரையும் பின் தள்ளி விடுகின்றது. உலக பற்றை நீக்க விழையாதவருக்கு இச்சொல்முறை உரியதே. எனவே உலகியல் வாழ்க்கையில் நின்று, தனு கரண புவன போகங்களை நாடி நிற்பவர்கள். அஞ்செழுத்து மந்திரத்தைத் தூலமாக வைத்து நம சிவாய என ஓதுவதற்குரியவராவர். தீக்கையில் பல வகை தீக்கைகள் இருப்பினும் சமய தீக்கை பெறுவோருக்கு குருவால் உபதேசிக்கப்படும் ஐந்தெழுத்து முறை இதுவேயாகும். நாற்பாதங்களில் சரியை முறையில் நிற்போர் நம சிவாய என ஓதுதலே முறை என்பதை உணர்த்தவே ஆசிரியர் இவன் நின்று நம் முதலா ஓதில் அருள் நாடாது என்றார். எனவே அவர் நாடும் வகையில் நம சிவாயவே மிக்கு நிற்கும்.

கேவல சகல நிலையில் நிற்போர். இதனைக் கூறுவதால் அந்நிலை களில் பாச பசு அறிவே அவரை வந்து சேரும். அதற்கு மேலான நிலைக்கு நமசிவாய மந்திரம் இட்டுச் செல்லுமாயினும் அதன் அருமை நோக்கியே அருள் நாடாது என்றார். திருமுறைகளில் நமச் சிவாயவே எனவும் நமச் சிவாய வாழ்க எனவும் நற்றுணையாவது நமச்சிவாயவே எனவும் சொல்லும் நா நமச்சிவாயவே எனவும் நாதன் நாமம் நமச்சிவாயவே எனவும் நால்வர், சமய குரவர்கள் தமது திருப்பாடல் களிலே துணையாகவும் நாமமாகவும் கொண்ட இவை அவர்களின் அருள்நிலையில் கூறப்படவில்லையோ என ஐயம் நிகழும். அப்பெரியோர் அவ்வாறு கூறியதற்கான காரணத்தால் ஆழ்ந்து ஆய்வு செய்யும் வல்லமை எமக்கில்லை. ஆயினும் அவர்கள் சிவாய நம என்னும் மந்திரத்தையே தாரக மந்திரமாக கொண்டவர்கள் என்பதைப் புரிந்து கொள்ளவேண்டும்.

நானேயோ தவம் செய்தேன் சிவாய நம எனப் பெற்றேன் என்னும், கூற்று இதனை வலியுறுத்தும். எனினும் அவர்கள் சகல நிலையிலே இருக்கும் சரியை நிலையிலே நிற்போருக்கென இது ஓதியதாகவும். அவ்வாறு ஓதிவரின் ஆன்மாவின் அறிவு ஓரளவு வெளிப்பட்டு சிவத்தை நாடும் என்பதை மனதில் கொள்ளவேண்டும் என்பதைத் தெளிவித்தற் பொருட்டே அவ்வாறு கூறினார் எனக் கொள்ள இடமுண்டு. இந்த நமசிவாய என்னும் மந்திர ஆற்றல் உயிரை நான் யார் என்னுள்ளம் ஆர் ஞானங்கள் ஆர் என்ற அளவிற்கு உயர்த்திவிடும். சிவனருள் என்றும் உயிருக்கு உண்டு. ஆனால் அது மலசம்பந்த முடையார்க்கு வெளிப்பட்டுத் தோன்றாது. மறைந்து நின்று அவற்றிற்கு வேண்டிய அறிவுகளைப் படி முறையில் உணர்த்தும். இந்த நம சிவாய மந்திரத்தை ஓதி வருவதினால் அருள் நாடாது என்பது சிவன் வெளிப்பட்டுத் தோன்றான். அவன் அருள் மறைந்தே கிடைக்கும் என்பதன் கருத்தையும் தருவதை இங்கு நாம் உணரும் கருத்தாகவும் உள்ளது. எனவே அருள் நாடாது என்பதன் உள் பொருளை உணர்ந்து தெளியவேண்டும். சிந்தனைக்குரியதே.

இவ்வாறு நம சிவாய என்பதனைக் கூறிய ஆசிரியர் நாடும் அருள் சிம் முதலாக ஓது என்றார். முன்பு சொல்லிய விளக்கத்திற்கு எதிரிடையான மறுதலையான விளக்கம் இங்கே தேவைப்படுகின்றது. நன் மாணாக்கன் இங்கு நூலின் தொடக்கத்திலேயே அருள்நிலை கைகூடவே

இதனையெல்லாம் அறிவி என்றார். யோகம் நிகழ் புதல்வா என மாணாக்கனை அழைத்தவர். அந்த மாணவன் பேரின்ப நிலைக்கு இட்டுச் செல்லும் ஞான நெறியை நாடி நிற்பவன். ஆகையால் நீ நாடி நிற்கின்ற அருள்வழி அடைய வேண்டுமாயின் சிம்முதலா ஓது என்றார். எனவே சூக்கும பஞ்சாக்கரமாகிய சிவாய நம என்னும் முறையில் அமைந்த மந்திரத்தை முறைப்படி ஓது என்றார். இங்கே நாடும் அருள் எனக் கூறிநிற்பதினால் அம்மாணாக்கனை நாடி நிற்கும் அருள் பேரருள் பேரின்பம் அடைவதற்கு வழி சிவாய நம என ஓதுவதேயாம். உரைத்தலுக்கும் ஓதுதலுக்கும் வேறுபாடு உண்டு. உரைத்தல் பிறர் கேட்பச் செல்லுதல். ஓதுதல் என்பது தனக்கு மட்டுமே உணரக் கூடிய முறையில் கூறுதல். உபதேசித்தல் என்பதைக் காட்டவே ஓது என்றார்.

இனிப் பஞ்சாக்கரத்தில் நமசிவாய என்பது தூல பஞ்சாக்கரம் என்பதும் சமயதீக்கையில் சொல்லித் தரப்படுவது என்பதும் முன்பு கண்டோம். சிவாய நம என்னும் இத்திருமந்திரம் சிவதீக்கையில் சொல்லப்பெறுவது. இது சூக்கும பஞ்சாக்கரம் ஆகையால் ஓதி நிற்றலே முறை. மேலும் இதனை குருவருளால் முறைப்படி ஓதக் கேட்டு அதனை அம்முறைப்படியே ஓதி வருதல் வேண்டும் என்பதனை வலியுறுத்த நீ சென்று என்றார்.

இனிச் சிவாய நம என்பதைச் சிவாய நம என்னும் எழுத்து வரிசையில் நோக்கில் சிவனையும் சத்தியும் முன் வைத்து உயிரை நடு வைத்து பாசத்தையும் மலத்தையும் பின்வைத்து உயிர் நடுவாக நிற்கின்றது. நடுவாக நிற்கும் உயிர் சிவனை முன்னிறுத்தித் தான் பின் நிற்பதால் அதன் வினைகளும் மலங்களும் மறைப்பாற்றலும் பின் தள்ளப் பட்டுவிடுகின்றன. இறைவன் ஆன்மாவின் தகுதி - பக்குவ நிலை கண்டு அதற்கு இருவினை ஒப்பும் மலபரிமாகமும் ஏற்பட வழி வகுத்து சத்திநிபாதம் அடையவும் வழி அமைக்கின்றான். இந்த நிலையில் உயிர் இன்ப நிலைக்குள் செல்லுக்கின்றது. எனவே பதிஞானமும் அதற்கு அப்பாலுள்ள முத்தி நெறியும் வந்து கைகூட வேண்டுமெனில் சிம்முதலா ஓது நீ என்றார். எனவே சிவாய நம என்னும் மந்திரத்தை முறைப்படி ஓதிவரின் வீடுபேற்றின்பம் கிட்டும் என எடுத்துரைத்தார். இதனால் சைவ சமய வழி நிற்போர் முதலில் நம சிவாய என்பதைச் சரியை நெறியாக நிற்கும் போது கூறுதலும் சமயதீக்கை பெறுதல் அதிமுக்கிய மானது

என்பது வெளிப்படையாகத் தெளிகின்றோம். அதுவே அதனை ஓதும் முறைமை.

இனிக் கிரியை யோகம் ஆகிய நெறிகளில் நிற்போர் சமயதீக்கையும் சிவதீக்கையும் பெற்று ஞானாசிரியனிடத்து சிவாய நம என்னும் திருவைந்தெழுத்தை விதிப்படி உச்சரிக்கும் முறையை அறிந்து அதன்படி ஓதிவருதல் வேண்டும். இனி சிவாய நம என்னும் போது சிவாய எனக் கூறி ஒரு மாத்திரை கால இடைவெளியின் பின்னர் நம என்னும் சொல்லை ஓதுவதும் நம சிவாய என்பதிலும் இவ்வாறே நம சிவாய என மாத்திரை இடை வெளி விட்டு ஓதுதல் வேண்டும். இதுவே ஓதும் முறையென சித்தாந்த நூல்கள் எடுத்துரைக்கின்றன. எனவே அதுவே ஓதும் முறையாகும். நாடும் சிம்முதலா ஓதின் என்பதினால் சிகரத்தை முதலாக உடைய சிவாய நமவை ஓதிவரின் இறைவன் உயிரை நாடி வருவான் அருளும் நாடும் என்றார்.

இம்மையே தரும் சோறும் கூறையும் ஏற்றலும் இடர்க்கடலுமாம் (நம சிவாய) அம்மையே சிவ லோகம் ஆள்வதற்கு யாதும் ஐயுறவில்லையே (சிவாய நம) எனத் தெளிந்து அதனை முறைப்படி ஓதவேண்டும் என்பது இங்கு இச்செய்யுள் மூலம் தெளிய கிடக்கின்றது.

**நந்தி நாம நமசிவாய வெனும்**
**சந்தை யாற்றமிழ் ஞான சம்பந்தன் சொல்**
**சிந்தையான மகிழ்ந் தேத்த வல்லாரெல்லாம்**
**பந்தபாசம் அறுக்க வல்லார்களே .**

என சம்பந்தப் பெருமான் கூற்று இங்கு சிந்தித்து உணர வேண்டியது தான். இதனால் பந்த பாசம் ஆகிய இரண்டும் நமசிவாய என்னும் மந்திரத்தை ஓதிவர அறிவு வரப் பெற்று அதனின் நின்று நீங்கியவர்களாவர் என்பதை உணர்த்துகின்றது. எனவே சிவாய நம என்பது இவற்றிற்கு மேலாகவுள்ள பதவிகளைத் தரவல்லது பக்குவத்தை அடைய வைப்பது என்பது பெறப்பட்டது.

மேலும் மாணாக்கன் யோக நெறிவிட்டு ஞானநிலை வேண்டி நிற்பதினால் நம சிவாய என்பது யோக நெறி நிற்பவர்க்கும் பொருந்தும்

முறைமை எனவும் கொள்ளலாம். ஞான நெறியை மட்டும் விரும்பி நிற்கும் இந்த நன்மாணாக்கன் இனிச் சொல்லத் தகுந்தது. அருள் நாடி வர நிற்பது, இந்த சிவாயநம என்னும் மந்திரம் ஆகும். அதனைக் கூறும் முறைமை சிவாயநம எனக் கொள்ளுதல் அமையும் எனலாம்.

*சிவன் சக்தி சீவன் செறுமல மாயை*
*அவம் சேர்ந்த பாசமலம தகலச்*
*சிவன் சத்தி தன்னுடன் சீவன் சேர*
*அவம் சேர்ந்த பாசம் அணுகிலாவே*

எனத் திருமூலர் தரும் திருமந்திரச் செய்யுளையும் இவ்விடத்தில் நாம் உணர்ந்து தெளியத் தக்கதே.

## வெண்பா 42

### பயன் கூறுதல்

**அண்ணல் முதலா அழகு ஆர் எழுத்தைந்தும்**
**எண்ணில் இராப்பகல் அற்று இன்பத்தே - நண்ணி**
**அருளானது சிவத்தே ஆக்கும் அணுவை**
**இருளானது தீர இன்று**

## இதன் பொருள்

**அண்ணல் முதலா அழகு ஆர் எழுத்தைந்தும்** - சிவனை முதலாகவுடைய சிறப்புப் பொருந்திய சிவாய நம எனப்படும் திருவைந்தெழுத்தினையும், **எண்ணில்** - எப்போதும் சிந்தித்து நிற்பின், **இராப்பகல் அற்று** - இரவும் பகலும் என்பன இல்லாத அருள் நிலையில் பேரின்ப நிலைக்கு, **நண்ணி** - (நெருங்கி-கிட்டி) விரும்பும்படியாக, **அருளானது சிவத்தே ஆக்கும் அணுவை** - அவ்வருளானது இந்த உயிரினை சிவானந்த அநுபூதிக்குள் சேர்த்துவிடும், **இருளானது தீர இன்று** - அந்த நிலையில் ஆணவ மலப்பற்று நீங்கப் பெறும்.

## கருத்துரை

சிவனை முதலாக உடைய சிறப்புப் பொருந்திய சிவாய நம எனப்படும் திருவைந்தெழுத்தினையும் எப்போதுமே சிந்தித்து நிற்பின், இரவும்

பகலும் என்பன இல்லாத அருள் நிலையில் பேரின்ப நிலைக்கு விரும்பும் படியாக அவ்வருளானது இந்த உயிரை சிவானந்த அனுபூதிக்குள் சேர்த்துவிடும். அந்த நிலையில் ஆணவ மலப்பற்று நீங்கப் பெறும்.

## விரிவுரை

சிவாய நம என்று சிந்தித்திருப்போருக்கு வரும் நன்மைகளை இந்தச் செய்யுளிலே கூறி நிற்கின்றார் ஆசிரியர் திருவதிகை மனவாசகங் கடந்தார். அவ்வாறு சொல்லவேண்டிய முறைமையையும், அடையும் பயனையும் கூறவந்த ஆசிரியர் அண்ணல் முதலா எனக் கூறிவிடுவதால் சிகரத்தை முதலாகவுடைய சிவாய நம எனும் திருவைந்தெழுத்தினை இங்கு உணர்த்தினார். அந்தச் சி என்னும் சிவனைக் குறித்த எழுத்து சீரும் சிறப்பும் மிக்கன என்பதால் அழகு ஆர் ஐந்தெழுத்து என்றார் அழகு ஆர் எழுத்து ஐந்தும் எனச் செய்யுளில் கூறியிருத்தலை நோக்குக.

இனி இராப்பகல் அற்று இன்பத்தே நண்ணி எனக் கூறியிருக்கும் தொடருக்கான விரிவைக் காண்போம். திருவைந்தெழுத்தைச் சிந்தையிலே வைத்து இடையறாது நினைத்தும் ஓதியும் வருபவர்களுக்கு எல்லாப் பயனும் கிடைக்கும் என்பதை இங்கு எடுத்துக் காட்டவும், உயிர் கேவல நிலையிலும் சகல நிலையிலும் முத்தி நிலையிலும் நிற்கும் தன்மையை நிலைநிறுத்தவும் இவ்வாறு கூறினார். உயிர் கேவல நிலையிலே, கரணங்கள் கருவிகள் உணர்வுகள் எதுவும் இன்றி, மல மாயைகளினால் வரும் சேட்டைகள் ஏதுவுமின்றி நிற்கும். அவ்வேளை அது எந்தவிதமான அறிவையும் பெறமுடியாத இந்த நிலையில் இருள் நிலையில் இருக்கின்றது. இந்த நிலையில் ஆணவம் என்னும் இருள் ஆன்மாவைப் பற்றியிருப்பது என்பதை உணர்த்த இருள் என்றார். இதனை இரா நிலையெனலாம். இரவில் ஒளியெதுவும் இல்லாத கார்ணத்தால் பொருள்கள் தெரிவதில்லை. அதுபோலவே இருளாகிய ஆணவப் பற்றோடு கூடிய கேவல நிலையில் உயிரின் அறிவு அங்கு தொழிற்படாது. அறிவு என்பது வெளிச்சம் ஒளி எனவே ஒளியற்ற இடத்தில் இருப்பதால் அது நிற்பது இருள்நிலையாகும். இதுவே இரா எனப்படுகின்றது. அறிவுகள் அற்ற நிலை.

இனி ஆன்மா சகல நிலையில் விழிப்பு நிலையில், தூல நிலையில் ஆணவ மலத்தால் பிணிப்புண்டு அறியாமைக்கு உட்பட்டுத் தவிக்கும்.

இந்த நிலையில் இறைவன் (மாயை) உயிருக்கு உடலையும் கருவியையும் உலகத்தையும் அனுபவிப்பையும் கொடுத்தளிப்பன். ஆன்மா இவற்றோடு கலந்து அவற்றால் அறிவு பெறுகின்றது. உயிர் அந்நிலையில் தீயென நல்லன என்பன பற்றி ஓரளவு தெளிவு பெறுகின்றது. இந்நிலையில் தன்னைப் பற்றிய அறிவும் தனக்கொரு தலைவன் இறைவன் உண்டு என்பதனையும் அறிவு பூர்வமாகத் தெளிகின்றது. அத்தெளிவு நிலையில் அஞ்ஞான இருள் நீங்கப் பெற்று அறிவொளி பெற்று நிற்கும். அவ்வறிவு ஒளியே இங்கு பகல் என ஆசிரியரால் செய்யுளில் குறிக்கப்படுகின்றது. எனவே கேவல நிலை இருளாகவும் சகல நிலை பகலாகவும் உருவகம் செய்யப்பட்டு இங்கு காட்டப்படுகின்றது.

இனி, ஆசிரியர் இரண்டும் அற்ற நிலை ஒன்றையும் கூறி இன்பப் பெருவெளியைக் காட்டி அதனுள் புகும்படி விடுகின்றார். இந்தப் பெரு வெளிக்குச் செல்லும் வழி என்ன? அப்பெருவெளி என்ன என்பதைச் சிறிது நோக்குவோம்.

இருள் நிலை கேவலம் பகல்நிலை சகலம் இருளும் பகலும் அற்ற நிலை சுத்த நிலை. ஆன்மா இருளையும் ஒளியையும் கண்டு அதனுள் மாறி மாறிப் புகுந்து அறியாமையும் தெளிவையும் கொள்ளுமிடத்து, இறைவன் உயிருடன் உடனாய் இருந்து இருவினை ஒப்பினையும் மலபரிபாகத்தையும் பெற உதவுகின்றான். அவ்வாறு ஒழுகி நிற்கும் ஆன்மாவில் சத்தியின் அருள்வீழ்ச்சி எனப்படும் சத்திநிபாதம் வந்தடைகின்றது. இச்சத்திநிபாதம் தூய தன்மை உடையது. சுத்த நிலையுடையது. இத்தன்மையை அடைந்த ஆன்மா இறைவனை முன் நிறுத்தி அவன் பின்னே செல்லுகின்றது. ஆதாவது சிவனை முன்னிறுத்திய உயிர் பாசத்தையும் மலத்தையும் பின்னே தள்ளி சிவாய நம என்னும் மந்திரத்தை இடையறாது உச்சரிக்கின்றது. ஓதுகின்றது. அதனை முற்கூறியவாறு சிவாய நம என முறைப்படி ஓதிவர சிவம் அவ்வுயிரின் தகுதி கண்டு முத்தி நிலையுட்படுத்துகின்றது. சிவம் முன்னே செல்லவும், யாவும் பெருவெளியாகிய இடத்திலே இரவு பகல் என்பது கிடையாது. இங்கு எங்கும் ஒளியே பெருநிலையே. முத்தி அடைதல் என்பது சிவானந்தப் பெருநிலைக்குள் உயிர் வந்தடைகின்றது என்பதே அந்தப் பெருநிலையுள் இருந்து ஆனந்தத் தேனை அள்ளி அள்ளிப் பருகுகின்றது. ஆணவம் கன்மம் மாயை எனவரும் பாசங்களின்

தொல்லை முற்றாகவே விட்டு நீங்குகின்றது. இவ்வாறு அடைவதற்குச் செய்ய வேண்டியது யாதோ எனின் சிவாய நம என்னும் திருவைந்தெழுத்தை முறைப்படி இடையறாது ஓதி வருதலாகும். இதனையே ஆசிரியர் எண்ணில் இராப்பகல் அற்று இன்பத்தே நண்ணி அருளானது சிவத்தே ஆக்கும் அணுவை என்றார். மேலும் அணுவை தீர இன்று ஆக்கும் எனவும் கூறியிருத்தல் காண்க. ஏகாரம் பிரிநிலைக் கண் வந்தது. அணு -உயிர். இங்கு அணு என்பது ஆணவம் உயிரைப் பற்றி சிறுமைப் படுத்துவது ஆகையால் உயிர் அணுவெனப்பட்டது. மேலும் முத்தியில் உயிர் நுண்பொருளை அடைந்து அதனைத் துய்த்து இருத்தலாலும் உயிர் அணு எனப்பட்டது.

இன்பத்தையே தரும் எனவும் சிவத்தையே ஆக்கும் எனப் பிரிநிலை காண்க. சுத்த நிலை என்பது இராப் பகல் அற்ற இடமாம்.

ஐந்தும் என்பதனால் அதனைப் பற்றி ஓதுதலே முறைமை எனவும் கொள்ள வைத்தார். அழகு ஆர் - சீரும் சிறப்பும் மிக்குத் திகழும் எழுத்து ஐந்தும் எனக் கொள்க.

இதனால் சிவன் மந்திரமாகிய சிகரத்தை முதலாகவுடைய சிவாய நம என்னும் ஐந்தெழுத்தை எண்ணியும் ஓதியும் (முறைப்படி வருவோர்க்கு கேவலத்தில் திரும்பவும் செல்லாமையாகிய பயனும் சகல நிலையில் சிவனைச் சிந்திக்கும்படி வைக்கவரும், அறிவினைத் தரும் பயனும், அதற்கப்பால் சுத்த நிலை சிவானந்தப் பெரு அமுதைப் பருக வைக்கும் பயனையும் தரும் எனக் கூறினார். எந்நிலையிலும் சிவாய நம எனச் சிந்தித்திருப்போர்க்கு அவாயம் இல்லை எனக் கூறியிருத்தல் காணலாம். இதுவே இங்கு நாம் காணும் உணரும் உண்மை விளக்கமாகும். நாமும் இதனை உணர்ந்து குரு அருளியவாறு முறைப்படி ஓதி உய்தி அடைவோமாக.

## வெண்பா 43

### இதுவும் பயன்பாட்டினைக் கூறுவது

ஆதிமலம் இரண்டும் ஆதியாய் ஓதினால்
சேதியா மும்மலமும் தீர்வு ஆகா - போதம்
மதிப்பு அரிதாம் இன்பத்தே வாழலாம் மாறி
விதிப்படி ஓதுஅஞ்சு எழுத்துமே

## இதன் பொருள்

**ஆதிமலம் இரண்டும் ஆதியாய் ஓதினால்** - ஆதி யென வழங்கப்படும் திரோதான சத்தியையும் மலங்கள் என வழங்கப்படும். மும்மலங்களையும் அவற்றிற்குரிய எழுத்தாகிய நமவை முதலாகவுடைய நம சிவாய என்னும் திருவைந்தெழுத்தை முதலாகக் கொண்டு நாம் ஓதிவருவோமானால், **சேதியா மும்மலம்** - எதுவும் சிந்திக்கும்படி வருவதில்லை. இம்மலங்களும் உயிரை விட்டு நீங்காவாம், **தீர்வு ஆகா** - அதனாலே பிறப்பு இறப்பினிலே இருந்தும் விடுபடுவதற்கான பயனும் அங்கு வந்து சேர்வதில்லை, **போதம் மதிப்பரிதாம்** - ஆன்மா போதம் வந்து சேருமே அல்லாமல் அதற்கு அடுத்துவரும் சிவ போதத்தால் ஏற்படும் அறிவு, பேரின்பம் அரிதாகவே விளங்கி நிற்கும், **இன்பத்தே வாழலாம்** - இவ்வுலக இன்பத்தை அடைந்து சுகமாக வாழும் பயன் ஒன்றே அதனால் கிடைக்கப் பெறும், **மாறி** - எனவே மும்மல நீக்கத்திற்கும் பேரின்ப ஆக்கத்திற்கும் இட்டுச் செல்லுகின்ற சிவாய நம என்பதனை இடையறாது போற்றி, **விதிப்படி** - ஞான குருவிடம் தீக்கை முதலியன பெற்று அவர் விதிக்கும் முறைமையில், **ஓது அஞ்செழுத்துமே** - சிவாய நம என்னும் அச்சூக்கும பஞ்சாக்கரத்தை உச்சரிப்பாயாக.

## கருத்துரை

ஆதியென வழங்கப்படும் திரோதான சத்தியையும், மலங்கள் என வழங்கப்படும் ஆணவம் கன்மம் மாயை ஆகிய மும்மலங்களையும் அவற்றிற்குரிய எழுத்தாகிய நம வை முதலாவுடைய நம சிவாய என்னும் திருவைந்தெழுத்தை முதலாகக் கொண்டு நாம் ஓதி வருவோமாயின் எதுவும் சித்திக்க வருவதில்லை. மலங்கள் மூன்றும் உயிரை விட்டு நீங்காவாம். அதனாலே உயிர் பிறப்பு இறப்பினிலே இருந்து விடுபடுவதற்கான பயனும் அங்கு வந்து சேர்வதில்லை. ஆன்ம போதம் வந்து சேருமே அல்லாமல் அதற்கு அடுத்துவரும் சிவபோதத்தால் ஏற்படும் அறிவு பேரின்ப வீடு அரிதாகவே விளங்கி நிற்கும். இவ்வுலக இன்பத்தை அடைந்து சுகமாக வாழும் பயன் ஒன்றே அதனால் கிடைக்கப் பெறும். எனவே மும்மல நீக்கத்திற்கும் பேரின்ப ஆக்கத்திற்கும் எம்மை இட்டுச் செல்லுகின்ற சிவாய நம என்பதனை இடையறாது போற்றி வருவதோடு ஞானகுருவிடம் தீக்கை முதலியன

பெற்று, அவர் விதிக்கும் முறைமையில் சிவாய நம என்னும் சூக்கும பஞ்சாக்கரத்தை உச்சரிப்பாயாக.

## விரிவுரை

இச்செய்யுளில் நூலாசிரியர் திருவதிகை மனவாசகங் கடந்தார் முந்திய செய்யுளில் கூறிய செய்தியையே மீண்டும் எடுத்துரைக்கின்றார். முன்பு கூறிய செய்யுள் உடன் பாட்டு முறையிலும் பின் கூறிய செய்யுள் எதிர்மறையிலும் கூறியது காணலாம். ஒரு பொருளைச் செய் என்று சொல்வதிலும் அதனை இவ்வாறு செய்யாதே என எதிர்மறையில் கூறுவதில் உறுதியும் தெளிவும் உண்டாக வழி பிறக்கின்றது.

**எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை**
**செய்ந்நன்றி கொன்ற மகற்கு**

என ஐயன் திருவள்ளுவர் கூறிய செய்யுளில் எதிர்மறையில் கூறியதன் தாக்கத்தை இனிதே உணரலாம். அதுபோலவே இங்கும் எதிர்மறையில் கூறியமை உணர்க.

இது கூறியது கூறல் என்னும் குற்றம் உடையதோ எனின் அதனை அவ்வாறு கொள்ளுதல் தவறு. ஒரு பொருளையே மீண்டும் கூறுதல் இச்செய்யுளின் முன்பு கூறிய செய்தியை நன்கு நினைவில் கொள்ளும்படி வலியுறுத்துவதாகும். அதனைச் சத்திய வசனம் எனக் கொள்ளுதல் வேண்டும். அத் தன்மைத்தாகவே கொள்ளுதல் வேண்டும். அதுவே உள்ளபடி உரைத்தல் எனவாகும். அங்கு கூறிய முறை வேறு. இங்கு கூறிய முறை வேறு. இதனை ஊன்றி அவதானித்தால் புரியும். சேதியா எனவும் தீர்வு ஆகா எனவும் மதிப்பு அரிதாம் எனவும் விதிப்படி ஓதும் எனவும் மாறி ஓது எனவும் முன்பு கூறியவற்றினோடு இதன் பயன்பாடும் அடையும் சீரையும் அடைவதும் அடையாமையும் உண்டு. இதனை அடைய விரும்பின் இதனைச் செய்யலாம் எனக் கூறி நிற்பதோடு ஆணையையும் வைக்கின்றார். அதுவே செய்யுளில் மாறி விதிப்படி ஓது அஞ்சு எழுத்துமே என்றார். இங்கு அஞ்செழுத்து என்பது சூக்கும பஞ்சாக்கரமாகிய சிவாய நம என்னும் மந்திரத்தையேயாகும். முன்பு அருள் திரோதம் எனக் கூறிய ஆசிரியர் அச்சத்தியை இங்கு ஆதி

## இதன் பொருள்

**ஆதிமலம் இரண்டும் ஆதியாய் ஓதினால்** - ஆதி யென வழங்கப்படும் திரோதான சத்தியையும் மலங்கள் என வழங்கப்படும். மும்மலங்களையும் அவற்றிற்குரிய எழுத்தாகிய நமவை முதலாகவுடைய நம சிவாய என்னும் திருவைந்தெழுத்தை முதலாகக் கொண்டு நாம் ஓதிவருவோமானால், **சேதியா மும்மலம்** - எதுவும் சிந்திக்கும்படி வருவதில்லை. இம்மலங்களும் உயிரை விட்டு நீங்காவாம், **தீர்வு ஆகா** - அதனாலே பிறப்பு இறப்பினிலே இருந்தும் விடுபடுவதற்கான பயனும் அங்கு வந்து சேர்வதில்லை, **போதம் மதிப்பரிதாம்** - ஆன்மா போதம் வந்து சேருமே அல்லாமல் அதற்கு அடுத்துவரும் சிவ போதத்தால் ஏற்படும் அறிவு, பேரின்பம் அரிதாகவே விளங்கி நிற்கும், **இன்பத்தே வாழலாம்** - இவ்வுலக இன்பத்தை அடைந்து சுகமாக வாழும் பயன் ஒன்றே அதனால் கிடைக்கப் பெறும், **மாறி** - எனவே மும்மல நீக்கத்திற்கும் பேரின்ப ஆக்கத்திற்கும் இட்டுச் செல்லுகின்ற சிவாய நம என்பதனை இடையறாது போற்றி, **விதிப்படி** - ஞான குருவிடம் தீக்கை முதலியன பெற்று அவர் விதிக்கும் முறைமையில், **ஓது அஞ்செழுத்துமே** - சிவாய நம என்னும் அச்சூக்கும பஞ்சாக்கரத்தை உச்சரிப்பாயாக.

## கருத்துரை

ஆதியென வழங்கப்படும் திரோதான சத்தியையும், மலங்கள் என வழங்கப்படும் ஆணவம் கன்மம் மாயை ஆகிய மும்மலங்களையும் அவற்றிற்குரிய எழுத்தாகிய நம வை முதலாவுடைய நம சிவாய என்னும் திருவைந்தெழுத்தை முதலாகக் கொண்டு நாம் ஓதி வருவோமாயின் எதுவும் சித்திக்க வருவதில்லை. மலங்கள் மூன்றும் உயிரை விட்டு நீங்காவாம். அதனாலே உயிர் பிறப்பு இறப்பினிலே இருந்து விடுபடுவதற்கான பயனும் அங்கு வந்து சேர்வதில்லை. ஆன்ம போதம் வந்து சேருமே அல்லாமல் அதற்கு அடுத்துவரும் சிவபோதத்தால் ஏற்படும் அறிவு பேரின்ப வீடு அரிதாகவே விளங்கி நிற்கும். இவ்வுலக இன்பத்தை அடைந்து சுகமாக வாழும் பயன் ஒன்றே அதனால் கிடைக்கப் பெறும். எனவே மும்மல நீக்கத்திற்கும் பேரின்ப ஆக்கத்திற்கும் எம்மை இட்டுச் செல்லுகின்ற சிவாய நம என்பதனை இடையறாது போற்றி வருவதோடு ஞானகுருவிடம் தீக்கை முதலியன

பெற்று, அவர் விதிக்கும் முறைமையில் சிவாய நம என்னும் சூக்கும பஞ்சாக்கரத்தை உச்சரிப்பாயாக.

## விரிவுரை

இச்செய்யுளில் நூலாசிரியர் திருவதிகை மனவாசகங் கடந்தார் முந்திய செய்யுளில் கூறிய செய்தியையே மீண்டும் எடுத்துரைக்கின்றார். முன்பு கூறிய செய்யுள் உடன் பாட்டு முறையிலும் பின் கூறிய செய்யுள் எதிர்மறையிலும் கூறியது காணலாம். ஒரு பொருளைச் செய் என்று சொல்வதிலும் அதனை இவ்வாறு செய்யாதே என எதிர்மறையில் கூறுவதில் உறுதியும் தெளிவும் உண்டாக வழி பிறக்கின்றது.

**எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை**
**செய்ந்நன்றி கொன்ற மகற்கு**

என ஐயன் திருவள்ளுவர் கூறிய செய்யுளில் எதிர்மறையில் கூறியதன் தாக்கத்தை இனிதே உணரலாம். அதுபோலவே இங்கும் எதிர்மறையில் கூறியமை உணர்க.

இது கூறியது கூறல் என்னும் குற்றம் உடையதோ எனின் அதனை அவ்வாறு கொள்ளுதல் தவறு. ஒரு பொருளையே மீண்டும் கூறுதல் இச்செய்யுளின் முன்பு கூறிய செய்தியை நன்கு நினைவில் கொள்ளும்படி வலியுறுத்துவதாகும். அதனைச் சத்திய வசனம் எனக் கொள்ளுதல் வேண்டும். அத் தன்மைத்தாகவே கொள்ளுதல் வேண்டும். அதுவே உள்ளபடி உரைத்தல் எனவாகும். அங்கு கூறிய முறை வேறு. இங்கு கூறிய முறை வேறு. இதனை ஊன்றி அவதானித்தால் புரியும். சேதியா எனவும் தீர்வு ஆகா எனவும் மதிப்பு அரிதாம் எனவும் விதிப்படி ஓதும் எனவும் மாறி ஓது எனவும் முன்பு கூறியவற்றினோடு இதன் பயன்பாடும் அடையும் சீரையும் அடைவதும் அடையாமையும் உண்டு. இதனை அடைய விரும்பின் இதனைச் செய்யலாம் எனக் கூறி நிற்பதோடு ஆணையையும் வைக்கின்றார். அதுவே செய்யுளில் மாறி விதிப்படி ஓது அஞ்சு எழுத்துமே என்றார். இங்கு அஞ்செழுத்து என்பது சூக்கும பஞ்சாக்கரமாகிய சிவாய நம என்னும் மந்திரத்தையேயாகும். முன்பு அருள் திரோதம் எனக் கூறிய ஆசிரியர் அச்சத்தியை இங்கு ஆதி

என்றார். ஆதி பகவன் முதற்றே உலகு என்பதில் ஆதியைச் சத்தியெனக் கண்டோம். அவ்வாறே சத்தியே பல வடிவங்களில் நிற்பவள் என்பதனையும் இந்தத் திரோதான சத்தியும் அம்மையின் நவபேதத்தில் ஒரு பேதம் எனக் காட்டவுமே ஆதி என்றார். இங்கு ஆதி என்னும் சொல் இரண்டு இடத்தில் காட்டப்படுகின்றது. முதலாவதாக வருவது செய்யுளில் தொடக்கத்தில் வரும் ஆதியென்பது. திரோதான சத்தியை உணர்த்துவது. பின்னர் வரும் ஆதி என்பது தொடக்கத்தையுடைய முதல் எழுத்தாக உடைய நம என்பதனையும் உணர்த்தி நிற்கின்றது.

இனி ஆசிரியர் இன்பத்தே வாழலாம் எனத் தரும் தொடரைப் பற்றிய விளக்கத்தைப் பார்ப்போம். இன்பம் என்பது இரண்டு வகை. ஒன்று சிற்றின்பம் மற்றது பேரின்பம். உலகியலோடு ஒட்டி வாழும்போது இன்பம் அடைகின்றோம். அது சிற்றின்பம். அது அழிந்துபடும் இன்பம். நிலைபேறு இல்லாதது. இவ்வின்பத்தின் பின்னர் துன்பம் வரலாம். இதுவே சிற்றின்பம் என்பது. இதனை விடுத்து பேரின்பம் என்பதனை நோக்கும்போது இவ்வின்பம் இறைவனால் தரப்பட அடையும் இன்பம். அழியாத இன்பம். ஆற்றின்ப வெள்ளம் போன்றது. இடையிடு இன்றி எக்காலத்தும் குறையாது, அனுபவிக்கப்டும் தேனிப்பு. இதுவே இறை இன்பம் பேரின்பம். வாழ்க்கை யென்பது உயிருக்கு வேண்டிய ஒன்று உலகியலோடு வாழ்வதும் வாழ்க்கை. இறைவனோடு ஒட்டி நின்று அவன் திருவடிக்கீழ் இருந்து வாழ்வதும் வாழ்க்கை. இது உயிருக்குரிய இருவகையான வாழ்க்கை. அதுவே இங்கு வாழ்க்கை எனப்படுகின்றது. எனவே இருவகை வாழ்க்கையில் எது சிறந்தது என்பதனையும் இங்கே குறிப்பிடுகின்றார். அதனை போதம் மதிப்பு அரிதாம் என்றார். அதன் பெருமை சீர் சிறப்பு என்பன ஒருவரால் இவ்வளவு தான் என எடுத்து உரைக்க முடியாது. மதிப்பு அரிதாயது. அதன் அளவினை அறுதியிட்டு சொல்வதற்கு அரிதாகையால் அதனை மதிப்பு அரிதாம் என்றார். போதம் மதிப்பரிதாம் என்றார். எனவே போதம் மதிப்பரிதாம் இன்பத்தே வாழலாம் என்பதால் பேரின்ப வாழ்க்கையே பெரிதாம். மதிப்பரிதாம் எனக் கொண்டு, அதனை அடைய முயலுவாயாக. அம்முயற்சியின் போது வேண்டும் சாதகம் சாதனை எதுவோ என்பதை மாறி விதிப்படி ஓது அஞ்செழுத்துமே என்றார்.

இங்கு மாணாக்கர் இத்துணை காலமும் உலகியலோடு வாழ்ந்து இன்பம் கண்டவர். அது மும்மலங்களோடு சேர்ந்து வாழும் வாழ்வு. பயன் எதுவும் இல்லாத வாழ்வு. எனவே அந்த உலக இன்பத்தைத் தரும் பெற வைக்கும் நமசிவாய என்னும் மந்திரம் இனி உனக்கு வேண்டுவதில்லை. நீ தீதறவே செய்யவேண்டிய காரியம் நீர் சொல்லி வந்த தூல பஞ்சாக்கரத்தை மாற்றி சிவாய நம என்னும் சூக்கும பஞ்சாக்கரத்தை ஓது. அதனை முறைப்படி ஓது. குருவின் வார்த்தைப்படி உபதேசப்படியே அதனை உச்சரித்தல் சாலச் சிறந்தது. அதனை விதிப்படி ஓது என்றார். அதனோடு அதுவே வேதங்கள் விதித்த விதியாகும் என்பது காணக் கிடக்கின்றது. இதுவே அடைவையே உண்மை விளக்கமாகக் காட்டியது ஆகும். எனவே வேதங் கூறிய முறைமை இதுவே எனவும் பொருள் தருதல் நோக்குக.

**இம்மையே தரும் சோறும் கூறையும் ஏற்றலும்**
**இடர்க் கடலுமாம்**

எனவும்

**அம்மையே சிவலோகம் ஆள்வதற்கு**
**யாதும் ஐயுறவு இல்லையே**

எனவும் சுந்தரமூர்த்தி நாயனார்

மொழிந்த திருவாய் மொழி சத்திய வசனம்.

**நமவென்னு நாமத்தை நாவில் ஒடுக்கிச்**
**சிவமென்னு நாமத்தை சிந்தையுள் ஏற்றப்**
**பவமது தீரும் பரிசும தற்றால்**
**அவமது தீரும் அறும் பிறப் பன்றே.**

என்பது திருமந்திரம். சிந்தித்துத் தெளிக.

எனவே உயிர் உய்திபெறுவதற்கான வழி சிவாய நம என இடையறாது. இமைப்பொழுதும் நெஞ்சில் நீங்காது நினைந்து இருத்தலே ஆகும். அதன் வழி உண்மை விளக்கம் இதுவே எனக் கொண்டு ஆச்சாரியார் துணைகொண்டு உறுதியுடன் சிவாய நம என்னும் சூக்கும திருவைந்தெழுத்தை முறைப்படி ஓதி உய்தி பெறுவோமாக.

## வெண்பா 44

### திருவைந்தெழுத்தின் சிறப்பும் பயனும்

**அஞ்செழுத்தே ஆகமமும் அண்ணல் அருமறையும்**
**அஞ்செழுத்தே ஆதிபுராணம் அனைத்தும் - அஞ்செழுத்தே**
**ஆனந்த தாண்டவமும் ஆறாறுக் கப்பலாம்**
**மோனந்த மாமுத்தி யும்**

## இதன் பொருள்

**அஞ்செழுத்தே ஆகமும்** - சிவபரம் பொருளினால் அருளப் பெற்ற ஆகமங்கள் யாவும் திருவைந்தெழுத்தைப் பற்றினவாகும், **அண்ணல் அருமறையும் அஞ்செழுத்தே** - சிவபெருமானால் அருளப் பெற்ற வேதங்கள் யாவும் திருவைந்தெழுத்தைப் பற்றியன வாகும், **அஞ்செழுத்தே ஆதி புராணம் அனைத்தும்** - ஆதியிலே கூறியருளப் பெற்ற பதினெண் புராணங்களும், திருமுறைகளும், சாத்திரங்களும் ஆகிய இவை அனைத்தும் அஞ்செழுத்தைப் பற்றியனவாகும், **அஞ்செழுத்தே ஆனந்த தாண்டவமும்** - சிவபெருமானின் ஆனந்த நடனங்களும் அஞ்செழுத்தையே குறிப்பனவாகும், **ஆறு ஆறுக்கு அப்பாலாம்** - முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்து நிகழ்வதும் நிகழ்த்துவதும் திருவைந்தெழுத்துப் பற்றியனவாகும், **மோனந்த மாமுத்தி யும்** - அவ்வாறு யாவும் கடந்த நிலையில் அடைவிக்கின்ற பரமுத்தியும் திருவைந்தெழுத்தால் அமைவனவாகும்.

## கருத்துரை

சிவபரம் பெருளால் அருளப் பெற்ற ஆகமங்கள் யாவும் திருவைந்தெழுத்தைப் பற்றியனவாகும். அவரால் அருளப் பெற்ற நான்கு வேதங்களும் கூறும் பொருள் யாவும் திருவைந்தெழுத்தைப் பற்றியனவாகும். ஆதியிலே கூறி அருளப் பெற்ற பதிணெண் புராணங்களும் திருமுறைகளும் சாத்திரங்களும் ஆகிய இவை அனைத்தும் அஞ்செழுத்துப் பற்றியனவாகும். சிவ பெருமான் பயின்றாடுகின்ற திரு ஆனந்த நடனங்களும் அஞ்செழுத்துப் பற்றியே குறிப்பனவாகும். முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்து நிகழ்வதும் நிகழ்த்துவதும் திருவைந்தெழுத்து பற்றியனவாகும். அவ்வாறு யாவும்

கடந்த நிலையை அடைவிக்கின்ற பரமுத்தியும் திருவைந்தெழுத்தால் அமைவனவாகும்.

## விரிவுரை

மாணாக்கர் வேண்டிக் கொண்டபடி முறைப்படி அவ்வினாக் களுக்கும் வேண்டுதலுக்கும் அமைய விடைகளை அருளிக் கொண்டு வருகின்ற மெய்க்கண்டார், அடுத்து திருவைந்தெழுத்தினையும் அதன் மகிமை, சிறப்பு, பயன் என்பனவற்றையும் தொகுத்தும் வகுத்தும் கூறுகின்றார். மீண்டும் திருவைந்தெழுத்தின் பொருளும் அதன் பயனும் கூறி நிற்கும் ஆசிரியர் அதன் பெருமையை இங்கு விளக்குகின்றார்.

ஆதியிலே எம்பெருமானால் அருளப் பெற்றது நான்கு வேதங்கள். அதன் விளக்கமாக அமைந்தன ஆகமங்கள். வேதம் பொது ஆகமங்கள் சிறப்பு என்பர் சமயவாதிகள். இதனால் அதன் சிறப்புக் கருதி முதலில் ஆகமங்களைக் கூறினார். இந்த ஆகமங்கள் யாவும் கூறிவருகின்ற செய்திகளும் பொருள்களும் திருவைந்தெழுத்தைப் பற்றியனவே. சுழன்றும் ஏர் பின்னது உலகம் என்பதுபோல இந்த ஆகமங்கள் காமியன் ஞானம் என்பனவற்றை விரிவாக எடுத்துக் கூறி இருப்பினும், அதன் பொருள்கள் யாவும் திருவைந்தெழுத்தையும் அதன் சிறப்பையும் பயனையும் எடுத்துக் கூறுவதென்பது முடிந்த முடிபு. இதனையே கருத்தினில் கொண்ட நூலாசிரியர் அஞ்சு எழுத்தே ஆகமமும் என்றார். இங்கு உம்மையைச் சிறப்பு உம்மை எனக் கொண்டு மேலும் பலவுள என மொழிகின்றார். ஆகமத்தை சிறப்பு எனவும் திருமறைகளை பொது வென்றும் முன்னர் குறிப்பிட்டேன். இந்தத் திருமறைகன் நான்கு. அவை பொதுவாகப் பொருள்களைக் கூறிச் செல்வதால் வேதம் பொது எனவும் காண்க. மேலும் வேதம் எல்லாச் சமயத்தவர்களும் பொதுவாக ஏற்றுக் கொள்வதால் அது பொது எனப்பட்டது. எல்லாச் சமயத்தவர்களுக்கும் மூலமாக பொதுவாக ஏற்றுக் கொள்ளப்படும் நூலாக இருப்பது வேதங்கள். இந்த வேதங்களின் விரிநூலே ஆகமம் எனச் சொன்னேன். இந்த ஆகமங்கள் சிவாகமங்கள் என அழைக்கப் படுகின்றது. சைவ சித்தாந்தம் கூறும் முப்பொருள் உண்மைகளை விரித்தும் தொகுத்தும் கூறுவது ஆகமம். அது சிறப்பு ஆனது. இதனை மாணிக்கவாசக சுவாமிகள், ஆகமம் ஆகி நின்று அண்ணிப்பான் தாள் வாழ்க, என்றார்.

சிவன் உருவும் திருவாசியும் அவன் பஞ்ச கிருத்தியங்களும் இந்த ஐந்தெழுத்தால் அமைந்ததும் அழைக்கப்படுவதும் என முன்னர் கண்டோம். எனவே தான் அண்ணல் ஆகிய இறைவன் அருளிய திருமறையும் ஐந்தெழுத்து மந்திரத்தையே விதந்து கூறுகின்றது. திருமறை பகர்ந்த வாயர் எனச் சிவபெருமானின் சிறப்புக் கூறுவர். அத்திருமறையும் திருவைந்தெழுத்தே, அண்ணலும் ஆகமும் அருமறையும் எனக் கொள்ளுவது சாலவும் பொருத்தமானதே.

இனி இத்திருமறைகளாகிய வேதத்தை அருமறையென்றார். காரணம் அது யாவராலும் அறியப்படுவதன்று. பக்குவர்கள் தாம் அதை உணர்வர். அவை வழிவழியாக வாயுரைமூலம் வழங்கி வருவதால், மறைத்துப் பேசுப்படுவதால் அது அருமறை என்றாயிற்று.

இனி வேதங்கள், ஆகமங்கள் என்பன சைவ சித்தாந்தத்தின் இலக்கண வரம்புகளாக விளங்குகின்றன. இதற்கு இலக்கியமாக விளங்குவன புராணங்களாகும். இப்புராணங்களின் கால எல்லையும் அறியப் படாவாகையால் அவை ஆதிபுராணம் என்றார். அப்புராணங்கள் தமது கருப் பொருளாகக் கொண்டு தொடருவது சிவனைப் பற்றியும் அவனைக் குறித்த திருவைந்தெழுத்துப் பற்றியும் ஆகும். எனவே ஆதி புராணங்கள், திருவைந்தெழுத்தையே கருப்பொருளாகக் கொண் டுள்ளது என்பது இங்கு அறியப்படுகின்றது. இவ்வாறே புராணங்கள் திருமுறைகள் சாத்திரங்கள் என அறியப்படுவன அனைத்தும் திருவைந்தெழுத்துப் பற்றியனவே. நற்றுணையாவது நமசிவாயவே எனவும் சிவாய நம எனச் சிந்தித்திருப்போர்க்கு எனவும் வரும் இவைகள் திருவைந்தெழுத்துப் பற்றியனவேயாகும்.

இன்று பல்லோராலும் போற்றப்படும் 'திருக்குறளே எமது பொதுமறையெனக் காணப்படுகின்றது. அத்திருக்குறள் என்னும் நூல் அறம் பற்றியே கூறுவது. இவை இவை அறங்கள். யாவுமே அறத்தினால் வருவதே என்பதைக் கூறுகின்றது. அத்திருக்குறளிலே வரும் ஒரு குறள் பற்றித் தெளியின், அத்திருக்குறள் நூலே திருவைந்தெழுத்தையே சுற்றிப் பின்னப் பட்டது என்பது தெளியும்.

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு

என்பது அந்தக் குறள்.

இதற்கு விளக்கம் தந்த எனது சித்தாந்த ஆசிரியர் சித்தாந்த சரபம் திரு.கு.வைத்திய நாதன் ஐயா அவர்கள் தரும் விளக்கத்தை இங்கு காட்டுவது சாலப் பொருந்தும். அவர் திருக்குறளில் இதயம் எனக் கருதப் படும் பற்றுக பற்றற்றான் - 350 வது குறட்பா திருவைந்தெழுத்தை விளக்குவதால் சைவர்களின் வேதம் திருக்குறளே எனக் கொள் கின்றோம்.

| | | | | |
|---|---|---|---|---|
| பற்றற்றான் | - | சிவம் | - | சி |
| பற்று | - | அருள் | - | வ |
| பற்றுக | - | உயிர் | - | ய |
| அப்பற்று | - | மறைப்பாற்றல் | - | ந |
| பற்று (விடற்கு) | - | ஆணவம் | - | ம |

இரண்டாவது முறை பற்றுக என்பதன் நோக்கம் உலகியல் பற்றுடைய பக்குவமற்ற உயிர்களைக் குறித்ததாகும் (நம சிவாய) மெய்யுணர்தலுக்கு முன்பு நிகழ்வது.

திருக்குறளில் வரும் மெய்யுணர்தல் என்னும் அதிகாரத்திற்கு உரை எழுதிய பரிமேலழகர் பற்றற்றான் பற்றினை பற்றிய வழி உளது வீடு பேறு ஆவது ஆகலின் அக்காரண ஒற்றுமை பற்றி இந்த அதிகாரம். துறவின் பின் வைக்கப்பட்டது என்று கூறி இருக்கும் அருமை சிந்திக்கத் தக்கது என எடுத்துரைத்துள்ளார்.

இதனால் வேதங்களும் புராணங்களும் மற்றுமுள நூல்களும் திருவைந்தெழுத்தை நோக்கியே செய்யப்பட்டனவாம். அதனையே மையமாகக் கொண்டு ஆக்கப் பெற்றன என்பதையே அஞ்செழுத்தே ஆதி புராணம் அனைத்தும் என்றார். இம்மட்டோடு அமையாது தல புராணங்கள் மற்றும் சமய புராணங்கள் அனைத்தும் இறைவனைப் பற்றியதே ஆதலால் அவை அனைத்துமே பஞ்சாக்கரத்தைப் பற்றியே சுற்றியே நிற்பனவாம். அதன் பொருளையே உணர்த்துவனவாகும்.

இனி ஐந்தெழுத்தே ஆனந்த தாண்டவம் எனக் கூறுகின்றார். இதன் உண்மை விளக்கத்தை நாம் நடனச் சிறப்புகளையும் அவை உணர்த்தும் பொருளையும் முன்பு கூறினோம். அவையும் திருவைந்தெழுத்தையே முதன்மையாகக் கொண்டு அமைந்திருக்கின்றன என்பது தெளிந்தோம். அதனையே இங்கு நூலாசிரியர் அஞ்செழுத்தே ஆனந்த தாண்டவமும் என்றார். இந்தப் பஞ்சாக்கர எழுத்தை இடையறாது ஓதி வருவோமானால் அது எம்பெருமானை எம்மிடத்தே இட்டுவரும். அதனை உணர்ந்து உள்ள முறைப்படி ஓதிவர அது எம் உயிரிலே கலந்துவிடுகின்றது. அவ்வேளை உயிரோடு உயிராகக் கலந்திருக்கும் இறைவன் வந்து அருளி, பரமுத்தியை அளிப்பன். எனவே உயிருக்கு முத்தியைத் தரவல்லது இத்திருவைந்தெழுத்தே் என்பது விளங்கும். அவர்க்கு முத்தியை அளிக்கும். இதனையே ஆசிரியர் அறாறுக்கு அப்பாலாம் மோனந்த முத்தியும் என்றார். அறாறுக்கப்பால் என்பது 36 தத்துவங்களையும் கடந்து கருவி கரணம் என்பன விலக்கிய சுத்தநிலை தூய நிலை. அந்தத் தூய நிலையில் தூயவன் ஆகிய பெருமானின் திருவடியை அடைவது ஒரு பொருட்டல்லவே. அவரே அதனைத் தந்தளிப்பார். அந்தத் தந்தளிப்பையே எமக்குத் தரவல்லது, இந்த திருவைந்தெழுத்து என்பது அறியலாம். எனவே முத்தியைத் தரவல்ல திருவைந்தெழுத்தே எங்கள் சைவ சமயத்தின் முடிநிலை முடிந்த முடிபு. சைவ சமயத்தவர்கள் இத்திருவைந்தெழுத்தை எவ்வாறாயினும் ஓதி வரவேண்டும். அது எமக்கு அப்பாலுக்கு அப்பாலாம் மோனந்த முத்தியைத் தரும் என உண்மை விளக்கம் கண்டு அதன் வழி ஒழுகுவோமாக. இங்கு கூறிய செய்யுளின் கருத்தைத் தரும் திருவருட் பயன் குறள் ஒன்றும் எமக்கு விளக்கம் தருகின்றது.

**அருள் நூலும் ஆரணமும் அல்லாதும் ஐந்தின்**
**பொருள் நூல் தெரியப் புகின்**

இதனை விளக்க வேண்டியதில்லை பொருள் வெளிப்படையாகவே புரிகின்றது.

எனவே இங்கு கூறப்பட்ட கருத்துக்களால் சிவாய நம என்னும் திருவைந்தெழுத்தின் சிறப்பு சீர் பயனும் கண்டோம். நால்வர் பெருமக்களும் இதன் பெருமையைக் கண்டவர்கள். அதன் பயன்பாட்டினைக் கண்டவர்கள் அவர்கள் கூறும் அனைத்துத் திருமுறைகளும் இத்திருவைந்து எழுத்தையே முதன்மையாகக் காட்டி

நிற்கின்றன. நமச்சிவாயத் திருப்பதிகங்கள் இதன் உண்மையைப் புலப்படுத்துகின்றன. அவ்வெழுத்தை தினமும் ஓதுவருதல் வேண்டும். அதனை ஓதுவதற்கு நாம் என்ன தவம் செய்தோம் என மன மகிழ்வோடு விருப்போடு ஓதி வருவோம். அது எம்மை எப்பெருமான் இடம் இட்டு எடுத்துச் செவ்வதோடு சிவச் செல்வமாம் வீட்டுப் பேற்றினையே தந்து உதவும் எனக் கண்டு ஓதி உணர்ந்து பயன் பெறுவோம்.

## வெண்பா 45

### முத்தி நிலையில் அத்துவிதச் சிறப்புக் கூறுதல்

**முத்திதனை அடைந்தோர் முந்துபழம் போதுஅங்கி**
**வித்தகமாம் வீணை இவையிற்றின் - ஒத்த**
**இரதம் மணம் வெம்மை எழில் நாதம் போல**
**விரவுவர் என்றோதும் விதி**

### இதன் பொருள்

**முத்திதனை அடைந்தோர்** - இவ்வாறு சிவாய நம என ஓதி நின்றதன் பயனாக முத்தி நிலையை அடைந்தவர்கள், **முந்துபழம்** - பருவத்தே பழுத்த சிறந்த முந்து - முத்திய பழம், **போது** - மலர், **அங்கி** - நெருப்பு, **வித்தகமாம் வீணை** - இனிமை தரும் வீணை, **இவையிற்றின்** - இப்பொருள்களின் குணத்தன்மைகளான, **இரதம்** - சுவை, **மணம்** - வாசனை, **வெம்மை** - வெப்பம், சூடு, **எழில் நாதம்** - அற்புதமான இன்னிசை, **போல விரவுவர்** - போன்று கலந்து அத்துவிதமாக இறைவனுடன் பிரிப்பின்றி இருப்பர், **என்று ஓதும் விதி** - என வேதாகமங்கள் கூறி நிற்பன .

### கருத்துரை

இவ்வாறு சிவாய நம என ஓதி நின்றதன் பயனாக முத்திநிலையை அடைந்தவர்கள், பருவத்தே பழுத்த சிறந்த பழம், மலர், நெருப்பு, இனிமை தரும் வீணை ஆகிய இவற்றின் குணத்தன்மைகளான சுவை வாசனை வெப்பம்(சூடு) அற்புதமான இன்னிசை போன்று கலந்து அத்துவிதமாக இறைவனுடன் பிரிப்பின்றி வேறு தோன்றாதவாறு இருப்பர் என வேதாகமங்கள் கூறி நிற்பன.

## விரிவுரை

சகல நிலையில், இறைவன் உயிர்களுடன் அவையே தானேயாய் நின்று அருளுவன். அதாவது, அவன் உயிர்களோடு ஒன்றாய் வேறாய் உடனாய் நிற்கின்றான். இதனை இவ்வுண்மையை நூலாசிரியரின் குருவாகிய மெய்கண்டார் தனது நூலாகிய சிவஞான போதத்தில் கூறியுள்ளார். இவ்வாறு இறைவன் முத்திநிலையிலும் ஒன்றாய் உடனாய் வேறாய் நின்று அருளுகின்றான். இவ்வாறு முத்திநிலையில் அவனே தானேயாகிய அந்நெறி ஏகனாகி நிற்க எனப்படுகின்றது. சகல நிலையில் இறைவன் உயிரோடு மறைந்து நின்று அருளுகின்றான் என்பதும். முத்திநிலையில் வெளிப்பட்டு அருளுகின்றான் என்பதும் காணலாம். முத்திநிலையில் அவனே தானே ஆகிய அந்நெறி என்பது இறைவனும் உயிரும் ஒன்றாக இயைந்து பிரிப்பின்றி நிற்றல் ஆகிய முத்தி நெறியெனலாம். உயிரும் இறைவனும் வேறு வேறு பொருட்கள். தனிப் பொருட்கள். அவை பொருட்தன்மையால் இரண்டு. இவ்வாறாக இரண்டு என்னும் நிலை மாறி, இறைவனும் தானும் கலந்து ஒன்றாய் ஏகமாய் பிரிப்பின்றி நிற்கும் நிலையை அத்துவிதம் என சைவ சித்தாந்தம் எடுத்துரைக்கின்றது. இந்த நிலையையே, அத்துவித நிலையையே காட்டவரும் ஆசிரியர். அதற்காக ஒரு சில உவமைகளை எடுத்துக் காட்டி நிற்பது செய்யுளில் காண்போம். உயிர் தானும் இறைவனும் கலந்து நிற்கும் நிலையை சகல நிலையில் மறந்து விடுகின்றது. தெளிவு இன்றி நிற்கின்றது. அவ்வாறு மறைத்தலைச் செய்வது ஆணவ மலம். நான் என்னும் செருக்கினை முனைப்பாகக் கொண்டு, தற்போதம் கொண்டு விளங்கும் ஆன்மா, அவ்வாணவச் செருக்கினால் இறைவனுடன் கூடிய அத்துவித சம்பந்தத்தை உணர்வை அறிவதில்லை. அந்நிலையில் உயிர் மலங்களின் பின்னே செல்வதால், அப்பயனால் சிவத்துடன் கூடிய அத்துவித நிலையை உணர்வதில்லை.

சுத்த நிலையில், ஆணவ மலத்தின் திண்மை அற்ற நிலையில் இருவினைகள் மாயையின் தொழிற்பாடுகள் அற்ற நிலையில் உயிர் சிவனுக்கும் சத்திக்கும் பின்னாலே தான் நின்று கொண்டதால் அடைய வேண்டியன எல்லாவற்றையும் அடைந்தும் நீக்க வேண்டியன எல்லாவற்றையும் நீக்கியும், நீங்க வைத்தும் இறைவனின் உண்மை நிலையை உணர்ந்து தான் நிற்க வேண்டிய இயல்பு, இயற்கை இயல்பு இதுதான் என உணருகின்றது. இதனால் சிவத்தை முன்னிறுத்தித் தான்

பின் செல்வதால், அவனுடனேயே செல்வதும், அவ்விறைவடைய வியாபக அறிவினுள் அடங்குதலும் ஆகிய நிலைக்கு வருகின்றது. அப்போது தான் உயிருக்கு முத்தி என்னும் பெருநிலை வந்தடைகின்றது. உயிர் தான் யார் என்பதனையும் தன் தலைவன் இறைவன் என்பதனையும் உணர்ந்து அப்பெருமானுடன் ஒன்றாகி விடுகின்றது. அவ்வாறு ஒன்றுதலே அத்துவிதம் என்பது. பொருட்தன்மையால் இரண்டாயும் கலப்புத் தன்மையால் ஒன்றாயும் கலந்து பிரிப்பின்றி நிற்கின்றது. இந்தப் பிரிதல் இல்லாத நிலையையே, கலந்து இருக்கும் நிலையையே அத்துவிதம் எனக் காட்டவரும் ஆசிரியர் அதனை விளக்க பல உவமைகளை எடுத்துக்காட்டாக செய்யுளில் உரைத்துள்ளார். பழத்தினில் சுவையும், மலரினில் மணமும் நெருப்பினில் சூடும் வீணையில் இசையும் நிற்கும் நிலைகளை உணர்த்தி விளக்குகின்றார். அத்துவிதம் என்பது இறைவனோடு இயைந்து நிற்கும் ஒன்றாந்தன்மை. இந்த அத்துவிதம் என்பது ஓர் உணர்வு நிலை அனுபவிக்கும் நிலை. அந்த நிலையை இவ்வாறு இருந்தது என எடுத்துச் சொல்ல முடியாது. அது உணர்ந்து அனுபவிக்க வேண்டிய ஒன்று. அதனை எவ்வாறு விளக்கலாம் உணர்த்தலாம் என்னும் எண்ணம் கொண்ட ஆசிரியர் நாம் அன்றாடம் அடைகின்ற கலப்பினால் உணரும் வெளிப்பாட்டைக் கொண்டு சொல்கின்றார். இது இப்படித்தான் இருக்கும் எனக் காட்டி உணராத ஒரு சம்பந்தத்தை உவமை மூலம் விளக்குகின்றார்.

இங்கே காட்டப்பட்டுள்ள பழம், மலர், நெருப்பு, வீணை என்பன பொருட்கள். அவற்றின் குண இயல்புகள் சுவை, மணம், சுடுதல், இசை என்பன. இப்பொருள்கள் தமது குணத்தினின்றும் பிரித்தறியப் படுவதில்லை. பழமும் அதன் சுவையும் பிரித்தறிய முடியாது. மலரும் அதன் மணமும் பிரித்துக் காணமுடியாது. நெருப்பும், வெப்பமும் பிரித்தறிய முடியாது, வீணையும் நாதமும் பிரித்தறிய முடியாது. அது போலவே இறைவனும் உயிரும் கலந்து பிரிப்பின்றி நிற்கின்றனர். அதுவே அத்துவித நிலையாகும். இவ்வாறு இடைவிடாது ஒற்றுமைப்பட்டு நிற்கின்ற நிலையை உயிர் உணர்ந்து சிவன் நான் நானே சிவன் என்னும் பாவனையால் உணர்ந்து நின்றபின் உண்மையிலே சிவமாம் தன்மையைப் பெறுகின்றது. உயிர் அவ்வாறு கலந்து நிற்பினும் அது கடவுளாகி விடுவதில்லை. சிவமாம் தன்மையைப் பெறுகின்றது. அவன் எண்குணங்களையும் பெறுகின்றது. இறைவன் உயிர்களுக்குத் தன்னிலைமையை சாரத் தருபவன். இங்கு உயிர் இறைவனைச் சார்ந்து

அவனேயாகி நிற்கின்றது. உயிர் என்றும் இறைவனின் உடைமைப் பொருள். அடிமைப் பொருளே. ஆயினும் அது சிவனுடைய குணங் களைப் பெற்று நிற்கின்றது. வியாபகத்தில் அடங்கிய வியாப்பியமாக நிற்கின்றது. இந்த அடக்கமே உள்நிற்பதே கலந்து நிற்பதே அத்துவிதம் ஆகும். இதனைத் திருவாசகம் **சித்த மலம் அறுவித்தச் சிவமாக்கி எனைக ஆண்ட அத்தன்** என்கின்றது. இதுவே முத்திநிலையில் சிவமும் உயிரும் நிற்கும் நிலையாகும். இத்தெளிவை இறைவனும் உயிரும் பிரிபின்றி அத்துவிதமாய் நிற்பதை சிவஞான போதம் இரண்டாம் நூற்பாவில்

**பண்ணையும் ஓசையும் போலப் பழமதுவும்**
**உண்ணும் சுவையும் போல எங்குமாம் - அண்ணல்தாள்**
**அத்துவித மாதல் அருமறைகள் ஒன்றென்னாது**
**அத்துவிதம் என்றறையும் ஆங்கு**

எனக் காட்டப்பட்டுள்ளதை உணர்ந்து தெளிக. இறைவன் ஒன்றாக நிற்கின்றான். ஒற்றுமைப் பட்டு நிற்கின்றான் என்பதனை அத்துவித சம்பந்தம் எனலாம். உப்புக் கரைத்த நீரில் உப்பும் நீருமாகிய இருபொருள்கள் கலந்துள்ளன. ஆயினும் அவை இரண்டு என்னும் தன்மை புலப்படாமல் ஒன்றாய் நிற்கின்றது. இதுவே அத்துவிதம். இச்செய்யுளில் கூறிய கருத்துக்கள் திருமந்திரத்திலும் காணக் கூடியதாக இருக்கின்றது. அதிலே வரும் பாடல் இது

**காலினில் ஊறும் கரும்பினிற் கட்டியும்**
**பாலினுள் நெய்யும் பழத்துள் இரதமும்**
**பூவினுள் நாற்றமும் போலுளன் எம் இறை**
**காவலன் எங்கும் கலந்து நின்றானன்றே.**

இங்கே பழத்தினுள் இரதமும் பூவினுள் நாற்றமும் போலுளன் - கலந்து நின்றான் எனக் காட்டிய அத்துவித உண்மை தெளியலாம். இச்செய்யுள் மூலம் மனவாசகங்கங் கடந்தார் அத்துவிதம் என்பதன் உண்மைப் பொருளை உண்மைத் தன்மையை எமக்கு எடுத்துரைத்து உவமைகள் மூலம் விளக்கி எமக்கு உண்மை விளக்கம் தந்தார். இதுவே அத்துவிதச் சிறப்பு என உணர்ந்து ஓர்க.

## வெண்பா 46

### முத்தி நிலைக்கு மேலும் ஓர் எடுத்துக் காட்டு

**தத்துவங்கள் எல்லாம் சகசமாய் ஆன்மாவில்
பெத்தத்தில் நிற்கின்ற பெற்றிபோல் - முத்திதனில்
சித்தமலம் அற்றார் செறிந்திடுவர் என்று மறை
சத்தியமா ஓதியிடும் தான்**

## இதன் பொருள்

**தத்துவங்கள் எல்லாம்** - எல்லாத் தத்துவங்களும், **சகசமாய் ஆன்மாவில்** - உயிரினிடத்தே இயைபுடைத்தனவாய் இயல்பாய் தாம் வேறு உயிர் வேறு என்று பிரித்தறிய முடியாதபடி, **பெத்தத்தில் நிற்கின்ற பெற்றிபோல்** - பிறவிக்கு உட்பட்டு சகசமாய் நிற்கும் சகல நிலையில் உயிரே என்னும்படி ஒற்றுமைப்பட்டு நிற்கின்ற அத் தன்மையைப் போல, **முத்திதனில்** - முத்தியைப் பெறவிருக்கும் நிலையில், **சித்த மலம் அற்றார்** - தம்மைப் பிணித்து அதில் கட்டுண்டு கிடந்த உயிர்கள், அந்த மலத்தை நீக்கிச் சுத்த நிலை அடைந்தவர்கள், **செறிந்திடுவர்** - தாம் வேறு சிவம் வேறு எனப் பிரித்தறியாதபடி - பிரிப்பின்றி சிவமே என்று எண்ணும்படி கலந்து நிற்பர், **என்று மறை** - என்பதாக வேத ஆகமங்கள், **சத்தியமா ஓதியிடும் தான்** - உண்மை வார்த்தைகளாகக் கூறி நிற்கின்றன எடுத்து உரைக்கின்றன.

## கருத்துரை

எல்லாத் தத்துவங்களும் கருவிகளும், உயிரினிடத்தே இயைபுடைத் தனவாய் தாம் வேறு உயிர் வேறு என்று பிரித்தறிய முடியாதபடி பிறவிக்கு உட்பட்டு நிற்கும் சகல நிலையில், உயிரே என்னும்படி ஒற்றுமைப்பட்டு நிற்கின்றது. அத்தன்மைபோல் உயிர் முத்தியைப் பெறும் நிலையில் மலத்தின் பிணிப்பில் கட்டுண்டு கிடந்த உயிர் அந்த ஆணவ மலத்தை விட்டு நீக்கிச் சுத்த நிலையை அடைந்தோர் தாம் வேறு சிவம் வேறு எனப் பிரித்தறியாதபடி ஒன்றாம் தன்மைபெற்று பிரிப்பின்றி சிவமே என்று எண்ணும்படி கலந்து நிற்பர். இவ்வாறாக வேதங்களும் ஆகமங்களும் உண்மை வசனங்களாக வார்த்தைகளாக கூறி நிற்கின்றன எடுத்து உரைக்கின்றன.

## விரிவுரை

முன்னைய செய்யுளில் அத்துவிதமாக நிற்கும் இறைவனும் உயிரும் ஆகிய இவ்விரு உள்பொருள்கள் பற்றிய தன்மையைப் பழம், பூ, நெருப்பு, வீணை என்பனவற்றை உவமை காட்டி அவற்றோடு பிரிப்பின்றி நிற்கும் சுவை மணம் சூடு நாதம் என்பனவற்றையும் எடுத்துரைத்துக் காட்டினார். பழம் பூ என்பன குணிகள் என்றும் சுவை மணம் என்பன அவற்றின் குணங்கள் என்றும் கூறி அவை பிரிப்பில்லாத தன்மையை மட்டும் விளக்கினார். இதனால் நாம் இறைவனும் வீடு அடைவதற்கான உயிரும் குணியும் குணமும் என எண்ணிவிடல் ஆகாது. அவை கலப்பளவிற்கே ஆகும் என்பதை அறிய வேண்டும். அதனை விளக்க வந்ததே இப்பாடல். இதனை ஏகதேச உவமை என்பர். அதாவது அத்துவிதமாய் நிற்கும் இறையும் உயிரும் ஆகிய இவற்றின் குணி குணத் தன்மையை உவமைகள் கொண்டு விளக்கினார் என்பதே. அங்கு கூறப்பட்ட உவமைகளால் உவமானத்தில் ஒரு தன்மையே அவை பிரிப்பின்றி நிற்கும் நிலையே கூறப்பட்டது. ஏகதேசமாய் நிற்கும் நிலைமை கூறினார். அங்கு காட்டப் பட்ட கூறப் பெற்ற உவமைகள் யாவும் நாம் தினமும் கண்டும் சுவைத்தும் மணந்தும் கேட்டும் உணர்ந்தும் நிற்கும் எடுத்துக்காட்டுகள். அதாவது காட்சியாலும் அனுபவத்தாலும் உணர்ந்து நிற்கும் தன்மைகளை உடைய எடுத்துக்காட்டுகள். இதனாலே அவற்றின் உண்மையை பிரிப்பின்மையை எம்மால் புரிந்து கொள்ள முடிகின்றது. ஆயினும் இறைவனோடு உயிர் அத்துவிதமாய் நிற்பது உணர முடியாத ஒன்று. காட்சியாலும் அனுபவத்தினாலும் உணரமுடியாது நிற்பதினால் அந்த அத்துவிதமாக நிற்பது அறிய முடியாத நிலையே. எனவே அறிந்து உணர்ந்த பொருளை இங்கு எடுத்துக்காட்டி அதனோடு உயிரறிவு எவ்வாறு ஒன்றுபட்டு அடைகின்றது என்பதனை உவமை காட்டுகின்றார். அவ்வாறே இறைவனுடன் உயிர் பிரிப்பின்றி அத்துவிதமாக நிற்கும் நிலை நிலை நாட்டப்படுகின்றது. நிறுவப்படுகின்றது.

உணர்ந்த ஒரு பொருளை உவமை மூலமோ எடுத்துக் காட்டாகவோ காட்டி கூறி உணராத பொருளை உணர வைப்பதே இவ்வாசிரியர் நூலின் பல இடங்களிலும் கையாண்டு வரும் ஒரு உத்தியென்பது நூலின் புகுந்தோர் காண்பர். எம்மால் காணமுடியாத ஒன்றைக் கொண்டு காணாத இன்னொன்றை உவமை காட்டி நிறுவுவது என்பது மிகவும் இயலாத காரியம். ஆயினும் ஆசிரியர் இதுவரை நாம் கற்றறிந்து தெளிந்து

ஒப்புக் கொண்ட ஒரு பொருளினை உவமை காட்டி எடுத்துக் காட்டாகக் கூறி அது இது போல என விளக்கிய தன்மை நூல் கற்கும் மாணாக்கருக்கு உள்ளங்கை நெல்லிக்கனிபோல தெற்றென அதனை விளங்க முடிகின்றது. தத்துவங்கள் என்பன கருவிகள். அவை 36 எண்ணிக்கை கொண்ட தத்துவங்கள் இயல்பாகவே அறிவற்ற பொருட்கள். அவை தம்மையும் அறிவதில்லை. தம்மை சார்ந்திருக்கும் பொருளையும் அறிவதில்லை. காரணம் வெளிப்படை சடம் சடத்தை அறியாது. தன்னைச் சார்ந்திருக்கும் அறிவுப் பொருளையும் அறியாது. அது அறிவு அற்ற பொருள். ஆயினும் சகல நிலையில் உயிர் தன்னை உணர்வதில் தடைபட்டு இருந்தது. அப்போது அது ஆணவ மலத்தைப் பற்றி நின்று தன்னையே அதுவாகக் கண்டது. அது அதுவாக நின்றது. உயிர் அறிவுடைய பொருள். முன்பு உயிர் சதசத்து எனக் கண்டோம். உயிர் பொருள்களைச் சார்ந்து நிற்கும்போது அது அசத்துப் பொருளாக நிற்கின்றது. சத்துப் பொருளாகிய இறைவனைச் சார்ந்து நிற்கின்றபோது சத்துப்பொருளாக நிற்கின்றது. அதாவது உயிர் எந்த எந்த பொருளைச் சார்ந்து நிற்கின்றதோ அந்த அந்தப் பொருளின் வண்ணத்தைத் தன்மைத் தான் பெறுகின்றது. அது அந்த அந்தப் பொருளின் வண்ணத்தை தன்மையைத் தான் பெறுகின்றது. இதனை உயிர் சார்ந்ததன் வண்ணமாய் இருப்பது எனக் காணலாம்.

உயிர் சார்ந்ததன் வண்ணமாய் இருப்பதால் அது சகல நிலையில் தத்துவங்களைச் சார்ந்து தன் அறிவைப் பெறுகின்றது. அவ்வாறு அது சார்ந்து நிற்கும்போது அது அதுவாக நிற்கின்றது. அந்த நிலையில் உயிரும் தத்துவங்களும் தம்மில் வேற்றுமை இன்றி நிற்கின்றன. அந்நிலையில் உயிரும் தத்துவங்களும் பிரிப்பின்றி அது அதுவாக அத்துவிதமாக நிற்கின்றன.

இதனை ஒரு எடுத்துக் காட்டுமூலம் காண்போம். ஒருபடிகம் - கண்ணாடி - சார்ந்ததன் வண்ணமாய் இருத்தல் விளங்கியதே, எந்த ஒரு பொருளைப் படிகம் சாருகின்றதோ அதன் வண்ணமாக அப்படிகம் நிற்றலால் யாம் காணுகின்றது காட்சி அனுமானமாகும். அப்படிகம் பவளம் என்னும் மணியை அருகில் வைத்தபோது அப்பவளத்தின் நிறம் அனைத்தும் அப்படிகத்தில் தெறித்து செந்நிறமாக விளங்குகின்றது. இவ்வாறே நீல மணியை மாணிக்கத்தை அதன் முன்னே வைத்தால் அப்படிகம் நீல வண்ணம் பெற்று நிற்கும். இதுபோல சகல நிலையில்

நின்ற உயிர் அதனை விடுத்து சிவத்தை அறிந்து அதனைச் சாரும்போது அது சிவமாம் தன்மையைப் பெறுகின்றது.

இதுவே சார்ந்ததன் வண்ணமாய் இருத்தல் என்பதும் இறைவனைச் சிக்கெனப் பிடித்து, அவ்விறைவனே தனது தலைவன் என அத்துவிதமாக இறைவனுடன் ஒன்றிப் பிரிப்பின்றி நிற்றலே தனது இயல்பும் எனக் கண்ட உயிர் முத்திதனில் செறிந்திடுவர். அவ்வாறு செறிதல் உயிர் சித்தமலம் அற்று நிற்றல் வேண்டும். அவ்வாறு சித்தமலமாகிய பெத்தநிலையில் நின்ற உயிர் தன் செயற்கை நிலையில் நீங்கி விடுதல் பற்றிய முறைமையை முன்பு நாம் பல இடத்திலும் காட்டி விளக்கி இருக்கின்றோம். எனவே தான் பெற்றிபோல் செறிந்திடுவர் எனக் கூறியுள்ளார். அனுபவ ரீதியாக அறிந்த தத்துவமும் உயிரும் அடைந்த அத்துவிதத்தைக் காட்டி அறியாத அனுபவித்தறியாத உயிருக்கு இதுவே அத்துவிதமாக அறியும் முறையென விளக்கியமை போற்றுதற்குரியது.

மெய்கண்டார் காட்டிய வழியிலே நின்று அவர் கருத்தைத் தன் கருத்தில் கொண்ட முறைமையில் உவமைத் தானத்தை மாற்றிக் காட்டி விளக்கினார். அதன் விளக்கம் அனுபவ ரீதியாக அனுமான ரீதியாக விளங்குகின்றது. மாணிக்கவாசகர் காட்டிய சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனை ஆண்ட அச்செய்தியே இங்கு காண்கின்றோம். அந்த நிலையே இந்த நிலையென்பது நன்கு தெளிகின்றோம். இதனை மனதில் நன்கு பதியவைத்து நாமும் அந்த நிலைக்குள் செல்லலாம். அதுவே எமது உயிர்நிலை இயல்பு நிலை எனக் கொண்டு அப்பெருமானை வாழ்த்தி வணங்கி அவன் பணியில் நிற்போம்.

இங்கு கூறப்பட்ட கருத்து தனது ஆசிரியர் கருத்து என்பதும் இறைவன் அருளால் பெற்ற வேதாகமங்களில் வரையப்பட்ட உண்மைகள் என்பதையும் ஆசிரியர் சத்திய வார்த்தையாக மெய்ப் பொருளாகக் காட்டி நிற்க என்று மறை சத்தியமா ஓதியிடும் தான் என உண்மை விளக்கம் தருகின்றார். தான் எடுத்துக் காட்டி இங்கு கூறியிருப்பினும் யான் சொல்லிய இது சிவாகமக் கூற்றே எனக் கூறியிருத்தல் உள்ளதை உள்ளபடி உரைத்தல் என்பதன் வெளிப்பாடு என்பதனை உணர்க. தான் என்பது அசை, பெற்றி - தன்மை, அற்றார் - செறிந்திடுவர் என எதிர்மறையில் கூறியவாறும் காண்க.

## வெண்பா 47

### மீண்டும் அதனை வலியுறுத்தல்

**ஆதவன் தன் சந்நிதியில் அம்புலியின் ஆர்சோதி**
**பேதம் அற நிற்கின்ற பெற்றிபோல் - நாதாந்தத்து**
**அண்ணல்திரு வடியில் ஆன்மா அணைந்து இன்பக்**
**கண்ணில் அழுந்தியிடும் காண்**

## இதன் பொருள்

**ஆதவன் தன் சந்நிதியில்** - காலைப் பொழுதில் சூரியனுடைய ஒளிவிளக்கத்தின் முன்பாக, **அம்புலியின் ஆர் சோதி** - சுந்திரனில் வெளிப்பட்டு விளங்கும் ஒளிவிளக்கம் ஆனது, **பேதம் அற நிற்கின்ற பெற்றிபோல்** - தனது ஒளிவிளக்கம் அதனுள் அடங்கி நிற்கின்ற அந்தத் தன்மைபோல, **நாதாந்தத்து அண்ணல்** - நாத தத்துவத்தையும் கடந்து அதற்கு அப்பாலே நிற்கின்ற தலைவராகிய சிவபெருமானின், **திருவடியில்** - செல்வமிகும் திருப்பாதங்களில், **ஆன்மா அணைந்து** - உயிர் தன் முனைப்பற்று அடங்கி அணைந்து தோய்ந்து, **இன்பக் கண்ணில் அழுந்தியிடும்** - பேரின்பமாகிய பரமுத்தியில் கலந்து அழுந்தி அவனாகவே நிற்கும், **காண்** - தெரிந்து கொள்வாயாக.

## கருத்துரை

காலைப் பொழுதில் சூரியனுடைய ஒளிவிளக்கத்தின் முன்பாக சந்திரனில் இருந்து வெளிப்பட்டு விளங்கும் ஒளிவிளக்கம் அதனுள் அடங்கி நிற்கின்ற அந்தத் தன்மையைப் போல நாத தத்துவ எல்லையையும் கடந்து அதற்கு அப்பாலுக்கப்பாலாய் நிற்கின்ற தலைவராகிய சிவபெருமானின் செல்வமிகும் திருப்பாதங்களில் உயிரானது, தன் முனைப்பு அற்று அடங்கி அணைந்து தோய்ந்து பேரின்பமாகிய பரமுத்தியில் கலந்து கரைந்து அழுந்தி அவனாக நிற்கும். தெரிந்து கொள்வாயாக.

## விரிவுரை

இந்தச் செய்யுளிலும், அத்துவிதக் கலைப்பை மீண்டும் வலியுறுத்துவதோடு உயிர் எவ்வாறான நிலையில் இறைவனுடன்

இணைந்து அணைந்து தோய்ந்து நிற்கும் என்பதனையும், எத்தகைய இன்பத்தில் அது அழுந்தி நுகர்ந்திருக்கும் என்பதனையும் எடுத்து உரைக்கின்றார். இதனை ஒரு உவமான உவமேயத்தின் மூலமாக விளக்கம் தருகின்றார்.

அவர் எடுத்துக் கொண்ட உவமை சூரியன் சந்திரன் அவற்றின் ஒளிவிளக்கம் என்பனவே. சூரியனை இறைவனுக்கும் இறைவன் அருளை அதன் ஒளிக்கும் சந்திரனை உயிருக்கும் அதன் ஒளியை உயிரின் வியாப்பிய அறிவுக்கும் உவமை காட்டி நிற்கின்றார்.

அதிகாலையில் சூரியன் தோன்றுகின்றான். அவனுடைய ஒளிக் கிரணங்கள் எல்லா இடத்துக்கும் பரவுகின்றது. இருள் ஒடி ஒளிகின்றது. சந்திரன் இவ்விருள் காலத்தே சூரியன் தோன்றாத வேளையில் ஒளிவிளக்கம் தருகின்றான். மாலையில் சூரியன் மறைந்த வேளையில் அது மீண்டும் ஒளி பெற்று விளக்கம் தருகின்றது. சூரியன் தோன்றிய காலை வேளை தொடக்கம் மாலை நேரம் வரையும் இந்தச் சந்திரன் ஒளிபெற்றிருந்தும் அது அச்சூரிய ஒளியில் மழுங்கி மங்கி விடுகின்றது. அடங்கி நிற்கின்றது. காலையில் அவற்றின் ஒளி அச்சூரிய ஒளி விளக்கத்தால் எமது கண்ணுக்குத் தெரியாமல் நிற்கின்றது. அதன் ஒளி மறைந்து விடவில்லை. அது புலனாகத் தோன்றுவதில்லை. இதன் காரணம் என்ன? ஆம் சூரிய ஒளியின் வீச்சு அது, அதன் ஒளியை புலனாகதவாறு தன்னுள் அடக்கி விடுகின்றது. சூரிய ஒளியும் சந்திர ஒளியும் ஒன்றாகி விடுகின்றது. இரு ஒளிப் பொருளில் குறைந்த விளக்கம் உடைய பொருளின் ஒளி அடங்கி விடுகின்றது. உயிர் முத்திநிலையில் நல்லறிவு சிவஞானம் பெற்று அதனால் இறைவனை அறிந்து அவனையே கதியாகக் கொண்டும் தன்னியல்பு இறைவனுடன் கூடி அடங்கி அவன் திருவடியில் இருப்பதே முத்தியடைவதே எனவும் பரந்த அறிவு பெற்று இறைவனோடு ஒன்றி விடுகின்றது. இறைவனின் ஒளி சூரிய ஒளி போன்றது. அது இயல்பாகவே உள்ள ஒளி. சந்திரனின் ஒளி அவ்வாறு இல்லை. சூரியனிடத்தே இருந்து தான் ஒளியைப் பெறுகின்றது. அவ்வாறே உயிர் இறைவனிடமிருந்தே அறிவைப் பெறுகின்றது. சூரிய ஒளி சந்திர ஒளியைத் தன்னுள் அடக்கி விடுகின்றது. சிவனும் உயிரைத் தன்னுள் அடங்க வைத்து விடுகின்றான். அதாவது இறைவன் தனது வியாபக அறிவில் உயிரை அடக்கி விடுகின்றான். அந்நிலையில் இறைவனின் வியாபக அறிவில் உயிர் வியாப்பியமாக

அடங்கி விடுகின்றது. ஒன்றில் ஒன்று அடங்குவதால் இரண்டு என்னும் தன்மை தெரிவதில்லை. சூரியன் ஒளியில் சந்திரன் ஒளி அடங்கி விடுவதால் சந்திரனின் ஒளி நீங்கி விடுவதென்றோ அறிவற்றுப் போய் விடுவ தென்றோ கொள்ள முடியாது. சந்திர ஒளி சூரிய ஒளியில் அடங்கி விடுகின்றது என்பதே பொருளாகும். அவ்வாறே உயிரும் இறைவ னிடத்தே தன் முனைப்பு அற்று ஐக்கியமாகி விடுகின்றது. பொருள் இரண்டாயினும் கலப்புத் தன்மையால் பிரிப்பின்றி ஒன்றாய் நிற்கின்றது. ஒளியைப் பிரிக்கலாமா இல்லையே. ஆயினும் பொருள் மட்டும் இரண்டு ஆகி இருந்து அத்துவிதக் கலப்பால் சம்பந்தத்தால் ஒன்றாகி பிரிப்பின்றி இறைவனுடன் உயிர் அவனே தானே ஆகிய அந்நெறியில் ஏகனாகி விடுகின்றது. ஆதவன் சந்நிதியில் அம்புலியின் ஆர் சோதி பேதம் அற நிற்கின்ற பெற்றிபோல் இறைவனுடன் உயிர் பிரித்தறியாதவாறு அத்துவிதமாய் ஒன்றித்து நிற்கின்றது.

இவ்வாறே இந்த உயிர் இறைவனின் திருவடியில் அணைந்து கொள்ளுகின்றது. இறைவன் திருவடியில் அணைதல் என்பது அதன்கீழ் இருந்து பேரின்ப பெருநிலையாம் முத்தியில் தோய்ந்து இருத்தல் அல்லவா. எந்த நேரத்திலும் இடைவிடாது ஊறும் அமுத ஊற்றல்லவா. ஊற்றான உண்ணார் அமுதே உடையானே என்றார் மணிவாசகர். இறைவனின் உடைமைப் பொருள்தானே அந்தப் பேரின்பம் அமுதம். அதில் ஆழ்ந்து அழுந்தி விட்டால் ஆனந்தத் தேனை எப்போதும் பருகிக் கொள்ளலாம் அன்றோ. தினைத்தனைத் தேன் மறைந்து எப்போதும் ஆனந்தத் தேனை பேரின்பத் தேனை அனுபவிக்கலாம். ஆன்மா அழுந்தி நுகர்கின்றது. அறிகின்றது. அழுந்தி நிற்றல் என்பது அதில் ஊறி நிற்பதென்பது அந்த அழுத்தமே அத்துவிதச் சேர்க்கை கலப்பு பிரிப்பின்மை ஒன்றாதல் என்பனவாம். இதனை நீ உனது அனுபவ வாயிலாக கண்டுகொள் என்றார். தான் கண்ட அந்த அழுந்திய இன்ப நிலையை நீயும் அடையவேண்டும். அதிலே அழுந்தி உறைப்பாக இறுக்கிப் பிடித்திரு. அதனை சொல்லி விளக்கமுடியாததாகையால் அதனை நீ அனுபவித்தே அறியவேண்டும். அதனை ஒரு உயிர் இன்னொரு உயிருக்கு இப்படியென உணர்த்த முடியாது. பகிர்ந்தளிக்கவும் முடியாது. அதனாலே தான் நீயே கண்டு கொள் என்பதனைக் காண் என்னும் சொல் கொண்டு விளக்கினார். இதனை அனுபவித்த மாணிக்க வாசக சுவாமிகள் அந்தம் ஒன்றில்லா ஆனந்தம் பெற்றேன் என்பர். எனவே

இந்த அத்துவிதக் கலப்பால் உயிர் பெறும் பேரின்பம் அடைவதற்கரியது. அந்தம் ஒன்றில்லா ஆனந்தத் தேன் என்பது அத்துவிதக் கலப்பேயாம். இன்பமேயாகும். இறைவன் இன்பப் பொருளாய் இருக்கின்றான். அவனுக்கு அவ்வின்பத்தை அனுபவிக்க வேண்டியதில்லை. உயிரே தான் அனுபவிக்க வேண்டும். அதனைத் தந்தளிப்பவன் இறைவனே. உயிர் இறைவனின் அடிமைப்பொருள். தொழும்புப்பொருள். ஆகையால் அவன் பணியை தன் பணியாகச் சிவபணியாகக் கொண்டு ஒழுகிவரின் அவனே வந்து தலையளித்து ஆட்கொண்டு அந்த ஒப்பற்ற நிலைக்கு உயிரை உயர்த்தி விடுகின்றான். தனது பேருணர்வினுள் உயிரைப் புகுத்தி தனது இன்பப் பேற்றை நுகரும்படி செய்கின்றான்.

இவ்வாறு இறைவன் திருவடியில் அணைந்தோர் தன்மை எத்தனை பெருமை யானது. சூரியனின் ஒளியாகிய வியாபகத்தில் நிலாவிலே இருந்து வரும் ஒளி சூரியனிடத்தே அவ்வொளியையும் பெற்று நிற்கின்றது. நிலவும் தன்னொளி விளக்கமுறாதவாறு போல உயிரும் தன்னிலை எதுவும் இன்றி இறைவனைப் பற்றி அவனுடைய நினைப்பே எந்நேரத்திலும் கொண்டு அவன் திருவடியை அடைகின்றது. ஒன்றின் ஒன்று அடங்கி விடுவதால் வியாபகமான பொருளில் வியாப்பியம் அடங்கி விடுவதால் அப்பொருளிரண்டும் பிரித்தறிய வராது ஏகமாய் நிற்கும். இந்த ஏகமே அவனே தானேயாகிய எகம் எனத் தெளிய வேண்டும். அத்தெளிவு இறைவனும் தானும் இரண்டு பொருளாயினும் ஒன்றினுள் அடங்கி பிரித்தறியாத வண்ணம் நின்று கொள்ளுவதே அத்துவிதம். அதுவே முத்திநிலை திருவடிநிலை. காரைக்கால் அம்மையார் நின் திருவடிக் கீழ் இருக்க என்றார் என்னும் செய்தி இந்த அத்துவித கலப்பையே உணர்த்துவது தெளியலாம்.

## வெண்பா 48

### முத்தியின் இயல்பு

**சென்றிவன்தான் ஒன்றில் சிவபூரணம் சிதையும்**
**அன்று அவன்தான் ஒன்றும் எனில் அந்நியமாம் - இன்று இரண்டும்**
**அற்றநிலை ஏதென்னில் ஆதித்தன் அந்தன் விழிக்**
**குற்றமற நின்றது போல் கொள்**

## இதன் பொருள்

**சென்று இவன் தான் ஒன்றில்** - உயிர் தானாவே சென்று சிவனை அடைந்து ஒன்றித்து நிற்குமெனக் கொள்வோமானால், **சிவபூரணம் சிதையும்** - சிவபரம்பொருளின் பூரண நிறைவுத் தன்மை (வியாபகம்) என்னும் இறைக் குணம் சிவனுக்கு இல்லையெனக் கொள்ள வேண்டி வரும், **அன்று** - அவ்வாறு ஒன்றுதல் இல்லையே, **அவன்தான் ஒன்றுமெனில்** - சிவபெருமான் தானே சென்று உயிரை அடைந்து ஒன்றித்து நிற்பனெனக் கொள்ளின், **அன்னியமாம்** - சிவன் ஆன்மாவின் வேறாக நிற்கின்றான் எனக் கொள்ள நேரும், **இன்று** - அவ்வாறு ஒன்றுதலும் இல்லையே, **இரண்டும் அற்ற நிலை ஏது என்னில்** - உயிரும் இறைவனைச் சென்றடைவது இல்லை. இறைவனும் உயிரைச் சென்றடைவது இல்லை. அவ்வாறாயின் இவ்விரு அநாதிப் பொருளும் ஒன்றித்து நிற்கும் முறைமைதான் என்ன என்று பார்க்குமிடத்து, **ஆதித்தன்** - சூரியன், **அந்தன் விழி குற்றம் அற** - குருடனுடைய விழிப்பார்வையை மறைத்திருந்த படலம் நீங்கிய வழி, **நின்றது போல் கொள்** - அச்சூரிய ஒளியும் கண்ணொளியும் தம்முள் ஒன்றித்து நிற்றல் போன்றதே. அவ்வுயிரும் இவ்விறைவனும் பிரிப்பின்றி நிற்கும் இணைந்திருக்கும் முறைமை இதுவே ஆகும்.

## கருத்துரை

உயிர் தானகவே சென்று சிவனை அடைந்து ஒன்றித்து நிற்குமெனக் கொள்வோமானால் சிவபரம் பொருளின் பூரண நிறைவுத் தன்மை (வியாபகம்- சர்வஞ்ஞத்துவம்) என்னும் இறைக் குணம் சிவனுக்கு இல்லையெனக் கொள்ளவேண்டி வரும். அவ்வாறு ஒன்றுதல் கேவல சகல நிலைகளில் கூட இல்லை. சிவபெருமான் தானே சென்று உயிரை அடைந்து ஒன்றித்து நிற்பன் எனக் கொள்ளின் சிவன் ஆன்மாவுக்கு வேறாக நிற்கின்றான் எனக் கொள்ள நேரிடும். அவ்வாறு முத்தி நிலையில் ஒன்றுதலும் இல்லையே. உயிரும் இறைவனைச் சென்றடைவது இல்லை. இறைவனும் உயிரைச் சென்றடைவது இல்லை. அவ்வாறாயின் இவ்விரு அநாதிப் பொருளும் ஒன்றித்து நிற்கும் முறைமைதான் என்ன என்று பார்க்குமிடத்து குருடனுடைய விழிப் பார்வையை மறைத்திருந்த படலம் நீங்கிய வழி அச்சூரிய ஒளியும் கண்ணொளியும் தம்முள் ஒன்றித்து நிற்றல் போன்றதே. அவ்வுயிரும் இவ்விறைவனும் பிரிப்பின்றி நிற்கும் இணைந்திருக்கும் முறைமை, இதுவே ஆகும்.

**விரிவுரை**

நூலாசிரியர் மனவாசகங்கடந்தார் முத்தி நிலையில் ஆன்மா சிவனைப் போய் ஒன்றியதா அல்லது சிவன் ஆன்மாவைப் போய் ஒன்றியதா என்னும் வினாவை எழுப்பி அந்த ஐயப்பாடு நீக்குவதற்கு இந்தச் செய்யுளைத் தருகின்றார். ஆன்மா சிவத்தை அடைந்தது எனப் பலரும் வழக்காறாகக் கொள்கின்றனர். ஆன்மா தான் சென்று அடைந்தது எனக் கூறும் கூற்று உண்மையாயின் அது குற்றப் பாடாக அமையும் என பரபக்கச் சிந்தனையாளர் கூறுவர். ஆதலால் அவர்கள் கூறும் தடைகள் சரியென ஏற்றுக் கொள்ள முடியாது என்பதை மறுத்து அதற்கு விடையாக ஆன்மா அடைவதில்லை எனவும் இறைவனும் அவ்வாறு சென்றடையான் என்னும் கூற்றுக்களை மறுமொழியாக வைத்தார். மேலும் ஏன் அவ்வாறு அடைவது எனக் கொள்ளின் ஏற்படும் ஏதம் (குற்றம்) தான் என்ன என்பதை மிகத் தெளிவாகவும் நுணுக்கமாகவும் காட்டி விடுகின்றார். உயிர் சிவத்தைப் போய் அடைவது எனக் கூறுவோமாயின், சிற்றறிவுடைய உயிர் பேரறிமிக்க சிவத்தைச் சென்றடையும் என்னில் அங்கே இறைவனின் எண்குணங்களின் ஒன்றான பூரணத்துவம் - வியாபகம் - சர்வஞ்ஞுத்துவத்திற்கு இழுக்காய் முடியும் என்றார். ஏனெனில் சென்றடைவது என்பதால் அது இறைவனின் வியாபகத் தன்மைக்குள், அடங்காது, இல்லாது வெளியே இருந்துதான் சென்றடைந்தது எனக் கொள்ள வேண்டி வரும். இறைவனின் பூரண நிறைவில், வியாபகத்தில் உயிர்கள் உலகம் பிரபஞ்சம் ஏன் யாவும் அதனுள் அடக்கம். அதற்கு அப்பாலுக்கு அப்பாலும் எங்கும் எதிலும் இறைவன் கலந்தும், மேம்பட்டும் நிற்கின்றான். எனவே அவ்வாறு உயிர் இறைவனின் பூரணத்துவத்துள் இல்லையே என்னும் குணக்குற்றம், பிழைபாடு காணப்படுகின்றது.

இனி இறைவன் தான் உயிரோடு சென்று இயைவான் எனக் கொள்ளின் இறைவன் முன்பு உயிரை விட்டு விலகி இருந்தான். ஆன்மாவின் வேறாய் இருந்தான் எனவும் கொள்ள வேண்டி வரும். இறைவன் உயிரும் கேவல நிலையிலும் சரி சகல நிலையிலும் சரி. அதனோடு ஒன்றாய் உடனாய் நிற்பன் என்னும் அவையே தானேயாய் என்னும் இறை இயல்பு குன்றிவிடும். மேலும் அவ்வாறு இறைவன் கேவல சகல நிலைக்கு முன்பும் சரி பின்பும் சரி உயிருக்கு அவனால் ஆக வேண்டிய உதவி எதுவும் வேண்டப் படுவதாயில்லை. உயிரே முதன்மை

பெறுகின்றது எனக் கொள்ள வேண்டி வருமன்றோ. எனவே தான் இறைவனும் உயிரும் தம்முள் ஒன்றைஒன்று சென்றடைவதில்லை. இவை இந்த இரண்டு நிலைகளிலும் நடைபெறவில்லை என்பதை செய்யுளிலே காட்டி நிற்கின்றார்.

அன்று இறைவன் சிவன் சென்று ஒன்றின் சிவ பூரணம் சிதையும் எனவும் இன்று அவன் தான் ஒன்றும் எனில் அந்நியமாம் எனச் செய்யுளில் கூறி நிற்கின்றார். இங்கு அன்று என்பது கேவல சகல நிலையையும் இன்று என்பது முத்திநிலையையும் காட்டியவாறு பொருள் காண்க. செய்யுளின் பொருளுரையில் இவ்விருசொல்லையும் இன்மைப் பொருளின் வந்ததாகக் காட்டியுள்ளேன். அதுவும் பொருள் விளக்கத்தைத் தருவது காண்க.

மேலே காட்டிய இருநிலைகளிலும் இவற்றில் எதுவும் நடைபெறாது என்பதனைக் காட்ட அன்று எனவும் இன்று எனவும் அதற்கான நிலையையும் காட்டி ஐயம் நீங்க வழிகாணச் செய்கின்றார். இவ்விரண்டும் இல்லையெனில் அடைவது என்பதன் பொருள்தான் என்ன? எவ்வாறு இந்த இரண்டு பொருள்களும் ஒன்றையொன்று பொருந்திக் கலந்தது? என்னும் கேள்விகள் எழுவது இயல்பே. இந்தக் கேள்விகளுக்கான விடைகளை எடுத்துக் காட்டு உவமை மூலம் தெளிய வைக்கின்றார். அந்த விடை விளக்கும் விதி அனுமானப் பிரமாணமும் காட்சிப் பிரமாணமும் ஆகிய இரண்டு வகைகளாலும் கூறித் தெளிய வைக்கின்றார்.

இறைவனும் உயிர்களும் அநாதிப் பொருள்கள். அவை தோற்றமில் காலந்தொட்டு ஒன்றாந் தன்மையாக இருந்தன. ஆன்மாவின் உண்மை இயல்பு சிவத்தோடு எப்போதும் பிரிப்பின்றி ஒன்றியிருத்தல் ஆகும். அது அன்றுதொட்டு இருந்த உறவு. அது இடையிலே தோன்றிய செயற்கை உறவுகள் அல்ல. ஆன்மா சிவனை வந்து அடைந்தது, சென்றடைந்தது என்றால் அதனைப் புதிதாக வருவதாகக் கொள்ள வேண்டும். எனில், அது புதிகாக வந்து இயையும் தன்மை இல்லையே. முன்பே இருந்த நிலை அதுவே இயற்கை இயல்பு என்பதே பொருந்தும். இவை இரண்டும் எவ்வாறு சென்று இயையும் கலந்து நிற்கும் என்பதனை எடுத்துக்காட்டு மூலம் எடுத்து விளக்குகின்றார்.

சூரியன் இயல்பாகவே ஒளிப்பொருள். அது கண்களுக்கு ஒளி விளக்கம் அளிக்கும் போதுதான் கண்கள் காணுகின்றன. காணும் கண்ணுக்கு காட்டும் ஒளிபோல் என்பர் மெய்கண்டார். எப்பொருளையும் கண்கள் காணுகின்றன. முன்பு உயிர் அவ்வாறு காணாததற்குக் காரணம் ஆணவ மறைப்புத்தான். அதனைக் காட்டுவதற்குக் கண்ணுக்குக் குறை உடைத்தாயின் காணமுடியாது தானே. கண்ணுக்கு சூரிய ஒளி கிடைத்தாலே கண் காணுகின்றது. அவ்வாறு காணவிடாமல் தடுப்பது கண் ஒளியை மறைக்கும் படலமே. இந்தக் கண் படலம் உடைய குருடன் எப்பொருளையும் காணமாட்டான். அவனை காணவிடாமல் தடுப்பது மறைத்திருப்பது அப்படலமே. எனவே உயிர் அநாதியே பற்றி உள்ள உயிர் குற்றமாகிய ஆணவ மல மறைப்பு, இறைவனைக் காண விடாது உணர விடாது தடுக்கின்றது. கண் படலம் உடையோன் சூரியன் நேர் எதிரே நிற்பினும் அச்சூரியனையோ அதன் ஒளியையோ காண முடியாது நிற்கின்றான். கண்படலம் கொண்ட குருடன் காணாமல் இருப்பதற்குக் காரணம் சூரியனும் அன்று. அக்கண்ணும் அன்று. அவன் படலமே காரணம் என்பது காட்சி அளவையால் அறிகின்றோம். எனவே கண் முன்னும் பார்த்தறிந்தது பின்னும் பார்த்தறியும். இடையிலே வந்து சேர்ந்த படலமே கண்ணொளி விளக்கம் பெறாதபடி செய்தது. கண் ஒளியை மறைக்கும் படலத்தை அகற்றிவிட்டால் நீக்கிவிட்டால், அக்கண்ணுக்குச் சூரிய ஒளி அதாவது முன்பு ஒளி பெற்றுக் கொண்ட கண் இடையில் வந்த படலத்தால் ஒளிபெற முடியாமல் மறைக்கபட்டிருந்தது. படலம் நீங்கிய வழி முந்திய பார்வை நிலையை எய்தியது. பொருள்கள் வெளிப் படுகின்றன. பார்க்கும் நிலை எய்தியது. சூரிய ஒளியும் புலனாகின்றது. இங்கு ஆசிரியர் படலம் எனக் குறிப்பிட்டது ஆணவ மல மறைப்பையே. பாச உணர்வே. அப்பாச உணர்வால் பாசத்தால் கண்டுண்ட உயிர் அதன் உண்மை இயல்பான நிலை நீங்க இறைவனோடு ஒன்றித்து நிற்கும் நிலை மறைக்கப் படுகின்றது. அதனால் சூரியனும் அதன் ஒளியும் இல்லையென்றோ இறைவனின் பிரிப்பின்மை இல்லையென்றோ கொள்ள முடியாது. ஆதியில் இறைவனும் உயிரும் முன் இருந்த இயற்கை நிலைக்கு இயல்பு நிலைக்கு அவை வந்து சேர்ந்தன. கலந்தன. அத்துவிதமாயின எனக் கொள்க. இவ்வாறு கொள்ளுதல் தான் பொருத்தமான இயைபு எனக் காண்க.

பாச இயல்பு, செயற்கைத் தன்மை. அது நீக்கியதும் ஆணவம் அற்றதும் இறைவனைப் புதிதாகக் காணுகின்றோம் என்னும் நினைவு வருவதே யல்லாமல் அவ்வாறு இறைவன் புதிதாக வரவில்லை. அவன் சூரியன் தோற்றம் போல் என்றும் நிலைபேறாக நிற்கின்றான். உயிர்தனது உண்மை இயல்பை இயற்கை இயல்பைத் தெளிந்த பின்னர் தான் காணுகின்றது. முன்பு ஆதி கேவலத்தில் இருந்த நிலைக்கு உயிர் அணையும் போதும், இயல்பாக நின்றது. இடையில் வந்த ஆணவ மலச் சேர்க்கையால் தன்னையும் தன் இயல்பையும் இறைவனையும் இறை இயல்பையும் அறியாது அஞ்ஞானம் இறைஞானத்தால் நீங்கப்பெற்று முன்பிருந்த, தனது உண்மை இயல்பு இதுதான் எனக் கண்டு கொள்ளுகின்றது. தன் உண்மை இயல்பையும் இறைவனே தனக்குரிய பற்றுக்கோடு எனவும் உணர்ந்த உயிர் இறைவனோடு ஒன்றித்து விடுகின்றது. முத்தியென்பது உயிருக்குப் புதிதாய் வந்ததல்ல முன்னே இருந்தது. படலத்தால் மறைப்பு அடைந்தது. படலம் நீங்கிய வழி மீண்டும் அதே நிலை அடைந்தன. அந்தகன் விழி அந்தன் விழி என்றாயிற்று. செய்யுள் குறுக்கம் - அந்தகன் குருடன்.

இனிச் சிவபூரணம் சிதையும் என்பது சிவனின் குணங்களிலொன்றான பூரண நிறைவு சர்வ வியாபகத்தைக் குறித்தது. அது வந்து சேரும் எனக் கொள்ளின் அது குற்றம் என்பது. உயிர் இறைவன் உதவியின்றி சென்றடையுமாயின் இறைவனின் பூரண நிறைவு பிழைபடும்.

அந்நியம் என்பது இறைவன் உயிருடன் ஒன்றாய் உடனாய் நிற்பவன், பொருளால் வேறுபட்டவன் அல்லாது கலப்புத் தன்மையால் வேறுபட்டவன் அல்ல. இரண்டும் உள்பொருள். இரண்டும் அறிவுடைய பொருள். இங்கு இறைவன் சென்று சேர்ந்தான் எனில் பிரிந்தவன், வேறு நின்றவன் சேர்ந்தான் எனக் கொண்டு, இறைவனின் அவையே தானேயாய் என்னும் தன்மைக்குக் குற்றம் விளையும். அதனால் சிவம் வேறு ஆன்மா வேறு. அந்நியப் பொருள்கள் சேர்ந்தன என்பதாகும். அதுவும் குற்றமே. எனவே சிவன் இப்போதும் தான் வந்து சேர்ந்தான் சேர்கின்றான் எனப் பொருள் கொள்ள வேண்டிவருவதால் ஆன்மா வுக்கு சிவனின் உதவி முன்னும் பின்னும் தேவையில்லை எனவும் கொள்ள வேண்டிவரும். எனவே தான் சூரியனும் கண்ணொளியும் அந்தகனும் இங்கு எடுத்துக் காட்டாகத் தரப்பட்டன.

இவ்விளக்கத்தால் உயிரும் இறைவனும் சூரியனும் அதன் கண்ணொளியும் போல இயைந்திருந்தன. இயைந்தன என எடுத்துக் காட்டி விளக்கினார். இதனைச் செய்யுளில் ஆதித்தன் அந்தன் விழி குற்றமற நின்றது போல் கொள் என்றார்.

ஆணவப் படலம் கிழித்து அறிவில் காணரிய மெய்ஞ்ஞானம் காட்டி என்பர் குமரகுருபரர். அடைதல் என்பது உலக வழக்கே.

| | | |
|---|---|---|
| கண் | - | உயிர் |
| விழிக்குற்றம் | - | அஞ்ஞானம் |
| ஆதித்தன் | - | சிவன் |
| சூரிய ஒளி | - | திருவருள் |
| சிவபூரணம் | - | வியாபகம் முழுநிறைவு |

இங்கு இதன் கருத்தைக் கூறும் திருவருட் பயன் தரும் குறள் வெண்பாவை ஒப்புக் காண்க.

அவனை அகன்று எங்கும் இன்றாம் ஆங்கு அவனா எங்கும்
இவனை ஒழித்து உண்டாதல் இல் - என்பது

இக்கருத்தை முதல்நூலாகிய சிவஞான போதம்

அருக்கன் நேர் நிற்பினும் அல் இருளே காணார்க்கு
இருட்கண்ணே பாசத்தார்க்கு ஈசன் - அருள் கண்ணால்
பாசத்தை நீக்கும் பகல் அலர்த்தும் தாமரைபோல்
நேசத்தின் தன்னுணர்ந்தார் நேர்

என்பது

சூரியன் எல்லார் முன்பும் வேறுபாடின்றி ஒளியைப் பரப்பி நின்றாலும் காட்சியுடையார் மட்டுமே அதனைக் காணல் கூடும். இயலும். படலத்தால் மறைக்கப்பட்ட கண்ணுடையார்க்கு அது புலப்படுவதில்லை. எங்கும் இருளாகவே தோன்றும். அதுபோல முதல்வன் யாண்டும் நீக்கமற நிறைந்திருப்பினும் பெத்தர் முத்தர் ஆகிய எல்லோரிடத்திலும் ஒப்பக் கலந்து நிற்பினும் தவமுயற்சியுடைய முத்தர்க்கே அவன் புலப்படுவான். பாசப் பற்றில் அழுந்திய ஏனையோர்க்கு அவன் காணாப் பொருளே.

**தித்திக்கும் பால் தானும் கைக்கும் திருந்திடும்நாப்**
**பித்தத்தின் தான் தவிர்ந்த பின்**

என்பது திருவருட்பயன். இதன் கருத்தையும் உணர்ந்து தேர்க.

இச்செய்யுளால் இறைவனின் வியாபகத்தன்மை என்றும் ஒரு பெற்றியாகவே இருக்கும். அது பெத்தம் முத்தி ஆகிய இரு நிலைகளிலும் ஒருவாறாகவே இருக்கும். அது குறைபாடுடையது அல்ல. குற்றம் உயிருக்கே அன்றி இறைவனுக்கு அல்ல. உயிர் அநாதியே ஆணவத்தைப் பற்றிக் கொண்டது. அது நீங்க அது தன் உண்மை இயல்பு அறிவைப் பெறும். அறிவும் அறிவும் ஒன்றுமே அல்லாது இருளும் அறிவும் ஒன்றாவதில்லை. ஆதவனின் சந்நிதியில் அம்புலியின் ஆர் சோதி பேதம் அற நின்றது போல் உயிரும் இறைவனும் இணைந்து இயைந்து இருப்பர் என்பதே.

## வெண்பா 49

### முத்தி நிலையில் முப்பொருளும் எப்படி இருக்கும் என வினவல்

**வாக்கு மனம் இறந்த வான் கருணை யாளன் உருத்**
**தாக்கறவே நிற்கும் தனி முதல்வா - நீங்காப்**
**பதியினைப் போல் நித்தம் பசு பாசம் என்றாய்**
**கதியிடத்தே மூன்றினையும் காட்டு**

### இதன் பொருள்

**வாக்கு மனம் இறந்த வான் கருணையாளன் உரு** - உரையினுக்கும் (சொல்) மனத்தினிற்கும் (உணர்வு) எட்டமுடியாத பெருங்கருணையாளனாகிய சிவபெருமானது திருவடிவத்தைக் கொண்டு, **தாக்கறவே நிற்கும் தனி முதல்வா** - உலகியல் இன்பங்களால் சிறிதும் தொடக்குறாது நிற்கும் ஒப்பற்ற குருநாதனே, **நீங்காப் பதியினைப் போல்** - அநாதி தொட்டு உயிர்களை விட்டு நீங்காது அவற்றுடன் ஒன்றாய் வேறாய் உடனாய் நிற்கின்ற தலைவராகிய பெருமானைப் போன்று, **நித்தம் பசு பாசம் என்றாய்** - உயிரும் பாசப் பொருள்களும் (மலம்) (உள்பொருள்) நித்தியப் பொருள்கள் என எடுத்துரைத்தீர்,

கதியிடத்து மூன்றினையும் காட்டு - முத்தி நிலையில் இறை உயிர் தளை (பாசம்) என்பனவற்றின் நிலைமை தான் என்ன? எனது ஐயப்பாடு நீங்க எனக்கு எடுத்து உண்மையை விளக்கி அருள வேண்டினேன். கூறியருள்வீராக.

## கருத்துரை

உரையினுக்கும் (சொல்) மனத்திற்கும் (உணர்வு) எட்டமுடியாத பெரும் கருணையாளனாகிய சிவபெருமானின் திருக்கோலத்தைக் கொண்டு உலகியல் இன்பங்களால் சிறிதும் தொடக்குறாது நிற்கும் ஒப்பற்ற குரு நாதனே ! அநாதி தொட்டு உயிர்களை விட்டு நீங்காது அவற்றுடன் ஒன்றாய் வேறாய் உடனாய் நிற்கின்ற தலைவராகிய சிவபெருமானைப் போன்று, உயிரும் பாசப் பொருள்களும் (மலம்) நிலையான அழியாத பொருட்கள் என எடுத்துரைத்தீர். முத்தி நிலையில் இறைவன், உயிர், பாசப் பொருட்கள் (தளை) என்பனவற்றின் நிலைமை தான் என்ன? எனது ஐயப்பாடு நீங்கும்படி எனக்கு உண்மையை விளக்கி அருளும்படி வேண்டுகின்றேன். கூறியருள்வீராக.

## விரிவுரை

மனவாசகங் கடந்தார் தனது குருவையும் அவரின் அருட்சிறப்பையும் பெருமையையும் கூறி வருபவர். அவரை மனம் வாக்குக்கு எட்டாது அவைகளையும் கடந்து நிற்கும் பொருளாகிய இறைவனாகவே காண்கின்றார். குருவே சிவம் சிவமே குரு என்னும் சைவ சித்தாந்த உண்மை உறவைக் காட்டி நிற்கின்றார். இங்கு இறைவனின் பேரருள் பேரிரக்கம் ஆகிய தன்மையை வான் கருணையாளன் எனக் குறிப்பிடுகின்றார். இறைவன் கேவல நிலையிலும் சரி, சகல நிலையிலும் சரி அல்லது முத்தி நிலையிலாயினும் சரி தனது கருணையில் அருளினில் என்றும் குறைவு படாதவன். அவன் அவற்றையே முதலாகக் கொண்ட பொருள் எனக் காண்கின்றார். ஒன்றாய் வேறாய் உடனாய் நிற்கும் இறைவனின் கருணை பெருங்கருணையாதலால் வான் கருணை என்றார். இறைவன் கருணையால் எவையும் நல்குபவன். அவன் கருணைக்கு எல்லை இல்லை என்பதை வான் கருணை என்றார். இவ்வாறு கூறி நிற்பதால் ஆசிரியர் கேட்கும் கேள்விக்கான விடைகளை அளிக்கும் தன்மை பெரிதும் கொண்டவர் என்பது காணலாம். சகலத்தில் மறைந்து நின்றே அருளிய இறைவன் முத்திக் காலத்தில் வெளிப்பட்டு அருளுவன்.

ஆதலால் மனம் வாக்கு இறந்த பெருமான் என்றார். அந்த இறைவன் உயிர்களின் மீது என்றும் மாறாத பேரிரக்கம் பேரருள் பெருங்கருணை கொண்டவன். அவன் பெருங்கருணையாளன் ஆகையால் அவ்விறை அருள் ஒரே தன்மைத்தாய் உயிர்களுக்கு கிடைக்கும். அது அவன் உயிர்கள் மீது கொண்டிருக்கும் நேசத்தினால் வருவது. அந்தக் கருணை இங்கும் முத்திக் காலத்திலும் மாறுபாடின்றிக் கிடைக்கும் என்பதனை உள்ளுறையாகக் கொள்ள வைத்தார்.

இனி உரு என்ற சொல்லைத் தாங்கியதால் ஆன்மாவெனும் தன்மையோடு வாழ்ந்தவர் மெய்கண்ட தேவர். தான் செய்த தவமுயற்சியாலும் பூர்வ புண்ணிய பலத்தினாலும் சீவன் முத்தர் நிலையை அடைந்தவர். அவ்வாறு சீவன் முத்தராகிய நிலையில் அவரை அந்த மலங்கள். பாசம் வினை ஆணவம் என்பன தாக்காத வண்ணம் இருக்கின்றார். அவை அவரை வந்தடையா. அவை அவரை விட்டு அறவே நீக்கப் பெற்றன. இதனைச் செய்யுளிலே கதி - சிவகதி - பெற்ற ஆன்மாக்களை இம்மும்மலங்களும் தக்காவாம். இங்கு ஆசிரியர் முக்கியமாகக் குறிப்பிடுவது ஆணவ மலத்தையே ஆகும். இவ்வாறு அவை முத்தர்களைத் தாக்கா என்பதினால் அம்மலங்கள் அநாதியே ஆயினும் அவை அங்கும் உள எனக் கொள்ள வைத்தார்.

மேலும் இந்த ஆணவ மலமும் மாயா மலமும் அருள் வடிவாக நின்று உதவும் என்பதும் ஊன்றி அறியப் படுவதொன்றாகும். இறைவன் பூரணன் நிறைவானவன். அவன் அறிவுப் பொருள். அவ்வாறாயின் அவை அருளாய் நிற்கும் என எவ்வாறு கொள்ளலாம். கேவல நிலையிலும் சகல நிலையிலும் நிற்கும் மாயை ஆணவத்தின் தொழிற்பாட்டுக்கு உதவி அஞ்ஞானம் காட்டி நிற்கும். இங்கு உயிர்களுக்கு தனது செயற் பாட்டினால் யாவற்றையும் மறைத்து நிற்கின்றது. சிவஞானம் பெற்றவழி, ஒளிப்பொருளாய் அருள் மாயையாகி, சுத்தமாயை என்னும் பெயரோடு உயிரை முத்திக்கு இட்டுச் செல்லுகின்றது. வினையும் உயிரை விட்டு அகன்று விடுகின்றது. ஆணவமும் சிவஞானம் பெற்ற வழி, ஒளி முன்னே இருட் விலகி செல்லுமாறு போல விலகி தனது வீறு கெட்டு வறுத்த வித்துப்போல ஆகிவிடுகின்றது. இந்த நிலையில் ஆணவம் கூட தீயவை புரிந்தாரேனும் முருகவேள் திருமுன் உற்றால் தூயவராகி மேலைத் தொல் கதி அடைவர் என்பதால் தீயவை புரிந்து நின்ற ஆணவம் இறை அருளால் ஆன்மாவை முத்தி நிலைக்குச் செல்ல வழி காட்டுகின்றது. வழிவிட்டு

விலகிவிடுகின்றது. இதனால் ஆணவம் முற்றாக அழிந்துவிட்டது எனக் கொள்ளலாகாது. அது அநாதியே என்பதால் அது முத்தி நிலையிலும் நிற்கின்றது. ஆனால் தொழிற்படவில்லை என்பதே. ஞானத்தின் முன் அஞ்ஞானம் முனைந்து நிற்காது விலகும் என்பதே அல்லாது அது அழியவில்லை. இவ்வாறாக மலங்கள் தொழிற்படாமல் நித்தியப் பொருளாய் இருப்பதோடு ஆன்மா பேரின்பத்தை நன்கு அனுபவிக்குமாறு செய்கின்றது. ஆணவத்தின் தொழிற்பாட்டாலேயே உயிர் தன்னையும் இறைவனையும் உணர்ந்து கொள்ளுகின்றது. இறைவனை அறிய தெளிய உணர வைத்தது (இந்த ஆணவம் தான் என்பது அறிய முடிகின்றது). எனவே அநாதியே நித்தியப் பொருளாகிய ஆணவம், உயிரின் அறிவை உணரவைப்பதோடு இறை இன்பத்தையும் நாட வைக்கின்றது எனலாம்.

இனி தனி முதல்வா என்பதினால் அம்முத்தி நிலையிலும் இறைவன் தனிப் பொருள் என்பதும் தன் நேர் இல்லாத் தலைவன் என்பதும் காணலாம். இவ்வாறே உயிரும் தனிப் பொருள் என்பதும் உய்த்துணர முடிகின்றது.

ஆசிரியர் தனது குருவின் பெருமையை இங்கு கூறி நிற்பினும், அதனுள் இப்பொருள்கள் உள் பொருள் மறைவாகப் பொருள் தருவது உய்த்துணரப்பாலது. மேலும் குரு உருவாக நின்றார். அவர் மானிட வடிவங் கொண்டு வந்து தனக்கு தீக்கை செய்தும் உபதேசித்தும் தன்னை வளர்த்தொடுத்தார் என்பதையும் அறிய வைத்தார். தம்முதல் குருவுமாய் தவத்தினில் உணர என்பது இதுவே. மேலும் மனவாசகங்கடந்தாரோடு ஒரு சாலை மாணாக்கராக விளங்கியவரும் சந்தான குரவர்களில் இரண்டாவது குரவராக வைத்தெண்ணப் படுபவரும் ஆகிய அருணந்தி சிவாச்சாரியாரும் தனது குருவாகிய மெய்க்கண்டாரை போற்றும் பொருட்டு தனது நூலாகிய இருபா இருபஃதில் உருவென வந்து எடுத்தான் உற்று என்றார். இங்கும் இந்தப் பொருளை நாம் காண்கின்றோம். மெய்கண்டதேவர் திருவெண்ணெய் நல்லூர் திருத்தலத்தில் இருக்கும் சிவனே. அவரை அடைந்தால் அவர் தரும் அருட் சிறப்பைப் பெறலாம் என்பதை அருணந்தி சிவம் காட்டினார். இங்கு உரு என்பது இறைவனைக் குறித்த சொல்லோடு குருவையும் உணர்த்திற்று. குருவே சிவம் சிவமே குரு.

இனி இவ்வாறு கூறிய ஆசிரியர் தனது ஐயப்பாடுகளை கேள்விகளாகத் தொடுக்கின்றார். நீங்காப் பதியினைப் போல் நித்தம் பசு பாசம் என்றாய் கதியிடத்து மூன்றினையும் காட்டு என்றார். இக்கூற்றின் கருத்தைப் பொருளுரையில் கண்டு கொள்ளலாம்.

சைவ சித்தாந்த நூல்கள் பதி பசு பாசம் என்னும் மூன்று பொருள்களையும் அநாதியே உள்ள உள் பொருள்கள் எனவும் நித்திய பொருளெனவும் என்றும் நிலையான அழிவில்லாத பொருள்களெனவும் கூறும். அவ்வாறாயின் கேவல சகல நிலைகளில் இவற்றின் தன்மை உயிருக்கு அறிவு மயக்கம், பிறவித்துயர், என்பன போன்ற பிணிகளைத் தந்தன. ஒருபொருள் பொருளால் ஒன்றே ஆயினும் அதன் தொழிற்பாட்டால் பலவாகும். உயிரோடு நிற்கும் மலத்தைக் கூற வந்த சிவஞான சித்தியாரின் ஆசிரியர் அவ்வாணமலத்தின் இயல்பினைப் பின் வருமாறு கூறுவர்.

**ஒன்றதாய் அநேக சத்தி உடையதாய் உடனாய் ஆதி**
**அன்றதாய் ஆன்மாவின் தன் அறிவொடு தொழிலை ஆர்த்து**
**நின்று போத் திருத்துவத்தை நிகழ்த்திச் செம்பினில் களிம்பு ஏய்த்து**
**என்றும் அஞ்ஞானம் காட்டும் ஆணவம் இயைந்து நின்றே**

என்பது அச்செய்யுள், என்றும் அஞ்ஞானம் காட்டும் ஆணவம் இயைந்து நின்றே எனக் கூறியிருத்தலால் முத்தி நிலையிலும் இது உண்டு என்பது தெளிவாகின்றது.

அறிவுடைய பொருள்கள் அறிவில்லாத பொருள்களைச் சார்ந்து அறிவைப் பெறுகின்றது. நல்லாரைக் காண்பதுவும் நன்றே. எனவே சார்ந்ததன் வண்ணமாய் இறைஞானம் பெற்று நிற்கின்ற உயிரை அப்போதும் ஆணவ மலம் பற்றித் தான் இருந்தது. இருக்கின்றது. பின்னர் அனுபவமும் இறை அருளும் வருதலால் ஆணவம் இறைவனின் பேரொளியில் தன்னொளி மழுங்கி நிற்கின்றது. அதாவது தனது அஞ்ஞானம் காட்டும் தொழிற்பாட்டில் இருந்து விலகுகின்றது. அதன் நித்தியத் தன்மை அழிவதில்லை. எனவே இந்த மலம் உயிருக்குத் துன்பமாக நிற்றலை முத்தியில் துன்பம் இன்பத்திற்கு ஏற்றமாக விளங்குகின்றது. எனவே தான் ஆசிரியர் பதிபோல நித்தம் பசு பாசம் என்றாய் எனக் கூறினார். கதியிடத்தும் அவற்றின் தன்மையைக் கூறு என வேண்டியது இதனாலே தான்.

இனி இறைவனுடன் உயிர் ஒன்றாகி நின்று இறைவனாகிவிடும் என்பர் சிவசமவாதிகள். அவ்வாறு ஆன்மா நிற்பதில்லை. இறைவனுக்கு உயிர் என்றும் அடிமைப் பொருளே. பாசங்கள் மலங்கள் அவன் உடைமைப் பொருள்கள். ஆன்மா அவனது அடிமை என்பதை மாணிக்க வாசகர் தனது திருவாசகத்தில் பல இடங்களில் கூறி நிற்பர். அடியனேன் பெற்றவாறே எனவும் அன்பினால் அடியேன் ஆவியோடு ஆக்கை எனவும் கூறுவது காண்க. சுந்தர மூர்த்தி நாயனார் திருத்தொண்டர்களுக்கும் அடியவனாக தன்னைக் கருதி நிற்றலும். மீளா அடிமை உனக்கே ஆளாய் எனவும் கூறிய கூற்றுகள் இச்செய்தியை உறுதிப் படுத்துகின்றன. இதனால் உயிர் என்றும் சிவம் ஆவதில்லை. அத்தன்மையை ஓரளவு பெற்று நிற்கும் என்பதே. அது இறைவனுடன் பிரிப்பின்றி அத்துவிதமாக நின்று பேரின்பத்தைச் சுவைக்கின்றது. அனுபவிக்கின்றது எனலாம்.

இனி ஆன்மாவிடத்தில் மலங்கள் நீங்காதிருக்குமாயின் முத்திநிலை யிலும் உண்டு என்பது முன்னர் காண்டோம். எனினும் ஆணவம் நீங்கும் என்றே பலரும் கொள்வது எப்படிப் பொருந்தும். இவை யெல்லாம் ஐயப் பாடுகளாக நிற்பதினால் தான் ஆசிரியர் தன் குருநாதரைப் பார்த்துத் தனி முதல்வா கதியிடத்தும் மூன்றினையும் காட்டு என்றார். இக்கேள்வியால் பரபக்கத்தாரின் கொள்கைகள் கொண்டு வரப்படுகின்றன. அவை இனி வரும் செய்யுளில் உடைத்தெறியப் படுகின்றன.

இனி இறைவனும் உயிரும் பாசங்களும் வியாபகப் பொருள்கள் கடவுளுக்கு இவை வியாப்பியமாக இருக்கின்றன. ஆணவம் ஆன்மாவுடன் கூடி ஒன்றாய் அது அதுவாக நிற்றலால் அதன் வியாபகத் தன்மை ஆன்மாவிற்கு சமமாக இருக்கும். முத்திநிலையில் உயிர் ஆணவத்தின் வியாபகத்தை அறுத்து உடைத்து மேலோங்கி நிற்கின்றது இந்த நிலையில் இறைவன் வியாபகப் பொருள். உயிர் வியாப்பிய பொருள். ஆணவம் வியாத்திப் பொருளாக நிற்கின்றன. இதுவே முத்திநிலையில் இவை நிற்கும் நிலை.

இனி வியாபகத் தன்மை இல்லாது நிற்கும் பொருள்கள் எல்லாம் சுட்டி உணரும் பொருள்கள். அவன் அவள் அது என்னும் அவை எனும் சிவஞான போதத்தால் சுட்டியுணரும் பொருள்கள் எனக் காட்டினார். நிலையில்லாப் பொருள்கள் எனவும் காட்டப்படுகின்றது. அழியும் தன்மையெனவும் காட்டப்படுகின்றது. வியாபகப் பொருள்கள் சுட்டி

உணர முடியாதவை. அதனால் அவை அழிவில்லாதன. அழிவில்லையென்றால் அவை நித்தியப் பொருள்கள் தானே. அவ்வாறாயின் இம்மலங்கள் எவ்வாறு முத்திநிலையில் இருக்கும் என ஐயம் எழும். அதனையே மனவாசகங்கடந்தார் தனது கேள்வியை இவ்வாறு தொடுத்தார். இனி அதனை விளக்கமாகக் கூறுக என்பதனைக் காட்டு என்றார். இங்கு என்றாய் என்பதால் வேதங்களில் கூறப்பட்டன என்பதும் அதற்கு முரணான கருத்துகளும் ஆண்டு ஆண்டு கிடப்பதினாலும் ஐயம் வருவது இயல்பு. எனவே தான் காட்டு என்றார். உள்ளதை உள்ளபடி கூறு என்பது அது.

## வெண்பா 50

### முத்தியில் முப்பொருள்

**முத்திதனில் மூன்று முதலும் மொழியக் கேள்**
**சுத்த அனுபோகத்தைத் துய்த்தல் அணு - மெத்தவே**
**இன்பம் கொடுத்தல் இறை இத்தை விளைவித்தல் மலம்**
**அன்புடனே கண்டு கொள் அப்பா**

### இதன் பொருள்

**முத்திதனில்** - பரமுத்தியில், **மூன்று முதலும்** - இறை உயிர்தளை எனப்படும் மூன்று நித்தியப் பொருள்களும், **மொழியக்கேள்** - நிற்கின்ற முறைமையை, தன்மையைக் கூறுவேன் கேட்பாயாக, **சுத்த அனுபோகத்தைத் துய்த்தல் அணு** - தூய பேரின்பத்தை நுகர்ந்திருப்பது உயிர், **மெத்தவே இன்பம் கொடுத்தல் இறை** - வேண்டியவாறு உயிர் நுகர்வதற்கான பேரின்பத்தை இடையீடு இன்றி வழங்குபவன் இறைவன், **இத்தை விளைவித்தல் மலம்** - அப்பேரின்பத்தை விளைவித்தல் மலம், **அன்புடனே கண்டு கொள் அப்பா** - அன்பான மாணவனே, இவ்வுண்மையை ஒன்றிய மனத்துடன் கண்டு கொள்வாய்.

### கருத்துரை

பரமுத்தியில் இறை உயிர் தளை எனப்படும் மூன்று நித்தியப் பொருள்களும் நிற்கின்ற முறைமையைக் கூறுவேன் கேட்பாயாக. தூய பேரின்பத்தை நுகர்ந்திருப்பது உயிர். வேண்டியவாறு உயிர்

நுகர்வதற்கான பேரின்பத்தை இடையீடு இன்றி வழங்குபவன் இறைவன். அப்பேரின்பத்தை விளைவித்தல் மலம். அன்பான மாணவனே இவ்வுண்மையை ஒன்றிய மனத்துடன் தெரிந்து கொள்வாய்.

## விரிவுரை

முந்திய (49) செய்யுளில் மாணாக்கர் குருவை நோக்கி தன் ஐயத்தைப் போக்கி கோள்ள வேண்டிக் கொண்டார். அவ்வையத்தை நீக்கி அதற்கான உண்மை விடைகளைத் தருமாறு கேட்டார். குருவும் அதற்கான விடைகளைத் தருகின்றார். குருவானவர் முதலில் மாணவனைப் பார்த்து அன்புடனே கண்டு கொள் அப்பா என்றார். அவர் மறுமொழி பின்வருமாறு. முத்தியில் இம்மூன்றினதும் இயல்பைக் கூறுவேன் கேள் எனக் கூறி ஆன்மாவின் இயல்பை தன்மையை முதலில் எடுத்துரைக்கின்றார்.

ஆன்மா - உயிர் - உயிர் சார்ந்ததன் வண்ணமாய் நிற்றலே அதன் இயல்பு. கேவல நிலை சகல நிலை ஆகிய நிலைகளில் சார்ந்ததன் வண்ணமாய் நின்று ஆணவம் என்னும் மலத்துடன் ஒன்றாய் உடனாய் வேறாய் நின்று அதனால் வினைகளைப் புரிகின்றது. அந்த வினைகளை நுகர்ந்து அனுபவிக்கும்படியாக அது உடலை எடுக்கின்றது. அவ்வுடலை இறைவன் தனது சத்தியாகிய மாயை மூலம் அளிக்கின்றான். மாயையும் ஆணவ மலத்தின் தொழிற்பாட்டுக்கு உதவி நிற்கின்றது. இதனால் உயிர் நல்வினை தீவினை என்பனவற்றைப் புரிகின்றது. இந்த இரு வகை வினைகளையும் அனுபவிப்பதற்குத் தொடர் பிறவியில் நின்று உழலுகின்றது. இங்கு ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களும் உயிருக்கு இருளாக நின்று அதன் அறிவை மயக்கி தம் கட்டினுள் அடக்கி வைக்கின்றது. உயிரும் அவை தரும் அறிவு மயக்கத்தால் அவற்றைத் தானாகவே காணுகின்றது. தன் இயல்பு அதுதான் எனக் கொண்டு ஆணவத்தின் இருளில் மறைந்து அஞ்ஞான வழிப் படுகின்றது. ஆணவம் அவ்வுயிரைத் தன் அஞ்ஞானம் தரும் நிலையால் தன் வயத்துள் வைத்திருக்கின்றது. அப்போது அந்த மலங்கள் தமது தன்மையில் சிறிதும் குறைவின்றி நிற்கின்றது. உயிர் அதுவாகவே நிற்கின்றது. அம் மும்மலங்களும் வேகம் உடையனவாய், திண்ணியவாய் நின்று உயிருக்கு உலக நுகர்வைக் கொடுக்கின்றது. தனு, கரண, புவன, போகங்களைக் அனுபவிக்கும்போது திரோதான சத்தியும், தனது மறைப்பாற்றலால்

உயிரின் உண்மை இயல்பை அதனினின்றும் மறைத்து உலக இன்பத்தை நுகர் வைக்கின்றது. இவற்றை எல்லாம் தந்தளிப்பன் இறைவனே. ஆன்மா செய்யும் பாவ புண்ணியங்களுக்கான நுகர்வை அவனே அணைப்பன். அவனை அன்றி வேறு யார் அணைப்பர். பேராமல் ஊட்டும் பிரானின் நுகராரேல் யார் தான் அறிந்தணைப்பர் ஆங்கு என்பது சிவஞான போதம் காட்டும் உண்மை. எனவே அநாதியாக நின்ற உயிர் மலங்களோடு ஒன்றிப் புரியும் வினைகளை, அவ்வினைகளுக்கு ஈடாக இறைவன் உலக இன்பதுன்பங்களை நுகரச் செய்வன்.

இனி முத்திநிலைக்கு வருவோம். ஆன்மா சார்ந்ததன் வண்ணமாய் நின்று மலபரிபாகம் இருவினை ஒப்பு என்பனவற்றை அடைந்து சிவனைத் தனது பற்றுக் கோடாகப் பிடித்து நிற்கின்றது. மும்மலங்களின் பற்றை விடுமாறு போல அதுவிடுபடுவது ஆயினும், ஆன்மா பேரொளிப் பெருங்கருணை இறைவன் அருளால், அவற்றின் தன்மைகள் எதுவும் தாக்கப் படாமல் இறைவனைப் பற்றி நிற்கின்றது. சார்ந்ததன் வண்ணமாக உயிர் தனது இயல்பான தன்மை எதுவெனக் கண்டு இறைவனையே சிக்கெனப் பிடிக்கின்றது. பேரொளியைக் கண்ட மற்றைய கன்மவினை மலம் ஆதி என்பன இறைவனின் அருட்பிரகாசத்தால் அடங்கி விடுகின்றன. விலகி விடுகின்றன அருள் வழி நின்று அறிவைப் பெற்ற உயிர் மீண்டும் பழைய நிலைக்குச் செல்லாது. செல்லத் தலைப்படாது. இறைப் பற்றையே பற்றி நிற்கும்.

எனவே பாசப்பற்றை விட்டு நீங்குவதற்கான உபாயத்தைக் கண்ட உயிர் முந்திய நிலையில் அதனில் நின்றும் விலகி நிற்கின்றது. அதன் இயல்புக்குக் கேடு வருமாயின் ஆணவ மலப் பற்று இதனைப் பற்றுதற்கு அற்றம் பார்த்துக் கொண்டே தன் நிலை குன்றி நிற்கின்றது. அதாவது அதன் வீச்சு திண்மை என்பன நெகிழ்ச்சி அடைந்து வறுத்த வித்துப்போல அடங்கி நிற்கின்றது. அதுவே மலங்களின் தன்மையாயினும் அம்மலங்கள் உயிர் தற்போது நின்று பேரின்பத்தை நுகருவதற்கான உதவியைச் செய்கின்றது. உயிர் இறைவனால் அளிக்கப்படும் பேரின்பத்தை நுகர்வைத் தன்னை மறந்த நிலையில் அனுபவிக்கின்றது. இடையீடு இன்றி அனுபவிக்கின்றது. அத்துவிதமாக நின்று அனுபவிக்கின்றது. இக்காரணங்களினால் ஆன்மா இறைவன் திருவடியை அடைந்து பிரிப்பின்றி நிற்கின்றது. இதனால் நாம் உயிர் அநாதியேயுள்ள

நித்தியப் பொருள் எனவும், அது அழிவதில்லை, அது மலங்களின் வேறானது இறைவனின் வேறானது. அது தனிப்பொருள் எனவும் காண்கின்றோம். ஆசிரியர் முத்திநிலையில் சுத்த அனுபோகத்தைத் துய்த்தல் அணு என்று காட்டினார். எனவே உயிர் மாறுபடவில்லை. அழிந்து விடவும் இல்லை. இது ஏகான்மவாதிகள் கூறும் இரண்டன்மை இல்லை, ஒன்றே என்னும் வாதத்திற்கு இங்கே இடமில்லாமல் போய்விடுகின்றது.

உயிர் இறைவனின் அடிமையாக நிற்கின்றது. அவ்வடிமை நிலைக்கு கொண்டு போய் வைத்திருப்பது ஆணவ மலமே. உயிர் தனிப் பொருளாகவும் நிற்கின்றது. அதன் தொழிற்பாட்டிலே தான் வேறுபாடு காணப்படுகின்றது. மாற்றம் காணப்படுகின்றது. அருள் நிலையில் இருக்கும் இறை வியாபகத்துள் நிற்கின்ற ஆணவமலம் தானும் அருள் ஒளியால் தன் நிலை கெடுகின்றது. எனவே தான் இருள் நிலையில் இருந்து அறிவு மயக்கம் செய்த ஆணவஞ் ஆன்மா அருள் நிலையைக் கண்டதும் ஆன்மாவுக்கு பேரின்பத்தைத் துய்ப்பதற்கு உதவுகின்றது. வழி விட்டு விலகுகின்றது. ஆணவம் அடங்கி விடுகின்றது. ஆன்மா இறை இன்பத்தை அனுபவிக்கும் முத்திநிலையில் இறை நினைவை மறப்பின் ஆணவம் ஆன்மாவைப் பற்ற வாய்ப்புண்டு. எனவே ஆணவத்தின் செயற்பாடு மாறியதே அல்லாமல் அது அநாதியே தொட்டு இருப்பதினால் ஆன்மாவின் தொழிற்பாட்டில் குறைபாடு ஏற்படும். ஆயினும் அற்றம் பார்த்திருந்து பிடித்தல் கூடும். அதனால் உயிரும் மலமும் முத்திநிலையில் நிற்கும். முறைமை கண்டோம்.

உயிரைக் அணுவெனக் கொள்வது எனோவெனில் அது ஆணவத்தால் சிறுமைப் படுத்தப் படுவது நோக்கியே அணுவென்பது கட்டு நிலையில் இருக்கும் உயிர்க்கு வந்த பெயர். எனினும் முத்திநிலையிலும் அது அணுவென அழைக்கப்படுகின்றது. இதற்கான காரணம் பேரின்பத்தை நுகரும் வழி தன்னை மறந்து தலைவன் தாளையே தலைப்பட்டு சிறிதும் புலனாகாது நிற்கின்றது. அந்த சிறிதும் புலனாகாத நிலையே இங்கு அணு எனப்பட்டது. இங்கு உயிர்க்குப் புலனாகாத தன்மை உண்டு. பேரின்ப அணுவுக்கும் புலனாகாத தன்மை உண்டு. பேரின்ப நுகர்ச்சியில் தாடலை நிலையில் அதுவும் அணுநிலை எய்துகின்றது. அவ்வொற்றுமை நோக்கியே சுத்த அனுபோகத்தைத் துய்த்தல் அணு என்றார்.

இனி இறைவன் நிலையைக் காண்போம். இறைவன் எக்காலத்தும் எவ்விடத்தும் எந்நிலையிலும் பூரண நிறைவு கொண்ட பொருள். வியாபகப் பொருள். பேரின்பப் பொருள். எனவே தான் அநாதிப் பொருள் நித்தப் பொருள் என்பது சிவாகமம். அதன் தன்மை என்ன என்பதை ஆசிரியர் மெத்தவே இன்பம் கொடுத்தல் இறை என்றார். மலத்தைப் பற்றிக் கூறும்போது இத்தை விளைவித்தல் மலம் என்றார். பெத்தத்தில் இறை இன்பம் உயிரிடத்து விளைவதில்லை. தடுத்து நின்ற ஆணவமலம் அங்ஙனம் முத்தியில் செய்யமாட்டாமையால் தான் மடங்கி நின்று இறை இன்பம் உயிரிடத்தே விளைவதற்கு இவ்வகையில் காரணமாயிற்று. இதனைக் கருத்தில் கொண்டே இத்தை விளைவித்தல் மலம் என்று காட்டினார். மேலும் இதன் விளக்கத்தை விரிவுரையின் தொடக்கத்தில் விளக்கியுள்ளேன். இறைவனை ஆணவம் என்றும் பற்றுவதில்லை. இறைவன் இயல்பாகவே பாசங்களில் நீங்கியவன். சிவபெருமான் நடனத்தைக் காணும்போது ஆணவ மலம் ஆகிய முயலகனைத் தன் காலடியில் எழாதவாறு மிதித்து அழுத்திக் கொண்டிருத்தல் இதனை விளக்கும். எந்த நிலையிலும் ஆணவம் இறைவனை அடையாது. வெய்யோன் ஒளியில் விளங்கித் தோன்றாத விண்மீன்கள் போல் அவன் ஒளியில் அவை மறைந்து விடுகின்றன. இதனால் முத்தி நிலையில் இறைவனுக்கும் ஆணவத்திற்கும் உரிய தொடர்பின்மை தெற்றென விளங்கும். திருவருட்பயனில் அதன் ஆசிரியர் உபாதிசிவம்

**வாசி யருளி யவ்வை வாழ்விக்கும் மற்று அதுவே**
**ஆசில் உருவமுமாம் அங்கு** என்பர்

திருவருளே அம்முத்தி நிலையில் உயிருக்குக் குற்றமற்ற உடம்பாயும் நிற்கும். ஆணவ மலத்தில் உயிரைப் பிணைத்து நின்றது. ஆணவம் நீங்கிய முத்திநிலையில் முத்தரின் உடம்பு மலமாய் விளங்கிய தன்மை நீங்கித் திருவருள் விளக்கத்தால் அருளுடம்பாய் நிற்கும் என்பது புலனாகின்றது. அவ்வருளுடம்பே முத்தி நிலையில் இறையின்பத்தை நுகர்தற்குத் துணையாய் நிற்பது. இதனுடன் இந்நூல் ஆசிரியரின் இத்தை விளைவித்தல் மலம் என்பது நன்கு புரிகின்றது தானே.

இவ்வாற்றால் முத்திநிலையிலும் உயிர் தனியொரு முதலாக நிற்ப தென்பதும் முத்தியிலும் ஆணவ மலம் உண்டு என்பதும் அந்நிலையில் ஆணவத்தால் பந்தம் ஏற்படுவதில்லை என்பதும் கண்டோம்.

நித்தியப் பொருள் எனவும், அது அழிவதில்லை, அது மலங்களின் வேறானது இறைவனின் வேறானது. அது தனிப்பொருள் எனவும் காண்கின்றோம். ஆசிரியர் முத்திநிலையில் சுத்த அனுபோகத்தைத் துய்த்தல் அணு என்று காட்டினார். எனவே உயிர் மாறுபடவில்லை. அழிந்து விடவும் இல்லை. இது ஏகான்மவாதிகள் கூறும் இரண்டன்மை இல்லை, ஒன்றே என்னும் வாதத்திற்கு இங்கே இடமில்லாமல் போய்விடுகின்றது.

உயிர் இறைவனின் அடிமையாக நிற்கின்றது. அவ்வடிமை நிலைக்கு கொண்டு போய் வைத்திருப்பது ஆணவ மலமே. உயிர் தனிப் பொருளாகவும் நிற்கின்றது. அதன் தொழிற்பாட்டிலே தான் வேறுபாடு காணப்படுகின்றது. மாற்றம் காணப்படுகின்றது. அருள் நிலையில் இருக்கும் இறை வியாபகத்துள் நிற்கின்ற ஆணவமலம் தானும் அருள் ஒளியால் தன் நிலை கெடுகின்றது. எனவே தான் இருள் நிலையில் இருந்து அறிவு மயக்கம் செய்த ஆணவம் ஆன்மா அருள் நிலையைக் கண்டதும் ஆன்மாவுக்கு பேரின்பத்தைத் துய்ப்பதற்கு உதவுகின்றது. வழி விட்டு விலகுகின்றது. ஆணவம் அடங்கி விடுகின்றது. ஆன்மா இறை இன்பத்தை அனுபவிக்கும் முத்திநிலையில் இறை நினைவை மறப்பின் ஆணவம் ஆன்மாவைப் பற்ற வாய்ப்புண்டு. எனவே ஆணவத்தின் செயற்பாடு மாறியதே அல்லாமல் அது அநாதியே தொட்டு இருப்பதினால் ஆன்மாவின் தொழிற்பாட்டில் குறைபாடு ஏற்படும். ஆயினும் அற்றம் பார்த்திருந்து பிடித்தல் கூடும். அதனால் உயிரும் மலமும் முத்திநிலையில் நிற்கும். முறைமை கண்டோம்.

உயிரைக் அணுவெனக் கொள்வது எனோவெனில் அது ஆணவத்தால் சிறுமைப் படுத்தப் படுவது நோக்கியே அணுவென்பது கட்டு நிலையில் இருக்கும் உயிர்க்கு வந்த பெயர். எனினும் முத்திநிலையிலும் அது அணுவென அழைக்கப்படுகின்றது. இதற்கான காரணம் பேரின்பத்தை நுகரும் வழி தன்னை மறந்து தலைவன் தாளையே தலைப்பட்டு சிறிதும் புலனாகாது நிற்கின்றது. அந்த சிறிதும் புலனாகாத நிலையே இங்கு அணு எனப்பட்டது. இங்கு உயிர்க்குப் புலனாகாத தன்மை உண்டு. பேரின்ப அணுவுக்கும் புலனாகாத தன்மை உண்டு. பேரின்ப நுகர்ச்சியில் தாடலை நிலையில் அதுவும் அணுநிலை எய்துகின்றது. அவ்வொற்றுமை நோக்கியே சுத்த அனுபோகத்தைத் துய்த்தல் அணு என்றார்.

இனி இறைவன் நிலையைக் காண்போம். இறைவன் எக்காலத்தும் எவ்விடத்தும் எந்நிலையிலும் பூரண நிறைவு கொண்ட பொருள். வியாபகப் பொருள். பேரின்பப் பொருள். எனவே தான் அநாதிப் பொருள் நித்தப் பொருள் என்பது சிவாகமம். அதன் தன்மை என்ன என்பதை ஆசிரியர் மெத்தவே இன்பம் கொடுத்தல் இறை என்றார். மலத்தைப் பற்றிக் கூறும்போது இத்தை விளைவித்தல் மலம் என்றார். பெத்தத்தில் இறை இன்பம் உயிரிடத்து விளைவதில்லை. தடுத்து நின்ற ஆணவமலம் அங்ஙனம் முத்தியில் செய்யமாட்டாமையால் தான் மடங்கி நின்று இறை இன்பம் உயிரிடத்தே விளைவதற்கு இவ்வகையில் காரணமாயிற்று. இதனைக் கருத்தில் கொண்டே இத்தை விளைவித்தல் மலம் என்று காட்டினார். மேலும் இதன் விளக்கத்தை விரிவுரையின் தொடக்கத்தில் விளக்கியுள்ளேன். இறைவனை ஆணவம் என்றும் பற்றுவதில்லை. இறைவன் இயல்பாகவே பாசங்களில் நீங்கியவன். சிவபெருமான் நடனத்தைக் காணும்போது ஆணவ மலம் ஆகிய முயலகனைத் தன் காலடியில் எழாதவாறு மிதித்து அழுத்திக் கொண்டிருத்தல் இதனை விளக்கும். எந்த நிலையிலும் ஆணவம் இறைவனை அடையாது. வெய்யோன் ஒளியில் விளங்கித் தோன்றாத விண்மீன்கள் போல் அவன் ஒளியில் அவை மறைந்து விடுகின்றன. இதனால் முத்தி நிலையில் இறைவனுக்கும் ஆணவத்திற்கும் உரிய தொடர்பின்மை தெற்றென விளங்கும். திருவருட்பயனில் அதன் ஆசிரியர் உபாதிசிவம்

**வாசி யருளி யவ்வை வாழ்விக்கும் மற்று அதுவே**
**ஆசில் உருவமுமாம் அங்கு** என்பர்

திருவருளே அம்முத்தி நிலையில் உயிருக்குக் குற்றமற்ற உடம்பாயும் நிற்கும். ஆணவ மலத்தில் உயிரைப் பிணைத்து நின்றது. ஆணவம் நீங்கிய முத்திநிலையில் முத்தரின் உடம்பு மலமாய் விளங்கிய தன்மை நீங்கித் திருவருள் விளக்கத்தால் அருளுடம்பாய் நிற்கும் என்பது புலனாகின்றது. அவ்வருளுடம்பே முத்தி நிலையில் இறையின்பத்தை நுகர்தற்குத் துணையாய் நிற்பது. இதனுடன் இந்நூல் ஆசிரியரின் இத்தை விளைவித்தல் மலம் என்பது நன்கு புரிகின்றது தானே.

இவ்வாற்றால் முத்திநிலையிலும் உயிர் தனியொரு முதலாக நிற்ப தென்பதும் முத்தியிலும் ஆணவ மலம் உண்டு என்பதும் அந்நிலையில் ஆணவத்தால் பந்தம் ஏற்படுவதில்லை என்பதும் கண்டோம்.

| | | |
|---|---|---|
| மறைப்பாற்றலாய் நிற்பது | - | திரோதான சத்தி |
| ஒளியாற்றலாய் நிற்பது | - | சுத்தமாயை |
| ஆணவம் கெட்டு வறுத்த வித்துப் போல் நிற்றல் | - | கெடுதல் |
| கன்மம் நீங்குதல் அழிதல் | - | தடுத்தல், முடிவுறுதல் |

மாயை - அசுத்தமாயை - சுத்த மாயை - பரிக்கிரக சத்தி

மாயா மலம் - அழிவில்லாத மலம் - சிவ சத்தி

## வெண்பா 51

### முத்தி பெற வழி என்ன? என்பதைக் கூறுதல்

**அப்பா இம் முத்திக்கு அழியாத காரணம் தான்**
**செப்பாய் அருளாலே செப்பக் கேள் - ஒப்பில்**
**குருலிங்க வேடம் எனக் கூறில் இவை கொண்டார்**
**கருவொன்றி நில்லார்கள் காண்**

## இதன் பொருள்

அப்பா - ஐயனே குருநாதரே தந்தையே, **முத்திக்கு அழியாத காரணம் தான் செப்பாய் அருளாலே** - முத்தியை அடையும் நிலையிலும் அடைந்துவிட்ட நிலையிலும் அதனை எக்காலத்தும் அழியாது காக்கும் வழி முறைமை தான் என்ன? என்பதை அடியேனுக்கு நின் கருணை கூர்ந்து கூறுவாயாக, **செப்பக்கேள்** - அதனை, அதற்குரிய விடையினைக் கூறுவேன் கேட்பாயாக, **ஒப்பில் குரு இலிங்க வேடம் எனக் கூறில்** - தனக்கு ஒப்பு உயர்வு இல்லாத குரு, தாபர இலிங்கம், அடியார் கூட்டம் ஆகியவற்றை வழிபட்டு வருதலால் அது கைகூடும் என்பதே வேதாகம விதியாகும், **இவை கொண்டார்** - இவற்றிலே இறைவன் விளங்கித் தோன்றுவன். எனவே இவற்றின் வழிபாடுகளைத் தொடர்ந்து கடைப்பிடித்து மேற்கொள்பவர்கள் சிவஞானிகள், சீவன் முத்தர்கள் **கருவொன்றி நில்லார்கள்** - மீண்டும் இவ்வுலகில் பிறத்தற்கான கருவாக வந்து தோன்றமாட்டார்கள். பிறக்கமாட்டார்கள். அவர்கள் பிறப்பு நீங்கியவர்கள், **காண்** - என்பதனைத் தெரிந்து கொள்வாயாக.

## கருத்துரை

குருநாதரே என் தந்தையே ! முத்தியை அடையும் நிலையிலும் அடைந்து விட்ட நிலையிலும் அதனை எக்காலத்தும் அழியாது காக்கும் வழிமுறைமை தான் என்ன என்பதை அடியோனுக்கு நின் கருணை கூர்ந்து கூறி அருள்வீராக. மாணாக்கனே யான் சொல்லுவேன் நீ அதனை மன ஒருமையோடு கேட்பாயாக. தனக்கு ஒப்பு எதுவும் இல்லாத குருவையும் சிவலிங்கத்தையும் அடியார் கூட்டத்தையும், அவர்களின் திருவேடப் பொலிவையும் இடையறாது வழிபட்டு வருவதால் அது கைக்கூடும். இவ்வாறு வேதாகமங்கள் எடுத்துக் கூறுகின்றன. இந்த வழிபாடுகளிலே இறைவன் விளங்கித் தோன்றுவான். எனவே இவ்வழிபாடுகளை மேற்கொண்டு வருபவர்கள் சிவஞானிகள், சீவன் முத்தர்கள். அவர்கள் மீண்டும் இவ்வுலகில் பிறத்தற்கான கருவாக வந்து தோன்றமாட்டார்கள். பிறப்பென்னும் பேதமை அவர்க்கில்லை. அவர் அதனினின்றும் நீங்கியவர்கள் என்பதைத் தெரிந்து கொள்வாயாக.

## விரிவுரை

முந்திய செய்யுளில் இறை உயிர் தளை என்னும் நித்தியப் பொருள்களின் தன்மையையும் உயிர் சீவன் முத்தர்களாய் பரமுத்தர்களாய் நிற்கும் நிலையில் அவற்றின் உண்மைத் தன்மைதான் என்ன எனவரும் வினாக்களுக்கு விளக்கம் தந்தார். நாம் அந்தப் பேரின்ப நுகர்வில் அவை எவ்வாறு உதவுகின்றன. அவற்றின் இயல்புகள் அந்நிலையில் எவ்வாறு உள்ளது என்பனவற்றையெல்லாம் கண்டோம். அவ்வாறு விளக்குகின்ற வழி அணைந்தோர் ஒரோ வழி மலவாசனை காரணமாக சிக்கெனப் பிடித்து நிற்கும் நிலையில் ஏற்படும் நெகிழ்வு காரணமாக, ஆணவ மலம் அற்றம் பார்த்திருந்தும் அவருக்கு மீண்டும் பிறப்பில் புகுத்த வழி ஏற்படலாம் எனக் கண்டோம். இச்செய்யுளிலே மாணாக்கருக்கு மேலும் ஏற்படும் ஓர் ஐயத்தைக் காட்டி அதற்கு மறுமொழி என்னவென்பதையும், அதன் வருகையை எவ்வாறு தடுக்கலாம் என்பதையும், அதன் பெறுபேறு யாதென்பதையும் இச்செய்யுளில் காட்டுகின்றார்.

சிவத்தை அடைந்து சிக்கெனப் பிடித்திருக்கும் உயிர் பேரின்பம் நுகரும் உயிர் மீண்டும் பிறவிக்கு ஏதுவாகுமோ? அவ்வாறு அமையாதவாறு காப்பது எப்படி? அதற்குரிய வழிவகைகள் என்ன

என்பதைக் கருதுகின்றது. அவ்வாறு கருதி நிற்கும் போது, மாணவன் நரியும் வர உறியும் அறிந்திடுமோ என எண்ணி அத்தாக்கத்திற்குக் கழுவாய் உண்டோ என ஆசிரியரிடம் வினவுவதாகவும் அதற்கான விடையை ஞானாசிரியர் அளிப்பதாகவும் காட்டப்படுகின்றது. இதனைச் செய்யுளில் அப்பா இம்முத்திக்கு அழியாத காரணம் தான் செப்பாய் அருளாலே எனக் காட்டப்படுகின்றது. அதற்கு விடையாக ஞானாசிரியர் ஒப்பில் குரு லிங்க வேடம் இவ்வ எனக் கூறில் இவை கொண்டார் எனக் கூறுவதோடு அவ்வாறு அங்கு ஒழுகி வருவாராயின் கருவொன்றி நில்லார்கள் எனப் பயனும் கூறிவிடுகின்றார்.

இதனால் நாம் கண்டு கொண்ட உண்மை விளக்கம் யாதோ எனில், குருவைச் சிவனெனக் கருதி வழிபாடு செய்வதும், சிறப்பு நிலையில் திருக்கோயில்களிலே தாபிக்கப் பெற்று இருக்கும் சிவலிங்கத் திருமேனியை வழிபாடு செய்வதும் மால் அற நேயம் மிகுந்த அணைந்தோர்களையும், அவர்கள் கொண்டிருக்கும் திருவேடப் பொலிவையும் சிவமே எனக் கண்டு தொழுது வரவேண்டும் என்பதனையும் நாம் உணருகின்றோம்.

இந்தச் செய்தியை சிவஞான சித்தியார்

**தாபர சங்கமங்கள் எனும் இரண்டு உருவில் நின்று**
**பராபன் பூசை கொண்டு மன்னுயிர்க்கு அருளை வைப்பன்**

எனக் கூறுவதும் நோக்கலாம். இங்கு தாபரம் என்பது தாபிக்கப் பெற்ற சிவலிங்கத் திருமேனியையும் சங்கமம் புடைபெயர்ந்து செல்லுகின்ற குருவையும் மெய்யடியார்களையும் குறித்து நிற்பது காண்க. இச்செய்யுளிலே அங்கு இரண்டு எனச் சொல்வது கூறிய யாவற்றையும் அடக்கியவறாம் எனத் தெளிக.

இந்நூலாசிரியரின் குருவாக விளங்கும் மெய்க்கண்டார் தனது சிவஞான போதம் என்னும் நூலிலே

**செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா**
**அம்மலங் கழீஇ அன்பரோடு மரீஇ**
**மாலற நேயம் மலிந்தவர் வேடமும்**
**ஆலயம் தானும் அரனெனத் தொழுமே**

எனக் கூறியுள்ளார்.

இச்செய்யுளில் அம்மலங்கழீஇ என்னும் சொற்றொடர் மேலதிக மாகக் காணப்படுகின்றது. இங்கு நூலாசிரியர் மூன்று மலங்களையும் உயிர் விட்டெறிந்த நீக்கிய செய்தியை முன் கூறினார். எனவே அதன் விளக்கம் தேவையில்லை. இதனைத் தொடர்ந்து அன்பரோடு மரீஇ என்றார். அன்பர் என்பது தன்மீது அன்பு கொண்டு ஒழுகும் மெய்யன்பர்களை. அணைந்தோர்களை அடியார்களைக் கூறித்த சொல் எனக் கொண்டு அவர்களுக்கு வேண்டிய தொண்டுகளைச் செய்வதும் பணிந்து நிற்பதும் அவரோடு அளவளாவி இருப்பதும் ஆகிய இவை. இவற்றால் புதிதாக வந்த சீவன் முத்தர்கள் பழவடியாரொடும் பழகுவதால் மீண்டும் மலவாசனையால் பிறவிக் கேதுவான காரிங்களைச் செய்யார், அவரோடு அணைந்திருப்பதனால் அந்தச் சிவனடியார்கள் மனவுறுதியை மேம்படுத்துவர். அவரோடு இணங்கி இருத்தல் இன்றியமையாதது. இதனையே. இங்கு வேடம் எனக் காணலாம்.

இனி வேடம் என்பதால் சிவவேடம் என்பதாம். சிவனுடைய வேடங்கள் என்பன இங்கு குறிக்கப்படுவன யாவையெனின், திருநீற்றுப்பொலிவு உருத்திராக்கம், காவி உடை தண்டு கமண்டலம் ஆதியனவற்றைக் கொண்ட உருவம். இவ்வுருவம் சிவவடிவமே எனக் கொள்ள வைக்கும். அவ்வடிவத்தையும் அவ்வடிவோடு கூடிய திருஅடியார் கூட்டத்தையும் குறித்திருப்பன என்பதையே கூறினார் என்க.

இனிக் குருவைப் பற்றிய செய்தியை இங்கு காண்போம். ஆசிரியர் ஒப்பில் குருவென்றார். குருவென வழங்கப்படுவர் சிவஞான அறிவிலே மேம்பட்டவராயும் தன்னை அடைந்து வரும் மாணாக்கர்களை நன்கு அறிந்தவராய் அவர்களின் பக்குவ நிலைக்கேற்ப அவர்க்குத் தீக்கைகள் வழங்கியும் சைவ சித்தாந்தம் பற்றிய முழு அறிவையும் புகட்டித் தன்னைப் போல் ஆக்கும் தகைமையாளர்களே.

இறைவனே மானிட வடிவந்தாங்கி வந்து பக்குவப்பட்ட ஆன்மாக்களுக்கு தீக்கை பண்ணி அவர்களுடைய மலங்களையும் சுட்டெரிப்பார். மேலும் அவருக்கு உபதேசம் செய்து அவரை சிவநெறியில் ஒழுக வைப்பர். மெய்க்கண்டார் அருணந்தி சிவாச்சாரியாருக்கு தீக்கைகள் பல செய்து, அவருக்கு இன்றும் வழங்கி வரும் தீக்கைத் திருநாமத்தையும் அளித்தார். மாணிக்கவாசக சுவாமிகளுக்கு சிவபெருமானே எழுந்தளி

வந்து திருப்பெருந்துறையில் நயன தீக்கை திருவடி தீக்கை வாசக தீக்கை என்பன செய்து அவரை ஆட்கொண்ட வரலாறு திருவாசகத்தின் மூலம் அறிகின்றோம். அவர் சிவ பெருமானை வாழ்த்தும் போது குருமணிதன் தாள் வாழ்க என்றார். என் பிறவி வேர் அறுத்திட்டு எனவும் அவர் அத்திருவாசகத்தில் பல இடங்களிலும் காட்டியிருப்பதை நாம் காண்கின்றோம். இறைவன் இவ்வாறாகத் தான் எழுந்து வந்து ஒரு குருவிடத்தே ஆவேசித்து நின்று அத்தீக்கைகளையும் உபதேசத்தையும் செய்வர் எனச் சைவ சித்தாந்தம் கூறுகின்றது. இதனால் நாம் காண்பது மானிட வடிவங்கொண்டு குருவாக வருபவர் இறைவன் என்பது. நல்லதொரு ஞான குருவில் ஆவேசித்து நிற்பதால் அக்குருவும் சிவமே எனக் காண வேண்டும். எனவே அத்தகு மேன்மைமிக்க குருவைச் சிவமாகவும் சிவத்தைக் குருவாகவும் காணவேண்டும். சிவமே குரு குருவே சிவம் என்பது சைவ சித்தாந்தம் காட்டும் உண்மை. எனவே தான் குருவை வழிபாடு செய்ய வேண்டும். இதனையே குருசங்கம வழிவாடு என இங்கு ஆசிரியர் எடுத்து உரைத்தலைக் காண்க.

இனி லிங்கம் என்பது தாபிக்கப்பற்ற சிவலிங்கம் ஆகும். தாபித்தல் என்பதை பிரதிட்டை பண்ணுதல் எனக் கொள்க. சிவத்தலங்களிலே சதாசிவ திருமேனியாகிய சிவலிங்கமே இங்கு கூறப்பட்டுள்ளது. இது அருவமும் உருவமும் கொண்ட அருவுருவத் திருமேனி இறைவன் எங்கும் உளன். அவன் நிறைவு எவ்விடத்தும் உண்டு. அவ்வாறாயின் சீவன் முத்தர்கள் ஏன் சிறப்பாகச் சிவனை அத்திருமேனியில் வணங்க வேண்டும் என்னும் கேள்வி எழுகின்றது. ஒரு தாயின் அன்பு அப்பிள்ளைக்குப் பசிவரும்போது பாலூட்டுவதாகும். அவ்வாறு பாலூட்டும்போது அவளின் அன்புப் பெருக்கால் முலையிடத்தில் பால் பொங்கிப் பெருகும். பசுவிடத்தில் எங்கும் பால் செறிந்திருகின்றது. அதன் பால் நன்கு வெளிப்படுவது அதன் முலைகளிலே தான். இவ்வாறாக இறைவன் எவ்விடத்தும் செறிந்து இருப்பாராயினும் அவன் சிறப்பாக இருந்து அருளும் இடம் இத்திருக்கோயிலும் அங்குள்ள தாபர லிங்கமுமேயாகும். இதனால் அணைந்தவர்கள் ஆலயத்தையும் சிவலிங்கத்தையும் கண்டு தொழுவர். கோபுர தரிசனம் கோடி புண்ணியம் என்பர். அதுவே திருக்கோயில் இருப்பதற்கான அடையாளம். அங்கும் சிவமே இருப்பதால் கோபுரத்தையும் வணங்குதல் இன்றியமையாதது. இதனால் தான் ஆலயம் தானும் அரனெனத் தொழுமே என்றார். தானும் என்பதனை அசையெனக் கொள்பவர்கள். ஆயினும் இங்கு அந்தத்

திருவடியாளர்களைக் குறித்து நிற்பது. அந்த அடியார் தன்னையே சிவமாகப் பாவித்தல் வேண்டும். அவ்வாறு பாவித்தால் அவர் சிவமாம் தன்மையைப் பெறுவர். தானும் சிவமும் ஒன்று என்னும் நினைவு வர இறைவனுடன் அத்துவித சம்பந்தம் எய்தி இன்பம் துய்ப்பர். இதனாலே தான் ஆசிரியர் குருலிங்கம் வேடம் எனக் கூறில் இவை கொண்டார் என்றார்.

இறைவனை இவ்வாறு அணைந்து நிற்போர் சிவமாகவே நிற்பார். அவர்கொண்ட மலம் நீங்க வினை நீங்க மாயை நீங்க சுத்த ஆன்மாவாக நிற்பர். அப்பரிசுத்த ஆன்மாவுக்கு இனிப் பிறவிக்கான காரணங்கள் அற்றுப் போவதால் அவர்க்கு பிறப்பு இறப்பு என்னும் பேதமை வராது. அவர்கள் பிறப்பிறப்பற்று என்றும் அணுவாக நின்று சிவ போகத்தைப் புசித்திருப்பர். இதனால் அவர்க்கு மீண்டும் பிறப்பதற்கான கருவாராது என்பது உண்மையே. இதனையே ஆசிரியர் செய்யுளில் கருவொன்றி நில்லார்கள் காண் என்றார். இங்கு காண் என்பது காட்சியளவையாலும் அனுமான அளவையாலும் ஆகம அளவையாலும் எனக் கொள்க. மேலும் இதனை அனுபவ வாயிலாகவும் காண்பாய் எனக் கூறினர். இதனால் மனவாசகங் கடந்தார்க்கு இனிப் பிறவியில்லையென்பதை அவர் குரு சூசகமாகத் தெரிவித்தர் என்க.

இங்கு நாம் திருநாவுக்கரசு நாயனாரைப் பற்றி அவர் கொண்ட திருவேடப் பொலிவை பெரிய புராணம் எடுத்துக் கூறுவதைக் காண்போம். இதுவே திருவேடம், சிவனடியார் நிலை என்பதையும் காண்க. பாடல் இது.

தூயவெண் ணீறு துதைந்தபொன் மேனியும்தாழ்வடமும்
நாயகன் சேவடி தைவரும் சிந்தையும் நைந்துருகிப்
பாய்வதுபோல்அன்பு நீர்பொழி கண்ணும் பதிகச் செஞ்சொல்
மேயசெவ் வாயும் உடையார் புகுந்தனர் வீதியுள்ளே

இதுவே சிவனடியார்களுக்கும் வேண்டுவது. சிவசின்னங்களை எப்போதும் அணிவதும் சிவனையே சிந்தித்து இருப்பதும் திருப்பதிகம் முதலிய இறைபுகழ் பாடுவதும் அவன் பணிகளைத் தன் கடன் எனக் கொண்டு வாழ்வதுமேயாகும்.

இதனால் ஆசிரியர் சிவனை குருவிடத்தும் திருவேடப் பொலிவிடத்தும் திருக்கோயிலிலுள்ள தாபர சிவலிங்கத்திலும் சிவனடியார்களிடத்தும் கண்டு அவரை வழிபட்டுவரின் மீண்டும் பிறவா வகைவரும். முத்தியில் இருந்து இன்பத்தை எப்போதும் அனுபவிக்கலாம் எனக் கூறியமை காணலாம்.

## வெண்பா 52

**முத்திநிலைக்கு வழிகாட்டுதல் சாதனம் கூறல்**

**கற்றாமனம் போல் கசிந்து கசிந்தே உருகி**
**உற்றாசான் லிங்கம் உயர்வேடம் - பற்றாக**
**முத்தித் தலைவர் முழுமலத்தை மோசிக்கும்**
**பத்திதனில் நின்றிடுவர் பார்**

## இதன் பொருள்

**கற்றா மனம் போல்** - இளங்கன்றினை அணித்தாக ஈன்றளித்த கன்னித்தாய்ப் பசு தனது கன்றினைக் காணாத போது அழைத்து கசிந்து உருகும் தன்மைபோல, **கசிந்து கசிந்தே உருகி** - உளம் நெக்கு நெக்காக நெகிழ்ந்து உருகியும் அன்பின் மேலீட்டினால் உருகியும், **உற்று ஆசான் இலிங்கம் உயர் வேடம் பற்றாக** - குரு லிங்கம் அடியார் கூட்டம் என்ற முத்திறத்தாரையும் விரும்பிப் பற்றுக் கோடாகக் கொள்ளுதல் வேண்டும், **முத்தித் த்லைவர்** - அத்தகைய நிலையில் இடையறாது சிந்தித்திருக்கும் சீவன் முத்தராகிய தலைமைப்பாடு உடையவர்கள், **முழுமலத்தை மோசிக்கும்** - பாசங்களுக்குக் காரணமான ஆணவம் கன்மம் மாயை என்னும் மூன்று மலங்களையும் நீக்குதற்கான, **பத்திதனில் நின்றிடுவர்** - இப்பத்தி நெறியில் நிற்பார்கள், அவர்களே பரமுத்திப் பேற்றை அடைவார்கள், **பார்** - நீ அனுபவித்தும் கண்டும் உணர்வாயாக.

## கருத்துரை

இளங்கன்றினை அணித்தாக ஈன்றளித்த கன்னித்தாய்ப் பசு, தனது கன்றினைக் காணாத போது அழைத்து அழைத்து உருகும் அவ்வுருக்க நிலைபோல உள்ளம் நெக்கு நெக்காக நெகிழ்ந்து உருகியும் அன்பின் மேலீட்டினால் அன்புப் பெருக்கால் உருகியும், குரு லிங்கம் அடியார்

கூட்டம் என்ற முத்திறத்தாரையும் விரும்பிப் பற்றுக் கோடாகக் கொள்ளுதல் வேண்டும். அத்தகைய நிலையில் இடையறாது சிந்தித்திருக்கும் சீவன் முத்தராகிய தலைமைப்பாடு உடையவர்கள் பாசங்களுக்குக் காரணமான ஆணவம் கன்மம் மாயை என்னும் மூன்று மலங்களையும் நீக்குதற்கான இறைபத்தியில் வழுவாது நிற்பார்கள். அவர்களே பரமுத்தியை அடைவார்கள். நீ அனுபவித்தும் கண்டும் உணர்வாயாக.

## விரிவுரை

**பத்தி நெறி அறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணம்**
**சித்த மலம் அறுவித்து சிவமாக்கி எனை ஆண்ட அத்தன்**

எனப் பாடி சிவனின் திருவருட் சிறப்பைக் காட்டினார் மாணிக்கவாசகர். இது எவ்வாறு கிடைத்தது. அதன் அனுபவம் எப்படி எமை வந்து அடையும் என்பன சிந்திக்க வேண்டியன. இது இறைவன் மீது பத்தி கொண்டு அவனைப் பற்றி நின்றமையால் அடைந்த ஒன்று. பத்தியோடு இறைவன் சீர் பாதத்தை ஏத்தி வழிபட இறைவனே அதனை அருளுகின்றான். பத்திநெறியினைப் பற்றி நின்றவர்கள் சிவமாகிய நிலையில் அத்துவிதமாகி சிவன் அடியை அடைந்து பேரின்பப் பெருவாழ்வு பெறுவர். அனுபவிப்பர். பரமுத்தி நிலையெய்தி வாழ்வர்.

பத்தியென்பது அன்பு பூணுதல். அன்பு கொண்டு வாழுதல். அன்பு என்னும் பத்திநெறி வந்தால் தமக்கென எதுவும் வேண்டுதல் இன்றி வாழ்வர்.

**அன்பிலார் எல்லாம் தமக்குரியர், அன்புடையர்**
**என்பும் உரியர் பிறர்க்கு**

என்பதுதிருக்குறள்

அன்புடையர் எல்லாம் உடையர் என்பதால் சிவனருளால் யாவற்றையும் நிறைவாக உடையவர் என்பதாகும். அவர்க்கு வேண்டுதல் வேண்டாமை என எதுவும் இல்லை: அதனால் மற்றைய உயிர்களிடத்தேயும் அன்புடையவராவர். தமது எலும்புகள் கூடப் பிறர்க்கு உரியனவாகக் காண்பர்.

இந்த உயிருக்கு உரிய உண்மை இயல்பு எது ? என்ன ஆம் அன்பின் வழியது உயிர் நிலை எனவும் அன்புக்கும் உண்டோ அடைக்குந்தாள் எனவும் நாம் திருக்குறளில் காண்கின்றோம். திருக்குறளே எமது பொதுமறை. எனவே அன்பு நெறியில் பத்தி நெறியில் நின்று வாழ்வதே இயல்பு நிலையாகும். இங்கு கூறப்படும் அன்பு நெறி, பத்தி நெறி யாதெனில் குருவினிடத்தே அன்பு செலுத்துதல் இறைவனிடத்தே அன்பு செலுத்துதல் சிவநெறி நிற்கும் அணைந்தோர்களோடு அன்பர்களோடு ஒட்டி அவருடன் கூடி இருந்து அன்பு கொண்டு வாழுதல் என்பதாம். இதனையே ஆசிரியர் பத்திதனில் நின்றிடுவர் என்றார்.

நமச்சிவாய என்னும் திருவைந்தெழுத்தைக் கூறி, நின்ற மும்மலத்தை முன்னுக்கு வைத்து தான் நடு நின்று சிவாய என்னும் இறைவனை பின்வைத்து நின்ற உயிர் அறிவு வரப் பெற்று சிவாய என்னும் மந்திரத்துக்குரிய சிவனை முன்னே வைத்துத், தான் நடுவாகி ஆணவம் மாயை ஆகிய மலங்களை பின் தள்ளி வைக்கின்றது. இதனால் சிவாய நம என்னும் திருவைந்தெழுத்தை முறைப்படி ஓதுகின்றது. இதனால் சிவஞானம் கைவரப் பெற்று முத்திநெறிக்குச் செல்லும் தகுதியைப் பெறுகின்றது. முத்திநெறிக்குச் செல்லும் உயிர் அங்குமிங்கும் அலைந்து கொள்ள வாய்ப்புகள் உண்டு. இதனால் ஒரேவழிப் பழக்க தோசத்தால் பழைய வாழ்க்கைக்குள் ஆவணத்தால் கவரப்பட்டு நிற்கும். எனினும் சீவன் முத்தர் நிலையெய்திய சிவஞானிகள் உயிர்கள் தம் அறிவு சிவனையே காணும் அறிவாகையாலும், அதனை அவனே தந்தமையாலும் சார்ந்ததன் வண்ணமாய் சிவத்தைச் சார்ந்திருப்பதினாலும் தன் உண்மை இயல்பை சிவத்தோடு கலந்திருத்தல் என்னும் தெளிவாலும், மும்மலங்களின் வழிப்படாது, செல்லாது. அவர்கள் மீண்டும் மீண்டும் தொடர்ச்சியாக இறைவழிபாட்டிலும் இறைபணியிலும் உறைப்பாக நிற்கின்றனர்.

உயிர்கள் இந்நிலையில் இறைவனைச் சிச்சென்னப் பிடிக்கின்றன. இவ்வாறு இறுக்கிப் பிடிக்கின்ற தன்மை தான் சிவலிங்கத்தைப் பிடித்தல் ஆகும். சிக்கெனப் பிடித்தலாகும்.

சிவலிங்கம் என்பது இறைவடிவம். இறைவன் 25 மூர்த்த வடிவங்களில் நின்று அருளுவன். அவற்றில் ஒரு வடிவம்தான் இந்தச்

சதாசிவ லிங்க வடிவம். இவ்வடிவம் சிவன் கோயில்களில் தாபிக்கப் பெற்று பிரதிஷ்டை பண்ணப் பெற்று நிற்கும் மூலவராக நிற்கும் வடிவம் எனக் காணலாம். தில்லைத் திருக்கோயிலில் தினமும் நடக்கும் அபிடேக ஆராதனை இச்சிவலிங்கத்திற்கே நடைபெறுகின்றது. அங்கு காணப் பெறும் இலிங்கம் படிக இலிங்கம் என்பர். நடன நிலையில் இருக்கும் நடராசப் பெருமானுக்கு அபிடேகம் அந்தத் தில்லை அம்பலத்துள் பொன் அம்பலத்துள் நடைபெறுவதில்லை. மார்கழி ஆனி ஆகிய மாதங்களில் உற்சவப் பெருவிழாவின் போது அங்குள்ள ஆயிரங்கால் மண்டபத்திற்கு அம்பலத்திற்கு எம்பெருமானை எழுந்தருளப் பண்ணி, அங்கு தான் அவருக்கு அபிடேகம் நடைபெறுகின்றது என்பது நாம் அறிந்து கொள்ளலாம்.

இறைவன் மூவகைத்தான திருமேனி உடையவன். அத்துடன் சொருபத் திருமேனி எனவும் ஒன்று அவர்க்குரியது. இங்கு நாம் இலிங்கத் திருமேனி பற்றிய விளக்கம் பற்றி உரைப்பதால் அது பற்றி இங்கு விளக்குவோம். அருவம் அருவுருவம் உருவம் என்பன அம்மூன்று திருமேனிகள். அருவம் என்பது வெளித்தோன்றாதது. இத்திருமேனியில் இறைவன் நின்று சகல இன உயிர்களுக்கு வெளிப்பட்டுத் தோன்றாது நின்று அருள் புரியும் வடிவம். அடுத்து உருவம். இவ்வுருவம் கொண்ட இறைவன் விஞ்ஞானகலர் என்னும் வகை உயிர்களுக்கு தன்மை நிலையில், உருவம் கொண்ட நிலையில் நின்று அருள்பாலிப்பன். இனி அருவுருவம் என்பது அறிவுடைமையும் அறிவற்ற நிலையிலும் நின்று தவிக்கும் உயிர்களுக்கு அருவுருவமாக நின்று அருள் செய்வன். இங்கு நாம் குறிப்பிடும் நிலை மலபரிபாகம் எய்தி இருவினைகளில் சமநிலை(ஒப்பு) கண்டு சத்திநிபாதம் அடையப் பெற்ற அன்பராயும், முத்தராகிய நிலையை அடைதற்கான தகுதியுடையராய் நிற்கும் ஆன்மாக்களை சீவன் முத்தர்களையே குறிக்கின்றன.

இந்நிலையில் அவர்கள் தகுதி கண்டு பக்குவம் கண்டு இறைவன் பார்வை மிருகமென, மானிடச் சட்டை தாங்கி குருவடிவாக வந்து உபதேசித்துச் சிவஞானம் பெற வைப்பன். முன்பு ஒன்றாயும் உடனாயும் வேறாயும் நின்ற கேவல நிலையிலும் சகல நிலையிலும் மறைந்து நின்று அருளிய இறைவன், மறைய நின்றுளான் மாமணிச் சோதியான், இங்கே வெளிப்பட்டு ஒன்றாய் உடனாய் வேறாய் நின்று அருளுகின்றான். தயிரில் தோன்றும் வெண்ணெய் போல் வெளிப்பட்டு நின்று

அருள்புரிவான். அதாவது எக்காலத்தும் எவ்விடத்தும் எந்நிலையிலும் பிரிப்பின்றி உயிருக்கு உதவும் முகமாக தனது விருப்பாகக் கொண்டு உதவிய இறைவன் உயிரின் இயல்பு இதுதான் எனக் காட்டிய இறைவன் ஐம்புல வேடரின் (புலன்கள்) அயர்ந்தனை வளர்ந்தெனத் தம் முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு வளர்த்தெடுத்த இறைவன், அன்னியம் இன்மையில் தன் கழல் செல்ல விட்ட இறைவனின் அவன் செய்த பேரட்கருணையை மறக்கலாமா. அத்தகு பெருமை மிகு செல்வனின் அருளுடைமையை அன்புடைமையை நன்றியை மறத்தலாகாது. காணும் கண்ணுக்குக் காட்டும் உள்ளம்போல காண உள்ளத்தைக் கண்டு காட்டலின் அயரா அன்பின் அவன் கழல் செல்லும் உயிரை, அவ்விறைவனே குருவாக வந்து இத்துணையும் நின்று தடுத்தாட்கொண்டான். ஆன்மாவின் இயற்கை இயல்பு இதுவெனக் காட்டிய குருவை ஆச்சாரியாரை என்றும் மறத்தல் ஆகாது. அவ்வாறு மறக்கின் உய்வில்லை என்பதை உணர்ந்து எய்யாமல் காக்கும் இறைவனை உணர்ந்து அவனை வாழ்த்தி வணங்க வேண்டும். அவ்வாறு வணங்கி இடையறாது அன்பினால் அவன் தாள்களைப் பற்றி நிற்றல் வேண்டும். அவ்வாறு அரன் கழல் செல்லின், அன்பர்கள் மல மாயை தன்னொடு வல்வினை அற்றாராக நீங்கியராக ஆவார். குருவே ஆன்மாவின் தகுதிகண்டு, அதற்குத் தன் அருளுடைமையால் நயன தீக்கை, சிவதீக்கை வாசக தீக்கை, திருவடி தீக்கை திருநீறு அளித்தல் ஞானம் வர வழைத்தல், தம்மை இதனால் மலவொழிப்பை செய்த குருவை, குருமணியை மறத்தல் எங்ஙனம். இதனாலே தான் அக்குருவை வணங்குதலும், வாழ்த்துதலும் வேண்டுவதே. சாதாரண மக்களிடையே பழகி வரும் பழமொழியாகவுள்ள, எழுத்தறிவித்தவன் இறைவனாகும் என்னும் சொற்றொடர், எழுத்தாகிய அகர முதலானவற்றை முதலில் உச்சரிக்கச் செய்து வரிவடிவம் காட்டிக் கல்வியை ஊட்டிய அறிவு வித்தியா குருவை இறைவனாகக் காணும் பண்புடையராகிய யாம், அஞ்செழுத்தை ஓதி, ஓதுவித்து பதிவிதி என்னும் தன்மைக்கு இட்டுச் சென்று உயர்த்துவித்த ஞானாசிரியனை இறைவனை வழிபாடு செய்தல் இன்றியமையாதது என்பதைக் காட்ட. உற்ற ஆசான் எனக் காட்டியவாறு காண்க. இறைவன் குருவாக வந்து உபதேசித்து அருள்வன் என்பது சித்தாந்தத் துணிபு. இறைவன் ஒரு ஞானாசிரியன் இடத்தே பொருந்தி ஆவேசித்து நின்று இதனைச் செய்விக்கின்றான். இதனால் தான் குருவே சிவம் எனக் கொண்டு வழிபட வேண்டும். அவர் அருள் உயிரோடு அல்லல் வரும் காலத்தும் எழுந்து வந்து முன்னின்று தாமே அத்துன்பங்களை

ஏற்றுக் கொள்வர். அதனால், அதனை நாம் மறத்தலாகாது. மெய்கண்ட தேவ நாயனாரைச் சிவமாகவே காணும் காணுகின்ற இந்நூலாசிரியரும், இவர் காலத்து மெய்க்கண்டாரிடம் மெய்ப்பொருள் சிவஞானம் கேட்டு அவரையே குருவாகக் கொண்ட சகல ஆகம பண்டிதரான அருணந்தி சிவாச்சாரியாரும் தமது நூலாகிய இருபா இருபஃதிலும் உண்மை விளக்கத்திலும் குருவழிபாட்டினையும் இறைவழிபாட்டினையும் ஒன்றாக வைத்துப் போற்றிய பாங்கு காண்கின்றோம். அக்குருவழிபாடு எத்தகைய சிறப்பு வாய்ந்தது என்பதை இச்செய்திகள் எண்ண வைக்கும் அன்றோ.

சமய குரவர்களாகிய நால்வருக்கும் முன்னின்று உணர்த்திய குருவாகச் சிவபெருமானே நின்றார். அக்குருவாகி வரும் பொருள் சிவபரம்பொருள் என்பதும் குருவை வழிபட்டால் அப்பெருமானை வழிபட்ட பலன் கிடைக்கும் என்பதனை இங்கு அறிக.

இனி இறைவன் குருவிடத்தே தான் வெளிப்பட்டுத் தோன்றுவன் ஆகையால் அக்குருவடிவம் எத்தகைய மேன்மை உடையதென்பதையும் உணர்ந்து குருவை வழிபாடு செய்தல் வேண்டும் அது மறுமை வாழ்வை மலர வைக்கும் வாழ்த்தும்.

இனி இலிங்க வழிபாடு பற்றிய விரிவுரைக்கு வருவோம். முந்திய செய்யுளில் இந்த இலிங்க வழிபாடு பற்றி எடுத்து காட்டியுள்ளேன். அதனோடு பொருத்தி இதனையும் கருத்தில் கொள்க.

இறைவன் நவதருபேதங்களில் நடிப்பன் என்பது வேதம். இதனைச் சிவஞான சித்தியார் எடுத்து விளக்குகின்றது. அவன் அருவமாக நான்கு வடிவங்களிலும் உருவமாக நான்கு வடிவங்களிலும் நடுவாக உள்ள வடிவத்தில் சதாசிவ வடிவமாகிய ஒன்றாகவும் நின்றே உயிர்களுக்கு அருள்புரிகின்றான். இவ்வாறாக இறைவன் உயிர்களுக்கு அருவமாக உருவமாக அருவுருவமாக நின்று அருள்புரிவானாயின் அவ்வடிவம் அப்பெருமான் அவ்வடிவத்தில் சிறப்பாகத் தோன்றி நிற்கும் வடிவங்கள் எனக் கொள்ளலாம். இவற்றுள் நடு நாயகமான வடிவமாய் இருப்பது சதாசிவமூர்த்தி வடிவமேயாம்.

இறைவனின் பேரறிவு பேராற்றல் விருப்பு என்பன மூன்றும் சம நிலையில் நிற்கும் வடிவமே சதாசிவ வடிவம். இறைவனின் இச்சைநிலை

தனித்து நிற்க, கிரியா ஞான சத்திகள் (அறிவு செயல்) கூடியும் குறைந்தும் நின்றே சுத்த தத்துவங்களைத் தோற்றுவிக்கின்றன என முன்னர் கண்டோம். அவ்வாறான நிலையில் சிவன் சத்தி சதாசிவன் ஈசுவரன் சுத்தவித்தை என்பன தோன்றும் எனவும் கண்டோம். இதில் சதாசிவத் தத்துவம் அறிவு செயல் இரண்டும் சமநிலையில் இருக்கும் எனவும் முன்னர் கண்டோம். இவ்வடிவத்தில் ஞானமும் ஆற்றலும் கூடுதலும் குறைதலும் இல்லாத சாந்த நிலையை நாம் காண்கின்றோம். இதனை நடத்தும் தெய்வம் சதாசிவம் ஆகும். இங்கு சிவமும் சத்தியும் சம நிலையில் கலந்து நிற்கின்றன. இவ்வடிவே சதாசிவ வடிவம். சதாசிவத் திருமேனி ஆகும். இத்திருமேனியே இலிங்கத் திருமேனி என அழைக்கப்படுகின்றது. குறிப்பாக இங்கு இறைவனும் இறைவியும் ஒருங்கே இணைந்து காட்சி தந்து அருளுகின்றனர்.

சகல இன உயிர்களுக்கு இறைவனை வழிபடும் இடமும் வழிபடும் தானமும், வடிவமும் முறைமையும் எல்லாம் இத்திருமேனியாகிய சதாசிவத் திருமேனியே. எனவே இலிங்க வடிவத்தை எண்ணி நம சிவாய மந்திரத்தை ஓதிவருவதால் இவ்வுலக வாழ்வு சுகமாக இருக்கும். இகத்தில் எல்லா நலங்களும் பெற இந்நிலை உதவுகின்றது.

மேலும் சிவாய நம எனச் சொல்ல பரவாழ்வுக்கு வழி தேடவும் நிற்கும் வடிவம் இச்சதாசிவ இலிங்க வடிவமே யாகும்.

மார்க்கண்டேயர் வழிபட்டு இவ்வுலக வாழ்வில் பலகாலம் சீவித்து இருந்தமையும், சிலிங்கத்தை கருத்தில் இருத்திக் கல்லால் எறிந்து வழிபட்டு அக்கல்லே, தான் கருத்தோடு போடும் மலர் அருச்சினை என அன்பு கொண்டு வாழ்ந்து சிவகதி பெற்ற சாக்கிய நாயனார் வரலாறும் அச்சிவ லிங்க வழிபாட்டின் பெருமையையும் அதன் வழிபாட்டுப் பயன்களையும் விளக்குவனவன்றோ.

இதனைச் சிவஞான போதம் பன்னிரண்டாம் சூத்திரம் மிகத் தெளிவாகக் கூறுகின்றது. அதில் வரும் ஒரு வெண்பா இது.

அது இது என்றது அது அல்லான் கண்டார்க்கு
அது இது என்பதையும் அல்லான் - பொது அதனில்
அத்துவிதமாதல் அகண்டமும் தைவமே
அத்துவிதி அன்பின் தொழு

என்பது

இங்கு இறைவன் பேத சம்பந்தம் உடையவன் அல்லன் என்பதையும், அபேத சம்பந்தம் உடையவன் அல்லன் என்பதையும் காட்டி. இவ்விறைவன் பேதம் அபேதம் பேதாபேதம் ஆகிய மூன்றிற்கும் பொதுவாய் அவன் உலகத்தோடு பிரிப்பின்றி நிற்கின்றான். எனவே எல்லா பொருளும் அவனே. சடப் பொருள்களும் அவனே. அறிவுப் பொருள்களும் அவனே. பசுவின் பால் அதன் உடலில் யாண்டும் உளதாயினும் அது வெளிபட்டு தோன்றுவது அதன் மடியிலேயாகும். அதுபோல இறைவன் எல்லாப் பொருளிலும் எப்பொருளிலும் எங்கும் தானே அப்பொருளாய் வடிவாகத் தோன்றி நிற்கினும் அவன் அவற்றில் வெளிப்பட்டுத் தோன்றாமல் சிறப்பாக திருக்கோயிலுள் இருக்கும் சிவலிங்கத் திருமேனியில் விளங்கித் தோன்றி அருள் புரிகின்றான். அத்திருமேனியே பத்தியாகிய அன்பினால் வழிபடும் அன்புத் திருமேனியாகும்.

**அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்**
**அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்**
**அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்**
**அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே**

எனத் திருமூலர் கூறிய வாறும் காண்க.

ஆலயம் தொழுவது சாலவும் நன்று எனவும் கோயில் இல்லாத ஊரில் குடியிருக்கவேண்டாம் எனவும் நமது முன்னோர்கள் கூறியது இதனை நோக்கியே ஆகும்.

இனிச் சிவவேடம் என்பது பற்றிச் சிறிது தெரிவோம். முந்திய செய்யுளிலும் இதுபற்றி விளக்கியுள்ளேன். அதனோடு இங்கு வரும் கருத்துக்களையும் கண்டு அறிக. சிவவேடம் என்பது சிவனுடைய வடிவம் என அமையும், சிவனது வடிவமாயின் அந்த வடிவம் தான் என்ன. எத்தகையது. இதனைக் கூறும்போது உலகத்தையும் உயிர் அறிவையும் கடந்து நிற்பவனாகிய இறைவன் உலகத்தார் தன்னை உணர்ந்து வழிபடுதற் பொருட்டு தனது அணிபொருள்களாகிய திருநீறு கண்டிகை ஆகிய சிவ சின்னங்கள் முதலியவற்றைத் தனது அடியவர்களுக்கும் கொடுத்துள்ளான். அந்த வடிவே சிவ வடிவு, சிவவேடம். அவ்வாறு தமது நெஞ்சிலே அப்பெருமானை விட்டு பிரியாது நீள நினைந்திருபவர்கள் காண்தொறும் பேசுந்தொறும் நினையும்தொறும் அனைத்தெலும்பு

உள்நெக நிற்கும் நிறையுடையோர். அவனை அன்றிப் பிற தெய்வங்களைப் போற்றாதவர்கள். நமனையும் (யமன்) கண்டு அஞ்சாதவர்கள். நரகத்தில் இடர்ப்படாதவர்கள். யார்க்கும் குடியல்லாதவர்கள். இடரினும் தளரினும் சிவன் பாதங்களை விட்டு நீங்காத நிறைவுடையவர்கள். பிணியறியாதவர்கள் என நிற்பவர். திருநீற்றையும் திருவைந்தெழுத்தையும் எண்ணாது நிற்கும் அஞ்ஞானிகளைக் கண்டு அஞ்சுபவர்கள்.

**அப்பார் சடையப்பன் ஆனந்த வார்கழலே**
**ஒப்பாக ஒப்புவித்த உள்ளத்தார்**

அவர்கள்.

இவ்வாறு நல்வேடம் நல் நினைவு நற்செயல் கொண்டவர். தம்மைப் போல் சிவ வேடங்களைத் தரித்த சிவனடியார்களோடு இணங்கி அணைந்து இருப்பவர்கள். அத்தோடு அச்சிவவேடம் கொண்டாரிடத்து மிக்க அன்பு செலுத்தி அவரைச் சிவமெனத் தொழுவார்கள். இவையே அவர் பண்பும் செயல்களும் ஆகும்.

சிவ பத்தர்கள் பத்தியினால் மறவாது ஏத்திவர முதல்வனது சிறப்புமிகு பாதத்தை அணைந்தோர் வணங்கி ஏத்துவர். எனவே தான் தன்னை ஒத்தவரோடு பழகுதலும் வழிபடுதலும் அவர் தம் நெஞ்சில் உறைப்பினைக் கொண்டு நிற்பதும் சிக்கெனப் பிடித்த தன்மையும் விட்டுப் போகாது. இவ்வாறல்லாதவரோடு பழகுதல் நடையை மெய்யென்று நாத்திகம் பேசித் திருவருள் உணர்வை மறக்கச் செய்யும். இவர்கள் அல்லாதவர்கள். ஆதலால் அவருடன் பழகுதல் சிவனடியார்களுக்குத் துன்பத்தை தருவதோடு அவர் பற்றியிருக்கும் சிவப்பற்றினும் ஏதம் ஏற்பட இடமுண்டு. ஆதலால் அவர்களை அஞ்சுதற்குரிய பொருளாகக் கொண்டு விலகுதல் வேண்டும். இதனைச் சிவஞான போதம். பத்தர் இனத்தராய் பரன் உணர்வினால் உணரும் மெய்த்தவரை மேவா வினை, என எடுத்துரைக்கின்றது. அடியாரையும் சிவலிங்கத்தையும் வழிபடுக என்னும் ஆசிரியர் கூற்றை நோக்குமிடத்து ஏன் இவற்றை மட்டும் வணங்குதல் வேண்டும். சிவனடியார்கள் யாவற்றையும் சிவமாகப் பார்ப்பவர்கள் சிவனடியார்களுடன் சிறப்பாக நின்று அவரையும் சிவத்தையும் வணங்குதல் வேண்டும் என்பது யாதுக்கோ எனில் அவன் அந்த இடங்களில் பிரகாசமாய் நின்றே அல்லாத இடத்து அப்பிரகாசமாய் நிற்பன் என்பர் மெய்கண்டார். பிரகாசம் வெளிப்பட்டுத் தோன்றுதல் அப்பிரகாசம் - அப்பிரகாச

மின்மை இதற்கென ஒரு வெண்பாவையும் எடுத்துக் காட்டாகத் தருதல் காணலாம்.

**தன்னுணர வேண்டித் தன் உருவைத் தான் கொடுத்துத்**
**தன் உணரத் தன்னுள் இருத்தலால் - தன் உணரும்**
**நேசத்தார் தம்பால் நிகழும் ததி நெய் போல்**
**பாசத்தார்க்கு இன்றாம் பதி**

என்பது அது

இங்கு இறைவன் பாலின் நெய் எவ்விடத்தும் பரந்து தோன்றுமெனினும் வெளிப்பட்டுத் தெரிவதில்லை. அவன் தயிரிடத்தில் தோன்றும் நெய்போல வெளிபட்டு நிற்பன் என்பதாம். எனவே அவரை வணங்குதலே சால்பு எனக் காட்டினார்.

அம்மெய்யடியார் கூட்டத்துள் இணங்கி இருத்தலின் போது ஒரோவழி பழைய மலப் பழக்கம் வாசனையாக வரப்பெறுகின்றது. இவ்வாறு வரப்பெறினும், அப்பண்புடையாளர் தொடர்பு அத்தீ நெறிச் செல்லவிடாது. தடுப்பதோடு முத்தி நெறியில் செல்லும். அழியாத காரணமாய் அமையும் எனக் கொள்க.

இங்கு உற்ற ஆசான் எனவும் உயர் வேடம் எனவும் கற்றாவின் மனம் எனவும் காட்டிய சொற்றொடர்கள் சித்திக்கத் தக்க சிறப்புடையதாய் விளங்குவன காண்க.

குருவையும் இலிங்கத்தினையும் உயர் வேடங்கொண்ட சிவனடியார் களையும் திருக்கோயில்களையும் வணங்குதல் இன்றியமையாதது. மேலும் இவை இறையுணர்வையும் இன்பத்தையும் எஞ்ஞான்றும் தருவனவாம் எனக் கண்டு கொள்க. இதனைப் பார் எனக் காட்டி நின்றார்.

மெய்கண்டார் காட்டிய நெறியில் அவர் மாணக்கராகிய மனவாசகங் கடந்தார். கேள்வி விடை முறையில் இதனைத் தந்து விளக்கியமை கற்கும் மாணாக்கருக்கு பெரும் கருவூலம் எனக் காண்போம்.

கற்றா மனம் எனக் கதறியும், பதறியும்
மற்றோர் தெய்வம் கனவிலும் நினையாது
அருபரத்து ஒருவன் அவனியில் வந்து
குருபரன் ஆகி அருளிய பெருமையை

என மணிவாசகர் தனது கீர்த்தித் திருவகவலில் காட்டியமையையும் உணர்க. மேலும் உன்னடியார் தாள் பணிவோம் ஆங்கவர்க்கே பாங்காவோம் எனவும் தொழும்பாய் பணி செய்வோம் எனத் தருவதும் காண்க.

இதே கருத்தைத் திருமூலரும்

ஆன்கன்று தேடி அழைத்தேன் அதுபோல்
நான்கன்றாய் நாடி அழைத்தேன் என் நாதனை

எனக் காட்டியுரைத்தல் காண்க.

## வெண்பா 53

### மாணவனின் நன்றி உணர்வு வெளிப்படுதல்

வாழ்ந்தேன் அருட்கடலே வற்றாப் பவக்கடலில்
வீழ்ந்தே அலையாமல் மேதினியில் - சூழ்ந்துவிடா
வெண்ணெய்ச் சுவேதவன மெய்கண்ட நாதனே
உண்மைத் தவப்பயனே உற்று

## இதன் பொருள்

வாழ்ந்தேன் அருட்கடலே - அருள்கடலாக விளங்கும் என் குருநாதரே ! உமது அருட்திறத்தால் உண்மை நெறியில் நின்றும் வழுவாது வாழ்ந்து கொண்டிருக்கின்றேன், வற்றாப் பவக்கடலில் வீழ்ந்தே அலையாமல் வாழ்ந்தேன் - தொடர்ந்து வரும் அலைகள் போல வந்து செறியும் பாவக் கடலிலே வீழ்ந்து அதனால் வரும் பிறவித் துன்பத்தில் அலையாமல் அடியேன் நினது திருவருளால் உய்த்தேன், மேதினியில் சூழ்ந்து விடா - உலகத்திலே யான் வேறொரு குருவினிடத்துச் சென்று மெய்ஞ்ஞானத்தை அவரிடம் வேண்டி நில்லாதவாறு அருள் செய்தாய், வெண்ணெய்ச் சுவேதவன மெய்கண்ட நாதனே - திருவெண்ணெய் நல்லூரில் தோன்றியும், சுவேதவனப் பெருமாள் என்னும் பிள்ளைத்

திருநாமத்தையும், மெய்க்கண்ட நாதன் என்னும் ஞான குரு நாமத்தையும் கொண்டு விளங்கும் தேவனே! **உண்மைத் தவப்பயனே உற்று** - நான் முன்பு செய்த தவப்பயனாலும் உனது திருவருட் சிறப்பாலும் இன்று இந்த பேரின்பப் பெருநிலையை எய்திச் சிறப்புற்றேன். இதற்கு ஈடாக எந்தக் கைமாறுதான் செய்யவல்லேன். நன்றி உணர்வோடு உன்னை வணங்குவதும் வாழ்த்துவதும் அன்றிப் பிற ஒன்று அறியேன். அடியேன் உன் அடைக்கலமே.

## கருத்துரை

அருட்கடலாக விளங்கும் என் குருநாதரே! உமது அருட் திறத்தால் உண்மை நெறியில் நின்றும் வழுவாது நான் வாழ்ந்து கொண்டிருக் கின்றேன். தொடர்ந்து வரும் அலைகள் போல் வந்து செறியும் பாவக் கடலிலே வீழ்ந்து அதனால் வரும் பிறவித் துன்பத்தில் அழுந்தாமல் அடியேன் நினது திருவருளால் உய்த்தேன். உய்யப் பெற்றேன். உலகத்திலே யான் வேறொரு குருவினிடத்துச் சென்று மெய்ஞ் ஞானத்தை அவரிடம் வேண்டி நில்லாதவாறு அருள் செய்தாய். திருவெண்ணெய் நல்லூரில் தோன்றியும் சுவேதவனப் பெருமாள் என்னும் பிள்ளைத் திருநாமத்தையும் எவராலும் கூறியறியப் பெறாத அத்துவிதம் என்னும் சொல்லுக்கு உண்மைப் பொருளைக் கண்டும், அறிவித்த மெய்க்கண்ட நாதன் என்னும் ஞான குரு நாமத்தையும் கொண்டு விளங்கும் என் தெய்வமே. உனது திருவருட் சிறப்பாலும், நான் செய்துகொண்ட என் தவப்பயனாலும் இன்று இந்தப் பேரின்பப் பெருநிலையை எய்திச் சிறப்புற்றேன். இதற்கு ஈடாக என்ன கைமாறு செய்யவல்லேன். நன்றி உணர்வோடு உன்னை வணங்குவதும் வாழ்த்துவதும் அன்றிப் பிறவொன்று அறியேன். அடியேன் உன் அடைக்கலமே.

## விரிவுரை

இந்நூலில் மனவாசகங் கடந்தார் முந்திய பாடல்களிலும் முதல் வெண்பாவிலும் பொய்காட்டா மெய்யா எனவும் திருவெண்ணெய் வித்தகா எனவும் வேறு பலவாற்றாலும் தனது சிவஞான குருவாகிய மெய்கண்டாரைப் போற்றியும் ஏற்றியும் நின்றார். மேலும் தனது குருவே திருவெண்ணெய் நல்லூர்த் திருக்கோயிலில் எழுந்தருளி இருக்கும் சிவபரம் பொருளாகக் கண்டார். அத்தெய்வமே சுவேதவனப் பெருமாள்

என்னும் பிள்ளைத் திருநாமத்தைக் கொண்டு தோன்றியுள்ளார் எனவும் காட்டினார். அச்செய்தியையே இங்கு நூலின் இறுதி வெண்பாவிலும் வெண்ணெய்ச் சுவேதவன மெய்கண்ட நாதனே என்றார். நாதன் என்பது நாதத்துக் குரியவன் அந்த நாதங்களுக்கும் ஓசைக்கும் ஒலிக்கும் ஒருவனாக விளங்கும் சிவபெருமானைக் குறித்த பெயர் அதுவெனக் கொள்க. நாதன் என்பது முதல்வனைச் சிவனைக் குறித்த சொல். மாணிக்க வாசக சுவாமிகள் நமச்சிவாய வாழ்க நாதன் தாள் வாழ்க என்றார். எனவே நாதனே ! என் மெய்கண்ட தெய்வமே ! அருட் குருநாதரே என எடுத்துரைத்து அவரிடத்துத் தான் கொண்டிருக்கும் பத்தியின் வெளிப்பாட்டைத் தெளிவித்தார். தெரிய வைத்தார்.

அத்துவிதம் என்னும் சொல்லுக்கு வேதாமங்களிலே கூறியவற்றை விளங்காது மயங்கி இருந்தோருக்கு எல்லாம் அவர்களின் பொருள் மயக்கம் தீர அதன் உண்மைப் பொருளை கருத்தை அறிவு ரீதியாகவும் அனுபவ (நீதியா) வாயிலாகவும் எடுத்துக் கூறியவர், திருவெண்ணெய் நல்லூரில் சுவேதவனன் என்னும் பிள்ளைத் திருநாமம் கொண்ட மெய்கண்டார் ஆகும். அவ்வுண்மையைக் கண்டு யாவரும் ஏற்றுக் கொள்ளும்படி சிவசமயமாம் சைவ சமயத்திற்கும் சைவ சித்தாந்தத் திற்கும் ஒளிகாட்டி, வழிகாட்டி, மெய்காட்டியவராகையால் அவர் மெய்க்கண்டார் என்னும் சிறப்பு பெயர் பெற்றார். அந்தச் சிறப்புப் பெயரால் யாவராலும் அழைக்கப் பெறும் என் தலைவரே இறைவா குருவே என்பதையே செய்யுளில் வெண்ணெய்ச் சுவேதவன மெய்கண்ட நாதனே என விளித்துரைக்கின்றார்.

இனிக் குருநாதரே தமது மாணாக்கர்களுக்கு நயனதீக்கை திருவடி தீக்கை சிவ தீக்கை என்பன செய்தும் ஞான உபதேசம் செய்தும் மெய்ப்பொருளை உணர்த்தியும் நிற்பவர். இவ்வுலகின் பொய்ம்மையாம் வாழ்க்கை தன்னில் புக்கழுந்தி நாள்தோறும், அதனையே மெய்யாய்க் கருதி இருந்த மாணாக்கருக்கு, யாக்கை நிலையாமை, செல்வ நிலையாமை முதலிய உலக இன்பத்திற்கான போகப் பொருள்களையெல்லாம் பொய்யெனக் காட்டிப் பின் மெய்காட்டி நிற்பவர்கள் குருநாதர்களே. உயிரின் உண்மை இயல்பினையும் மலங்களின் இயல்பினையும் இறைவன் பேரியல்பினையும், உயிரோடு இறைவன் கொண்டுள்ள அத்துவித சம்பந்தமான பிரிப்பின்மையையும் உபதேசிப்பர். சிவஞானப்

பொருளை உண்மையாக உணரும்படி உபதேசித்திருப்பவர்களும் அவரே. இங்கு மெய்கண்ட தேவரே தனக்கு மெய்ஞ்ஞான குருவாக வந்து அருளித் தீக்கை செய்தும் மீண்டும் பிறவி வாரா நெறியில் தன்னைப் புகுவித்ததையும் வியந்து வாழ்ந்தேன் அருட்கடலே என்றார்.

**வீழ்நாள் படாமை நன்றாற்றின் அஃதொருவன்**
**வாழ்நாள் வழியடைக்கும் கல்**

என்பது திருக்குறள்

வீழ்நாள் படாமை என்பது வாழ்ந்தேன் என்பதே. எனவே அந்த நெறிக்குத் தன்னை இட்டுச் சென்று வழிகாட்டிய குருவின் அருட்திறத்தை விளக்க அருட்கடலே என்றார். கடல் நீர் என்றும் குறைவதுமில்லை. தன் நிலையில் குன்றுவதுமில்லை. எனவே தான் அந்த சிவநெறிக்கு இட்டுச் சென்று வழிகாட்டிய பெருமையை எண்ணி அருட்கடலே என்றார்.

இனிப் பிறவியைப் பவக் கடல் என்றார். கடலில் வீழ்ந்தார் அதனின்றும் தப்பித்து வெளிவருவது அருமை. அவ்வருமை நோக்கியே பாவஞ் செய்து பிறவியில் தொடர்பவரும், அப்பிறவித் தொடர்களி லிருந்து மீள்வதும் அருமையே. ஆயினும் பிறவியென்னும் பெருங்கடலை நீந்துவதற்கு இறை அருளே வேண்டும். இங்கு குருவே இறைவனாக இருப்பதால் அத்துணையும் புணையும் அவரே எனக் கொண்டு பவக்கடலில் வீழ்ந்தே அலையாமல் என்றார். கடலில் அகப்பட்டுப் பற்றுக் கோடு எதுவுமின்றி அங்கும் இங்கும் அலையில் மொத்துண்டும் தள்ளுண்டும் வரும் துரும்புகளை நாம் காண்கின்றோம். இவ்வாறே இப்பிறவியும் புல்லாகிப் பூடாய்.... என நிற்கின்றது. இதனை விட்டுத் தப்பித்துக் கொள்ள பவக் கடலில் வீழ்ந்தே அலையாமல் காத்தாய் எனக் கூறி நன்றியை எண்ணுகின்றார். வள்ளுவப் பெருந்தகை

**பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்**
**இறைவனடி சேரா தார்** என்றார்

திருநாவுக்கரசு நாயனாரைக் கல்லோடு கட்டிக் கடலிலே சேர்த்த போதும் அவரைக் கரை சேர்த்தது இறைஅருள் அல்லவா. அவர் கடல் அலையில் மட்டும் மிதந்து வந்தவர் அல்ல. தனது பிறவியாகிய

பெருங்கடலையும் கடந்து கரை அடைந்தவர் அல்லவா. சூழந்துவிடா என்பதனைப் பற்றிவிடாது எனவும் காணலாம். மீண்டும் வினைகள் சூழாமலும் பிறவிகள் சூழாமலும் காத்தளித்த பெருமைக் குரியவர் மெய்கண்டார் என்றார். பிறவி தொடராய் தொடர்வதால் அதற்கு முடிவில்லை என்பதை வற்றாப் பவக்கடல் என்றார். அஞ்ஞான வழிப் பட்டு நிற்கும் உயிர் மீண்டும் மீண்டும் வினைகளை புரிகின்றது. அவ்வினைகளை உயிர்கள் அனுபவித்துக் கழிக்க வேண்டுமாகையாலும் அவ்வாறு அனுபவிக்கும்போது புதிய வினைகள் தோன்றும் என்பது சைவ சித்தாந்தம். எனவே பிறவி எடுப்பதும், வினைகள் தொடர்வதும் சங்கிலி போல நீண்டு கொண்டே போகும். அதற்கு முடிவில்லை. குறைவில்லை என்பதை எடுத்துக் காட்ட கடலின் பருமையை உவமை காட்டி வற்றாப் பவக் கடல் என்றார். இறைவன் ஒருவனே. அவன் ஆவேசித்து நிற்கும் குரு ஒருவரே, இந்தத் தொடர் பிறவியையும் தொடர் வினைகளையும் நீக்கவல்லவர்கள். இதனாலே தான் வற்றாப் பவக் கடலில் வீழந்தே அலையாமல் வாழ்ந்தேன் என்றார். அதனை எனக்கு ஆக்குவித்தவன் நீ என்னும் உணர்வு கொண்டு ஆசிரியர் குருநாதரின் நன்றியை மறவாது போற்றுகின்றார் எனலாம்.

ஒருவருக்குக் குரு வாய்ப்பது அவர் செய்த தவப்பயன் என்பர். தாரமும் குருவும் தலைவிதிப்படி என்பர். நல்லதொரு ஆசானைக் குருவை அடைவது என்பது எல்லோருக்கும் அடையக் கூடிய ஒன்றல்ல. குருவை அடைவது அவரவர் செய்த நற்றவப் பயனே எனலாம். இனி உலகத்து இருக்கும் வித்தியா குரு ஞானகுரு என்பவர்களில் முழுமை எய்திய பூரண நிறைவுடைய குருவை நாடிப் பெறுதல் என்பது அருமை. இங்கும் உற்ற தவப்பயனே அதனைத் தரவல்லது. இக்காரணம் நோக்கியே ஆசிரியர் தான் செய்த தவத்தால் உனைக் குருவாக அடைந்தேன் எனப் பெருமையும் அடைகின்றார். நான் குருவைத் தேடி அலைந்தபோது என்னை வேறோரு குருவை அடையாவண்ணம் காத்து என் உண்மை நிலை கண்டு என்னை உமது சீடராக ஏற்றுக் கொண்டீர். வேறோர் தெய்வத்தைக் கனவிலும் கருதாது என்பது போல உன்னையே யான் என் குருவாகக் கொண்டு உன்னையே பற்றுகின்றேன். பற்றினேன். அப்பற்று எனக்கு முழுநிறைவைத் தந்தது. மேலும் எந்நிலைமை கண்டு வேறு குருவை நாடா வண்ணம் என்னை உமது சீடனாகக் கொண்டு ஆட்கொண்டாய் என்பதையே மேதினியில் சூழ்ந்து விடா வெண்ணெய் சுவேதவன மெய்க்கண்ட நாதனே என்றார். இங்கு பவக் கடல் சூழ்ந்து

விடா வண்ணம் என்னை மேதினியில் காத்தாய் எனவும் பொருள் காணலாம். சிறப்புநோக்கிக் கொள்க.

இத்துணையும், தனது ஐயங்களுக்கு எல்லாம் விடையளித்துத் தன்னைப் பவக் கடலில் வீழா நெறியளித்து பேரின்ப நிலையையும் அளித்தாய்.

**தந்தது உன் தன்னைக் கொண்டது என்தன்னைச் சங்கரா ஆர் கொலோ சதுரர்**
**அந்தம் ஒன்றில்லா ஆனந்தம் பெற்றேன் யாது நீ பெற்றதொன் றென்பால்**
**சிந்தையே கோயில் கொண்ட எம் பெருமான் திருப் பெருந்துறையுறை சிவனே**
**எந்தையே ஈசா என் உடலிடம் கொண்டாய் யான் இதற்கு இலன் ஓர் கைமாறே**

என மாணிக்கவாசக சுவாமிகளின் திருவாச வரிகள் மனக்கண் முன் நிற்கின்றன. எனது கைமாறு எதுவுமில்லை. நீ எதனையும் வேண்டுபவன் அல்லன். ஆயினும்

**ஒன்றினி அளிப்பதுளது உன்னடியம் யாக்கை**
**நின்றிடு பகற்றுணையும் நின்னிரு கழற்கண்**
**மன்றதலை அன்புற வரந்தருதி எந்தாய் ...**

என்னும் கந்தப் புராண வரிகளை நாமும் எண்ணி அதன் வழி நிற்றலே எமது கைமாறாகும் என வேண்டுகின்றோம்.

குருவையும் இறைவனையும் மறவாத பேரன்போடு வாழ்த்துவதும் வணங்குவதும் செய்வோம். அதுவே எமக்குரிய பேரின்பப் பெருநிலையைத் தரும். அதனைத் தந்தளிக்கும் இறைவனையும் குருவையும் நன்றியுடன் உள்ளத்துள் எண்ணி நிற்போம். இடைவிடாது நினைப்போமாக. அதுவே விடிவைத் தரும். துன்ப முடிவைத் தரும். அதுவே சிவ சமயத்தின், சைவ சமயத்தின் முடிந்த முடிவு.

**மனவாசகங்கடந்த வான்கருணைப் பெயரோன்**
**மழுமான் சுமந்தபெரு மானின் அருளால்**
**கனமான வைகள் எனக்கூறும் இந்த**
**சித்தாந்தப் பேருணர்வா முண்மை விளக்கை**
**மனமாசு அகற்றுநெறி யார்தலை விளங்கி**
**மனங் கொண்டேகற்றுத் தெளிந்து தேரின்**
**தனமாகச் சிவஞானம் பெற்றே உய்வர்**
**சிவப்பேறும் வெல்வர் சீரும் அஃதே**

மேலல்வையூர் **ஆ. பொன்னையா**

**திருச்சிற்றம்பலம்.**






திருநெல்வேலி தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிட்.,
522, டி.டி.கே. சாலை, ஆள்வார்பேட்டை,
சென்னை - 18. (044) 435 52 99.

கிளை நிலையங்கள்

79, பிரகாசம் சாலை, சென்னை - 108.
91, கீழைத் தேர்த் தெரு, நெல்லை - 6.
70, தானப்ப முதலி தெரு, மதுரை -1
18, இராச வீதி, கோவை - 1
28, நகர் உயர் பள்ளிச் சாலை, குடந்தை - 1
16/17, பெரியசாமி டவர் (முதல் தளம்) திருச்சி - 2
36, செர்ரி ரோடு, சேலம் - 1